# வங்கியியலும் நிதியியலும்

(மேல் நிலை)

எஸ். பாலகிருஷ்ணன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—747

# வங்கியியலும் நிதியியலும்

## (மேல் நிலை)

(பட்டப்படிப்பிற்குரியது)

ருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்

எஸ். பாலகிருஷ்ணன், எம்.ஏ., எம்.காம்., எம்.லிட்.,
விரிவுரையாளர், வணிகவியல்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
தென் ஆற்காடு மாவட்டம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—May, 1977.
Number of Copies — 2,000

T.N.T.B.S. (C.P.) No. 747



# ADVANCED BANKING AND FINANCE

S. BALAKRISHNAN

Price Rs. 7-25

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
Metro Printers & Packaging Industry,
Madras-600 029.

# பதிப்புரை

வங்கியியலும் நிதியியலும் (மேல் நிலை) என்ற இந் நூல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **747**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **782** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப் படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம்

# பொருளடக்கம்


பக்கம்

1. வணிக வங்கிகளும் அவைகளின் பணிகளும் ... 1

இருப்புநிலைக் குறிப்பு.

2. வணிக வங்கிகளும் நாணயப் பெருக்கமும் ... 13

3. கிளை வங்கியும் தனி வங்கியும் ... 20

கிளை வங்கிகளின் நன்மைகள்—கிளை வங்கியின் குறைபாடுகள்—தனி வங்கியின் நன்மைகள்—தனி வங்கிகளின் குறைபாடுகள்.

4. வைப்பு வங்கிகளும் கலப்பு வங்கிகளும் ... 26

வைப்பு வங்கி—முதலீட்டு வங்கிகள்—ஜெர்மானிய நாட்டுத்தொழில் வங்கிகளின் வெற்றிக்குக் காரணங்கள் — குறைபாடுகள் — இங்கிலாந்தில் மாறுபட்ட நிலை—இந்தியாவில் கலப்பு வங்கி.

5. ரிசர்வு வங்கியும் தொழில் நிதியும் ... 34

தொழில் நிதிக் கழகம்—இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி—இந்தியத் தொழில் கடன் மற்றும் முதலீட்டுக் கழகம்—தேசிய தொழில் வளர்ச்சிக் கழகம்—யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா—சிறு தொழில்களும் நிதிவசதியும்—தேசிய சிறு தொழில் கழகம்—வளர்ச்சி வங்கி அளிக்கும் முக்கியப் பணி.

6. பன்னாட்டு வளர்ச்சி வங்கிகள் ... 43

உலக வங்கி—வங்கியின் அமைப்பு — கடன் விநியோக முறை—இந்தியாவும் உலக வங்கியும்—உலக வங்கியின் குறைபாடுகள் — பன்னாட்டு வளர்ச்சி நிறுவனம்—பன்னாட்டு நிதிக் கழகம்—ஆசிய வளர்ச்சி வங்கி.

பக்கம்

7. வணிக வங்கிகளின் கோட்பாடு—மாறிய எண்ணம் ... 53

உண்மைச் சீட்டுக் கோட்பாடு—மாற்றுந் தன்மைக் கோட்பாடு—எதிர்நோக்கு வருவாய்க் கோட்பாடு — வணிக வங்கிகளின் பணிகள்—மாறிய நிலை—வாடகைக் கொள்முறை நிதி—தனி நபர் கடன்.

8. வணிக வங்கிகளும் பொருளாதார வளர்ச்சியும் ... 59

வங்கிகள்மீது சமுதாயக் கட்டுப்பாடு.

9. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் ... 62

தேசியமயம் ஆக்கக் காரணங்கள் — குறைபாடுகள்—சாதனை.

10. தனியார் துறை வங்கிகள் ... 72

11. வைப்புத் திரட்டு ... 79

பலவித வைப்புத் திட்டங்கள்.

12. கிளைப் பெருக்கம் ... 85

முதன்மை வங்கித் திட்டத்தின் நன்மைகள்.

13. மைய வங்கி ... 89

பணிகள்—மைய வங்கி வீதம்—வெளிச்சந்தை நடவடிக்கைகள்—ரொக்கக் காப்பு மாற்று வீதம்—தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு—இடைவெளி மாற்று முறை—நுகர்வோர் கடன் கட்டுப்பாடு—கடனைப் பகிர்ந்தளித்தல்—மனந்தொடு வேண்டு கோள்—மைய வங்கியின் வளர்ச்சி—மைய வங்கியும் பணவாக்கக் கைக்கோளும்—நடு நிலைமைப் பணம்—அந்நியச் செலாவணி வீதக் கட்டுப்பாடு—விலையை நிரந்தரப் படுத்துதல் — முழுமை வேலைப்பாடு — பொருளாதார வளர்ச்சி — அரசு வருவாய் கைக்கோள்.

14. வங்கியல்களை ஒழுங்குபடுத்தும் சட்டங்கள் ... 124

15. வங்கிகளுக்கான வைப்புக் காப்பு ... 133

அமெரிக்க நாட்டு வைப்பு முறை ஒப்பீடு.

பக்கம்

## இந்திய வணிகவியல்

16. நாட்டு வங்கியர்கள் ... 137

கடன் பாதுகாப்புச் சட்டங்கள் — நாட்டு வங்கியரும் உண்டியல்களும்—ரிசர்வு வங்கியும் நாட்டு வங்கியரும்.

17. கிராமியக் கடனும் கூட்டுறவு வங்கிகளும் ... 153

விவசாயக் கடனின் குணாதிசயங்கள்—மத்தியக் கூட்டுறவு வங்கிகள்—மாநிலக் கூட்டுறவு வங்கி—கிராமிய வங்கிகள் — நில வள வங்கிகள் — நகரக் கூட்டுறவு வங்கிகள்—தொழில் கூட்டுறவு வங்கிகள்.

18. இந்திய வணிக வங்கிகள் ... 186

சொத்துகள்—பொறுப்புகள் அமைப்பு.

19. நாணய மாற்று வங்கிகள் ... 199

வங்கிகள் செயல்பாடு—அயல் நாட்டு வியாபார முறை.

20. இந்தியப் பணச் சந்தை ... 213

வளர்ச்சியுற்ற பணச் சந்தை—இந்தியப் பணச் சந்தைப் பிரிவுகள்—உண்டியல் சந்தை — ரிசர்வு வங்கியின் உண்டியல் சந்தை—புதிய உண்டியல் மறு தள்ளுபடித் திட்டம்—துணைக் கடன் சந்தை—பசார் சந்தை — தீர்வகங்கள் — மலிவுப் பணக் கொள்கையும் அருமைப் பணக்கொள்கையும் வங்கிகளின் முறிவுகள்.

21. ஸ்டேட் வங்கி ... 256

இம்பீரியல் வங்கி—ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா—அமைப்பு—ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள்—ஸ்டேட் வங்கியின் வளர்ச்சி—ஸ்டேட் வங்கியின் புனரமைப்பு.

22. ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா ... 288

தேசியமயமாக்கப்படல்—நிருவாக அமைப்பு—பல பிரிவுகள் — பண வெளியீடு — அரசாங்க

பக்கம்

வங்கியர்—ரிசர்வு வங்கியும் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களும்—மைய வங்கி வீதம்—சட்டமுறை எளிவரல் தன்மை வீதம்—நிகர எளிவரல் வீதம்—சட்டமுறை ரொக்கக் காப்பு—வெளிச் சந்தை நடவடிக்கை — தேர்ந்தெடுக்கப்பட்ட கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள்—மனந்தொடு வேண்டுகோள்—ரிசர்வு வங்கியும் விவசாயக் கடனும்—வணிக வங்கிகள்மீது ரிசர்வு வங்கியின் கட்டுப்பாடு—ரிசர்வு வங்கியும் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடும்—இருப்புநிலைக் குறிப்பு.

ஒப்பீட்டு வங்கியியல்

23. இலண்டன் பணச் சந்தை ... 311

இந்தியப் பணச் சந்தை—பிரிட்டிஷ் பணச் சந்தை—ஒப்பீடு—அமெரிக்கப் பணச் சந்தை—இந்தியப் பணச் சந்தை—அமெரிக்கப் பணச் சந்தை—ஒப்பீடு.

# 1. வணிக வங்கிகளும் அவைகளின் பணிகளும்

## வணிக வங்கிகள்

ஒவ்வொரு நாட்டிலும் பல வணிக வங்கிகள் இருக்கின்றன. இவை நாட்டின் தொழில், வாணிபம் ஆகியவைகள் இயங்குவதற்கு இன்றியமையாத நிதி வசதியினை அளிக்கின்றது. பல தனி நபர்கள், நிறுவனங்கள் ஆகியவைகளின் சேமிப்பைப் பெற்று வியாபாரம், தொழில் துறை ஆகியவைகளுக்கு கடன் அளிக்கின்றது. வணிக வங்கிகள் இல்லையேல் சமுதாயத்தில் சேமிப்பு இருக்காது. சேமித்தாலும் பத்திரமாக வைத்திருக்க வகை இருக்காது. செல்வந்தர் மட்டுமல்லாமல் சிறு வருமானக் காரர்களும் தங்களால் இயன்ற சிறு தொகையினை சேமித்து, வேண்டும்போது திரும்பிப் பெற்றுக்கொள்ள வணிக வங்கிகள் உதவுகின்றன. வணிக வங்கிகள் தோன்றுக் காலங்களில் தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களாக சேமித்து, கள்வர் களுக்கு அஞ்சி எங்கெங்கோ புதைத்துவைத்துப் பின்பு அவற்றை திரும்ப எடுக்க முடியாமல் இழந்தவர்களும் உண்டு. ஆனால், வணிக வங்கிகள் தோன்றியபின் இந்த இன்னல்கள் மாறிவிட்டன.

தொழில், வாணிபம் ஆகியவைகளுக்குத் தேவையான நடைமுதலினை வணிக வங்கிகள் அளிக்கின்றன. இதனால் தொழில், வாணிப முன்னேற்றம் ஏற்பட்டு, பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டு வேலை வாய்ப்பு அதிகரிக்கின்றது.

பொதுவாக வணிக வங்கிகள் கூட்டுப் பங்கு கம்பெனி களாகவே அமைகின்றன. இந்தியாவில் 14 வணிக வங்கிகள் நாட்டுடமையாக்கப்பட்டுள்ளன. இவைகளைத் தவிர ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா அரசுடமையான வங்கி. மற்றைய வங்கிகள் தனியார் துறையில் அமைந்துள்ளது.

## வணிக வங்கிகளின் பணிகள்

வணிக வங்கிகளின் முக்கியப் பணி வைப்புகளைப் பெற்று, கடன் ஈதலாகும். வணிக வங்கிகள் பலவகை வைப்புகளை

ஏற்றுக் கொள்கின்றன. வணிக வங்கிகள் தவணை வைப்பு (Fixed deposit), சேமிப்பு வைப்பு (Savings deposit), நடப்பு வைப்பு (Current deposit), மீள் தவணை வைப்பு (Recurring deposit) என்னும் நான்கு வகையான வைப்புகளைப் பெற்றுக் கொள்கின்றன. தவணை வைப்பு ஒரு குறிப்பிட்ட கால வரைக் குப் பின்பு தான் திருப்பித் தரப்படும். ஓர் ஆண்டுக்கோ, இரண்டு ஆண்டுகளுக்கோ அல்லது குறிப்பிட்ட கால வரைக்கோ தவணை வைப்பு செய்யலாம். குறிப்பிட்ட காலம் முடிந்த பிறகுதான், அந்த பணத்தினை வங்கி திருப்பித் தரும். தவணை வைப்பு கட்டும்போது வங்கி ஒரு ரசீது அளிக்கும். அதற்கு தவணை வைப்பு ரசீது (Fixed Deposit Receipt) என்று பெயர். இதனை புறக்குறிப்பிட்டு (endorsement) வேறு யாருக்கும் மாற்றம் செய்ய முடியாது. இதற்குக் காரணம் தவணை வைப்பு ரசீது ஒரு செலாவணிப்பத்திரம் (Negotiable Instrument) அன்று. எனினும், தேவை ஏற்படின் தவணைவைப்பு ரசீது வைத்துள்ளவர் எழுத்துமூலம் வேறு நபருக்கு மாற்றல் செய்யலாம் (Transferring the receipt). ஆனால், ரசீது மாற்றம் பெற்றவருக்கு, அளித்தவர் கொடுத்த அளவு உரிமைதான் கிடைக்கும். பொதுவாக தவணை வைப்புக்கு அதிக வட்டியினை வங்கிகள் கொடுக்கும். ஏனெனில், குறிப்பிட்ட காலம் வரை அந்தப் பணத்தினை வங்கிகள் திருப்பித் தர வேண்டாம். தவணை வைப்பு ரசீதின் ஈட்டின் பேரில் அவ் வங்கி கடன் அளிக்கும். இக் கடனுக்கு வைப்புக்கு அளிக்கும் வட்டியைவிட 1 சதவீதம் அல்லது 2 சதவீதம் அதிகமாக வட்டி வசூலிக்கும்.

வங்கிகள் சேமிப்புக் கணக்குகளை ஏற்றுக்கொள்கின்றன. குறைந்தபட்சம் ஐந்து ரூபாய் கட்டி சேமிப்புக் கணக்கினை ஆரம்பிக்கலாம். சில வங்கிகள் குறைந்தபட்ச பணத்தினைப் பத்து ரூபாயாக வைத்துள்ளன. சேமிப்புக்கணக்கு வைத்துள்ள வர்கள் ஒரு வாரத்தில் அதிகபட்சம் எத்தனை ரூபாய் கணக்கி லிருந்து எடுக்கலாம், எத்துணைமுறை எடுக்கலாம் என்பதற்குக் கட்டுப்பாடு உள்ளது. சேமிப்பு வைப்புக்கு அளிக்கும் வட்டி, தவணை வைப்புக்கு அளிப்பதைவிட குறைவாகவும் நடப்பு வைப்புக்கு அளிக்கும் வட்டியைவிட அதிகமாகவும் இருக்கும்.

நடப்பு வைப்பு வைத்துள்ளவர்கள் எப்போது வேண்டு மானாலும் தங்கள் பணத்தைக் கட்டுப்பாடு ஏதும் இல்லாமல் எடுத்துக் கொள்ளலாம். பொதுவாக வியாபாரிகள் நடப்புக் கணக்கை ஏற்படுத்திக் கொள்கின்றனர். வங்கிகள் பொதுவாக நடப்புக் கணக்கு வைத்திருப்பவர்களுக்கே அதிகப்பற்று (over draft) அளிக்கும். வங்கிகள் நடப்புக் கணக்குமீது வட்டி

ஏதும் அளிக்காது. சில வங்கிகள் பெயர் அளவுக்கு ½ சதவீதம் வட்டி அளிக்கும்.

மீள் தவணை வைப்பில், கணக்கு வைத்து இருப்பவர் மாதந் தோறும் குறிப்பிட்ட பணத்தினைக் கட்டி வரவேண்டும். குறிப்பிட்ட காலம் முடிவு அடைந்தபின், போடப்பட்ட பணத்துடன் வட்டியும் சேர்த்து தரப்படும். எடுத்துக்காட்டாக மாதம் ரூபாய் பத்து வீதம் 12 மாதங்கள் செலுத்தினல் அதன்பின் வட்டி சேர்ந்து ரூ. 125 ஆக திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

வங்கிகள் வைப்பு மூலம் பெற்ற பணத்தினை வீணுக வைத்திருப்பதில் இலாபம் ஒன்றும் இல்லை. மேலும் வங்கி, வைப்பு ஈந்தோருக்கு வட்டி தரல் வேண்டும். எனவே, வணிக வங்கி அதிக வட்டிக்கு கடன் கொடுத்து இலாபம் பெறவேண்டும்.

பொதுவாக வணிக வங்கிகள் அதிகப்பற்று (over draft), ரொக்கப்பற்று (cash credit), கடன் அளிப்பு (loans and advances) என்ற மூன்று முக்கியமான முறைகளில் கடன் கொடுக்கின்றன. பொதுவாக வியாபாரிகள் அதிகப்பற்று மூலம் கடன் பெற்றுக் கொள்வார்கள். வங்கிகள், வாடிக்கைகாரரின் (customer) பணநிலைக்கு ஏற்ப ஒரு குறிப்பிட்ட அளவு அதிகப் பற்று வசதியினை அளிக்கும். இவ் வசதி அளிக்கப்பட்டால் அந்த வரையறைக்குள் தங்கள் கணக்கில் பணம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் காசோலை (cheque) விடுக்கலாம். வங்கி அக் காசோலைகளுக்குப் பணம் அளிக்கும். ஒரு வியாபாரிக்கு அதிகப் பற்று வரையறை ரூ. 10,000 என்ருல், இந்த வரையறைக்குள் விடப்படும் காசோலைகளுக்கு வங்கி பணம் அளிக்கும். அதிகப் பற்றுக்கு, வாடிக்கைக்காரர், வங்கிக்கு வட்டி கொடுக்கவேண்டும்.

ரொக்கப் பற்று மூலமும் கடனை வங்கியிலிருந்து பெற்றுக் கொள்ளலாம். ரொக்கப் பற்றுக்கும் அதிகப் பற்றுக்கும், அதிகமான வித்தியாசங்கள் இல்லை. அதிகப் பற்றுக் கடனில், இவ்வசதி பெற்றவர் எத்துணை பணம் பயன்படுத்திக் கொண்டுள்ளாரோ அத்துணை அளவிற்கு மட்டும் வட்டி கொடுக்க வேண்டும். உதராணமாக ரூ. 10,000 அதிகப் பற்று பெற்றவர் ரூ. 6,000-ம் வரை மட்டும் கடன் தொகையைப் பயன்படுத்தியுள்ளார் எனின், அவர் ரூ. 6,000-க்கு உரிய வட்டியை மட்டில் வங்கிக்கு அளிக்கவேண்டும். ஆனல், ரொக்கப்பற்று பெற்ரேர் எத்தனை அளவு பயன்படுத்தினலும் முழுத் தொகைக்கும் வட்டி அளிக்க வேண்டும். மேலே கூறிய உதாரணத்தில் ரொக்கப்

பற்று பெற்றோர் ரூ. 6,000 பயன்படுத்தினாலும் மொத்த தொகை யான ரூ. 10,000-க்கு வங்கிக்கு வட்டி கொடுக்கவேண்டும்.

இவை நீங்கலாக வணிக வங்கிகள் வியாபாரிகளின் தொழிலில் உள்ள சரக்குகள், கச்சாப் பொருள்கள், இயந்திர சாதனங்கள் பேரிலும் கடன் அளிக்கும். வியாபார சரக்குகளை அடமானமாகப் (mortgage) பெற்று, சாவிக் கடன் (key loan) உதவியை வணிக வங்கிகள் அளிக்கின்றன. அவ்வப்போது வேண்டிய சரக்கினை, வங்கிக்குப் பணம் அளித்து, சரக்கு வைத்திருக்கும் கிடங்கிலிருந்து (godown) பொருளை வியாபாரிகள் எடுத்துச் செல்லலாம்.

வணிக வங்கிகள் மாற்று உண்டியலை (Bill of Exchange) தள்ளுபடி செய்து பணத்தினை அளிக்கின்றன.

மேற்கூறிய பணிகளைத் தவிர பல்வேறுபட்ட பணிகளையும் (miscellaneous functions) வணிக வங்கிகள் அளிக்கின்றன. வாடிக்கைக்காரர்களுக்கு உதவி செய்யும் வண்ணம் கம்பெனி பங்குகளை (shares) வாங்கியும் விற்றும் பணி புரிகின்றன.

வாடிக்கைக்காரர்களுக்கு வருமான வரி நமூனா (Income Tax Returns) தயார் செய்து கொடுக்கும் பணியினையும் சில வணிக வங்கிகள் ஏற்கின்றன.

நிலை ஆணையின் பேரில் (standing order) வாடகை கொடுத்தல், காப்புறுதிக் கட்டணம் (insurance premium) செலுத்துதல், போன்ற பணியினை அளிக்கின்றன.

காசோலைகளை வசூலித்தல் (collection of cheques) ஈவுத் தொகை வசூலித்தல் (collection of dividend) ஆகிய பணிகளை யும் வணிக வங்கிகள் ஏற்கின்றன. வாடிக்கைக்காரர்கள் விருப் பத்தின் பேரில் பொறுப்பாளராகவும் (Trustee) உயில் நிறை வேற்றுபவராகவும் (Executor) வணிக வங்கிகள் செயல் படு கின்றன. மேலே கூறிய பணிகளை வாடிக்கைக்காரர்களின் பதிலாள் (Agent) என்ற முறையில் வணிக வங்கிகள் செயல் படுவதால் இப் பணிகள் பதிலிப் பணிகள் (agency functions) ஆகும்.

பதிலிப் பணிகளைத் தவிர பொதுப் பயன்பாட்டுப் (General Utility) பணிகளையும் வணிக வங்கிகள் தருகின்றன. அவை காவல் வைப்புப் பணி (safe custody) அந்நியச் செலா வணிப் பணி (Foreign Exchange), ஆகியவைகள் ஆகும். காவல் வைப்புப் பெட்டகத்தில் (safe custody vault) விலை உயர்ந்த நகைகள், கம்பெனி பங்குகள், கச்சாத்துகளை

(documents) வைக்கலாம். ஒப்படைக்கப்பட்டவைகளைப் பெறுபவர் (Bailee) என்ற நிலையில் வணிக வங்கிகள் பத்திரமாக வைத்து வேண்டும்போது திருப்பிக் கொடுக்கும். நம் நாட்டுப் பணத்தை அந்நிய நாட்டுப் பணமாக மாற்றித் தருவதுடன் இறக்குமதி, ஏற்றுமதி செய்வோருக்கு வணிக வங்கிகள் செய்யும் பணி அந்நியச் செலாவணிப் பணி ஆகும்.

பொதுவாக வணிக வங்கிகள் குறுகிய காலத்திற்கே கடன் அளிக்கும். ஏனெனில், வணிக வங்கிகள் பெறும் வைப்புகள் குறுகிய காலமே ஆகும். அவைகளைக் கொண்டு நீண்ட காலக் கடனை அளிக்க முடியாது. தொழிற்சாலைகள் தங்களுக்கு வேண்டிய நடை முதலையே (working capital) வணிக வங்கிகளிடமிருந்து பெறலாம். நிலை முதலை (fixed capital) தொழில் வங்கி (Industrial Bank) களிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும்.

## இருப்புநிலைக் குறிப்பு

வணிக வங்கியின் மாதிரி இருப்புநிலைக் குறிப்பின் (Representative Balance sheet) உதவியுடன் வணிக வங்கிகளின் பணியினை நன்கு உணரலாம்.

இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்பு (Liabilities) | சொத்து (Assets) |
|---|---|
| முலதனம் (Capital)<br>அனுமதித்த முதல் (Authorised capital)<br>ஒப்பிய முதல் (Subscribed capital)<br>செலுத்திய முதல் (Paid-up capital) | ரொக்க இருப்பு (Cash in hand)<br>மற்றைய வங்கிகளிடம் வைத்துள்ள பணம்<br>அழைப்புக் கடனும் குறுந்தவணைக் கடனும் (Money at call and short notice)<br>உண்டியல் கழிவுப்பாடு (Bills discounted) |
| காப்பு நிதி (Reserve fund) | முதலீடுகள் (Investments) |
| நடப்பு வைப்பும் மற்றைய வைப்புகளும் (Current deposit and other accounts) | வாடிக்கைக்காரர்களுக்கு அளித்த கடன் |
| வாடிக்கைக்காரர்களுக்காக மேற்கொண்ட ஏற்புகளும் மேல் எழுத்துகளும். | வாடிக்கைக்காரர்களுக்காகச் செய்த ஏற்புகள், மேல் எழுத்துகளால் ஏற்பட்ட பொறுப்பு (Liabilities of customers for acceptances, endorsements)<br>வங்கிக் கட்டடங்கள் (Buildings) |

# பொறுப்பு

## மூலதனம்

முன்னால் கண்டுள்ள இருப்புநிலைக் குறிப்பில், பொறுப்பு பக்கத்தில் முதலில் கண்டுள்ளது மூலதனம். அதிக பட்சமாக எத்துணை பங்குகள் வெளியிடலாமோ அதன் தொகையே அனுமதித்த முதலாகும். எடுத்துக்காட்டாக ஒரு வங்கி ரூ. 100 மதிப்புள்ள 10,000 பங்குகள் வெளியிட அனுமதிக்கப்பட்டால் அது அனுமதித்த முதல் ரூ. 10,000 × 100 = 10,00,000 ஆகும் ஆனால், வங்கி ஆரம்பிக்கும்போதே 10,000-ம் பங்குகளையும் வெளியிட வேண்டும் என்ற அவசியம் இல்லை. இவ் வங்கி 5,000 பங்குகள் வெளியிட்டால் போதும் எனக் கருதலாம். ஒப்பிய முதல் என்பது எத்தனை பங்குகள் வெளியிடப்படுகின்றனவோ அவற்றின் மதிப்பாகும். இந்த எடுத்துக்காட்டில் ஒப்பிய முதல் 5,000 × 100 = ரூ. 5,00,000 ஆகும். ஒரு பங்கின் மதிப்பு ரூ. 100 என்றால் முழுத்தொகையையும் வங்கி ஆரம்பிக்கும்போதே பெற வேண்டும் என்ற அவசியம் இல்லை. ரூ. 50 மட்டுமே பெற்றுக் கொள்ளலாம். மீதி ரூ. 50-ஐக் கம்பெனி வேண்டும்போது பங்குதாரர்கள்மீது அழைப்புவிடுத்து (making call) பெற்றுக் கொள்ளலாம். எனவே, இவ் வங்கி உண்மையாகப் பெற்றுள்ள மூலதனம் 50,000 × 50 = ரூ. 2,50,000. இத் தொகைக்கு செலுத்திய முதல் என்று பெயர். இந்தியாவில் நடை முறையிலுள்ள வங்கிகள் சட்டத்தின்படி வணிக வங்கிகளின் ஒப்பிய முதல், அனுமதித்த முதலிற்கு 50 சதவிகிதம் குறைவில்லாமலும் செலுத்திய முதல் ஒப்பிய முதலின் 50 சதவிகிதத்திற்கும் குறைவில்லாமலும் இருக்க வேண்டும். எடுத்துக் காட்டாக அனுமதித்த முதல் ரூ. 2 கோடி என்றால் ஒப்பிய முதல் ரூ. 1 கோடிக்குக் குறைவு இல்லாமலும், செலுத்திய முதல் ரூ. 50 லட்சத்திற்கு குறைவு இல்லாமலும் இருத்தல் வேண்டும். இதுபோன்ற கட்டுப்பாடு வருவதற்கு முன் சில வணிக வங்கிகள் போலி விளம்பரங்கள் செய்து வந்தன. அனுமதித்த முதல் ரூ. 5 கோடி, ஒப்பிய முதல் ரூ. 5 லட்சம், செலுத்திய முதல் ரூ. 50,000 என்ற விளம்பரத்தைக் கண்டு பொது மக்கள் இது சிறந்த வங்கி என எண்ணி வைப்புகளை வைத்திருந்தனர். ஆனால், இந்த வங்கியின் உண்மையான மூலதனம் ரூ. 50,000 தான். இதுபோன்று சில தரமற்ற போலி வங்கிகள் செய்ய முயற்சிக்கும் விளம்பரத்தைக் கட்டுப் படுத்தும் முகத்தான் இப்போது கட்டுப்பாடு கொண்டுவரப் பட்டுள்ளது.

**காப்பு நிதி**

அவசரத் தேவைக்கும், பாதுகாப்பிற்காகவும், இலாபத்தி லிருந்து ஒவ்வொரு வருடமும் ஒரு குறிப்பிட்டத் தொகையைக் காப்பு நிதிக்கு வங்கிகள் ஒதுக்கி வைக்கின்றன. இந்தியாவில் வங்கிகள் சட்டத்தின்படி ஒவ்வொரு வணிக வங்கியும் இலாபத்திலிருந்து முதலில் 20 சதவீதத்தை காப்பு நிதிக்கு ஒதுக்கவேண்டும். அல்லது இதனினும் குறைந்த சதவிகிதத் தொகையை காப்பு நிதிக்கு மாற்றியவுடன் காப்புநிதி, செலுத் திய முதலுக்குச் சமமானுல், இதுவே போதுமானது. காப்பு நிதியைத் தவிர வங்கிகள் இலாப ஈவுச் சமன்பாட்டு நிதி (Dividend Equilisation Fund), வராக்கடன், ஐயக்கடன் காப்பு (Reserve for bad and doubtful debts) ஆகிய நிதிகளுக்கும் வகை செய்கின்றன.

**நடப்பு வைப்பும் மற்றைய வைப்புகளும்**

வைப்புகள் வணிக வங்கிக்கு பொறுப்பு ஆகும். ஏனெனில், வைப்புதாரர்கள் (depositors) வேண்டும்போது பணத்தினைத் திருப்பித் தரல் வேண்டும். நடப்பு வைப்பினை எப்போது கேட்டாலும் வங்கி திருப்பித் தர வேண்டும்.

தவணை வைப்பு அல்லது கால வைப்பினை (time deposit) வணிக வங்கி குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகே திருப்பித் தரல் வேண்டும். இங்கிலாந்தில் தவணை வைப்பினை 15 நாள் அறிவிப்பின் பின்னுல் திரும்பப் பெறலாம்.

**வாடிக்கைக்காரர்களுக்காக மேற்கொண்ட ஏற்புகளும் புறக் குறிப்பிடுதலும்**

வணிக வங்கி வாடிக்கைக்காரர்களுக்காக உண்டியலை ஏற்கலாம் அல்லது மேல் எழுத்துச் செய்யலாம். இவை வணிக வங்கிக்குப் பொறுப்பாகும். ஏனெனில், இவ் உண்டியலுக்குத் தவணை முதிர்வில் (on maturity) வணிக வங்கி மூன்ரும் நபருக்குப் (third party) பணம் கொடுக்க வேண்டும்.

## சொத்து

**ரொக்க இருப்பு**

இது மிக எளிவரல் சொத்து (most liquid asset). எந்த ஒரு சொத்து உடனடியாக அதிக முதல் நட்டமின்றி (capital loss) பணமாக மாற்ற முடியுமோ அதுவே எளிவிரல் சொத்து. எனவே, கையில் இருக்கும் ரொக்க இருப்பு மிக எளிவரல்

சொத்தாகும். ஒவ்வொரு வணிக வங்கியும் ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்க இருப்பு வைத்துக் கொள்ள வேண்டும். தினந் தோறும் வைப்பு வைத்துள்ளோர்களில் சிலர் ஓரளவுக்கு ரொக்கமாகத் தங்கள் கணக்கிலிருந்து எடுத்துக்கொள்ள விரும் புவார்கள். அவர்கள் அளிக்கும் காசோலைகளுக்குப் பணம் அளிக்க வணிக வங்கி ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டும். எத்துணை அளவு ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டும் என்பதினை வணிக வங்கிகள் அனுபவத்தில் தெரிந்து கொண்டி ருக்கும். அந்த அளவு ரொக்க இருப்பு வைத்திருக்கும். இங்கிலாந்தின் வணிக வங்கிகள் தங்கள் வைப்புகளில் 10-லிருந்து 12 சதவீதம் வரை தான் ரொக்க இருப்பு வைத் திருக்கும். ஏனெனில், இங்கிலாந்தில் வங்கியல் பழக்கம் (Banking habits) மிகவும் மேம்பாடு அடைந்துள்ளது. பொது மக்கள் அனைவரும் வங்கிக் கணக்கு வைத்துள்ளார்கள். அவர்கள் பொதுவாக காசோலை மூலமாகவே செலவினங்கள் செய்கின்றனர். எனவே, அதிகப்படியாக வங்கிக் கணக்கி லிருந்து ரொக்கமாக பெற்றுக்கொள்ள மாட்டார்கள். இதன் காரணமாக இங்கிலாந்திலுள்ள வணிக வங்கிகள் குறைந்த அளவு ரொக்க இருப்பே வைத்துக் கொள்கின்றன. இதற்கு நேர்மாறாக இந்தியாவில் வணிக வங்கிகள் அதிக பட்சமான ரொக்க இருப்பை கையில் வைத்துக் கொள்கின்றன. இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன: (1) வைப்புதாரர்கள் அடிக்கடி ரொக்கமாக வங்கிக் கணக்கிலிருந்து எடுத்துச் செல்லும் பழக்கம் ; (2) வங்கிகளுக்கு முதலீடு செய்ய வாய்ப்புகள் குறைவாக இருப்பது.

வணிக வங்கிகள் போதுமான அளவு ரொக்க இருப்பு வைத்துக் கொள்ள வேண்டும். குறைவான ரொக்க இருப்புக் கொண்டு தொழில் நடத்தினால் சில நேரங்களில் வைப்புதாரர் களின் காசோலைக்கு உடனடியாக ரொக்கம் தருவதில் தாமதம் ஏற்படக்கூடும். தாமதம் ஏற்பட்டால் அந்த வங்கியின்மீது நம்பிக்கை குறையும். வைப்பு வைத்துள்ளவர்கள் தங்கள் வைப்புகளைப் பணமாகப் பெற்றுக்கொள்ள முனைவார்கள். எல்லா வைப்புதாரர்களும் இந்த முயற்சியில் இறங்கினால், வங்கி யின்மீது ஓட்டம் ஏற்படும் (run on the bank). இதன் காரண மாக வங்கி பணத்தைக் கொடுக்க இயலாமல் வங்கி முறிவுக்கு (Bank failure) காரணமாகும். இந்தியாவில் பல வங்கிகள் வதந்திகள் (rumours) காரணமாக முறிவு அடைந்துள்ளன. ஒரு வங்கி நிலையாக இருந்த போதிலும் சிலர் பரப்பும் வதந்தி காரணமாக வைப்புதாரர்கள் வங்கியின்மீது ஓட்டம் செய்து

தங்கள் பணத்தினைத் திரும்பப்பெற முயல்வது அவ் வங்கியின் முறிவுக்கு அடிகோலியாக அமையும். ஒரு வங்கியின் முறிவு அத்துடன் நில்லாமல் மற்ற வங்கிகள் மேலும் பரவும். எனவே, இது போன்ற இக்கட்டான நிலைமையிலிருந்து தன்னைத் தவிர்த்துக்கொள்ள ஒவ்வொரு வணிக வங்கியும் போதிய ரொக்க இருப்பை வைத்துக்கொள்ள வேண்டும்.

அதே நேரத்தில் தற்காப்பு என்ற நோக்கத்தில் தேவைக்கு அதிகமான ரொக்க இருப்பை வங்கி வைத்துக் கொண்டால் அதன் இலாபம் பாதிக்கப்படும். ஒவ்வொரு வங்கிக்கும் இலாபமா, எளிவரல் சொத்தா என்பது எப்போதும் ஒரு பெரிய பிரச்சனையே.

## மற்றைய வங்கிகளிடம் வைத்துள்ள பணம்

வணிக வங்கிகள் பிற வங்கிகளிடமும் பணம் வைத்திருக்கலாம். குறிப்பாக வணிக வங்கிகள் மைய வங்கியிடம் பணம் வைத்திருக்கும். வங்கிகளுக்கான சட்டத்தின்படி ஒவ்வொரு நாட்டிலும் வணிக வங்கிகள் மைய வங்கியிடம் கட்டாயமாக ஓரளவு பணம் வைத்திருக்க வேண்டும். இந்தியாவில் வணிக வங்கிகள் ரிசர்வு வங்கியிடம் (Reserve Bank) தங்களுடைய வைப்பில் குறைந்தது 3 சதவிகிதத் தொகையை வைத்திருக்க வேண்டும். இதனை அவ்வப்போது 15 சதவிகிதம் வரை வைக்க ரிசர்வு வங்கி ஆணை இடலாம். இதன் மூலம் இது கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதமாகவும் பயன்படுத்தப்படுகின்றது.

## அழைப்புக் கடனும் குறுந்தவணைக் கடனும்

மிகக் குறுகிய காலத்திற்கு வங்கிகள் கடன் கொடுக்கலாம். வேண்டும்போது உடனடியாகத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். இது போன்ற கடனை இங்கிலாந்தில் வணிக வங்கிகள் பெரும் அளவில் அளிக்கின்றன. அங்கு உண்டியலை மாற்றும் அகங்கள் (discount houses) உள்ளன. அவை, தங்கள் தொழிலுக்குத் தேவைப்படுகின்ற பணத்தினை வணிக வங்கிகளிடமிருந்து பெறுகின்றன. கடன் பெற்ற பணத்தினை சில மணி நேரங்களில்கூட திருப்பிக் கொடுக்க அவை தயாராக உள்ளன. வணிக வங்கிகள் பணத்தினை வீணாக வைத்திராமல் குறைந்த நேரத்திற்குக்கூட குறைந்த வட்டி பெற்றுக் கடன் அளிக்கின்றன. உண்டியல் மாற்று அகங்களுக்கும் வணிக வங்கிகளுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. அமெரிக்காவில் வணிக வங்கிகள் பங்கு மாற்று நிலையங்களுக்கு (stock-exchange) குறுந்தவணைக் கடனை அளிக்கின்றன. ஆனால்,

இந்தியாவில் வணிக வங்கிகள் அழைப்புக் கடனும் குறுந் தவணைக் கடனும், அதிகமாக அளிக்க வாய்ப்பு இல்லை. இங்கிலாந்தினைப்போல் உண்டியல் மாற்று அகங்கள் இந்தியாவில் இல்லை. வியாபாரிகள் உண்டியலை அதிகமாகப் பயன் படுத்துவதில்லை. எனவே, இந்தியாவில் உண்டியல் சந்தை இல்லை. உண்டியல்களும், உண்டியல் சந்தையும் இல்லாதது இந்தியப் பணச்சந்தையின் பெருங்குறை. ஓரளவு குறுந் தவணைக் கடன் இந்திய வணிக வங்கிகள் நாணயமாற்று வங்கி களுக்கு (Foreign Exchange Banks) அளிக்கின்றன. நாணய மாற்று வங்கிகள் போதிய அளவு ரொக்க இருப்பு வைத்துக் கொள்ளாததால் அவ்வப்போது வணிக வங்கிகளிடமிருந்து குறுந்தவணைக் கடனைப் பெற்றுக்கொள்கின்றன.

### உண்டியல் கழிவுப்பாடு

உண்டியல் வைத்திருப்போர்கள் தவணை முதிர்வுக்கு முன் (before maturity) பணம் தேவைப்பட்டால் தங்கள் உண்டியலை வணிக வங்கியிடம் கழிவுப்பாடு செய்துகொள்ளலாம். எல்லா நாடுகளிலும் வணிக வங்கிகள் இந்தப் பணியினைச் செய்கின்றன. இதனுல், வணிக வங்கிகள் குறுகிய காலத்தில் ஓரளவு இலாபம் பெற முடிகின்றது. மிக அதிகமாக உண்டி யல்கள் பழக்கமுள்ள நாடுகளில் வணிக வங்கிகள் இப் பணியினை அளிப்பதன்மூலம் கணிசமான இலாபம் பெற வழி உண்டு. இங்கிலாந்தில் உண்டியல் மாற்றும் அகங்கள் தனியாக இயங்குவதால் வணிக வங்கிகள் இப் பணியினை ஏற்பதில்லை. மாருக இவ்வகங்களுக்குக் குறுகிய காலக் கடனை அளிக்கின்றது.

### முதலீடுகள்

வணிக வங்கிகள் தங்களிடம் உள்ள எச்சப்பணத்தைப் பலவிதங்களில் முதலீடு செய்கின்றன. குறிப்பாக கணிசமான அளவுக்கு அரசாங்கப் பத்திரங்களில் (Government Securities) முதலீடு செய்கின்றன. இதுபோன்ற முதலீடு மிக பத்திரமானது (safe). மேலும், வேண்டும்போது மத்திய வங்கியிடம் இப் பத்திரங்களை ஈடாக வைத்துக் கடனைப் பெற்றுக்கொள்ளவும் ஏதுவாக உள்ளது. பொருளாதார மேம்பாடு அடையாத நாடு களில் தொழில் வளர்ச்சியின்மை காரணமாக தொழில் பத்தி ரங்கள் (Industrial Securities) இல்லாததனுல் இது போன்ற நாடுகளின் வணிக வங்கிகள் அரசாங்கப் பத்திரங்களிலேயே பெருவாரியாக முதலீடு செய்ய வேண்டியுள்ளது. இந்தியாவில்

வணிக வங்கிகள் அதிக அளவு அரசாங்கப் பத்திரத்திலேயே முதலீடு செய்கின்றன. இதற்குக் காரணம் வணிக வங்கிகள் அதிகமான ரொக்க இருப்பை (Excess cash) கையில் வைத் திருப்பதும், அதிகக் கடன் அளிக்க வாய்ப்பு இல்லாமையும் ஆகும்.

**வாடிக்கைக்காரர்களுக்கு அளித்த கடன்**

ஒரு வணிக வங்கியின் முக்கிய பணி ஏற்புகளைப் பெற்றுக் கடன் ஈவதாகும். வணிக வங்கிகள் பலதரப்பட்ட வாடிக்கைக் காரர்களுக்கு கடன் அளிக்கின்றன. பொதுவாக அதிகப்பற்று, ரொக்கப்பற்று, கடன் அளிப்பு என்ற மூன்று வகையில் வணிக வங்கிகள் கடன் அளிக்கின்றன. இவை பற்றி முன்பே கூறியுள் ளோம். வியாபாரிகளும், தொழிற்சாலைகளும் தங்களுக்குத் தேவையான நடைமுதலை (working capital) வணிக வங்கிகளிட மிருந்து பெறுகின்றனர். வியாபாரத்திற்கு அச்சாணி போல் வணிக வங்கிகள் உதவுகின்றன. இல்லையேல் வியாபாரிகள் தங்கள் தொழிலினை நடத்த இயலாது.

**வாடிக்கைக்காரர்களுக்காகச் செய்த ஏற்புகள், மேல் எழுத்துகளால் ஏற்பட்ட பொறுப்பு**

இது ஒரு வணிக வங்கிக்குச் சொத்தாகவும் பொறுப் பாகவும் அமையும். இது ஓர் எதிர்ப் பதிவு (Contra Entry). பொறுப்புப் பக்கத்தை விவரிக்கும்போது இதுபற்றி விவரித் துள்ளோம். வாடிக்கைக்காரர்களுக்காக வணிக வங்கி ஏற்பு செய்திருந்தாலோ, மேல் எழுத்து இட்டிருந்தலோ வணிக வங்கி முதிர்வு காலத்தில் (on maturity) பணத்தைக் கொடுக்க வேண்டும். இவ்விதம் வணிக வங்கி செய்தாலும், இதனை யாருக்காக ஏற்பு செய்ததோ அவரிடமிருந்து பணத்தினை வணிக வங்கி பெற வேண்டும். எனவே, இது சொத்தாகவும் அமையும்.

**வங்கிக் கட்டடங்கள்**

வணிக வங்கி தன் தலைமையகம், பல கிளையகங்கள் (Branches) இயங்கப் பெரிய சொந்தக் கட்டடங்களை வைத் திருக்கலாம். இவைகளும் வங்கியின் சொத்தாகும்.

சொத்துப் பக்கத்தைப் பார்ப்போமானால் மிக எளிவரல் சொத்தான ரொக்க இருப்பிலிருந்து, மிகக் குறைவான எளிவரல் சொத்தான (least liquid asset) வங்கிக் கட்டடங்கள் வரை

எளிவரல் தன்மை நிலைமையை விளக்கும் வண்ணம் சொத்துகள் அமைந்துள்ளன.

## பாட நூல்கள்

1. G. Crowther—An Outline of Money.
2. R. S. Sayers—Modern Banking.
3. Horace White—Money and Banking.
4. Walter Leaf—Banking.
5. George W. Southgate—English Economic History.
6. I.T.A. Vaswani—Indian Banking System.

# 2. வணிக வங்கிகளும் நாணயப் பெருக்கமும்

## (Commercial Banks and Credit Creation)

வணிக வங்கிகள் பணத்துடன் புழங்கும் ஓர் அமைப்பாக மட்டில் இல்லாமல் பணத்தினை உண்டாக்கும் ஓர் அமைப்பாகவும் இருக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் பணத்தினை அச்சடித்து வெளியிடும் உரிமை மைய வங்கிக்குத்தான் அளிக்கப்பட்டுள்ளது. எனவே, வணிக வங்கிகளுக்குப் பணத்தினை அச்சடித்து வெளியிடும் உரிமை கிடையாது. எனினும், ஓர் அளவுக்குக் கடனை (credit) ஏற்படுத்திக் கொடுக்கும் வாய்ப்பு வணிக வங்கிகளுக்கு உண்டு.

வணிக வங்கிகள் கடனை எம்முறையால் ஏற்படுத்த இயலும் என்பதை விவரிக்குமுன் வணிக வங்கிகள் தோன்றுமுன் பணத்தினையும் முக்கியமான விலை மதிப்புள்ள நகைகளையும் பாதுகாக்க மக்கள் என்ன செய்து வந்தனர் என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். வங்கிகள் தோன்றாத போது பாதுகாப்புக்கு என மக்கள் பணத்தினையும் மதிப்பு உள்ள பொருள்களையும் பொற்கொல்லர்களிடம் (goldsmiths) பாதுகாப்புக்கு எனக் கொடுத்து வைத்திருந்தனர். கொடுத்த பொருள்களுக்கு ஆதாரமாக அப் பொற்கொல்லர்கள் நா. உ. க (நான் உமக்குக் கடன் பட்டவன் – I. O. U.) என்ற இரசீது களைக் கொடுத்தனர். இந்த நா.உ.க. இரசீது மிகவும் மதிக்கப் பெற்றது. எனவே, வேறு எவருக்கேனும் பணம் தர வேண்டும் என்றால் இந்த நா. உ. க. வை அவர்களுக்கு அளித்தால் அதைப் பெற்றுக்கொண்டனர். எல்லோரும் இதனை மதித்ததால் பல கைகளுக்கு இது மாற ஆரம்பித்தது. எல்லோரும் அதைப் பணம்போலவே கருதிப் பெற்றுக்கொண்டனர். பொற்கொல்லர்கள் தங்களிடம் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டுள்ள பணம், நகைகளைப் பெரும்பாலோனோர் திருப்பிப் பெற்றுக் கொள்ளவில்லை என்பதை உணர ஆரம்பித்தனர். இதுவும் அன்னியில் இவர்கள் அளித்த நா. உ. க.–விற்கு மிகவும்

மதிப்பு உள்ளதையும் உணர்ந்தனர். பொற்கொல்லர்களின் புத்திசாலித்தனம் அதிகமாக ஆக அவர்கள் ஏன் நாமே நா. உ. க. வை அச்சடித்துத் தேவையுள்ளோருக்குக் கொடுத்துச் சிறிது இலாபம் சம்பாதிக்கக் கூடாது என எண்ணினர்கள். அச்சகமும், காகிதமும், மக்களின் வரவேற்பும் இருந்தால் நா. உ. க. வெளியிடலாம் என முடிவெடுத்து வெளியிட்டனர். நா. உ. க. வெளியிடுவதன் மூலம் கடனை அல்லது பணத்தினை பொற்கொல்லர்கள் ஏற்படுத்திக் காட்டினர்கள். இதுபோலவே வணிக வங்கிகளும் கடனை ஏற்படுத்தலாம்.

பணத்திற்கும் காசோலைக்கும் மிகுந்த வேறுபாடு ஒன்றும் கிடையாது. எவருக்கேனும் பணம் கொடுக்க வேண்டுமானல் காசோலை அளிக்கலாம். அக் காசோலையை வங்கிக்குக் கொடுத்து அதனைத் தன் வங்கிக் கணக்கு இருப்புடன் சேர்த்துக் கொள்ளலாம். இந்த நபர் வேறு எவருக்கேனும் பணம் கொடுக்க வேண்டும் என்ருல் அவர் பெயருக்கு ஒரு காசோலை விடுவிக்கலாம். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் பொதுவாக எல்லோரும் வங்கியில் கணக்கு வைத்துக் கொண்டுள்ளனர். அவர்கள் தங்கள் செலவினங்களைக் காசோலை மூலமே செய்கின்றனர். கடைகளில் வாங்கும் பொருள்களுக்கோ தங்களிடம் வேலை செய்பவர்களுக்கோ காசோலை மூலமே பணம் கொடுக்கின்றனர். அனைவரும் வங்கியில் கணக்கு வைத்திருப்பதால் காசோலையைப் பெற்றுக் கொள்ள மறுப்பதில்லை. ஆனல், இந்தியா போன்ற பின்தங்கிய பணச் சந்தை உடைய நாடுகளில் சிலரே வணிக வங்கியில் கணக்கு வைத்துக்கொண்டுள்ளனர். பெரும்பாலானவர்களுக்கு வங்கியில் கணக்கு இல்லை. இந்தியாவில் வங்கியில் கணக்கு வைத்திருப்பவர்கள்கூடப் பெரும்பாலும் காசோலைக்குப் பதில் ரொக்கமாகப் பெற்றுக் கொள்வதையே விரும்புகின்றனர். வணிக வங்கிகள் கடனை ஏற்படுத்த முடியும் என்பதன் பொருள், அவை பணம் வேண்டுவோருக்குக் கடன் அளித்து, அந்த அளவிற்குக் காசோலைகளை விடுவிக்கும் உரிமையை அளிக்கின்றது என்பதாகும். வணிக வங்கி ஒருவருக்கு ரூ. 5,000 கடன் அளிக்கிறது என்ருல் அதனை ரொக்கமாகத் தராமல் அந்தக் கடன் பெற்றவருடைய கணக்கில் ரூ. 5,000 வரவு செய்து, அந்த அளவுக்கு அவர் காசோலையை விடுவிக்கும் உரிமை கொடுக்கின்றது. கடன் பெறுபவருக்கு பணமாகக் கொடுத்தாலும், காசோலை விடுவிக்கும் உரிமை கொடுத்தாலும் இரண்டும் ஒன்றே. இந்த நபர் மற்றவர்களுக்குப் பணம் தர வேண்டும் என்ருல் அவைகள் நாணயங்களையும் நோட்டு

களையும் அச்சடித்துத்தான் ஏற்படுத்த வேண்டும் என்பது அன்று. இவ்விதம் செய்ய வணிக வங்கிகளுக்கு உரிமையும் கிடையாது. மைய வங்கிக்கு மட்டும்தான் நோட்டு அச்சடிக்கும் உரிமை உண்டு. வணிக வங்கிகள் கடனை ஏற்படுத்துகின்றன என்றால், காசோலைகளை விடுவிக்கும் உரிமை கொடுத்துக் கடனை ஏற்படுத்துகின்றன என்பதே பொருளாகும்.

ஒரு வணிக வங்கி கடனை எவ்விதம் ஏற்படுத்த முடியும்? இதனைக் கீழ்க் கண்டவாறு விவரிக்க முடியும். ஒரு வணிக வங்கியிடம் முதன் முதலாக திரு. இரா. ராமன் என்பவர் ரூ. 1,000 வைப்பு செய்கிறார் என்று கொள்வோம். அப்போது இவ் வணிக வங்கியின் இருப்பு நிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு இருக்கும்:

இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்பு | ரூ. | சொத்து | ரூ. |
|---|---|---|---|
| வைப்புகள் ... | 1,000 | ரொக்க இருப்பு ... | 1,000 |
| | 1,000 | | 1,000 |

இதன் பின் திரு. பி. கோபால் என்பவர் ரூ. 1,000 இதே வங்கியில் வைப்பு செய்கிறார் எனக் கொள்வோம். இதன் பின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கண்டவாறு மாறும்:

இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்பு | ரூ. | சொத்து | ரூ. |
|---|---|---|---|
| வைப்புகள் ... | 2,000 | ரொக்க இருப்பு ... | 2,000 |
| | 2,000 | | 2000 |

திரு. சேகர் இதன்பின் ரூ. 1,000 வைப்பு செய்தால் இருப்பு நிலைக் குறிப்பு பின் கண்டவாறு மாறும்:

இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்பு | ரூ. | சொத்து | ரூ. |
|---|---|---|---|
| வைப்புகள் ... | 3,000 | ரொக்க இருப்பு ... | 3,000 |
| | 3,000 | | 3,000 |

இந்த நிலையில் திரு. இலக்குமணன் வணிக வங்கியிடம் ரூ. 1,000 கடனைக் கேட்கின்றார் எனக் கொள்வோம். இந்தக் கடன் தேவைக்குப் பணமாகத்தான் தரவேண்டும் என்பது அன்று. இவ் வணிக வங்கி இலக்குமணனின் கணக்கில் ரூ. 1,000 இருப்பது போல் பதிவு செய்து இலக்குமணனுக்குக் காசோலை விடுக்கும் உரிமை அளித்தால் போதும். இவ்விதம் செய்த பிறகு இவ் வணிக வங்கியின் இருப்பு நிலைக் குறிப்பு கீழ்க் கண்டவாறு இருக்கும்:

இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்பு | ரூ. | சொத்து | ரூ. |
|---|---|---|---|
| வைப்புகள் ... | 4,000 | ரொக்க இருப்பு ... | 3,000 |
| | | வாடிக்கைக்காரர்களுக்கு அளித்த கடன் | 1,000 |
| | 4,000 | | 4,000 |

வணிக வங்கி இப்போது ரூ. 1,000 புதிதாக ஏற்படுத்தி உள்ளது. இலக்குமணன் ராமனுக்கோ, கோபாலுக்கோ, சேகருக்கோ பணம் கொடுக்க வேண்டும் என்றால் காசோலை விடுப்பான். அவர்கள் வங்கியிடம் காசோலையைக் கொடுத்தால் அவர்கள் கணக்கில் குறைக்க வேண்டும். வணிக வங்கி பணமாக ஏதும் தரத் தேவையில்லை. இன்னும் பலர் இந்த வங்கியிடம் கடன் கேட்டால் அவர்கள் கணக்கில் கடன் தொகையை வரவு வைத்து அவர்களுக்குக் காசோலை விடுக்கும் உரிமை தர வேண்டும். எத்தனைபேருக்கு வேண்டும் என்றாலும் கடன்

கொடுத்துக்கொண்டே போகலாம். வங்கியின் இருப்பு நிலைக் குறிப்பில் சொத்து பக்கத்தில் "வாடிக்கைக்காரர்களுக்கு அளித்த கடன்" அதிகரித்துக்கொண்டே போகும். அதே அளவுக்கு பொறுப்பு பக்கத்தில் வைப்புகள் அதிகரித்துக் கொண்டே போகும்.

வணிக வங்கி கீழ்கண்ட முறைகளில் கடனை ஏற்படுத்தி வைப்புகளை அதிகரிக்கலாம்.

1. கடன் வேண்டுவோருடைய உண்டியலை கழிவுப்பாடு செய்யலாம்.

2. கடன் வேண்டுவோரிடமிருந்து நகைகளையோ, பங்கு களையோ, ஈடாகப் பெற்றுக்கொள்ளலாம்.

வணிக வங்கிகள் எவ்விதக் கடனை ஏற்படுத்தலாம் என்று மேலே விவரித்த முறையில் ஒரு பெரிய குறைபாடு உள்ளது. இலக்குமணனுக்கு அளித்த கடன் ரூ. 1000-க்கு இலக்குமணன் ராமனுக்கோ, கோபாலுக்கோ, சேகருக்கோ காசோலை விடுவிப் பார் எனக் கூறியுள்ளோம். ஆனால், இலக்குமணன், தான் கணக்கு வைத்திருக்கும் வங்கியில் கணக்கு வைத்துள்ள மற்ற வர்களுக்குத்தான் காசோலை அளிக்கவேண்டும் என்பது அல்ல. இலக்குமணன் மற்றைய வங்கிகளில் கணக்கு வைத்துள்ள மோகன், அறிவழகன், மெய்யப்பன் ஆகியோர்களுக்கு காசோலை விடுக்கலாம். அவர்கள் வங்கிகள்மூலம், கடனை ஏற் படுத்தியுள்ள வங்கிக்கு வசூலுக்கு அனுப்புவார். அப்போது அவ்வங்கிகளுக்கு ரொக்கமாக பணம் அளிக்கப்பட வேண்டும். மேலும், வங்கியில் பழக்கம் மிகவும் அதிகமாக உள்ள இங்கி லாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளிலும் வங்கியில் கணக்கு வைத்திருப்போர்கள் அவ்வப்போது சிறிய செலவுகளுக்குக் கணக்கிலிருந்து பணம் எடுத்துக்கொள்வர். பேருந்துவில் பயணம் செய்யவோ, சினிமா பார்க்கவோ தேவைப்படும் சிறிய தொகைக்கும் ரொக்கம் தேவைப்படுகின்றது. எனவே, மேலே விவரிக்கப்பட்ட காரணங்களுக்கு வணிக வங்கி ரொக்கம் வேண்டியிருக்கிறது. ஒரு குறைந்தபட்ச அளவுக்கு வணிக வங்கிகள் ரொக்க இருப்பு வைத்துக்கொள்ள வேண்டியிருக் கிறது. எனவே, இந்த குறைந்தபட்ச ரொக்கம் வணிக வங்கி கடனை ஏற்படுத்தும் விதத்தில் ஒரு பெரிய தடையாக அமைந் துள்ளது. ரொக்க இருப்பு ஒரு தடையாக இல்லையென்றால், முதலில் கூறியதுபோல் வணிக வங்கி கடனை ஏற்படுத்திக் கொண்டே போகலாம்.

ஒவ்வொரு வணிக வங்கியும் எவ்வளவு ரொக்க இருப்பு வைத்துக்கொள்ளும்? இதனை அறுதியிட்டுக்கூற முடியாது. அனுபவத்தில் ஒவ்வொரு வணிக வங்கியும் எத்துணை ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டும் என்பதினை உணர்ந்திருக்கும். இங்கிலாந்தில் வணிக வங்கிகள் பொதுவாக 10 முதல் 12 சதவீதம் வரை தங்கள் வைப்புகளின் மீது ரொக்க இருப்பு வைத்திருக்கும். 10 சதவீத ரொக்க இருப்பு வைப்பின் மேல் வைத்திருக்கும் வங்கியின் ஒருவர் ரூ. 10 வைப்பு செய்கிருர் எனக் கொண்டால், இந்த ரொக்க இருப்பு ரூ. 100 – 10 = ரூ. 90 வரை வணிக வங்கிக் கடனை ஏற்படுத்தலாம். இதே போல் புதிய வைப்பு வைத்து இருப்பவர் ரூ. 1 எடுத்துக்கொண்டுவிட்டால் ரூ. 10 – 1 = ரூ. 9 கடன் ஏற்படுத்தியதில் குறைவு பெறவேண்டும் எனவே, வணிக வங்கி வைத்திருக்க வேண்டிய ரொக்க இருப்பு கடன் ஏற்படுத்தும் முறையில் ஒரு தடையாக அமைகின்றது.

வணிக வங்கிகளிடம் கையில் தேவைக்கு மேல் ரொக்க இருப்பு இருந்தால் அவை அதிகமான கடனை ஏற்படுத்தும்.

வைப்புகள் மீது வைத்திருக்க வேண்டிய குறைந்தபட்ச ரொக்க இருப்பு அதிகமான சதவீதமாக இருந்தால் ஏற்படக் கூடிய கடன் குறைவாக இருக்கும். ஒரு வணிக வங்கி வைப்புகள் மீது 10 சதவீதம் ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டுமானுல் வங்கி கையில் உள்ள ரொக்க இருப்பு 10 மடங்கு கடனை ஏற்படுத்தல்ாம். ஆனுல், வைப்பு மீது 20 சதவீத ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டுமானுல் கையில் உள்ள ரொக்கத்திற்கு 5 மடங்கு கடனைத்தான் ஏற்படுத்தலாம்.

எந்த நாட்டில் வங்கிப் பழக்கம் அதிகமாக நிலவி, பொது மக்கள் கையில் குறைந்த ரொக்கமே வைத்திருக்க விரும்புகிருர் களோ அந்த நாட்டில் வணிக வங்கிகள் அதிகமானக் கடனை ஏற்படுத்தக் கூடும்.

மைய வங்கியின் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களும் வணிக வங்கியின் கடன் ஏற்படுத்தும் முறைக்கு தடை அமைக்கலாம். வணிக வங்கிகள் அவ்வப்போது தங்கள் வைப்புகளில் அதிகமான அளவு ரொக்க இருப்பு வைத்திருக்க மைய வங்கி ஆணை இட்டால் வணிக வங்கி ஏற்படுத்தக் கூடிய கடன் குறையும்.

வெளி மார்க்கெட் நடவடிக்கையினுல் (open market operations) வணிக வங்கியின் கையிலுள்ள ரொக்க இருப்பு பாதிக்கப் படலாம். இதனுல் கடன் ஏற்படுத்தும் ஆற்றல் குறையலாம்.

வணிக வங்கியின் கடனை ஏற்படுத்தலாம் என்ற தத்துவத்தினை சில வங்கியல் நிபுணர்கள் மறுக்கின்றனர். வணிக வங்கிகள் தாங்களே கடன் ஏற்படுத்த முடியாது. கடன் கோருபவர்கள் இருந்தால்தான் ஏற்படுத்த முடியும். எனவே, வணிக வங்கிகள் கடனை ஏற்படுத்தக்கூடும் என்ற கருத்து தவறு எனவும் சொல்கின்றனர்.

தத்துவரீதியில் ஒப்புக்கொள்ள இயலாவிட்டாலும், வணிக வங்கிகள் கடனை ஏற்படுத்தக் கூடும் என்ற உண்மையை மாற்ற முடியாது. ஒரு நாட்டில் உள்ள பணப் பழக்கம் அந் நாட்டில் புழங்கி வரும் பணத்தினையும் வங்கிகள் ஏற்படுத்தும் கடனையும் சேர்ந்தே கணக்கிடப்படுகின்றது. பண வீக்கத்தின் கட்டுப்படுத்தும் எந்த முயற்சியும் வங்கிக் கடனைக் கட்டுப் படுத்தவும் முயல்கின்றது.

பேராசிரியர் சேயர்ஸ், வணிக வங்கிகள் புதிதாக ஏற்படுத்தியுள்ள பணம் எல்லோருடைய கைகளுக்கும் உடனடியாகச் செல்வதில்லை. ஆனல், இப்புதிய பணம் வணிக வங்கிகளுக்கு ஈடாக சொத்தை அளிக்கவல்ல நபர்களுக்கு மட்டுமே கிடைக்கின்றது எனக் கூறுகின்றார். இப்பேராசிரியர் மேலும் கூறுவதாவது, "வணிக வங்கிகள் பணத்தினை ஏற்படுத்துவதோடு தேவையான குறிப்பிட்ட துறைகளுக்கு அனுப்பி வைப்பதினலும் சிறந்த பயன்பாட்டினை ஏற்படுத்துகின்றது".

## பாட நூல்கள்

1. R. S. SAYERS—Modern Banking.
2. G. GROWTHER — An Outline of Money.

# 3. கிளை வங்கியும் - தனி வங்கியும்

## (Branch Banking and Unit Banking)

வணிக வங்கிகள் ஒரே ஒரு அலுவலகத்தில், கிளைகள் ஏதும் இல்லாமல் தனியாக இயக்குநர் அவையினால் (Board of Directors) நடத்தப்பட்டால், இவ்வகையான வங்கிக்கு தனி வங்கி எனப் பெயர். ஒரே இயக்குநர் அவையின் கட்டுப்பாட்டில் நடக்கும் ஒரு வங்கி பல இடங்களில் தங்கள் கிளைகளைக் கொண்டு நாட்டின் பல்வேறு இடங்களில் வங்கித் தொழிலை செய்து வந்தால், இவ்வங்கிகளுக்குக் கிளை வங்கிகள் என்று பெயர். இந்தியாவில் உள்ள பெரிய வங்கிகளான, ஸ்டேட் பாங்கு, இந்தியன் பாங்கு, பஞ்சாப் நேஷனல் பாங்கு, சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா போன்றவைகள் கிளை வங்கிகள் ஆகும். இவ்வங்கிகள் ஒரு இடத்தில் மட்டும் தொழில் செய்யாமல் நாட்டின் பல பாகங்களிலும் கிளைகளைத் தோற்றுவித்து செயல் படுகின்றன. இதேபோல் மிகச் சில தனி வங்கிகளும் இந்தியாவில் இருக்கின்றன.

வெகு காலமாக, கிளை வங்கி நன்மை தருவதா அல்லது தனி வங்கி நன்மை பயப்பதா என்ற சர்ச்சை இருந்து வந்தது. இவ்வாதம் ஒரு முடிவடைந்த வாதமாக ஆகிவிட்டது. இரு வகை வங்கிகளிலும் பல நன்மைகளும் குறைபாடுகளும் உள்ளன. அந்தந்த நாட்டின் பணச் சந்தை நிலைமையைக் கொண்டும், பொருளாதார நிலையைக் கொண்டும்தான் இவ்விரு வகைப்பட்ட வங்கிகளில் எவ்வகையான வங்கி சிறப்பாக அமையும் எனக் கூறலாம்.

இந்த இருவகை வங்கிகளைத் தவிர அணி வங்கி (Group Banking) தொடர் வங்கி (Chain Banking), கடிதப் போக்கு வரத்து வங்கி (Correspondent Bank) என்ற வகைகள் கொண்ட வங்கிகளும் இருக்கின்றன.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தனித்தனியான வங்கிகள் ஒரு பிடிப்புக் கம்பெனியின் (Holding Company) கட்டுப்பாட்டின் கீழ் இருந்தால் இவ்வங்கிகள் அணி வங்கிகள் என அழைக்கப்படுகின்றன.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தனித்தனியான வங்கிகள் பிடிப்புக்கம்பெனி அல்லாமல் ஒரு சில இயக்குநர்கள் (directors) கட்டுப்பாட்டில் அமையுமானுல் இவ்வங்கிகள் தொடர் வங்கி என அழைக்கப்படும். பிடிப்புக் கம்பெனி இல்லாமல் கட்டுப்பாடு சில இயக்குநர்கள் மற்றைய வங்கிகளிலும், அவ் வங்கிகளின் இயக்குநர்கள் இவ்வங்கியிலும் இயக்குநர்களாகவும் இருப்பதால் இத்தொடர் வங்கி அமைகின்றன.

பெரிய வங்கிகள் சிறிய வங்கிகளுடனும், அவைகள் அவற்றினும் சிறிய அளவு வங்கிகளுடனும் தொடர்பு கொள்வதால் கடிதப் போக்குவரத்து வங்கி ஏற்படலாம். இவ்வகை வங்கிகளால் பெரிய வங்கிகள் வட்டி வீதத்தை உயர்த்தி சிறிய வங்கிகளிடமுள்ள உபரி ரொக்கத்தை அவைகளின் பெரிய வங்கிகள் மூலம் அதிக வைப்பாகப் பெறலாம்.

கிளை வங்கிகளுக்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டாக இங்கிலாந்தும், தனி வங்கிகளுக்கு எடுத்துக்காட்டாக அமெரிக்காவும் அமைந்துள்ளன. இங்கிலாந்தில் 'மிகப் பெரிய ஐந்து' (big five) எனப்படும் ஐந்து வணிக வங்கிகள் இங்கிலாந்து முழுவதும் விரிந்து பல இடங்களில் கிளை வங்கிகளை அமைத்துள்ளன. இந் நாட்டில் வணிக வங்கிகளின் செயல்பாடு முழுமையும் இந்த ஐந்து வங்கிகளால் செயல்படுத்தப்படுகின்றன எனக் கூறினுல் மிகை இல்லை. இதற்கு மாருக அமெரிக்க நாட்டில் தனி வங்கிகள் தழைத்து ஓங்கி உள்ளன. ஒரே நகரத்தில் நூற்றுக் கணக்கான தனி வங்கிகள் அமைந்துள்ளன. இதற்குக் காரணம் அமெரிக்க நாட்டில் பணக் குவியலை சில வங்கிகள் கையில் வைத்திருந்தால் முதலாளித்துவ நாடான அமெரிக்காவில் கம்யூனிச சக்தி அவ்வங்கிகளை எடுத்துக்கொண்டு பொருளாதார நிலையில் மாற்றம் ஏற்படுத்த முயலுமோ என்ற அச்சம் ஆகும் என சில பொருளாதார — வங்கியல் நிபுணர்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

## கிளை வங்கிகளின் நன்மைகள்

1. நாடு முழுவதிலும் தொழிற்சாலைக்கும், வியாபாரத்திற்கும் தேவையான மூலதனத்தினை அளிப்பதில் பெரும் பங்கு கொள்கின்றன. சில இடங்களில் கிடைக்கும் அதிகபட்சமான வைப்பினைக் கொண்டு அவ்விடத்திற்கு மட்டும் அல்லாமல் தன் கிளைகளின் மூலமாக நாட்டின் பல்வேறு இடங்களிலும் தேவையான மூலதனத்தினை அளிக்கின்றன.

2. நாடு முழுவதும் மூலதனத்தினை அளிப்பதால், மூலதனம் மிக அவசியமும், உடனடி உற்பத்தியைப் பெருக்கும் தொழில் களுக்கும் கிடைக்கின்றது.

3. நாட்டின் பல்வேறு மாநிலத்தில் நிலவும் வட்டி வீத ஏற்றத் தாழ்வினை சரி செய்து, கூடியவரை நாடு முழுவதும் ஒரே வட்டி வீதம் நிலவ வணிக வங்கிகள் பயன்படுகின்றன. எங்கே வட்டி வீதம் மிகக் குறைவோ அங்கே சிறிது அதிகமான வட்டி யைக் கொடுத்து கிளை வங்கி அதிகமான வைப்பினைப் பெற்று இப்பணத்தினை எங்கு வட்டி விகிதம் அதிகமாக நிலவுகின்றதோ அங்கே சற்றுக் குறைவான வட்டி வீதத்தில் அதிகமான அளவில் கடனைக் கொடுத்து நாட்டில் கிட்டத்தட்ட ஒரே வட்டி வீதம் நிலவ உதவுகின்றது.

4. இவ்வகையான வங்கிகள் கடன் அளிப்பதோ முதலீடு செய்வதோ தகுதியின் அடிப்படையிலேயே இருக்கும். ஏன் எனில் கிளை வங்கியின் மேலாளர் (Manager) ஒரே இடத்தில் இல்லாமல் மாற்றப்படுவதால் உள்ளூரில் உள்ள விருப்பு, வெறுப்புகளுக்கு அடிமை ஆகாமல் கடன் பெறுபவருடைய தன்மையையும், பணத்தின் பாதுகாப்பையுமே முக்கியமாகக் கொண்டு செயல்படுவார்.

5. இவ்வகையான வங்கிகளின் கட்டுப்பாட்டில் அதிகமாக பணம் இருப்பதால் மிகப்பெருந் தொழிற்சாலைகளின் அதிக பட்சத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியும்.

6. இவ்வகையான வங்கிகள் கொடுத்துக் கடன்கள் சில இடங்களில் திரும்ப வராவிட்டாலும் இதனால் ஏற்படும் நட்டத்தை மற்றைய இடங்களில் கிடைக்கும் பெரும் இலாபத் தைக்கொண்டு நட்டத்தை சரிக்கட்டிக்கொள்ளும்.

7. இவ்வகை வங்கியின் நிருவாகத்தில் திறமை மிகுந் திருக்கும். ஏனெனில் திறமை மிக்கப் பலரை வேலைக்கு எடுத்து அவர்களை பல கிளைகளில் வேலைக்கு அமர்த்த இவ் வங்கியால் இயலும்.

8. இவ்வகையான வங்கி வாடிக்கைக்காரர்களுக்குப் பலவிதமான வங்கிச் சேவைகளை அளிக்க இயலும்.

9. இவ்வகை வங்கி தங்களுக்குத் தேவையான காகிதம், எழுதுகோல், மேசை, நாற்காலி போன்றவைகளை மொத்தமாக

வாங்குவதால் குறைந்த விலைகளில் பெறமுடியும். இதனுல், செலவில் கணிசமான மிச்சம் ஏற்படும்.

10. வங்கிகளில் தொழில் பெற விரும்புவோர் தொழிலைத் தெரிந்துகொள்ள பல கிளைகளில் பெறும் அனுபவம் மிகவும் பயனுள்ளதாகும்.

11. கிளை வங்கிகள் மைய வங்கி பணச் சந்தையைக் கட்டுப்படுத்த மிகவும் எளிதாக்குகின்றன. ஒவ்வொரு தனித் தனி வங்கியையும் கட்டுப்படுத்துவதைவிட கிளை வங்கிகள் எளிதில் கட்டுப்படுத்தலாம்.

## கிளை வங்கியின் குறைபாடுகள்

1. நடைமுறையில் சிவப்பு நாடாவினுல் (Red-tapism) எந்த ஒரு செயலிலும் காலதாமதம் ஏற்படலாம். கடன் விண்ணப்பங்கள் தலைமை அலுவலகத்திற்குச் சென்று அனுமதி பெற்றுவர மிகக் கால தாமதம் ஆகலாம்.

2. உள்ளூரில் இருக்கும் பணம் அவ்வூருக்குப் பயன் படாமல் வெளியூர்களுக்குப் பயன் படலாம். கிளை வங்கி வைப்புக்களைப் பெற்று வேறு இடங்களில் கடன் கொடுப்பதால் உள்ளூர் முன்னேற்றத்திற்கு தடையாக அமையாலாம்.

3. கிளை நிருவாகிகள் அடிக்கடி மாற்றப் படுவதால் உள்ளூரில் உள்ள தேவையோ, நிலைமையோ தெரியாமல் இருக்கலாம். மேலும், மாற்றத்தை எதிர் நோக்கிக் கொண் டிருக்கும் நிருவாகி தன் வங்கியின் முன்னேற்றத்திற்கோ வாடிக்கைக்காரர்களின் தேவைகளை பூர்த்தி செய்வதற்கோ பெருமுயற்சி ஏதும் செய்யமாட்டார்.

4. கிளை வங்கியின் காரணமாக சில வங்கிகளிடம் பணச் சர்வாதீனம் (monoply money power) ஏற்படுகின்றது. இதன் காரணமாக நாட்டின் பொருளாதாரம் இவ்வங்கிகளை நிருவகிக்கும் சிலர் கையில் சிக்கிக் கொள்கிறது. அவர்களுக்கு வேண்டிய தொழில்கள் அபிவிருத்தியில்தான் அதிக நாட்டம் கொள்வாரே தவிர நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் தேவையைக் கருத மாட்டார்கள்.

5. கிளை வங்கிகளால் நிருவாகச் செலவு அதிகமாகின்றது. மேலும், பல கிளைகள் நடத்துவதால் சிக்கனம் இல்லாமை

காரணமாக விளக்கு, தேவைக்கு அதிகமான அலுவலர்கள் காரணமாக வீண் செலவுகள் அதிகமாகின்றன.

6. பல கிளைகளில் உள்ள அலுவலர்களை கண்காணிப்பது கடினமான காரியமாக உள்ளது. தேவை இல்லா சிறிய காரணங்களுக்கும் ஒன்று சேர்ந்து வேலை நிறுத்தம் செய்ய அலுவலர்கள் எப்பொழுதும் தயாராக இருக்கின்றார்கள்.

7. கிளைகள் திறக்கப்படும்பொழுது, தேவையையும், வங்கியின் சேவையை இதன் மூலம் அதிகப்படுத்தலாமா என்பதையும் கொள்ளாமல், போட்டி மனப்பான்மையுடன் திறக்கப் படுகின்றன.

## தனி வங்கியின் நன்மைகள்

1. வங்கிக் கிளை ஏதும் இல்லாமல் ஒரே அலுவலகத்தில் தொழில் நடத்துவதால் உள்ளூரிலுள்ள தேவைகளை மிக நன்றாக உணரலாம். உள்ளூரிலுள்ள தொழில்கள், வியாபாரங்கள், அவை விரிவுபடுத்தத் தேவையான பண உதவி ஆகியவைகளையும், எங்கிருந்து அதிகமான வைப்புகளைப் பெறலாம், ஒவ்வொரு வியாபாரியின் பண நிலைமை என்ன என்பனவற்றை நன்குணர்ந்து தொழிலை நடத்த இயலும். இதனால், வங்கிக்கு நட்டம் ஏதும் இல்லாமல் பெரிய இலாபமும், வங்கியின் சேவை பொதுமக்களுக்கு அதிகமான அளவிலும் கிடைக்கும்.

2. சிறிய நிருவாகமாக இருப்பதால் மேற்பார்வை செய்தல் எளிது.

3. நடைமுறையில் பல சிக்கனங்களைக் கைக் கொள்ள முடியும். இதனால், செலவீனங்களைக் கட்டுப்படுத்த முடியும்.

4. பல சிறிய தனி வங்கிகள் மூலம் பணக் குவியல் கட்டுப் படுத்தப்படுகின்றது.

## தனி வங்கிகளின் குறைபாடுகள்

1. பல இடங்களிலிருந்து வைப்புகளைப்பெற இயலாததால் வைப்புகள் குறைவாக இருக்கும். எனவே, அதிக அளவில் பல தொழிற்சாலைகளுக்குக் கடனைக் கொடுக்க முடியாது.

2. பல கிளைகள் இல்லாததால் வாடிக்கைக்காரர்களுக்குப் போதிய சேவையினை அளிக்க முடியாது. பல்வேறு இடங்களுக்கு பணிவிடை அளித்தல், அன்னியச் செலாவணி பணி

அளித்தல் போன்றவைகள் இவ்வித வங்கியின் மூலம் அதிக அளவில் கொடுக்க இயலாது.

3. ஒரே இடத்தில் கடன் அளிக்க வேண்டும் ஆகையால் பல்வேறு வகையில் முதலீடுகளைச் செய்ய முடியாது.

4. இவ்வகையான வங்கியின் வேலை செய்வோருக்கு அதிகப் பதவி உயர்வு வாய்ப்பு இல்லாமையால் வேலையில் மிகுந்த ஆர்வத்தைக் காட்டமாட்டார்கள்.

இந்தியாவிற்கு தேவை தனி வங்கிகளா கிளை வங்கிகளா?

இந்தியா சுதந்திரம் அடைந்தபின் பொருளாதார மேம்பாட்டையும், வளர்ச்சி பெறவும் ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டி தொழில், விவசாயம் போன்ற துறைகளில் மிகப் பெரிய முதலீட்டைச் செய்துள்ளது. அரசாங்கத்தின் இத்திட்டத்திற்கு உதவும், பெரிய தொழிற்சாலைக்களுக்குத் தேவையான பணத்தினை கொடுத்து உதவ அதிக மூலதனமும், வைப்பும் பெற்ற பெரிய வங்கிகள் தேவைப்படுகின்றன. இக்காரணத்தினால் கிளை வங்கிகளே நம் நாட்டுக்கு உகந்தவை.

இந்தியா போன்ற மிக அதிகமான கிராமங்கள் கொண்ட நாட்டில் கிராமப்புரத்தில் வணிக வங்கிகளின் தேவை மிக அதிகமாக உள்ளது. தனி வங்கி கிராமப்புறங்களில் தோற்றுவித்தல் கடினம். போதிய வைப்பு கிடையாது. எனவே, கிளை வங்கிகள் தங்கள் கிளைகளை தேவைப்பட்ட கிராமங்களில் உடனடியாகத் திறக்கலாம்.

இந்திய வங்கிகளின் சரித்திரத்தை நோக்கின் பல சிறிய தனி வங்கிகள் போதிய வைப்புகளும் வியாபாரமும் இன்றி முறிவு (failure) பெற்றுள்ளன.

மேற்கூறிய காரணங்களால் கிளை வங்கிகள் நம் நாட்டுக்கு உகந்தவை. இக்காரணத்தினால் தனி வங்கிகள் தேவை அற்றவை என்று பொருள் இல்லை. குறிப்பிட்ட இடத்தில் தொழில் வளர்ச்சி பெற்று, போதிய வைப்பு பெற வாய்ப்பு இருந்து, நிருவாகத் திறமை கொண்ட வங்கியர்கள் இருந்தால் அவ்விடங்களில் தனி வங்கி வெற்றி பெறக்கூடும்.

## பாட நூல்கள்

1. R.S. SAYERS—Modern Banking.
2. AGGER—Organised Banking.
3. S. K. BASU—A Review of Current Banking Theory and Practice.

# 4. வைப்பு வங்கிகளும் - கலப்பு வங்கிகளும்

## (Deposits Bank and Mixed Banks)

வங்கிகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை: 1. வைப்பு வங்கி (Deposit Bank) 2. முதலீட்டு வங்கி (Investment Bank) 3. கலப்பு வங்கி (Mixed Bank) ஆகும்.

வைப்பு வங்கிகள், வைப்புக்களைப் பெற்று குறுகிய காலக் கடன்களையே அளிக்கும். இவ்வகை வங்கிகள் அளிக்கும் கடன்களை ஓராண்டு அல்லது இரண்டு ஆண்டுக்குள் திரும்பப் பெற்றுக்கொள்ளும். இவ்வகை வங்கிகள் தொழிற்சாலைகளுக்கும், வியாபார நிறுவனங்களுக்கும் தேவையான நடைமுதலை அளிக்கும். தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான நீண்ட காலக் கடன்களை இவ்வகையான வங்கிகள் அளிப்பதில்லை. வங்கிகள், வாடிக்கையாளர்களின் பொறுப்பு உரிமையர் (trustee) வாடிக்கைக்காரர்களின் பணத்தை காபந்துடன் கண்காணித்துத் திருப்பிக் கொடுக்கப்படல் வேண்டும். வைப்புகள் குறுகிய காலத்தன்மை உடையவை. எனவே, இதை நீண்ட காலக் கடன் அளிப்புக்குப்பயன்படுத்த லாகாது. வைப்பு வங்கிகள் இவ்வித நோக்கு கொண்டே நீண்ட காலக் கடனை அளிப்பதில்லை.

தொழிற்சாலைக்கு, குறுகிய காலக் கடன்களைத் தவிர நீண்ட காலக் கடனும் தேவைப்படுகின்றது. நிலையான சொத்துக்கள், கட்டடங்கள், இயந்திரங்கள் வாங்கத் தேவையானக் கடனை குறுகிய காலத்தில் திரும்பக் கொடுக்க இயலாது. மேலும், தொழிற்சாலையை விரிவுபடுத்தவும், மாற்றி அமைக்கவும், மிக அதிகமான மூலதனம் தேவைப்படுகின்றது. இவ்வகையானக் கடனை நீண்ட காலத்தில்தான் திருப்பி கொடுக்க இயலும். மேலும், புதிதாக ஆரம்பிக்கப்படும் தொழிற்சாலையின் நிறுவனம் வெளியிடும் பங்குகளையும், அவ்வப்போது வெளியிடும் கடன் பத்திரங்கள் மீதும் முதலீடு செய்ய வங்கிகள் முன்வர வேண்டியுள்ளது. இவ்வித முயற்சி எடுக்கப்படாவிட்டால் போதிய

மூலதனம் கிடைக்கப் பெறுமல் தொழில் முன்னேற்றம் பாதிக்கப்படும். ஜெர்மானிய நாட்டில் இந்த நூற்றுண்டின் ஆரம்பத்திலேயே வங்கிகள் இந்த முக்கியத்தை உணர்ந்து முதலீட்டு வங்கிகளாக பொலிவு பெற்று இருந்தன.

கலப்பு வங்கிகள், குறுகிய காலக் கடனையும், தொழிற்சாலைக்குத் தேவையான நீண்ட காலக் கடன்களையும் அளிக்கும் வணிக வங்கிகள். இவ்வகை வங்கி வைப்பு வங்கியின் பணியினையும், முதலீட்டு வங்கியின் பணியினையும் கலந்து செய்வதால் கலப்பு வங்கி என்னும் பெயரினைப் பெற்றுள்ளன.

வெகுகாலம் வரை வைப்பு வங்கியலுக்கு, "தூய வங்கியல்" (pure Banking) என்ற புனிதப் பெயரும் உண்டு.

### வைப்பு வங்கி

வைப்பு வங்கிகளுக்குத் தாயகமாக இங்கிலாந்து நாடு அமைந்துள்ளது. வைப்பு வங்கிகள் தத்துவப்படி வியாபாரத்திற்கும், தொழிற்சாலைக்கும் தேவையான குறுகிய காலக் கடனை மட்டும் வங்கிகள் அளிக்க வேண்டுமேயன்றி நிலையான மூலதனத்திற்கு வேண்டிய நீண்ட காலக் கடனை வைப்பு வங்கி தரக்கூடாது. இந்த எண்ணத்திற்கு அடிப்படைக் காரணம், வங்கிகள் வைப்புதாரர்களின் (depositors) பொறுப்புரிமையர் (trustee). எனவே, பத்திரமாகப் பாதுகாக்க வேண்டிய வங்கி நீண்ட காலக் கடனை அளித்து அதனுல் ஏற்படும் நட்டவச்சத்தை (risk) ஏற்க தேவையில்லை என்ற எண்ணத்தில் வைப்பு வங்கிகள் குறுகிய காலக் கடனை மட்டில் அளிக்கும்.

வைப்பு வங்கிகள் கீழ்கண்ட நிலையில் உசந்தவை என்று சிபாரிசு செய்யலாம்.

1. நிலை முதலை அளித்து உதவ தகுதியான, சிறப்பு நிதி நிறுவனங்கள் (special financial Institutions) இருக்க வேண்டும்.

2. நல்ல பங்கு மாற்று நிலையம் (stock exchange) இருக்க வேண்டும். இது அமையப் பெற்றுல் வணிக வங்கியின் தேவையின்றி தனி முதலீடு செய்வோர்கள் உதவியாலும், மற்ற நிறுவனங்களின் பயனுலும் போதிய நிலை முதல், தொழிற்சாலைகளுக்குக் கிடைக்கும்.

3. வங்கியின் மூலதனமும், காப்பு நிதியும் அவ்வங்கியின் வைப்புகளின் மொத்தத்தில் குறைந்த சதவீதமாக அமைந்தால்

அவ்வங்கி நீண்ட காலக் கடனில் முதலீடு செய்யக்கூடாது. எனவே, குறுகிய காலக் கடனை மட்டில் அளிக்கவேண்டும்.

4. அறிவு கூர்மை உடைய முதலீடு செய்யவல்லவர்கள் உள்ள நாட்டில் வணிக வங்கியிடம் முதலீட்டுக்கு எதிர்பார்க்க மாட்டார்கள்.

மேலே கூறிய நிலை இங்கிலாந்தில் முதல் உலகப்போருக்கு முன் அமைந்திருந்ததால் இங்கிலாந்து நாட்டில் வைப்பு வங்கிகளே வளர்ச்சி பெற்றன.

முதலீட்டு வங்கிகள் (Investment Bank or Industrial Bank) : ஜெர்மனி முதலீட்டு வங்கிகளுக்குத் தாயகமாக அமைந்துள்ளது. 19-ம் நூற்றுண்டின் பின் பகுதியில் ஜெர்மனி தொழில் வளர்ச்சிக்குத் தேவையான மூலதனம் இல்லாமல் தொழிற்துறையில் பின்தங்கி இருந்தது. பணம் வைத்திருந்த தனிப்பட்டோர்களும் மற்றவர்களும் பண முதலீடு செய்ய தைரியம் இல்லாமல் இருந்தனர். எனவே, முதலீடு செய்ய ஒரு நிறுவனம் இருந்தாலன்றி ஜெர்மானிய நாடு தொழில் துறையில் முன்னேறுவது என்பது இயலாத காரியம் என்ற நிலையில் முதலீட்டு வங்கிகள் ஜெர்மனியில் தொடங்கப் பெற்றன. பல முதலீட்டு வங்கிகள் தொடங்கப் பெற்று தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான மூலதனத்தினை அளிக்க ஆரம்பித்தன. இதனைப் பயன்படுத்தி தொழிற்சாலைகள் முன்னேற்றம் அடைய ஆரம்பித்தன. 20-ம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் தொழிற்சாலைகள் வலுவுற்று விரிவு அடைய ஆரம்பித்தன. நல்ல இலாபம் பெற்ற தொழிற்சாலைகள் முதலீட்டு வங்கிகளிடம் அதிகமான வைப்புகளை வைக்க ஆரம்பித்தன. இதன் காரணமாக முதலீட்டு வங்கிகளிடம் அதிகமான ரொக்க கையிருப்பு இருந்தன. இதைக் கொண்டு மேலும் பல தொழில் நிறுவனங்களுக்கு அதிகபட்சமான மூலதனத்தை அளித்து தொழிற்சாலைகளை, நவீனப்படுத்தி, விரிவுபடுத்தி தொழில் வளத்தினை பெருக்கியது.

ஜெர்மானிய முதலீட்டு வங்கிகள் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய நிலை முதலை அளிக்கும்போது தனியாக ஒரு வங்கி மட்டில் கடன் அளிக்காமல் சில வங்கிகள் ஒன்று கூடி ஒரு சிண்டிகேட் (syndicate or Konsortium) அமைத்து தொழில் நிறுவனத்திற்குத் தேவையான முதல் அளித்து அவைகளின் பங்குகளை (shares) மொத்தமாக வாங்கி தங்களுக்குள் பகிர்ந்து

கொள்ளும். அவைகளில் ஒரு வங்கி முதன்மை வங்கியாக (Initiative Bank) இருக்கும். சிண்டிகேட்டில் கூடியுள்ள எல்லா வங்கிகளும் பங்கு மாற்று நிலையத்தில் (stock exchange) அங்கத்தினராக இருக்கும். இந்த சிண்டிகேட் ஒரு குறிப்பிட்ட காலம் வரை இருக்கும். பெற்ற பங்குகளை கூட்டில் சேர்ந்துள்ள வங்கிகள் கூட்டுமுயற்சி கொண்டு விற்பனை செய்யும். கடைசியில் விற்கமுடியாத பங்குகளைத் தங்களுக்குள் பிரித்து எடுத்துக் கொண்டு நாளாவட்டத்தில் விற்பனை செய்யும். இவ்விதம் ஒவ்வொரு புது தொழில் முயற்சிக்கும் வெவ்வேறு சிண்டிகேட் ஏற்படுத்தி தொழில் துறை வளர்ச்சிக்கும், அவைகளுக்கு தேவையான நிலை முதலை அளிப்பதிலும் முதலீட்டு வங்கிகள் ஜெர்மனியில் ஈடுபட்டுள்ளன.

## ஜெர்மானிய நாட்டுத் தொழில் வங்கிகளின் வெற்றிக்குக் காரணங்கள்

1. இவ்வங்கிகளின் மூலதனத்தில் உடமை மூலதனம் (owned capital) அதிக சதவீதமாக அமைந்துள்ளது. இது கிட்டத்தட்ட மொத்த பொறுப்பில் 45 சதவீதமாக அமைந்துள்ளது. ஆயின் இங்கிலாந்தில் இது 9 சதவீதமே ஆகும்.

2. ஒவ்வொரு தொழிலுக்கும் நிலை மூலதனம் அளிக்க சிண்டிகேட் ஏற்படுத்தும்முன் வங்கிகள் அத்தொழிலின் வெற்றி வாய்ப்பினையும், பொருளாதார சாத்தியக் கூறினையும் தீர ஆராய்ந்து முடிவெடுக்கின்றன.

3. சிண்டிகேட்டில் ஒன்று சேர்ந்துள்ள வங்கிகள் ஒருங்கிணைந்து செயல்படுகின்றன.

4. பகுங்களில் முதலீடு செய்யும் ஜெர்மானியர்கள் முதலீட்டு வங்கிகளிடம் பெரும் நம்பிக்கை கொண்டுள்ளனர். இவ்வங்கிகளின் முயற்சிக்கு ஆதரவு தரும் வண்ணம் இவை விற்கும் பங்குகளையே தேர்ந்து எடுத்து பெருவாரியாக வாங்கி வங்கிகள் மேலும் மேலும் இக்காரியங்களில் ஈடுபட உதவி செய்யும் தன்மை.

5. முதலீட்டு வங்கிகளின் நிருவாகிகளும், அலுவலர்களும், தொழிற் துறையிலும், நிதி நிர்வாகத்திலும் (financial management) மிகத் திறமை வாய்ந்தவர்களாக அமைந்திருக்கும் தன்மை ஆகியவையாகும்.

## ஜெர்மானி முதலீட்டு வங்கிகளின் குறைபாடுகள்

1. இவ்வங்கிகள் கார்டல்கள் (cartels), தொழில் திரட்டுகள் (pools) போன்றவைகளை தோற்றுவிக்கக் காரணமாக அமைந்தன.

2. இலாப நோக்கைக் கருதி பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையில்லாத சில தொழில் நிறுவனங்களைத் தோற்றுவிக்கக் காரணமாக அமைந்தன.

3. முதலீட்டு வங்கிகள், தொழில்களின் மீது உரிமை பெற்றன. இதன் காரணமாக வங்கித் தன்மை போய் தொழில் தன்மையுடைய நிறுவனங்களாக மாறத் தொடங்கின.

4. நிலை முதல் அளிப்பதிலேயே அதிகமாக பணம் முடக்கப்பட்டதால் மற்ற துறைகளுக்கும், நடைமுதலுக்குத் தேவையான பணமும் இருக்க, பொருளாதாரத்தில் வசதி இன்றிப் போனது.

மேலே சொன்ன குறைபாடுகள் இருந்த போதிலும், 19-ம் 20-ம் நூற்றுண்டுகளில் தொழில் வளர்ச்சிக்கு வித்திட்டு, நிலை நிறுத்திய பெருமை தொழில் வங்கிகளுடையதே என்பதினை யாரும் மறுக்க இயலாது.

## இங்கிலாந்தில் மாறுபட்ட நிலை

தூய வங்கிக்குத் தாயகமாக விளங்கிய இங்கிலாந்து நாட்டில் 1914-ம் ஆண்டிற்குப் பிறகு மாறுபாடு ஏற்பட்டுள்ளது. உலக மகாயுத்தத்தின்போது தொழில்களைச் சீர் படுத்தவும், விரிவு படுத்தவும் தேவையான மூலதனம் மிக அதிகமாகத் தேவைப்பட்டது. எனவே, வைப்பு வங்கிகள் தங்கள் பழைய கொள்கையை மாற்றி அமைத்து தொழில்களுக்குத் தேவையான மூலதனத்தையும் அளிக்க முன் வந்தன. இதுவும் அன்றி பொருளாதாரம் மந்தமான நிலையில் (economic depression) கொடுக்கப்பட்ட குறுகிய காலக் கடனை திரும்பிப் பெற முடியாத வைப்பு வங்கிகள் அக்கடனை கடன் பத்திரமாக (debenture) மாற்றி நீண்ட காலக் கடனுக்கின. மேலும், வியாபாரத் தொழில் போட்டியின் காரணமாக பல சிறிய தொழில் நிறுவனங்கள் ஒன்ருக இணைந்தன (Merger). பல சிறிய நிறுவனங்கள் இல்லாமல் போகவே வைப்பு வங்கிகள்

தங்களுடைய வாடிக்கைக்காரர்களை இழந்த நிலையில் தங்கள் கையில் உள்ள உபரி ரொக்கத் தொகையை தொழில் கடன் அளிக்க ஆரம்பித்தன. வைப்பு வங்கிகளின் எளிவரல் தன்மைக் (liquidity) கோட்பாட்டில் மாற்றம் ஏற்பட்டது. இதற்குப் பதில் மாற்றுந்தன்மை (shiftability) வணிக வங்கிகளின் முதலீட்டில் முக்கிய தன்மை பெற்றது. தேவையானபோது தங்கள் சொத்துக்களை மற்ற வங்கிகளுக்கோ, மைய வங்கிக்கோ மாற்றி அமைக்கும் தன்மை பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்திற்கு ஒப்ப வைப்பு வங்கிகள் தொழில் நிறுவனங்கள் பங்குகள், கடன் பத்திரங்களில் ஓரளவு முதலீடு செயயத் தொடங்கின. இங்கிலாந்தின் மைய வங்கி பாங்க் ஆஃப் இங்கிலாந்து (Bank of England), 1945-ம் ஆண்டு முதல் தொழில் நிதி அளிப்பு வளர்ச்சியில் பேரார்வம் காட்ட ஆரம்பித்தது வங்கிகள் இத் துறையில் கடன் அளிப்பதை ஊக்கு வித்தது.

## இந்தியாவில் கலப்பு வங்கி

இந்தியாவில் வணிக வங்கிகள் இங்கிலாந்து முறையைப் பின்பற்றி தொழிலகங்களுக்கு குறுகிய காலக் கடனே ஆனாலும் திரும்பத் திரும்ப கடன் புதுப்பிக்கப்படுவதால் இவை மத்திய காலக் கடனுகவே (Medium term loan) அமைகின்றன. சில வணிக வங்கிகள் தொழில் நிறுவனங்களின் பங்குகள் கடன் பத்திரங்களில் முதலீடு செய்து நீண்ட காலக் கடனில் ஈடுபடுகின்றன. மைய வங்கி விசாரணைக் குழு 1931 (Central Banking Enquiry Commitee 1931), ஷராப் குழு 1954 (Shroff Commitee 1954), ஆகியவை வணிக வங்கிகள் தொழில் நிறுவனங்களுக்கு மேலும் கடன் அளிக்க முன் வர வேண்டும் என்ற பரிந்துரையைச் செய்துள்ளன. ஷராப் குழு வணிக வங்கிகள் மறைமுகப் பண உதவி (Indirect finance), தொழில் காப்பீட்டு நிறுவனங்களின் பங்குகளில் முதலீடு செய்து அவைகளின் மூலம் அதிக கடன் வசதி செய்தல் சிறந்த முறையாக அமையும் என்று கூறியுள்ளது.

வணிக வங்கிகள் தொழில் நிறுவனங்களுத் தேவையான குறுகிய காலக் கடனை (1) காலக் கடன், அதிகப்பற்று, ரொக்கப் பற்ருகவும் (2) உண்டியலைக் கழிவு செய்தல் மூலமாகவும் அளிக்கின்றன. பெரும் தொழிற்சாலைகளான இரும்பு, கனி வகை, பொறியியல், ரசாயணம், சணல், பருத்தி, சக்கரைத் தொழிற்சாலை முதலியவற்றின் நடைமுறைத் தேவை இந்திய வணிக வங்கிகளால் பெரும்பாலும் கொடுக்கப் படுகின்றன. வணிக வங்கிகள் தொழிலுக்கு கடன் அளிப்பதில்

அட்டவணை-1

## வணிக வங்கிகளின் கடன்*

| ஆண்டு முடிய | தொழில் (Industry) | | வாணிபம் | | விவசாயம் | | மற்றவை | | மொத்தம் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் |
| மார்ச் 1951 | 196 | 33·5 | 310 | 53·3 | 12 | 2·1 | 67 | 11·3 | 585 | 100 |
| மார்ச் 1956 | 278 | 36·2 | 388 | 50·3 | 16 | 2·0 | 88 | 11·5 | 770 | 100 |
| ஏப்ரல் 1961 | 688 | 52·8 | 476 | 36·4 | 5 | 0·4 | 137 | 10·4 | 1306 | 100 |
| ஏப்ரல் 1966 | 1510 | 64·3 | 650 | 27·7 | 5 | 0·2 | 182 | 7·8 | 2347 | 100 |
| செப். 1973 | 8261 | 79·5 | — | — | 367 | — | — | — | — | — |

* Corporation Finance, S. C. Kuchal 1970 Edition Page. 380

சில சிக்கல்கள் உள்ளன. தொழிலின் பொருளாதார நிலையை நன்கு உணர்ந்தாலின்றி துணிந்து கடன் அளிக்க இயலாது. மேலும், இந்தியாவில் ஒவ்வொரு வணிக வங்கியும் தங்களுடைய காலதவணை, நடைமுறைத் தவணை வைப்புகளில் 33% சதவீத ரொக்கமும், தங்கமும், வில்லங்கம் ஏதும் செய்யப் படாத அனுமதிக்கப்பட்ட பங்குகளாகவும் வைத்திருக்க வேண்டும். தொழில் தவிர வாடிக்கைக்காரர்களுக்கும், வியா பாரிகளுக்கும் தேவையான கடனை அளிக்க வேண்டியுள்ளது.

இந்திய வணிக வங்கிகள் அளிக்கும் மொத்தக் கடனில் தொழிற்கடனின் சதவிகிதம் கடந்த 20 ஆண்டுகளாக அதிகரித்துக் கொண்டே வருகின்றது. அட்டவணை 1லிருந்து இது நன்கு புலப்படும்.

## பாட நூல்கள்

1. G. Crowther— An outline of Money.
2. R.S. Sayers—Mondern Banking.
3. R.K. Basu—Theory and Practice of Development Banking.
4. Baskey, Shirley—Principles and Practice of Development Banking.

# 5. ரிசர்வு வங்கியும் தொழில் நிதியும்

## (Reseve Bank and Industrial Finance)

இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடங்கியவுடன் ரிசர்வு வங்கி தொழில் நிதி அளிப்பதில் பெரும் பொறுப்பு ஏற்க ஆரம்பித்தது. தொழில் நிதி அளிக்க கழகங்களை ஏற்படுத்தியது. தொழில் நிதிக்கழகம் (Industrial Finance Corporation of India) 1948-ம்ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இதைத் தொடர்ந்து 1953-ம் ஆண்டு முதல் மாநில நிதிக் கழகம் (State Finance Corporatian) நிறுவப்பட்டது. இப்போது 18 மாநிலங்களில் மாநில நிதிக் கழகங்கள் இருக்கின்றன. இந்தியத் தொழில் மூதலீட்டுக் கழகம் (Indnstrial Credit and Investment Corporatian of India) 1955 ல் ஏற்படுத்தப்பட்டது. இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India) 1964-ம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது.

### தொழில் நிதிக்கழகம் (Industrial Finance Corporation of India)

தொழில்களுக்குத் தேவையான மத்திய, நீண்ட காலக் கடனை அளிக்க 1948-ம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. தனியார் துறை, கூட்டுறவுத் துறைகளுக்கு மட்டுமே கடன் வழங்கி வந்த இந்தக் கழகம் இப்போது பொதுத்துறைத் தொழில்களின் (public sector) விரிவு திட்டங்களுக்குக் கடன் அளிக்கின்றது. இந்தக் கழகம் புதிய தொழில் அமைப்புக்கும் கடன் கொடுக்கின்றது. 1969-ம் ஆண்டு வரை ரூ. 321 கோடி கடன் வசதி அளித்து, அதில் ரூ. 283 கோடியை கொடுத்துள்ளது.

இந்தக் கழகத்தின் நிதி, இதன் மூலதனம், வட்டிமூலம் பெற்ற இலாபம், திரும்பப் பெற்றக் கடன் தொகை, சந்தையில் பத்திரம் (Bond) மூலம் பெற்ற கடன் ஆகியவைகள் ஆகும். இக் கழகத்தின் 50% மூலதனம் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியும் (I.D.B.I.), மீதியை வணிக வங்கிகளும், கூட்டுறவு வங்கிகளும், ஆயுள் இன்சூரன்சு கழகமும் அளித்துள்ளன.

ரிசர்வு வங்கி சட்டம் பி. 17(4B)ன் படி ரிசர்வு வங்கி இந்தக் கழகத்துக்கு மத்திய, மாநில அரசு கடன் பத்திரங்களின் பேரில் 90 நாட்கள் வரை கடனளிக்கலாம்.

### மாநில நிதிக் கழகம் (State Financial Corporation)

மாநில நிதிக் கழகச் சட்டம் 1951–ம் ஆண்டு நிறைவேற்றப் பட்டு 1952 முதல் அமுலுக்கு கொண்டுவரப்பட்டது. இச் சட்டத்தின்படி மாநில அரசு நடுத்தர, சிறிய தொழிற்சாலை களுக்குத் தேவையான மூலதனம் அளிக்க மாநில நிதிக் கழகம் அமைத்துக்கொள்ளலாம். இந்தியாவில் நாகாலாந்து தவிர எல்லா மாநிலங்களிலும் இந்நிதிக் கழகம் அமைக்கப்பட் டுள்ளது. தமிழ்நாட்டில் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம் லிமிடெட் (Tamil Nadu Industrial Investment Corporation Ltd.) இப்பணியினைச் செய்கின்றது. மாநில நிதிக் கழகம் நேரடிக் கடன், ஒப்புறுதி செய்தல் (Under-Writing), மூலதன இயந்திரங்கள் வாங்க பொறுப்பு (Guarantee) தருதல் ஆகியவை களைச் செய்கின்றன.

### இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India)

இவ்வங்கி 1964-ம் வருடத்திய இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி சட்டத்தின் (The Industrial Development Bank of India Act 1964) கீழ் தொடங்கப்பட்டது. இவ்வங்கி எல்லாவித உற் பத்தித் தொழிற்சாலைகளுக்கும், சுரங்கம், போக்குவரத்து, மின் சாரம் ஆகிய தொழில்களுக்கும், தனியார், பொதுவார் துறை களுக்கும் கடன் வழங்குகின்றது. மத்திய கால ஏற்றுமதிக் கடன் மறு நிதியளிப்பினை (Refinancing of medium term export crdits), 1967-ம் ஆண்டு முதல் பொதுத் துறைக்கும் அளிக் கின்றது.

இவ்வங்கி 1969–ம் ஆண்டுவரை பலவிதக் கடன் வசதி அளித்தது. அவை கீழ்வருமாறு :—

| உதவியின் வகை | ரூ. கோடியில் அனுமதிக்கப் பட்டதொகை | விநியோகிக்கப் பட்ட கடன் |
|---|---|---|
| 1. ஏற்றுமதி அல்லாத தொழில் நிறுவனங்களுக்கு அளிக்கப் பட்ட நேரடிக் கடன் | 100.92 | 73.88 |
| 2. ஏற்றுமதிக்கு நேரடிக் கடன் | 6.54 | — |
| 3. ஒப்புறுதி செய்தல், தொழில் நிறுவனத்தின் பங்குகள், கடன் பத்திரங்களின் முதலீடு | 18.11 | 13.64 |
| 4. தொழில் கடன் மறுநிதிவசதி | 85.94 | 84.41+ |
| 5. ஏற்றுமதிக் கடன் மறுநிதி வசதி | 9.19 | 4.03 |
| 6. உண்டியல் கழிவுப்பாடு | 37.35 | 32.08 |
| 7. நிதி நிறுவனங்களில் பங்கு, கடன் பத்திரங்களில் முதலீடு | 19.66 | 19.66 |
| மொத்தம் 1 முதல் 7 வரை | 277.71 | 227.70 |

| | | |
|---|---|---|
| 8. கடன்களுக்கும் ஒத்தி வைக்கப்பட்ட கடன் (defered payment) களுக்கும் பொறுப்பு | 24·16 | 19·4 |
| 9. முன் பணம் (Advance payment) பொறுப்பு | 0·60 | — |

* The Reserve Bank of India—Functions and Working — 1970 Edition, page 157.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (I.D.B.I.) 1965-ம் ஆண்டி லிருந்து ஒரு சிறப்பு நிதி (special fund), வளர்ச்சி உதவிநிதி (Development Assistance Fund) ஆரம்பித்துள்ளது. இந்நிதியி லிருந்து, மத்திய அரசின் ஒப்புதலைப் பெற்று, மற்றைய நிதி நிறு வனங்களில் இருந்து கடன் வசதி பெறமுடியாத சில சிறப்புத் திட்டங்களுக்கு கடன் வழங்கப்படுகின்றது. ஜூன் 1969-ம் ஆண்டு முடிய இச்சிறப்பு நிதியிலிருந்து ரூ. 33·2 கோடி கடன் வசதி அளிக்கப்பட்டு ரூ. 27·6 கோடி கடன் தொகை விநியோ கிக்கப்பட்டுள்ளது.

**இந்தியத் தொழில் கடன் மற்றும் முதலீட்டுக் கழகம்**
**(Industrial credit and Investment Corporation of India)**

இந்தக் கழகம் ஜனவரி 1955-ம் ஆண்டு பம்பாயில் தலைமை யகத்தைக் கொண்டு இயங்க ஆரம்பித்தது. இதன் குறிக்கோள்:

1. தனியார்துறை தொழில் நிறுவனங்கள் ஏற்படுத்த, விரிவு படுத்த, நவீனப்படுத்த பண உதவி அளித்தல்.
2. தனியார் முதலீட்டில் கலந்து கொள்வது (participating)
3. தனியார் துறை வளர்ச்சிக்கு உதவி செய்வது.
4. முதலீட்டுச் சந்தையை (Investment market) விரிவு படுத்துதல்.
5. தனியார் துறை பங்கு ஒப்புறுதி செய்தல்
6. தனியார் துறை பெரும் கடனுக்கு பொறுப்பு அளித்தல்.
7. நிருவாக அனுபவ அறிவுரை அளித்தல் ஆகியவை யாகும்.

இக்கழகம் பலவகைக் கடன்களை அளிக்கின்றது. அவற்றில் முக்கியமானது நிலம், கட்டடம், இயந்திர சாதனம் ஆகிய நிலை சொத்துக்களை வாங்க தனியார் துறைக்கு அளிக்கும் கடன் முக்கியமானது.

17·5 கோடி ரூபாய் மூலதனத்துடன் இக்கழகம் தொடங்கப் பட்டது. இதில் இந்திய ரூபாய் ரூ. 12·50 கோடியும், 10 மில்லியன் டாலர் அந்நிய செலவாணியில் உலக பாங்கு அளித்த கடனும் ஆகும். 1969-ம் ஆண்டு இதன் மூலதனம் ரூ. 168 கோடி. இதில் ரூ. 62 கோடி உள்நாட்டு நாணயமும் 106 கோடி ரூபாய் அந்நிய செலாவணியும் ஆகும்.

1969-ம் ஆண்டு வரை ரூ. 261·6 கோடி பண உதவியை இந்தக் கழகம் அளித்துள்ளது.

**தேசிய தொழில் வளர்ச்சிக் கழகம் (National Industrial Development Corporation)**

இக் கழகம் 1954-ம் ஆண்டு நிறுவப்பட்டது. இது ஒரு தனி வரையறுக்கப்பட்ட கம்பெனி ஆகும். (Private Limited Company) அனுமதித்த மூலதனம் ரூ. 1 கோடி ஆகும். ஒப்பிய மூலதனம் ரூ 10 லட்சம். இது முழுமையும் இந்திய அரசினுல் ஏற்கப்பட்டுள்ளது. இக்கழகத்தின் முக்கிய குறிக்கோள் அரசாங்கத்தின் முயற்சிக்குத் துணை நின்று பொதுத்துறை, தனியார் துறைகளில் தொழிற்சாலைகளை தோற்றுவித்தல் (promotions) ஆகும்.

மார்ச் 1969-ம் ஆண்டு வரை தொழிற்சாலைகளைத் தோற்றுவிக்கவும், தொழிலை விரிவுபடுத்தவும் ரூ. 46·2 கோடி வரை கடன் வசதி அளித்துள்ளது.

**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா (Unit trust of India)**

இந்த நிறுவனம் ஜூலை மாதம் 1964-ம் ஆண்டு நிறுவப்பட்டது. இதன் தொடக்க மூலதனம் ரூ. 5 கோடியை பெற்ற விவரம்:—

| | ரூ. | |
|---|---|---|
| ரிசர்வு வங்கி | 2·50 | கோடி |
| ஆயுள் இன்சூரன்ஸ் கார்பரேஷன் | 0·75 | ,, |
| ஸ்டேட் பாங்கும் அதன் துணைப் பாங்குகளும் | 0·75 | ,, |
| பட்டியிலுள்ள வங்கிகளும் (Scheduld Banks) மற்றைய நிதி நிறுவனங்களும் | 1·00 | ,, |
| மொத்தம் | 5·00 | கோடி |

தொழிற்சாலை மூலதனத்திற்குத் தேவையான சாதாரணப் பங்குகளில் (equity shares) முதலீடு செய்ய இது ஆரம்பிக்கப்பட்டது. ரூ. 10க்கு குறையாமலும் ரூ. 100க்கு மிகாமலும் யூனிட்டுகளை விற்க அனுமதிக்கப்பட்டுள்ளது.

முக்கிய நோக்கங்கள்

1. குறைந்த, நடுத்தர வருமானமுள்ளவர்களிடமிருந்து சேமிப்பை திரட்டுவது.

2. தொழிற்சாலைகளுக்கு மூலதனம் அளித்தல்.

3. இலாபத்தில் யூனிட் வாங்கியுள்ளவருக்கு பங்கு அளித்தல்.

யூனிட் ட்ரஸ்டின் முதலீடு

| | ரூ. கோடி | | | |
|---|---|---|---|---|
| | 1965 | | 1969 | |
| விபரம் | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் |
| சாதாரண பங்கு | 9·6 | 39 | 24·0 | 37 |
| சலுகை பங்கு | 1·9 | 8 | 9·3 | 14 |
| கடன் பத்திரங்கள் | 9·3 | 38 | 26·9 | 41 |
| மற்றவை | 3·9 | 15 | 5·2 | 8 |
| | 24·7 | 100 | 65·4 | 100 |

1969–70ல் 7·2 சதவிகித இறுதி இலாப ஈவு (dividend) அளிக்கப்பட்டது.

சிறு தொழில்களும் நிதி வசதியும்

மேலே விவரித்த எல்லா நிதிக் கழகங்களும் பெரிய தொழிற் சாலைக்குத் தேவையான வசதியை அளிக்கும் நிறுவனம். சிறிய தொழிற்சாலைகளுக்கும் நிதி வசதி தேவைப் படுகின்றது. குறிப் பாக இயந்திர சாதனம், நிலம், கச்சாப் பொருள் முதலியன வாங்க கடன் தேவைப்படுகின்றது.

**தேசீய சிறு தொழில் கழகம் (National Small Industries Corporation)** இந்த நிறுவனம் சிறு தொழில்கள் தொடங்கவும், தேவையான நிதி வசதி அளிக்கவும் 1955-ம் ஆண்டு ஆரம் பிக்கப்பட்டது. மின்சக்தி கொண்டு இயங்கும் இயந்திரம்

ஆயின் 50க்கு குறைந்தவர்களும், மின் சக்தியின்றி இயங்கும் தொழிற்சாலை ஆயின் 100க்கு குறைந்தவர்களும் வேலை செய்யும் தொழிற் கூடமாகவும், மூலதனம் ரூ. 7.50 லட்சத்திற்கு மிகாமலும் இருக்கும். தொழிற்சாலைகளுக்கு இந்த நிறுவனம் கடன் வசதி அளிக்கும்.

ஆற்றும் பணிகளாவன:

1. இத் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யும் பொருள் களுக்கு அரசாங்கத் தேவைக்கு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொடுப்பது.

2. பொருளாதார, தொழில் நுணுக்க உதவி அளித்தல்.

3. பெரிய தொழிற்சாலைகளுக்கும் இச்சிறு தொழிற்சாலை களுக்கும் ஒருங்கிணைப்பு (coordination) செய்தல்.

4. ஒப்புறுதி செய்தல், கடனுக்கு பொறுப்பு ஏற்றல்.

இந் நிறுவனத்தைத் தவிர ஸ்டேட் பாங்கு சிறு தொழில் வளர்ச்சிக்கு அதிக அளவில் கடன் வசதி செய்துள்ளது. 1968-69 ம் ஆண்டில் மட்டும் ரூ. 213 கோடி கடனைச் சிறு தொழிலுக்கு அளித்துள்ளது.

பெரிய தொழிற்சாலைகளுக்கும், சிறிய தொழிற்சாலைகளுக் கும் தேவையான நிதி வசதி அளிக்க ஏற்படுத்தப்பட்டுள்ள கழகங்கள் வளர்ச்சி வங்கி (Development Bank) என்று அழைக்கின்றனர். இவ்வித வங்கி இந்த நூற்றாண்டில்தான் ஏற் படுத்தப்பட்டு செயல்படுகின்றன. இந்தியாவில் மட்டும் அல் லாமல் உலகில் எல்லா வளர்ச்சி பெற்ற, வளரும் பொருளாதார நிலையில் உள்ள எல்லா நாடுகளிலும் வளர்ச்சி வங்கிகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இவ்வங்கியின் தேவைக்கு இரண்டு காரணங்கள் உண்டு.

1. வைப்பு வங்கிகள் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான கடன் வசதி அளிக்க இயலாமை.

2. தொழில் நிதியின் தன்மை, தேவை ஆகியவைகளை அறிந்த நிபுணர்கள் கொண்ட சிறந்த வங்கியின் தேவை ஆகியவையாகும்.

## வளர்ச்சி வங்கி அளிக்கும் முக்கியப் பணி

1. தொழிலுக்கு தேவையான நிலைமுதலை அளித்தல். இம்முறையில் சாதாரண பங்கு ஏற்றல், மத்திய-நீண்ட காலக் கடன் அளித்தல், தொழில் நிறுவனங்கள் வெளியிடும் கடன் பத்திரம் வாங்குவது, அவை வெளியிடும் பங்குகளுக்கு ஒப்புறுதி அளித்தல் ஆகியவை ஆகும்.

வளர்ச்சி வங்கிகளின் அமைப்பு ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையாக அமைந்துள்ளது. இவ்வங்கிகள் சில நாட்டில் அரசாங்க உடமையிலும், மற்றும் சில நாடுகளில் தனிப்பட்டவர்கள் உடமையிலும் அல்லது கலப்பு உடமையிலும் (mixed ownership) மைய வங்கியும் தனிப்பட்டவர்களும் சேர்ந்து உரிமை பெற்றுள்ளதாகவோ இருக்கின்றன. கனடா தொழில் வளர்ச்சி வங்கி (The Industrial Development Bank of Canada). இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India). ஆகியவை மைய வங்கி 100% சதவீத உரிமை பெற்ற நிறுவனங்களுக்கு எடுத்துக்காட்டு. வளர்ச்சி வங்கிகள் மைய வங்கி மட்டில் முழு உரிமை பெற்ற நிறுவனமாக இருக்கலாமா என்பது சர்ச்சைக்கு உரிய ஒரு விஷயம். மைய வங்கி எவ்வளவு திறமையான நிறுவனமாக இருந்தாலும் தனிப்பட்டவர்களும், தனிப்பட்ட நிறுவனங்களும் சேர்ந்து உரிமை கொண்ட வளர்ச்சி வங்கி செயல் முறையில் சிறந்து விளங்க ஏது உண்டு. சில நாடுகளில் வளர்ச்சி வங்கிகள் அரசாங்கத்தின் முழு உடமையாக உள்ளது. உதாரணமாக நேபாள தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of Nepal), பிரேசில் தொழில் வளர்ச்சி வங்கி (National Development Bank of Brazil) ஆகும். கலப்பு உரிமை பெற்றுள்ள தொழில் வளர்ச்சி வங்கிக்கு இந்தியத் தொழில் நிதிக் கழகம், பாகிஸ்தான் தொழில் நிதிக் கழகம் உதாரணங்கள் ஆகும். தனியார் முழு உடமையில் உள்ள தொழில் வளர்ச்சி வங்கிகளுக்கு உதாரணம் இந்திய தொழில் கடன் மற்றும் முதலீட்டுக் கழகம் (Industrial Credit and Investment Corporation of India) ஆகும்.

வளர்ச்சி வங்கிகள் எவ்வகையான தொழிற்சாலைகளுக்குக் கடன் அளிக்கலாம் என்பது அவ்வங்கியின் நோக்கைப் பொறுத்தது. சில வங்கிகள் தனியார் துறைக்கு மட்டும் கடன் வசதியும், மற்றும் சில வங்கிகள் தனியார், பொதுவார் ஆகிய இரு துறைகளுக்கும் கடன் அளிக்கின்றன.

வைப்பு வங்கிகள் தொழில் கடனை முழு அளவில் பூர்த்தி செய்ய முடியாத நிலையில் வளர்ச்சி வங்கிகள் ஒரு சிறப்பு வங்கி யாக தொழில் துறைக்கு மட்டில் கடன் அளிக்கும் நிறுவனமாக நிலை பெற்றுவிட்டன. இவை இன்னும் ஆண்டுகள் செல்லச் செல்ல விரிவடைந்து தொழில் நிதி முழுமையும் அளிக்கும் முறையில் வளர்ச்சி பெறல் வேண்டும்.

## பாட நூல்கள்

1. ரிசர்வ் பாங்க் ஆஃப் இந்தியா—ந. சட்டநாதன்.

2. Functions and Working of R. B.I.—R.B.I. Publication.

# 6. பன்னாட்டு வளர்ச்சி வங்கிகள்

## (International Development Banks)

சீரமைப்பு மற்றும் வளர்ச்சிக்கான பன்னாட்டு வங்கி (International Bank for Reconstruction and Development) I.B.R.D. ஜூன் 1946-ம் ஆண்டு நிறுவப்பட்டது. இவ்வங்கிக்கு உலக வங்கி (World Bank) என்ற மற்றொரு பெயரும் உண்டு. பிரெட்டன் உட்ஸ் என்னும் இடத்தில் 1944-ம்ஆண்டு பல நாடுகளுக்கு இடையே நடந்த பேச்சுவார்த்தையின் அடிப்படையில் இரண்டு முக்கியமான பன்னாட்டு நிறுவனங்கள் தோன்றின. அவை:1. பன்னாட்டு நாணய நிதி (International Monetary Fund) 2. உலக வங்கி (World Bank).

இரண்டாவது உலகப் போருக்குப்பின் உலகத்தின் பல நாடுகளின் பொருளாதாரம் நசிந்து கிடந்தது. பொருளாதாரத்தைச் சீர்செய்ய மூலதனமும், பெரிய இயந்திர சாதனங்களும் தேவைப்பட்டன. இவற்றை அமெரிக்க நாடு மட்டுமே அளிக்க இயலும் வகையில் இருந்தது. எனவே, எல்லா நாடுகளுக்கும் அமெரிக்கா டாலர் தேவைப்பட்டது. பல நாடுகளின் (அயல் நாட்டுச்) செலுத்து நிலையில் (Balance of Payments) சமனற்று (disequilibrium) இருந்தது. எனவே, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை (exchange controls) தீவிரமாக மேற்கொள்ள வேண்டியதாயிற்று. எனவே, பன்னாட்டு நிதி நிறுவனங்களை ஏற்படுத்தி பன்னாட்டு பண செலுத்து முறையையும் (International Monetary settlement), பொருளாதார முன்னேற்றத்தையும் சீர் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பன்னாட்டு நாணய நிதி நிறுவனம் அங்க நாடுகளின் தற்காலிக செலுத்துநிலை இன்னலை (temporary balance of paymunt difficulty) சமாளிக்க அன்னியச் செலாவணியை கொடுத்து உதவ ஏற்படுத்தப்பட்டது.

**உலக வங்கி (World Bank)**

பன்னாடுகளிலும் முதலீட்டைப் பெருக்கி, உற்பத்தியை உயர்த்தி, வருவாய் வேலை வாய்ப்பினை அதிகரிக்கச் செய்வதே இவ்வங்கியின் அடிப்படை நோக்கம். உலகமகா போரில்

சிதைவு பட்ட நாடுகளின் பொருளாதாரத்தை போர்ப் பொருளாதாரத்திலிருந்து (war economy), அமைதிப் பொருளாதாரத்திற்கு (peace economy) மாற்ற இவ்வங்கி ஏற்படுத்தப்பட்டது.

குறிக்கோள்:

1. இவ்வங்கியின் அங்க நாடுகளின் பொருளாதாரத்தைச் சீர்திருத்தவும், பொருளாதார வளர்ச்சிக்கு உதவுதலும்.

2. வெளிநாட்டிலிருந்தும், அங்கத்தினர் நாட்டிலிருந்தும் தனியார் முதலீட்டை ஊக்குவித்து கடன் அளித்தல், பொறுப்பு ஏற்றல்.

3. பன்னாட்டு வாணிபம் தழைக்கவும், பன்னாட்டுச் செலுத்து நிலையில் சமநிலை எய்த உதவுதல்.

வங்கியின் அமைப்பு

இதன் ஆரம்ப அதிகபட்ச அனுமதித்த முதல் 10,000 மில்லியன் டாலர். அமெரிக்கா அதிகபட்சமான சந்தாவை செலுத்தியுள்ளது. இதற்கு அடுத்த இடம் இங்கிலாந்திற்கும், இந்தியாவிற்கு ஐந்தாவது இடமும் ஆகும். ஒவ்வொரு நாட்டிற்கும் பங்கின் அளவு (quota) நிருணயிக்கப்பட்டது. ஒவ்வொரு அங்கத்தினர் நாடும் தன் பங்கின் அளவில் 2% சதவீதம் தங்கத்திலோ, அமெரிக்க டாலரிலோ கொண்டு வரவேண்டும். 18% சதவீதம் தங்கள் நாட்டு நாணயத்தில் கொண்டுவரவேண்டும். மீதி 80% சதவீதம் அழைக்கப்படாத முதல் (uncalled capital) இதனை வேண்டும்போது அழைப்பு விடுத்து பெற்றுக் கொள்ளலாம்.

உலக வங்கிக்குப் பணம் கீழ்கண்ட வகைகளில் கிடைக்கின்றது:

1. அங்கத்தினர் நாடுகள் செலுத்தும் பங்களவுத் தொகை

2. வங்கி பன்னாட்டு மூலதன சந்தையின் (International Capital Market) பெரும் கடன்.

3. வங்கிக்குச் சேரும் இலாபம்.

**இவ்வங்கியின் நிருவாகம் ஒரு இயக்கும் ஆளுநர் குழு (Board of Governers) வின் கையில் உள்ளது. இக்குழுவில் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு பிரதிநிதித்வம் உண்டு. அன்றாட வேலைகளை**

22 பேர்கள் கொண்ட நிருவாக இயக்குநர்கள் (Executive Directors) கையில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இவர்களில் 6 பேர் மிக அதிக பங்களவு கொண்டு வந்துள்ள 5 பெரிய நாடுகளாலும், 16 இயக்குநர் ஆளுநர் குழுவினாலும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

உலக வங்கியின் முக்கியப் பணி கடன் ஈதலும், கடன் பெறுதலும் ஆகும். அங்க நாடுகள் கொண்டு வந்துள்ள பங்களவு மட்டில் போதாதாகையால் பன்னாட்டு மூலதனச் சந்தையில் பெரும் அளவில் கடன் வாங்க வேண்டியுள்ளது. இதற்காகக் கடன் பத்திரங்களை வெளியிடுகின்றது. இக்கடன் பத்திரங்களில் கிட்டத்தட்ட 50% சதவீதம் அமெரிக்க மூலதனச் சந்தையில் விற்கப்பட்டுள்ளது. கடன் கொடுப்பதில் கீழ்க்கண்ட வகைகள் கடைபிடிக்கப்படுகின்றன.

1. நேரடியாக கடன் அளிப்பது.
2. கடனுக்குப் பொறுப்பு அளிப்பது.
3. கடனில் பங்கேற்றல் (participation)

உலக வங்கி அங்க நாட்டு அரசுக்கோ, அரசு சார்பு தொழிற்சாலைக்கோ, தனியார் துறைக்கோ, தொழில், விவசாயம், போக்குவரத்து போன்றவைகளுக்கோ கடன் அளிக்கின்றது. தனியார் துறைக்கு கடன் வழங்கினால் அந்த நாட்டு அரசோ, மையவங்கியோ பொறுப்பு ஏற்க வேண்டும்.

### கடன் விநியோக முறை

கடன் விநியோக முறை நான்கு கட்டத்தில் அமைந்துள்ளது.

1. முதல் கட்டமாக உலக வங்கி நிருவாகிகளுக்கும், கடன் கோரி வேண்டுவோருக்கும் பேச்சு வார்த்தை நடைபெறும். முக்கியமாக கடன் பெறுவோருடைய நிதி நிலையும், அவர் கடனைத் திருப்பித் தர வசதியுள்ளவரா என்பன போன்ற பிரச்சினைகள் ஆராயப்படும். கொடுக்கப்படும் கடன் அவ்வகையான கடனுக்கு முதன் முறையானால் வங்கி அந்நாட்டின் விவசாய, கனிவள ,தொழில் மற்றும் போக்குவரத்து வசதி பற்றி, ஆய்வு செய்யும்.

2. முதற் கட்டம் வெற்றிகரமாக, அமைந்தால், இரண்டாவது கட்டமாக குறிப்பிட்ட கடன் தேவைப்பட்டுள்ள

திட்டத்தினை ஆராய்வார்கள். இத்திட்டத்தை வெற்றிகரமாக முடிக்க போதிய நிருவாக, தொழில் நுணுக்க, இரசாயன, நிதி நிர்வாகத் திறன் நாட்டில் இருக்கின்றதா என்பதனை உலக பாங்கு கண்டறியும்.

3. அடுத்த கட்டமாக கடன் தொகை, வட்டி வீதம், கால வரையறை, தனியார் துறைக் கடனுல் அரசு உத்திரவதாம் போன்றவைகள் விவாதித்து முடிவெடுக்கப்படும். பொதுவாக உலக வங்கி திட்டத்திற்குத் தேவையான அந்நிய செலாவணிப் பங்கை மட்டுமே கடனுக அளிக்கும். தேவையான உள் நாட்டு மூலதனத் திட்டத்தை எடுத்துள்ள நிறுவனம் உள் நாட்டில் உள்ள தனியார், முதலீட்டோர் கூட்டுடன் பெறவேண்டும்.

4. கடைசி கட்டமாக கொடுக்கப்பட்ட கடன் சரியான வழியில் செலவிடப்பட்டுள்ளதா என்பதினை ஆராயும்.

உலக வங்கி கடன் அளிப்பதில் சில அடிப்படை கோட்பாடுகளை மேற்கொண்டுள்ளது.

1. கடன் பெறுவோர் கடனைத் திருப்பித்தர நிதி வசதி உள்ளவராக இருத்தல் வேண்டும். ஓரளவு நட்ட வச்சம் (risk) எடுக்க வங்கி தயாராக உள்ள போதிலும் பயனற்ற திட்டங்களுக்கு உதவி, நட்டத்தைப் பெற வங்கிக் கோட்பாடு இடம் அளிப்பதில்லை.

2. குறிப்பிட்ட திட்டம் பொருளாதார தொழில் நுணுக்க நிலைகளில் சிறந்த சாத்தியக் கூறு வாய்ந்ததாக இருத்தல் வேண்டும். திட்டம் உடனடி பொருளாதார வளர்ச்சிக்கு வித்திடும் திட்டமாகவே அமைய வேண்டும். சமுதாய முன்னேற்றம் கல்வி, வீட்டு வசதி, சுகாதாரம் போன்ற திட்டங்களுக்குப் பொதுவாக கடன் அளிப்பதில்லை.

3. திட்டத்தின் அந்நியச் செலாவணிப் பங்கை மட்டில் கடனுக அளிக்க உலக வங்கி முன்வரும்.

4. கடன் பெற்ற தொகையை ஒரு குறிப்பிட்ட நாட்டு நாணயத்தில்தான் செலவிட வேண்டும் என்ற நியதி இல்லை. கடன் பெறும் நாடு எங்கு தனக்குத் தேவையான இயந்திர சாதனங்கள், மூலப் பொருள்கள் குறைந்த விலையில் கிடைக்கின்றனவோ அந்த நாட்டிலிருந்து வாங்கிச் கொள்ளலாம்.

5. கடன் பெறுவோரிடம் தொடர்பு கொண்டு திட்டத்தின் முயற்சியையும், பொருளாதார மேம்பாட்டினையும் நோக்குதல்.

6. உள்நாட்டு முதலீட்டை ஊக்குவிக்க முயல்வது. உலக வங்கி தான் கடன் வாங்கும் வட்டி வீதத்திற்கே ஒரு சதவீதம் அதிகரித்து வட்டி வசூலிக்கும்.

இவ்வங்கி ஆரம்பிக்கப்பட்ட முதல் சில ஆண்டுகள் போரால் சிதைவுண்ட ஐரோப்பிய நாடுகளுக்கு சீரமைப்பு கடன்கள் அளிப்பதில் அதிக அக்கரை காட்டி வந்தது. இதற்காக 500 மில்லியன் டாலர் கடன் உதவி அளித்தது. இதன் பிறகு பொருளாதாரத்தில் பின் தங்கிய நாடுகளுக்குக் கடன் வசதி அளிக்க ஆரம்பித்தது. ஜூன் 1969-ம் ஆண்டு வரை உலக வங்கியும் இதன் மற்றொரு அங்கமாகிய பன்னாட்டு வளர்ச்சி வங்கியும் (International Developement Agency) I.D.A. மொத்தம் 800 கடன்களுக்கு மேல் 14,800 மில்லியன் டாலர் கடன் அளித்து வந்தது.

1970-ம் ஆண்டு வரை இவ்வங்கி அளித்துள்ள கடன் வகையைக் கீழே காணலாம்.

| | | மில்லியன் டாலர் |
|---|---|---|
| புனரமைப்புக் கடன் | | 497 |
| வளர்ச்சிக் கடன் | | 13578 |
| மின்சாரம் | 4632 | |
| போக்குவரத்து தகவல் தொடர்பு | 4649 | |
| விவசாயம், வன வளர்ச்சி, மீன் பிடிப்பு | 1294 | |
| தொழில் துறை | 2166 | |
| மற்றவை | 827 | |
| | | 14075 |

மேலே கண்டவாறு கடன் அளிப்பது தவிர நாடுகளின் பொருளாதார ஆய்வு, நாட்டின் பின்தங்கிய பகுதி பற்றி ஆய்வு, அவற்றை நிவர்த்தி செய்ய வழி போன்றவைகளை தன் அங்கத்தினர்களுக்கு செய்து கொடுத்துள்ளது.

### இந்தியாவும் உலக வங்கியும்

இந்தியா உலக வங்கியின் அதிகபட்சமான உதவி பெற்ற நாடு. ஜூன் 1964-ம் ஆண்டு வரை 880 மில்லியன் கடனை இந்தியா பெற்றது. இதில் 500 மில்லியன் ரயில் போக்குவரத்து பெற்றது. இதைத் தவிர பொதுத் துறையில் மின்சாரம், பல் நோக்க அணை (Multi purpose project), துறைமுகம், விமானப் போக்குவரத்து, விவசாயம் ஆகிய துறைகளுக்கும் கடன் வசதி

(World Bank and I.D.A. Annual Report 1970.)

அளிக்கப்பட்டுள்ளது. தனியார் துறையில் இரும்பு, நிலக்கரி, உரம் ஆகிய தொழில்களுக்கும், இந்தியத் தொழில் கடன் மற்றும் முதலீட்டு வங்கிக்கும் கடன் அளிக்கப்பட்டுள்ளது. 1970-ம் ஆண்டு வரை 1088 மில்லியன் டாலர் இந்தியாவுக்குக் கிடைத்துள்ளது.

## உலக வங்கியின் குறைபாடுகள்

**1. போதிய பணமின்மை :** உலக வங்கி ஏற்றுள்ள பணி ஒரு மிகப் பெரிய பணியாகும். பல நாடுகளில், குறிப்பாக பொருளாதார வளர்ச்சி குன்றியுள்ள நாடுகளில் தொழில் முன்னேற்றத்திற்குக் கடன் கொடுக்க மிகப் பெருந்தொகை தேவை. உலக வங்கியின் தற்போதுள்ள பண வசதி, தேவையை நோக்கின் மிகக் குறைவாக உள்ளது. ஆயினும், இக்கருத்துக்கு மறுமொழியாக உலக வங்கி மட்டில் எல்லா நாடுகளின் தொழில் தேவையைப் பூர்த்தி செய்ய இயலாது. ஒவ்வொரு நாட்டின் அரசும், நிதி நிறுவனங்களும் இப்பணியினைச் செய்ய வேண்டும். உலக வங்கியினை அவர்கள் பணிக்கு உதவி அளிக்கும் ஒரு நிறுவனமாகவே கொள்ள வேண்டும்.

**2. பின் தங்கிய நாடுகளுக்கு உதவி செய்யாமை**

உலக வங்கி பின் தங்கிய நாடுகளின் தேவையைப் பூர்த்தி செய்யவில்லை. வளர்ந்த பொருளாதார நாடுகளுக்கே அதிகக் கடன் வசதி அளித்துள்ளது. ஆரம்ப காலத்தில் இக்குற்றச் சாட்டு உண்மையே. ஆயினும், சிறிது காலத்திற்குப் பிறகு ஐரோப்பிய நாடுகளுக்கு அளித்த கடன் அளவைக் குறைத்து, ஆசிய, ஆப்பிரிக்கா கண்டங்களில் பின் தங்கிய நாடுகளுக்கு அதிகக் கடன் கொடுக்க ஆரம்பித்தது. ஜூன் 1970-ம் ஆண்டு வரை அளித்த கடன் பின் வருமாறு :—

| | $ மில்லியன் |
|---|---|
| ஆசியாவும் மத்திய கிழக்கும் | 4628 |
| ஐரோப்பா | 2565 |
| மேலைக் கோளம் (Western hemisphere) | 4352 |
| ஆப்பிரிக்கா | 2015 |
| ஆஸ்திரேலியா | 515 |
| மொத்தம் | 14075 |

3. பொருளாதார வளர்ச்சி பெருத நாடுகள் உலக பாங்கின் குறிப்பிட்ட திட்டத்திற்குக் கடன் அளிப்பதை விட பொதுவாக மொத்தக் கடனை கொடுத்து அந்தந்த நாட்டின் விருப்பப்படி பொது திட்டங்களில் செலவு செய்ய விரும்புகின்றனர்.

4. தனியார் துறைக்குக் கடன் அளிக்க உலக வங்கி அந்த நாட்டின் அரசின் பொறுப்பைக் கேட்டது, தனியார்துறை கடன் வாங்குவதில் பெரிய சிக்கலை ஏற்படுத்துகின்றது. தனியார்துறை பல நாடுகளில் அரசாங்க பொறுப்பை அடைய முடியவில்லை.

5. உலக வங்கியின் வட்டி வீதம் அதிகமாக இருப்பதாக பொருளாதார வளர்ச்சிப் பெருத நாடுகள் கருதுகின்றன. திட்டத்தின் பலன் உடனடியாகக் கிடைக்க முடியாததால் வட்டிப் பளு அதிகமாக உள்ளது.

மேற்கண்ட குறைபாடுகள் இருப்பினும் உலக வங்கி பன்னாட்டு முதலீட்டுப் பெருக்கத்திற்குச் சிறந்த நிறுவனமாக விளங்கி உள்ளது என்பதில் ஐயம் ஏதும் இல்லை.

## பன்னாட்டு வளர்ச்சி நிறுவனம் (The International Development Association) I.D.A.

இதுபோன்ற நிறுவனத்தின் அவசியத்தை அமெரிக்க நாட்டு செனட்டர் மன்ரோனி (Senator Monroney) எடுத்துக் காட்டினார். அமெரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவர் இந்த கருத்தை வரவேற்றார். தொழில் வளம் பெற்ற நாடுகள், வளர்ச்சி பெற முயன்று கொண்டிருக்கும் நாடுகளுக்கு நீண்ட கால கடன் உதவி அளிக்கவே இந்த நிறுவனம் 1960-ம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. பொருளாதார சாத்தியக்கூறு உள்ள பல நல்ல திட்டங்களுக்கு உலக வங்கி கடன் அளிக்க இயலாமல்

உள்ளது. உதாரணமாக சமுதாய மூலதனத்தை (Social capital) அதிகப்படுத்தக் கூடிய சாலைகள், அணைக்கட்டுகள், நகர்ப்புற முன்னேற்றம், சுகாதாரம், சேரி ஒழிப்பு போன்றவைகள் பொருளாதார முன்னேற்றத்துக்கு, பின்தங்கிய நாடுகளில் அடிகோலியாக அமையும். அதுபோன்ற திட்டங்களுக்கு நீண்ட கால மென்மையான கடனை (soft loan) அளிக்க உலக வங்கியின் சட்டதிட்டம் அனுமதிக்கவில்லை. பன்னாட்டு வளர்ச்சி நிறுவனம் மேலே கூறிய வகை கடன்களை அளிக்க ஏற்படுத்தப்பட்டது இது உலக வங்கியின் ஒரு அங்கமாகத் திகழ்கிறது.

உலக வங்கியில் அங்கத்தினராக இருக்கும் நாடு, இந்த நிறுவனத்திலும் அங்கத்தினராகலாம். ஆரம்பிக்கும்போது 45 நாடுகள் $ 900 மில்லியன் பங்களவு செலுத்தியிருந்தன. இதில் அமெரிக்கா, இங்கிலாந்து ஜெர்மனி அதிகபட்ச பங்கேற்று இருந்தது. ஒவ்வொரு நாடும் தன்னுடைய பங்குத் தொகையில் 10 சதவீதம் தங்கத்திலோ அல்லது சுதந்திரமாக மாற்றக் கூடிய நாணயத்திலோ (freely confertible currency) கொண்டு வரவேண்டும். மீதத்தை தன் நாட்டுப் பணத்தில் செலுத்தல் வேண்டும்.

### சிறப்பு அம்சங்கள்

1. இதன் கடன்களுக்கு வட்டி கிடையாது. அளிக்கும் பணிச் செலவுக்காக $\frac{3}{4}$% சதவீதம் வசூலிக்கும்.

2. கடனை திருப்பித்தர வேண்டிய நீண்ட காலம் 50 ஆண்டுகள்.

3. கொடுத்த 10 ஆண்டுகளுக்குப் பின்தான் கடன் திருப்பும் காலம் ஆரம்பிக்கும்.

ஜுன் 1970-ம் ஆண்டுவரை இந்த நிறுவனம் எல்லா அங்க நாடுகளுக்கும் $ 2773 மிலியன், 221 திட்டங்களுக்கு கடன் அளித்துள்ளது. இந்தியாவிற்கு 600 மைல் நீளமுள்ள தேசிய சாலை போடவும், மகாராஷ்டிரம், மேற்கு வங்காளம், பீகார் ஒரிசா ஆகிய மாநிலங்களில பெரிய அணைக்கட்டுகள் கட்டவும் ரூ. 30 கோடி கடன் வசதி அளித்துள்ளது. உத்திரப்பிரதேசத்தில் குழாய் கிணறுகள் (Tube wells) தோண்டவும், குஜராத்தில் வடிகால் வசதிக்கும் கடன் அளித்துள்ளது. கடன் பெற்ற நாடுகள் கடன் தொகையைத் தங்கள் நாட்டு நாணயத்தில் திருப்பித் தரலாம்.

## பன்னாட்டு நிதிக்கழகம் (International Finance Corporation)

இது உலக வங்கியின் மற்றொரு அங்கம். உலக வங்கியின் கடன் வழங்கும் வகையில் இரண்டு பெருங்குறைகள் உள்ளன.

1. தனியார் துறைக்குக் கடன் வழங்க அரசாங்க பொறுப்பு அவசியப்படுகின்றது.

2. கடன் அளிக்கலாமே தவிர தொழில் நிறுவனத்திற்குத் தேவையான சாதாரண பங்குகளை (equity shares) ஏற்க முடியாது.

இக்குறைகளை நீக்கும் வண்ணம் இக் கழகம் 1955-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. இதன் அனுமதிக்கப்பட்ட மூலதனம் $100மி. 1960-ம் ஆண்டு ஒப்பிய முதல் (subscribed capital) $96·2. இந்தியா $ 4·45 மி. (ரூ. 211 லட்சம்) மூலதனம் அளித்துள்ளது.

குறிக்கோள்:

1. தனியார் துறை நிறுவனங்களில் அரசாங்கம் இன்றி முதலீடு செய்வது.

2. முதலீட்டு வாய்ப்பினையும் முதலீடு செய்ய விரும்புவோரையும் ஒருங்கிணைத்தல்.

3. உள்நாட்டு, வெளிநாட்டு முதலீட்டு வாய்ப்பினை பெருக்குவது.

ஜுன் 1969-ம் ஆண்டுவரை இக்கழகம் 34 நாடுகளில் 159 நிறுவனங்களில் 365 மில்லியன் முதலீடு செய்துள்ளது. இந்தியாவில் 9 இந்தியக் கம்பெனியில் 23.3 மில்லியன் முதலீடு செய்துள்ளது.

## ஆசிய வளர்ச்சி வங்கி (Asian Development Bank)

இவ் வங்கி உலக வங்கியின் மாதிரியில் கடினக்கடன் (hard loans) அளிக்க ஏற்படுத்தப்பட்டது. இவ்வங்கி 31 நாடுகளை அங்கத்தினராகக் கொண்டு 1966-ம் ஆண்டு ஆரம்பிக்கப் பட்டது. இதன் ஆரம்ப மூலதனம் 1000 மில்லியன் இருந்து 1100 மில்லியன் உயர்த்தப் பட்டது. இதில் பாதி ஒப்பிய மூலதனம் ஆகும். இவ்வங்கியின் கனஅளவு (1) மெம்பர்கள் அளிக்கும் பங்குத் தொகை, வங்கியால் பெறப்பட்ட கடன் (2) சிறப்புநிதி

(special fund) நாடுகளால் அளிக்கப்பட்ட நன்கொடை ஆகியவைகள் கொண்டது.

1968-ம் ஆண்டு வரை 38 நாடுகள் அங்கத்தினர்களாக இருந்தன. இவைகளில் 19 நாடுகள் ஆசிய, தூரக் கிழக்கு நாடுகளும் எஞ்சியவை மாற்று நாடுகள் ஆகும். 1969-ம் ஆண்டு வரை $ 77.4 மில்லியன் தொழில் முன்னேற்றக் கடனை நாடுகளுக்கு அளித்துள்ளது.

## பாட நூல்கள்

1. GROWTHER—An outline of money.
2. YEAGER, L.B.- Internat icnal Monetary Relation in Theory, History and Policy.

# 7. வணிக வங்கிகளின் கோட்பாடு-மாறிய எண்ணம்

வணிக வங்கிகளின் பழம் பெருங்கொள்கையான எளிவரல் தன்மை வெகு காலமாக ஒப்புக்கொள்ளப்பட்ட கோட்பாடாக அமைந்து வந்தது. இக்கோட்பாடின்படி வணிக வங்கிகள் குறுகியகால, தானே எளிவரலாகக் கூடிய (self-liquidating) கடன்களை மட்டில் கொடுக்க வேண்டும். சரக்குகள் உற்பத்தி செய்து வைத்துள்ள கச்சாப் பொருள்கள், உற்பத்தி ஆகிக் கொண்டிருக்கும் பொருள்கள், கப்பலில் வந்து கொண்டு இருக்கும். பொருள்கள் ஆகியவற்றின் ஈட்டின் பேரில் மட்டும் வணிக வங்கிகள் கடன் அளிக்க வேண்டும். இக் கோட்பாட்டிற்கு "உண்மைச் சீட்டுக் கோட்பாடு" (Real bills doctrine) என்று பெயர்.

### உண்மைச் சீட்டுக் கோட்பாடு

வங்கிகளைப் பொருத்த வகையில் இது ஒரு நல்ல கட்டுப்பாடான கோட்பாடானலும் நடைமுறைக்கு ஒத்து வராது. இக் கோட்பாட்டைக் கடை பிடித்ததால் சமுதாயத்தில் கடன் கிடைக்காமல் பொருளாதார வளர்ச்சி மாற்றப்படுவதோ பலருக்கு பெரும் ஏமாற்றத்தை அளிக்கும். இக்கோட்பாட்டின் குறையை பேராசிரியர் சேயர்ஸ், "வங்கிகள் தாங்கள் கொண்டுள்ள தவருன நோக்கில் முதலில் கொடுத்த சீட்டுகளுக்கு பணம் கிடைத்தாலன்றி மற்ற சீட்டுகளுக்கு கடன் அளிப்பதில்லை என்று மறுத்து உட்கார்ந்து கொண்டிருந்தால் மக்களின் வருவாய் குறைந்து, விலைவாசிகள் வீழ்ச்சி அடைந்து, கடன் பெற்றோர் தங்கள் சீட்டுக்களுக்குப் பணம் அளிக்க முடியாத நிலை ஏற்படும்" என்று தெளிவாகக் கூறியுள்ளார்.*

---

* "If bankers in a misguided attempt to liquidate their assets were to refuse to take back any new bills and sit back in their parlour and wait for the maturities of the bills in their portfolio, there world be a fall in purchasing power and a fall in prices sufficient to make it impossible for debtors to meet bills out of the process of their operations"—Modern Banking by R.S. Sayers-3rd Edition, Page 239.

உண்மையான சீட்டாக இல்லாத ஆனால் நம்பகமான பயனுள்ள பல கடன்கள் உண்டு. இக் கோட்பாடின்படி இவைகளுக்குக் கடன் அளிக்க இயலாது.

மாற்றுந்தன்மைக் கோட்பாடு (Shiftability Doctrine)

இக்கோட்பாடின்படி வங்கியின் முதலீடு எளிவரல் தன்மையை நோக்காது, மாற்றி அமைக்கும் நிலையையே கொள்ள வேண்டும். தன் முதலீட்டில் உள்ள சொத்தை மற்ற வணிக வங்கிக்கோ மைய வங்கிக்கோ ரொக்கத்திற்கு வேண்டும்போது மாற்றி அமைக்கக் கூடியதாக இருக்க வேண்டும். தங்களுக்குப் பண நெருக்கடி ஏற்படும்போது சொத்துக்களை மைய வங்கிக்கு மாற்றக் கூடிய தன்மை உடைய எக் கடனிலும் வணிக வங்கிகள் முதலீடு செய்யலாம். கூட்டுப் பங்கு கம்பெனி விரிவடைந்ததன் காரணமாக நல்ல முதல் தர பங்குகளின் பேரில் கடன் அளிக்கும் வாய்ப்பு அதிகரித்துள்ளது.

எதிர்நோக்கு வருவாய் கோட்பாடு (Anticipated income doctrine)

மாற்றுத் தன்மைக் கோட்பாடும் மாறி சமீப காலங்களில் எதிர் நோக்கு வருவாய் கோட்பாடே வங்கிகள் கடன் அளிக்க நன் முறையாகும் என்ற எண்ணம் நிலவி வருகின்றது. அமெரிக்க நாட்டில் வணிக வங்கிகள் பழம் பெரும் கோட்பாடுகளை மீறி மத்திய நீண்ட காலக் கடன்களை அளிக்க வணிக வங்கிகள் முன் வந்துள்ளன. இவற்றில் முக்கியமானது காலக்கடன் (term loan). காலக் கடன் என்பது வங்கிக்கும் கடன் வாங்குவோருக்கும் ஏற்பட்டுள்ள ஒப்புதல்படி ஒரு ஆண்டு முடிந்து திருப்பித் தரவேண்டிய கடன் ஆகும். சில நிலைகளில் இக்கடன் ஓராண்டுக்கு மேலும் நீடிக்கலாம். ஆனால், ஐந்து ஆண்டிற்கு மிகுதியாக இக்கடன் இயந்திர சாதனம், கடன் பத்திரம் நிலைச் சொத்துக்கள் ஆகியவற்றின் ஈட்டின் பேரில் அளிக்கப்படுவதாகும். வணிக வங்கிக்கும், கடன் பெறும் நிறுவனத்திற்கும் கடன் பெற்ற பணத்தை எவ்விதத்தில் செலவிட வேண்டும் என்ற ஒப்பம் இருக்கும். இக் கோட்பாட்டின்படி கடன், இயந்திர சாதனங்கள் மீதோ கடன் பத்திரங்கள் மீதோ கொடுத்தாலும் அவை முக்கியமல்ல. பணம் எவ்விதம் செலவிடப்படப்போகின்றது, அதில் எத்துணை இலாபம் கிடைக்கும், இதுவே அடிப்படையாகும். பொதுவாக இதுபோன்ற மத்தியக் காலக் கடன் வங்கிகள் வாடிக்கைக்காரர்களுக்கு ஆலோசனை கூறி பணத்தை குறிப்பிட்ட வழியில்

செலவிடச் செய்து இலாபம் அடையச் செய்யும் முயற்சியே ஆகும். இப்போது இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள் விவசாயக் கடனுக்கு சொத்துப் பொறுப்பை, முக்கியமாக எண்ணுமல் வளரும் பயிர் (standing crop) எவ்வளவு, அதில் கிடைக்கும் வருவாய் எவ்வளவு என்பதில் கொடுக்கும் பயிர்க் கடன் (crop loan) எதிர் நோக்கு வருவாய் கோட்பாடே ஆகும்.

உண்மைச் சீட்டுக் கோட்பாடு, மாற்றியமைக்கும் தன்மைக் கோட்பாடு, எதிர் நோக்கு வருவாய்க் கோட்பாடு ஆகிய மூன்று தத்துவங்களையும் நோக்கினுல் முதல் கோட் பாட்டின் படி உண்மைச் சீட்டுக்கு பணம் வந்த பிறகுதான் மற்ற உண்மைச் சீட்டுகள் பேரில் கடன் கொடுக்கலாம். இதனுல் சமுதாயத்துக்குக் கிடைக்கும் கடன் அளவு குறைவாக இருக்கும். மாற்றி அமைக்கும் கோட்பாட்டின்படி ஒரு வங்கி மாற்றி அமைப்பதால் மற்றைய வங்கிகள் கடன் அளிக்கும் வாயப்பு குறைபடும். ஆயின், எதிர் நோக்கு வருவாய்க் கோட் பாடின் படி வரக் கூடிய வருமானத்தை எதிர் நோக்கிக் கடன் கொடுப்பதால் சமுதாயத்தில் கடன் அதிகமாகக் கிடைக்க வாய்ப்பு ஏற்படுகின்றன. ஆயின், எதிர் நோக்கு வருவாய்க் கடன் அளிக்கும்முன் ஒவ்வொரு திட்டத்தின் சிறப்பையும் அடையக் கூடிய வருவாயின் சாத்தியக் கூறையும் தீவிரமாக ஆராய்ந்த பின்பே கடன் அளிக்க வேண்டும்.

**வணிக வங்கிகளின் பணிகள்—மாறிய நிலை**

வணிக வங்கிகளின் பழம் பெரும் மரபுப்படி குறுகிய காலக் கடனை மட்டும்தான் அளிக்க வேண்டும். ஆனுல், பொருளாதாரம் வளர வளர புதுப்புது நிதி நிறுவனங்கள் தோன்ற ஆரம்பித்தன. தொழில் கடனை அளிக்க ஆரம்பிக்கப் பட்ட தொழிற்சாலைகளுக்கு அரசாங்க நேரடிக் கடன், வீடு கட்ட வசதி அளிக்க தனி நிதி நிறுவனங்கள் வாடகைக் கொள் முறை (hire purchase) நிதி நிறுவனங்கள், பணம் பெற்றுத்தரும் தரகர்கள் (brokers) போன்ற பலவகை நிறுவனங்கள் வணிக வங்கிகளுக்குப் போட்டியாகத் தோன்றவே வணிக வங்கிகள் தங்களுடைய பாரம்பரியக் கொள்கை அடிப்படையில் கடன் கொடுப்பதை மாற்றி அமைத்தாலன்றி அதிக் கடன் அளிக்கும் வாய்ப்பு இருக்காது என்பதினை உணர்ந்து தங்கள் கோட் பாட்டை பல நாடுகளில் மாற்றிக் கொண்டுள்ளன.

**மத்திய கால நீண்ட காலக் கடன்கள்**

வணிக வங்கிகள் குறுகிய காலக் கடன் மட்டும் அளிக்கும் நிலையிலிருந்து மத்திய, நீண்ட காலக் கடன்களை ஓரளவு

கொடுக்க ஆரம்பித்துள்ளன. நீண்ட காலக் கடன் வணிக வங்கிகள் தொழிற் கழகங்களில் சாதாரண பங்குகள் எடுத்துக் கொண்டு, இக் கழகத்தின் மூலம் கடன் வாய்ப்பினை பெருக்குகின்றன. ஆனால், இது போன்று பங்குகள் எடுத்துக் கொள்ளும் முறையை மறைமுகக் கடன் என்று தான் கூறலாம். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் வணிக வங்கிகள் அரசாங்கம் அல்லது மைய வங்கி தோன்றி யுள்ள தொழிற் கழகத்தில் பங்குகள் எடுத்துக்கொண்டுள்ளன.

வாடைகைக் கொள்முறை நிதி (Hire purchase finance)

அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் வாடகைக் கொள்முறை நிதி நிறுவனங்கள் ஏராளமாக அமைந்துள்ளன. இவைகள் அதிக மூலதனமுள்ள கூட்டுக் கம்பெனிகள் ஆகும். வாடகைக் கொள்முறையில் இந்நாடுகளில் தனிநபருக்கு வேண்டிய எந்தப் பொருளையும் பெற்றுக் கொள்ளாலாம். பலரும் இம் முறையில் பொருள் வாங்குவதை விரும்புகின்றனர். இந் நிறுவனங்கள் தங்கள் தொழிலுக்கு மிக அதிகமான கடனை வேண்டி நிற் கின்றது. வணிக வங்கிகள் இந் நிறுவனங்களுக்கு பெரிய அளவில் கடன் அளிக்கின்றன. இங்கிலாந்தில் 1958-ம் ஆண்டிற்குப் பிறகு வணிக வங்கிகள் இம் மாதிரியான கடன் அளிப்பது மிகவும் அதிகரித்துள்ளது. 1958-ம் ஆண்டு பாங்க் ஆஃப் இங்கிலாந்து (Bank of England) கடனை கட்டுப்படுத்திய வுடன் வணிக வங்கிகள் கடனைக் கொடுக்க வாய்ப்பின்றி வாடகைக் கொள்முறை நிதி நிறுவனங்களுக்குப் பெரும் அளவில் கடன் வாங்க ஆரம்பித்தன. இங்கிலாந்தில் வணிக வங்கிகள் இந்நிறுவனங்களின் சாதாரண பங்குகளை ஏற்றுக் கொண்டு வாடகைக் கொள்முறை நிறுவனங்களின் கூட் டாளியாக மாறியுள்ளது. வணிக வங்கிகளின் மாறுப்பட்ட நிலையில் இது ஒரு புரட்சிகரமான திருப்பமாக அமைந்துள்ளது. அமெரிக்க வணிக வங்கிகள் வாடகைக் கொள்முறை நிறுவனங் களுக்குக் கடன் மட்டும் பெரிய அளவில் அளித்து வரு கின்றன.

இங்கிலாந்து வங்கிகளில் வாடகைக் கொள்முறை நிறு வனங்களின் பங்கு ஏற்று. கூட்டாளியாக மாறியுள்ள நிலைமை வணிக வங்கிக் கோட்பாட்டிற்கு மாறிய தன்மையா? வணிக வங்கிக்கும் இந் நிறுவனங்களுக்கும் ஒருசில ஒற்றுமைகள் உண்டு. வங்கிகள் கடன் அளிப்பது தனிப்பட்டோர் தங்களுடைய தேவைப் பொருள்களையும், தொழில் நிறுவனங் கள் தங்களுக்குத் தேவையான இயந்திரம் மற்றும் கச்சாப்

பொருள் போன்றவைகளை வாங்கிக் கொள்ள வாடகைக் கொள்முறை நிறுவனங்களும் இப் பொருள்களை தவணை முறையில் கொடுக்கின்றன. எனவே, வணிக வங்கிக்கும், வாடகை கொள்முறை நிறுவனத்திற்கும் ஒற்றுமை இருக்கின்றது. மேலும், வாடகைக் கொள்முறை நிறுவனத்திற்கு அளிக்கும் கடன் எதிர் நோக்கு வருவாய் கோட்பாட்டிற்கு ஒத்து வருகின்றது. வாடகைக் கொள்முறை தாணி எளிவரல் தன்மை (self liquidating) கோட்பாட்டிற்கும் ஒத்து வருகின்றது. அவ்வப்போது தவணைப் பணம் திரும்பி வர வர கடன் தொகை குறைந்து போகின்றது.

ஆனால், இம்முறையில் உள்ள குறைபாடு, வாடகைக் கொள்முறைக்கு ஊக்கம் அளிப்பது தேவையில்லாத சில தொழிற்சாலைகளின் பொருள் தேவைப்படுவதால், அவசியமான தொழில்கள் முன்னேற்றமடையாமல் போகலாம். பண வீக்கமும் ஏற்படலாம்.

தனிநபர் கடன் (personal loan)

தனிநபர் தங்களுக்குத் தேவையான மோட்டார் கார், மேசை, நாற்காலி, தொழில் கருவிகள், வீட்டுவசதி சாதனங்கள் போன்றவைகளுக்கு தனிநபர் கடன்களை வணிக வங்கிகள் கொடுக்க ஆரம்பித்துள்ள இக்கடன் முறை வணிக வங்கிகள் உற்பத்தி பெருக்குள்ள கடன்களுக்கு மட்டில்தான் கடன் அளிக்க வேண்டும் என்ற கோட்பாட்டிற்கு மாறிய கொள்கை ஆகும். 1958-ம் ஆண்டு இங்கிலாந்தில் மில்லண்ட் வங்கி இது போன்ற கடனை அளிக்க ஆரம்பித்தது. தனிநபர் கடனுக்கு பொறுப்பு ஏதும் கிடையாது. ஒரே தகுதி அவர் அவ்வங்கியில் கணக்கு வைத்திருக்க வேண்டும்.

அவருடைய நாணயம், தொழில் வருவாய் இதனை அடிப்படையாகக் கருதிக் கடன் அளிக்கப்படுகின்றன. கடன் வாங்கியவர் இறந்துவிட்டால் வராக் கடனாகக் கருதப்படுகிறது.

இங்கிலாந்து வணிக வங்கிகளின் மாறிய போக்கைத் தொடர்ந்து ஆஸ்திரேலியாவின் வணிக வங்கிகள் வாடகைக் கொள்முதல் நிறுவணங்களின் பங்கை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்துள்ளன. தனிநபர் கடனும் அளிக்கப்படுகின்றது.

இந்திய வணிக வங்கிகளும் தங்கள் பணிகளில் மாறுபாட்டை ஏற்படுத்தியுள்ளன. தொழில் நிறுவன கழகத்தின்

மூலதனத்தில் பங்கு ஏற்று நீண்ட காலக் கடனுக்கு உதவி செய்கின்றன. வாடகைக் கொள்முறை நிறுவனங்களின் பங்குகளைப் பெருவிட்டாலும் அவைகளுக்குக் கடன் அளிப் பதை மேற்கொண்டுள்ளன. இந்தியன் ஓவர்சீஸ் வங்கி இத் துறைக் கடன் வழங்குவதில் முன்னேடியாகத் திகழ்கின்றது. இதனைத் தொடர்ந்து மற்றைய வங்கிகளும் இத்துறையில் ஈடு பட்டுள்ளன. தனிநபர் தங்களுக்குத் தேவையான சைக்கிள், குளிர்சாதனப் பெட்டி போன்றவைகள் வாங்க இந்திய வணிக வங்கிகள் கடன் அளிக்க முன் வந்துள்ளன. இவற்றை வாங்கிய ரசீதை வணிக வங்கிக்கு எடுத்து சென்ருல் விற்பனை செய்த கம் பெனிக்கு பணத்தினை நேரடியாக வணிக வங்கி ஒரு காசோலை மூலம் விடுவிக்கின்றது. இப்பணத்தினை வட்டியுடன் சில மாதங் களில் மாதத் தவணையாக பொருளை வாங்கியவர் வங்கிக்குச் செலுத்த வேண்டும். மேலும் பெரிய வணிக வங்கிகள் இந்தியா வில் தேசியமயமாக்கப்பட்டபின் சிறு கடைக்காரர்கள், வண்டிக்காரர்கள், பூக்கடை பழக்கடை வியாபாரிகள், ஆகியோருக்கும் வணிக வங்கி கடன் அளிக்கின்றன.

வணிக வங்கிகளின் கோட்பாடு பொருளாதாரம் வளர்ச்சி அடைய, அவைகள் அளிக்கும் கடன் முறைகளும் மாற்றம் அடைகின்றது.

## பாட நூல்கள்

1. S. K. BASU—A Review of Current Banking Theory and Practice.
2. R. S. SAYERS—Modern Banking.

# 8. வணிக வங்கிகளும் பொருளாதார வளர்ச்சியும்

பொருளாதார வளர்ச்சியில் வணிக வங்கிகளுக்குப் பெரிய பங்கு உள்ளது. பொருளாதார வளர்ச்சிக்கு மூலதனம் அடிப்படையாக அமைகின்றது. சமுதாயத்தின் சேமிப்பைப் பெற்றுள்ள வணிக வங்கிகள் பொருள் பலம் மிகுந்த நிறுவனம். வளர்ச்சி அடைந்துள்ள நாடுகளில் கட்டுக்கோப்பான, விரிவாகக் கடன் வசதி அளிக்கும் வணிக வங்கிகளைக் காணலாம்.

வணிக வங்கிகள் வாணிபம் மற்றும் தொழிலுக்குத் தேவையான நடைமுதல் கடனை அளிக்கின்றது. தாங்கள் சொந்த மூலதனத்தை மட்டுமே நம்பி தொழில் செய்தால் பெரிய அளவில் செய்ய முடியாது. மேலும், அவை மற்றவர்களுக்கு கடன் அளிக்க முடியாது. எனவே, வியாபாரமோ, தொழிலோ மிகச் சிறிய அளவில்தான் நடைபெறும்.

வங்கிகளில் மைய வங்கி அச்சடித்து வெளியிடும் நோட்டுக்கள், காசுகள் தவிர தாங்களே கடனை ஏற்படுத்தலாம். இது நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணமாக அமைகின்றது.

வங்கிகள் மூலதனம் திரட்டுவதிலும், மூலதனச்சந்தை விரிவு பெறவும் மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றது. சமுதாய சேமிப்பைப் பெற்று அரசாங்க, கூட்டுப் பங்கு கம்பெனி பங்குகளில் முதலீடு செய்து மூலதன வளர்ச்சிக்குப் பயன்படுகின்றது.

சீரான வட்டி வீதம் ஏற்படுத்துவதிலும் வணிக வங்கிகளுக்கு ஒரு சிறப்பான இடம் இருக்கின்றது. வட்டிக் குறைவான இடங்களிலிருந்து இருக்கும் பாகங்களிலும் கடன் கொடுத்து நாடு முழுவதும் சீரான வட்டிவீதத்தை நிலை நிறுத்துகின்றன.

வணிக வங்கிகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு பேருதவி செய்யும் நிறுவனங்கள் மிகப் பெரிய நிதி வலிமை பெற்ற இவ்வங்கிகளை நல்ல முறையில் இயக்கி பொருளாதார மேம்பாட்டினையும், அதிக வேலை வாய்ப்பையும், அதிக

ஊதியமும் பெற சமுதாயத்தை எடுத்துச் செல்லலாம். ஆயின் இவ் வங்கிகள் எவ்வாறு செயல்படுகின்றன என்பது அதன் நிர்வாகத்தைப் பொருத்ததே. இந்தியாவில் 14 வணிக வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டதற்கு ஒரு முக்கிய காரணம், இவைகள் சமுதாய முன்னேற்றத்திற்கான பல கடன் வசதிகளை அளிக்காமல் சில நிருவாகிகளின் சொந்த விருப்பு வெறுப்புக்கு ஆட்பட்டு நடந்ததேயாகும். இந்தியா போன்ற வளரும் பொருளாதார நாடுகளில் வணிக வங்கிகளுக்கு, ஒரு பெரிய பொறுப்பு உண்டு. அரசாங்க பொருளாதார திட்டத்திற்கு பயனுள்ள வகையில் இவ்வங்கிகள் தங்களை மாற்றி அமைத்துக்கொள்ளல் வேண்டும்.

### வங்கிகள் மீது சமுதாயக் கட்டுப்பாடு (Social control on Banks)

வங்கிகள் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் பயன்படக் கூடிய நிறுவனம் என்று சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்டோம். ஆனால், பின் தங்கிய நாடுகளில் வணிக வங்கிகள் போதிய பணியினை ஆற்றத் தவறுகின்றன. இதற்கு வங்கிகளின் பழம்பெரும் கோட்பாடுகள் காரணமாக இருக்கலாம் அல்லது நிருவகிக்கும் தனிநபர்கள் தங்கள் விருப்பப்படி சில தொழிற்சாலைகளுக்கு மட்டும் கடன் தர விரும்பலாம். இதனால் சமுதாயத்தின் பின்தங்கிய பகுதியினருக்கும், சில முக்கியமான தொழிற்சாலைகளுக்கும் கடன் கிடைக்காமல் போகலாம். இந்தியா சுதந்திரம் அடைந்த முதலே இந்திய வணிக வங்கிகளை தேசியமயமாக்கும் பிரச்சனை ஒரு சர்ச்சைக்குரிய பொது வாதமாக அமைந்திருந்தது. நாட்டின் பெருந்தலைவர்கள் சிலர் தேசியமயமாக்க வேண்டும் என்றும், சிலர் வேண்டாம் என்ற கொள்கையினையும் கொண்டிருந்தனர். பொதுத் தேர்தலுக்கு முன், கேரள மாநிலத்தில், சாஸ்திரி நகரில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் இப்பிரச்சனை எழுந்தபோது, கட்சியில் தலைவர்கள் வேண்டும் என்றும் வேண்டாம் என்றும் பிரிந்திருந்த நிலையில், வங்கிகள் மீது சமுகக் கட்டுப்பாடு கொண்டுவருவது என்ற தீர்மானம் நிறைவேறியது. இத் தீர்மானத்தின் வெற்றி யாதெனில் இது நிறைவேறிய பின் தேசியமயமாக்க கூடாது என்ற கொள்கை உடையவர்கள் சமுதாயக் கட்டுப்பாடு என்பது தேசிய மயம் அல்ல என்றும் தேசிய மயம் ஆக்க வேண்டும் என்று வாதிட்டவர்கள் சமுதாயக் கட்டுப்பாடுதான் தேசிய மயம் என்று வாதிட்டார்கள்.

இத் தீர்மானத்தைத் தொடர்ந்து, பாராளுமன்றத்தில் அப்போதிலிருந்த துணைப் பிரதம மந்திரி திரு. மொரார்ஜி தேசாய்

சமுதாயக் கட்டுப் பாட்டிற்கு வங்கி சட்டத்தில் திருத்தம் கொண்டு வந்து நிறை வேற்றினர்.

இச் சமுதாயக் கட்டுப்பாட்டின் முக்கிய அம்சங்கள்

1. வங்கிகள் பொருளாதார வளர்ச்சிக்கு உதவி, பொருளாதார சர்வாதீனத்தை (Monopoly) கட்டுப் படுத்தல்.

2. பொருளாதாரத்தின் எல்லா அங்கங்களுக்கும் குறிப்பாக சிறுதொழில், விவசாயம், ஏற்றுமதி துறைகளுக்கு அதிக்கடன் வசதி.

3. வங்கிகள் நிறுவனத்தின் தலைவர், (chairman) தொழில் அதிபர் அல்லாமல், முழு நேர வங்கி அனுபவம் பெற்றவராக இருத்தல்.

4. வங்கிகள் அரசாங்கம் சொல்லும் துறைகளுக்கு மட்டில் கடன் வழங்குதல்.

5. வங்கிகள் அளிக்கும் சேவைகளை அதிகப்படுத்துதல்.

பிரதம மந்திரி, நிதிமந்திரி, மற்றும் தொழில் வங்கி நிபுணர்கள் கொண்ட தேசிய கடன் குழு (National Credit Council) நிறுவப் பட்டது. இக்குழு வங்கிகளுக்கு எவ்வித கடன் அளிக்க வேண்டும் என்று ஆணையிடும் குழுவாக அமைக்கப்பட்டது.

இக்குழு நிறுவி செயலாற்றத் தொடங்கிய ஒரு ஆண்டிற்குள் வணிக வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டது. சமுதாயக் கட்டுப்பாடு தேசியமயம் ஆக்குவதைக் காட்டிலும் சில நன்மைகளைக் கொண்டுள்ளது. தேசியமயம் ஆக்கிய பிறகு அரசாங்கம் ஏற்று, பங்குதாரர்களுக்கு ஈட்டுத் தொகை (compensation) அளித்து, கடினமான நிருவாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனல், சமுதாயக் கட்டுப்பாட்டில் அரசாங்கம் ஆணைமட்டும் பிறப்பிக்கும். வணிக வங்கிகளின் நடத்தையைக் கட்டுப்படுத்தும், உரிமை தரப்பட்ட பங்குதாரர்களிடம் இருக்கும். எனவே, அரசாங்கத்திற்கு நிருவாக இன்னல்கள் இருக்காது. எனினும், பெரிய வங்கிகளை அரசாங்கம் தேசியமய மாக்கப்பட்ட பின்பு சமுதாயக் கோட்பாடு என்னும் முறை இனி சாத்தியக்கூறு இல்லை.

## பாட நூல்கள்

1. WALTER LEAF—Banking.
2. HORCE WHITE—Money and Banking.
3. G. CROWTHER—An Outline of Money.

# 9. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள்

வங்கிகள் தேசிய மயமாக்கப் பட வேண்டுமா? இக்கேள்வி சில ஆண்டுகளாக பல நாடுகளிலும் சர்ச்சை செய்யப்பட்டு வந்துள்ளது. மைய வங்கியைப் பற்றி தேசியமயமாக இருத்தலே சாலச் சிறந்தது என்பது எல்லா நாடுகளிலும் ஒப்புக் கொள்ள முடிவாக இருக்கின்றது. இவ் எண்ணத் ஒட்டி உலகில் உள்ள எல்லா மைய வங்கிகளும் தேசிய மயமாக்கப் பட்டுள்ளன. மைய வங்கி நோட்டுகளையும் நாணயங்களையும் வெளியிடும் உரிமை பெற்ற நிறுவனம். இப்பெரிய பொறுப்பினை உடைய வங்கி, தனியார் கையில் சில பங்குதாரர்களின் கட்டுப்பாட்டில் இருப்பது நாட்டின் பொருளா தாரத்துக்கு உகந்தது அல்ல. மேலும், மைய வங்கி தனியார் கையில் இருந்தால், அரசாங்கப் பொருளாதார நோக்கத் திற்கும் மைய வங்கியின் எண்ணத்திற்கும் மாறுபாடு ஏற்பட்டு எதிரிடையான விளைவுகள் ஏற்படுவதுண்டு. எடுத்துக்காட்டாக, அரசாங்கம் பொருளாதார முன்னேற்றம் கருதி பணப் பழக் கத்தை அதிகரிக்க விரும்பலாம். ஆனால், தனியார் கையில் உள்ள மைய வங்கி கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைப் பயன்படுத்தி பணப் பழக்கத்தை குறைக்க வழி செய்யலாம். எனவே, அரசாங்க நோக்கத்திற்கும் மைய வங்கி நோக்கத் திற்கும் கொள்கை ரீதியான தகராறுகள் ஏற்படலாம். இக் காரணங்களால் முதல் உலகப் போருக்குப் பின் பாங்க் ஆஃப் இங்கிலாந்து (Bank of England), பாங்க் ஆஃப் பிரான்சு போன்ற மைய வங்கிகள் ஐரோப்பிய கண்டத்தில் அரசுடமை ஆக்கப் பட்டன. இந்தியாவில் ரிசர்வு வங்கி 1949-ம் ஆண்டு தேசிய மயமாக்கப்பட்டது. எல்லா நாடுகளிலும் மைய வங்கிகளை தேசியமயமாக்கின.

ஆனால், வணிக வங்கிகளை தேசியமயமாக்க வேண்டுமா என்ற பிரச்சனைக்கு நெடுக்காலமாக தீர்வு ஏதும் ஏற்படவில்லை. கம்யூனிச நாடுகளில் வணிக வங்கிகள் அரசாங்க உடமை. ஆனால், ஜனநாயக கருத்துடைய நாடுகளில் அரசாங்கம் வணிக வங்கிகளை தேசியமயமாக்கக் கூடாது என்ற பரவலான எண்ணம் நிலவி வந்துள்ளது.

வணிக வங்கிகளும் தேசியமயமாக்கப்படல் வேண்டும் என்ற கொள்கைக்கு கீழ்கண்ட காரணங்களைக் கூறலாம்.

1. நோட்டை அடித்து வெளியிடுவதால் மைய வங்கிகள் தேசிய மயமாக்கப்பட வேண்டும் என்றால் இதே காரணத்திற்காக கடனை ஏற்படுத்தக் கூடிய வணிக வங்கிகளும் தேசிய மயமாக்கப்படல் வேண்டும்.

2. தனியார் துறை வங்கிகள், மைய வங்கியின் கட்டுப்பாட்டிலிருந்து எவ்வழியிலாவது விடுபட்டுச் செல்லுகின்றன.

3. தனியார் வங்கிகள் தேசிய மயமாக்கப்பட்ட தொழிற்சாலைகளுக்கு போதிய உதவி அளிக்க மறுத்து சமதர்மத்தை அழிக்கப் பார்க்கின்றன.

4. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் கடனை எல்லா துறைகளுக்கும் பகிர்ந்து அளிப்பதோடு திறமையுடன் செயல் ஆற்றக் கூடும்.

பிரெஞ்சு நாட்டில் நான்கு பெரிய வணிக வங்கிகள் தேசிய மயமாக்கப்பட்டு மற்றைய வங்கிகள் தனியார் துறையில் உள்ளன.

வணிக வங்கிகள் தேசியமயமாக்கப்படலாமா, கூடாதா என்ற சர்ச்சை நடந்து கொண்டிருக்கும் போது 1969-ம் ஆண்டு ஜுலை19-ம் நாள் இந்தியக் குடியரசுத்தலைவரின் பிரகடணப்படி (President Ordinance) ரூ. 50 கோடிக்குமேல் வைப்புகளைப் பெற்றுள்ள 14 இந்திய பெருவங்கிகள் தேசிய மயமாக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து இந்தியப் பிரதமர் வானொலி மூலம் அன்று இரவு இச் செய்தியை வெளியிட்டு தேசியமய மாக்கப்பட்டதின் காரணங்களை விவரித்தார். இச் செய்கையை "சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த, மிகத் தைரியமான மிக அசாதாரண, முன்னோடியான, சரியானகால நடவடிக்கை" என இந்திய மற்றும் அந்நிய செய்தித் தாள்களும், சஞ்சிகைகளும் விமர்சனம் செய்தன. குடியரசுத் தலைவரின் பிரகடணத்தை சட்டமாக்க பாராளுமன்றத்தில் ஜுலை 24-ம் நாள், 1969-ம் ஆண்டு ஒரு மசோதா பிரேரணை செய்யப்பட்டு சட்ட மாக்கப்பட்டு இச் சட்டத்திற்கு குடியரசு தலைவரின் அனுமதி ஆகஸ்டு 9-ம் நாள், 1969-ல் அளிக்கப்பட்டது. ஆயினும், இச்சட்டத்தில் சில பிரிவுகள் அரசியல் சட்டம் 14, 19, 31, (2) பிரிவுகளுக்கு முரணானது என்று, இச்சட்டத்தின் சில பிரிவுகளை நாட்டின் உச்ச நீதி மன்றம் (Supreme Court) செல்லாது என

தீர்ப்பு அளித்தது. குடியரசுத் தலைவர் மீண்டும் 1970-ம் ஆண்டு நாட்டின் உச்ச நீதி மன்றம் குறைகண்ட பிரிவுகளை மாற்றி அமைத்து மற்றொரு பிரகடணம் செய்தார். பின்பு இப்பிரகடணம் வங்கியக் கம்பெனிகள் (ஏற்றலும் நிறுவனமாற்றலும்) சட்டம் 1970 ஆகஸ்டு பாராளுமன்றத்தில் ஏற்கப்பட்டது.

தேசியமயமாக்கப்படுமுன் 14 வங்கிகளின் நிலை 65-ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. 1969 ஜூன் 27-ல் இருந்த நிலை (இந்திய வங்கியல்—கு. ஆளுடையப் பிள்ளை, ப. 201).

**தேசியமயம் ஆக்க வேண்டியதன் காரணங்கள்**

பிரதம மந்திரி, வங்கிகள் தேசியமயமாக்கியபோது வானொலி பேச்சில் கொடுத்த காரணங்கள்.

1. வங்கித்துறை ஒரு சிலரின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்து வருவதை நீக்கவும்.

2. விவசாயம், சிறு தொழில்கள், ஏற்றுமதிகள் ஆகிய துறைகளுக்குப் போதுமான கடன் வசதி அளிப்புக்கு ஏற்பாடு செய்யவும்.

3. பாங்கின் நிருவாக அமைப்பில் முறைப்படியான தொழில் முறைப் போக்கை ஏற்படுத்தவும்.

4. தொழில் முயற்சியில் புதிதாக ஈடுபட முன் வருபவர்களுக்கு ஊக்கம் அளிக்கவும்.

5. பாங்கி சிப்பந்திகளுக்குப் போதிய பயற்சியளிப்பு ஏற்பாட்டுக்கும், நியாயமான சேவை நிபந்தனைகளுக்கு வகை செய்யவும் 14 பெரிய வணிக வங்கிகள் தேசிய மயமாக்கப் பட்டுள்ளன.

**1. சிலர் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்த வகை செய்கிறது**

சில வங்கி இயக்குநர்கள் கையில் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தும் பணத்தின் பெரும் பகுதி அமைந்துவிடுகின்றது. 65-ம் பக்கத்திலுள்ள அட்டவணைப்படி 12 வங்கிகளின் இயக்குநர்கள் தேசிய மயமாக்குமுன் ரூ. 2632 கோடி வைப்பை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். சில லட்சக்கணக்கான ரூபாயை முதலீடு செய்து இயக்குநர்கள் ஆகி, நாட்டின் பொருளாதாரத்தின் அதிகாரிகளாக சில தனிப்பட்ட செல்வந்தர்களுக்குமட்டும் சமுதாயம் அனுமதி அளிக்கக் கூடுமா?

| வங்கி | நிறுவப்பட்ட ஆண்டு | அலுவலகங்களின் எண்ணிக்கை | மொத்த வைப்புகள் ரூ. கோடியில் | அளித்திருந்த கடன்கள் ரூ. கோடியில் |
|---|---|---|---|---|
| 1. சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியா | 1911 | 564 | 448 | 323 |
| 2. பாங்க் ஆஃப் இந்தியா | 1906 | 274 | 364 | 243 |
| 3. பஞ்சாப் நேஷனல் பாங்க் | 1894 | 570 | 355 | 243 |
| 4. பாங்க் ஆஃப் பரோடா | 1908 | 372 | 280 | 180 |
| 5. யுனைடெட் கமர்ஷியல் பாங்க் | 1943 | 348 | 203 | 137 |
| 6. கனரா பாங்க் | 1906 | 325 | 149 | 108 |
| 7. யுனைடெட் பாங்க் ஆஃப் இந்தியா | 1950 | 175 | 146 | 108 |
| 8. தேனு பாங்க் | 1938 | 234 | 124 | 76 |
| 9. யூனியன் பாங்க் ஆஃப் இந்தியா | 1919 | 240 | 115 | 74 |
| 10. அலகாபாத் பாங்க் | 1865 | 153 | 112 | 87 |
| 11. சின்டிகேட் பாங்க் | 1925 | 307 | 111 | 91 |
| 12. இந்தியன் பாங்க் | 1907 | 217 | 80 | 60 |
| 13. பாங்க் ஆஃப் மகாராட்டிரா | 1935 | 153 | 77 | 54 |
| 14. இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் | 1936 | 198 | 68 | 45 |
| | —— | 4130 | 2632 | 1829 |

Dr. R. K. நிகாம் ஆராய்ச்சிக் கட்டுரைப்படி 1963-ம் ஆண்டு 20 பெரிய வங்கிகளின் 188 இயக்குநர்கள் 1452 கூட்டுப் பங்கு கம்பெனியின் இயக்குநர்களாகவும், இவ்வங்கி இயக்குநர் களாகவும். இவ்வங்கி இயக்குணர்களில் 12 சதவிகிதம் பேர் 566 கூட்டும் பங்கு கம்பெனியின் நிருவாகிகளாகவும் இருந்துள் ளனர்.

### 2. பணத்தினைச் சமுதாய விரோதச் செயல்களுக்குப் பயன்படுத்துதல்

தேசிய மயமாக்குமுன் வங்கி இயக்குநர்கள் உதவி கொண்டு பல தொழில்களில் நிறுவனங்களும், வியாபாரிகளும் முக்கிய பொருள்களை முடக்கி வைக்க (hoarding) அதிகமான கடனைப் பெற்றனர். ரிசர்வு வங்கியின் கட்டுப்பாடு இருந்த போதிலும், கடனைப் பொய்யாக வேறு காரணத்திற்கு அளிப்பது போல் பெற்று பொருள்களைமுடக்கி விலை உயர்வுக்குக் காரண மாக சில வணிக வங்கிகள் அமைந்திருந்தன.

### 3. ஐந்தாண்டுத் திட்டங்களும் வங்கிகளும்

அரசாங்கத்தின் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஏற்ற விதத்தில் தங்கள் கடன் கொள்கையை மாற்றி அமைத்து அரசாங்க முயற் சிக்கு ஆக்கம் அளிக்க வணிக வங்கிகள் தவறிவிட்டன. இதற்கு மாருக திட்ட நோக்குக்கு மாறிய நுகர்வோர் தொழிற் சாலைகளுக்கு அதிகமாகக் கடனை கொடுத்து அவசியத்துறைக்கு கடன் வழங்க வங்கிகள் தவறிவிட்டன.

4. கிராமிய பகுதிகளில் தங்கள் கிளைகளைத் திறக்க வணிக வங்கிகள் யாதொரு முயற்சியும் எடுக்கவில்லை. இதற்கு மாருக இலாப நோக்கைக் கருதி நகர்ப்புறங்களில் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் கிளைகளை திறக்கலாயின.

### 5. வங்கிகளும் விவசாயக் கடனும்

விவசாயத்திற்கு தேவையான கடனை அளிப்பதில் வணிக வங்கிகள் யாதொரு அக்கறையும் காட்டவில்லை. இந்தியப் பொருளாதாரத்திற்கு விவசாயம் அச்சாணி. ஆயினும், விவ சாயக் கடன் அளிப்பதில் வணிக வங்கிகள் யாதொரு அக் கறையும் காட்டவில்லை. ஏதோ தாங்கள் விரும்பிய சில தொழில்களுக்குக் கடன் அளிக்க ஏற்பட்ட நிறுவனம் போல் அவைகள் இயங்கிவத்தன.

மார்ச் 1967-ம் ஆண்டு வணிக வங்கிகள் பலதுறைக்கு அளித்துவந்த கடன் சதவீதத்திலிருந்து விவசாயத்துறைக்கு

எந்த அளவு குறைவாகக் கடனை வணிக வங்கிகள் வழங்கி வந்தன என்பதைக் கீழேக் காணலாம்.

| | |
|---|---|
| தொழிற்சாலை | 64.3% |
| வாணிபம் | 19.4% |
| பணவியல் (Finance) | 3.6% |
| விவசாயம் | 2.1% |
| தனிப்பட்டோர் கடன் | 4.2% |
| மற்றவை | 6.4% |
| | 100 |

6. கடன் அளிப்பதில் பாரபட்சம்

வங்கிகள் கடன் அளிக்கும் முறையில் பெரிய அளவில், ரூ. 5 லட்சத்திற்கு மேல் கடன் விண்ணப்பம் செய்துள்ள, பணக்கார வியாபாரிகளுக்கு அளித்துள்ள கடன், வங்கிகள் அளித்த மொத்த கடனில் 70% சதவீதம் ஆகும். இவ்விதம் கடன் வசதி பெற்ற பெரும் செல்வந்தர்கள் வங்கியில் கணக்கு வைத்துள்ள மொத்த வாடிக்கைக்காரர்களில் 1 சதவீதத்திற்கு குறைவானவர்களே.* எனவே, சிறிய சாதாரண நபர்களுக்கும், சிறு தொழிலாளர்களுக்கும் எட்டாத ஒரு விளக்காக வணிக வங்கிகள் அமைந்திருந்தன.

7. நிருவாகிகளும்—பொதுமக்களின் பணமும்

பாங்கித் தொழிலுக்கும், இதர தொழிலுக்குமிடையே ஒரு பெருத்த வேறுபாடு உண்டு. பாங்கிகள் அதன் பங்குதாரர் களுக்குள்ள நிதிப் பணம் மிகவும் அற்ப சொற்பமே. அரசு மேற்கொண்டுள்ள 14 வங்கிகளில் செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும், காப்பு நிதியும் பொதுமக்கள் அவற்றில் வைத் துள்ள வைப்புகளில் 2.4 சதவீதத்திற்கு குறைவாகவே உள்ளது. 1968 டிசம்பர் 31-ம் தேதிய நிலவரப்படி இந்த வங்கிகளில் கிட்டத் தட்ட மொத்தம் ரூ. 2750 கோடி வைப்பு போடப்பட்டிருந்த தற்கு எதிராக, அவற்றின் செலுத்தப்பட்ட மூலதனத்தின் அளவு ரூ. 28.5 கோடி ஆக மட்டிலுமே, அதாவது ஒரு சதவீதத்திற்கு சிறிது அதிகமான அளவிலே இருந்தது.

தேசியமயமாக்குதலின் குறைபாடுகள்

1. தனியார்துறை வங்கிகள் போட்டி போட்டுக்கொண்டு வாடிக்கைக்காரர்களுக்கு அதிக சேவை அளிக்க விரும்பும்.

* Advance of Seheduled Commerical Banks according to Purpose—R. B. I. Bulleton, March 67 Del. 68 P. 150-03.

இதற்கு இலாப நோக்கு ஒரு அடிப்படையாக இருக்கலாம். ஆனால், வங்கிகள் தேசியமயமாக்கப்பட்ட உடன் அது ஒரு அரசு பிரிவுபோல் குறிப்பிட்ட சட்டதிட்டத்தில் நடத்தப்படும் ஒரு நிறுவனமாக இருக்குமேயன்றி வாடிக்கைக்காரர்களின் நல்லெண்ணத்தையும் பெறவேண்டும் என்ற ஆசை ஏதும் இல்லாமல் கீழ் மட்டம் முதல் மேல் மட்டம்வரை இருக்கும் சிப்பந்திகள் தங்கள் கைக் கெடிகாரத்தை நோக்கும் உண்மை ஊழியர்களாகத்தான் இருக்கக் கூடும். பல அரசுத்துறை நிறுவனங்களில் காணப்படும் இக்காட்சிக்கு நாட்டுடமை வங்கி ஒரு தவிர்ப்பாக இருக்க முடியாது.

2. விவசாய, சிறு தொழிலுக்கு வேண்டிய கடனை தனியார் துறை வங்கிகள் அளிக்காததற்குக் காரணம் விருப்பமின்மை அல்ல. இதுபோன்ற கடன்களை அளிக்க கடன் பெறுபவர் கடனைத் திரும்பத்தரும் ஆற்றல் உடையவராக இல்லாத காரணத்தால், வாடிக்கைக்காரர்களின் வைப்பை நட்டவச்சம் (risk) உள்ள துறையில் முதலீடு செய்வது வங்கிக் கோட்பாட்டிற்கு புறம்பானது ஆகும். மேலும், தனியார்துறை இலாப நோக்குடையது உண்மை என்றால் கடன் அளிக்க வாய்ப்பைத் தேடி நிற்குமேயன்றி கடனை மறுக்கும் பணியில் ஈடுபடாது.

3. தனியார்துறை வங்கிகள், அதிக லாபம் எடுத்து, அந்த இலாபம் பங்குதாரர்களுக்கு, குறிப்பாக சில இயக்குநர்களுக்குச் செல்கிறது என்ற வாதத்திலும் குறைபாடு உள்ளது. 1964-ம் ஆண்டு எல்லா இந்திய வணிக வங்கிகள், நாணய மாற்று வங்கிகள் தேசியமயமாக்கப்பட்ட ஸ்டேட் பாங்க், அதன் துணை வங்கிகள் உட்பட பெற்ற இலாபம் ரூ. 34.98 கோடி. இந்த இலாபத்தில் பாதிக்கு மேல் ரூ. 17.96 கோடி அரசாங்கத்திற்கு வரி செலுத்தப்பட்டது. $\frac{1}{4}$ பாகம் இலாபம் காப்பு நிதிக்கும் (ரூ. 3.33 கோடி) சிப்பந்திகளுக்கு போனஸ் (ரூ. 5.25) போக மீதி ரூ. 5.76 கோடி பங்குதாரர்களுக்கு இலாபமாக அளிக்கப்பட்டது. எனவே, பங்குதாரர்கள் பெற்ற இலாபம் மிக அதிகமானது என்ற வாதமும் ஒப்புக்கொள்ள இயலாதவாதமாகிறது.

4. தொழில் சர்வாதீனத்திற்கும், பணசக்தி குவியலுக்கும் (concnetration of money power) அரசாங்கத்தின் தொழில் கொள்கையும், இறக்குமதி லைசென்ஸ் கொள்கையும் காரணமே தவிர வணிக வங்கிகள் பொறுப்பு அல்ல.

5. சில வங்கிகள் நாட்டின் அதிகபட்ச வைப்பைக் கட்டுப்படுத்துவதற்குக் காரணம் இந்தியாவில் பரவியுள்ள கிளை வங்கி

களின் காரணமாக சில வங்கிகள் இப்பெரும் நாட்டின் பல இடங்களில் கிளைகளைக் கொண்டுள்ளதே ஆகும். இதற்கு இயக்குநர்கள் எவ்விதத்திலும் பொறுப்பாளிகள் அல்ல.

6. தேசியமயமாக்குதல் வங்கிகளின் குறைபாடுகளைத் தீர்த்து வைக்கும் அருமருந்து அல்ல. தனியார் துறையில் வங்கிகள் இருப்பினும் அவைகளை மைய வங்கி நன்கு கட்டுப் படுத்தி செயல்படச் செய்ய முடியும்.

**தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளின் சாதனை**

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் வேகமாக வளர்ச்சி பெற்று வருகின்றன. மொத்த வைப்புகளிலும், வங்கிகளின் மொத்தக் கடன்களிலும் 80% சதவீதம் தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளில் கையாளப்படுகின்றது. தேசிய வங்கிகள் வைப்பு அதிகரிப்பில் நல்ல அக்கரை காட்டி வருகின்றது. இவைகளின் வைப்பு ஜூன் 1969-ல் ரூ. 3392 கோடியாக இருந்தது. ஜூன் 1973-ல் ரூ. 7600 கோடியாக உயர்ந்துள்ளது. 4 ஆண்டுகளில் கிட்டத்தட்ட 100 சதவீதத்திற்கு மேல் உயர்த்தியது ஒரு பெரிய சாதனையே. இதற்கு இவ்வங்கிகள் அதிகரித்த கிளைகளும், வைப்பு சேகர முயற்சிகளுமே காரணமாகும்.

தேசிய வங்கிகள் புதிய கிளைகளைத் திறப்பதில், குறிப்பாக கிராமப்புரங்களில் திறப்பதில் மிக உற்சாகம் காட்டியுள்ளன. 1969-ம் ஆண்டு எல்லா வங்கிகளின் கிளைகளையும் சேர்த்து 8262 பாங்க் அலுவலகங்கள் இருந்தன. இவை ஜூன் 1973-ம் ஆண்டு 15,362 ஆக உயர்ந்தன. இதற்கு தேசிய வங்கிகள் பெறும் பொறுப்பாக அமைந்துள்ளன. கிராமப்புரங்களிலிருந்த வங்கி களின் எண்ணிக்கை ஜூன் 1969-ல் 1832-லிருந்து ஜூன் 1973-ல் 5561 ஆக உயர்ந்தது. இது மொத்த வங்கிகளில் 36 2. சதவீதம் ஆகும். இதனை அடுத்துள்ள அட்டவணை 2-லிருந்து காணலாம்

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் அளித்த கடன் தொகை ஜூன் 1969-ல் ரூ. 2954 கோடியிலிருந்து ஜூன் 1973-ல் ரூ. 5406 கோடியாக உயர்ந்துள்ளது. முந்துமைத்துறை (priority sector)க்கு அதிகக் கடன் அளிக்க செய்த முயற்சியால் கடன் கொடுத்த தொகை அதிகரித்துள்ளது. விவசாயத்திற்கு அளித்த நேரடிக் கடன் ஜூன் 1969-ல் ரூ. 40 கோடி அல்லது மொத்தக் கடனில் 1.4 சதவீதத்திலிருத்து ஜூன் 1973-ல் ரு. 285 கோடி அல்லது 5.3 சதவீதமாக உயர்ந்தது.

அட்டவணை-2

## வணிக வங்கிகள் கிளை பரவியுள்ள வகை*

| விவரம் | ஜூன் 1969 | | ஆண்டு முடிய வங்கிக் கிளைகள் எண்ணிக்கை | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | மொத்தத்திற்கு சதவீதம் | ஜூன் 1970 | ஜூன் 1971 | ஜூன் 1972 * | ஜூன் 1973 | மொத்தத்திற்கு சதவீதம் |
| 1. கிராமப்புறம் † | 1832 | 22·4 | 3062 | 4279 | 4814 | 5561 | 36·2 |
| 2. நகர்சார்புறம் (Semi-Urban) | 3322 | 40·1 | 3695 | 4016 | 4385 | 4723 | 30·8 |
| 3. நகர்ப்புறம் | 1447 | 17·5 | 1583 | 1778 | 2323 | 2573 | 16·7 |
| 4. பெரிய நகரங்கள்/துறைமுகப் பட்டினங்கள் | 1661 | 20·0 | 1791 | 1940 | 2100 | 2505 | 16·3 |
| மொத்தம் | 8262 | 100·0 | 10131 | 12013 | 13622 | 15362 | 100·0 |

* 1971-ம் ஆண்டு மக்கள் தொகை கணக்கிற்கு ஏற்ப மாற்றி அமைக்கப்பட்டது.
† கிராமப்புறம்—மக்கள் தொகை 10,000 வரை உள்ள இடங்கள்.
நகர்சார்புறம்—மக்கள் தொகை 10,000-க்குமேல் 1,00,000 வரை உள்ள இடங்கள்.
நகர்புறம்—பெரிய நகரங்கள் 10,00,000-க்குமேல் மற்றவை 1,00,000-க்கும் மேல் 10,00,000-க்குள்.
* Annual Reports R. B. I. 1971–72 and 1972–73.

சிறு தொழிலுக்கு தேசியமயமான வங்கிகள் அளிக்கும் கடன் வசதி மிகவும் உயர்ந்துள்ளது. தேசியமயமாக்கும் போது 51000 சிறு தொழில்களுக்கு ரூ. 251 கோடி, மொத்தக் கடனில் 8.5 சதவீதமே அளிக்கப்பட்டுவந்தது. ஜுன் 1973-ல் ரூ. 642 கோடி, மொத்தத்தில் 11.4 சதவீகிதம், 1,58,000 சிறுதொழில் இருக்கும் கடன் வழங்கப்பட்டன.

தேசியமயமான வங்கிகள் சிறு விற்பன்னர்கள், தொழிலாளி, முதலியோருக்கும் கடன் வழங்குவதில் மிக அக்கரைக் காட்டி, இவர்களுக்கு வேண்டிய முழுக் கடனை அளிக்க வங்கிகளுக்கு சிறப்பு ஆணை விடுத்துள்ளன.

சமுதாயத் தேவையைப் பூர்த்தி செய்து, தொழில் மற்றும் வாணிப வளர்ச்சிக்கு உதவி செய்யும் வண்ணம் தேசியமய மாக்கப்பட்ட வங்கிகள் இயங்கி வருகின்றன. தேசியமயமாக்கி ஐந்து ஆண்டுகளில் கணிசமான முன்னேற்றத்தைக் கண்டுள்ள இவ்வங்கிகள் வருங்காலத்தில் சிறந்த வலிவோடும் பொலி வோடும் செயலாற்றும் என நம்பலாம்.

## பாட நூல்கள்

1. R. S. SAYERS—Modern Banking.
2. Publication of Govt. of India.

# 10. தனியார்துறை வங்கிகள்

14 பெரிய வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டபின் தனியார் துறையில் உள்ள வங்கிகளின் நிலை என்ன? அரசாங்கம் ஏன் எல்லா வங்கிகளையும் தேசியமயமக்காமல் சில வங்கிகளைத் தனியார் துறையிலே விட்டுவைத்துள்ளது? அரசாங்கம் தேசிய மயமாக்குமுன் சில வங்கிகள் தங்கள் செலுத்திய மூலதனத்திற்கு பன்மடங்கு அதிகமான வைப்புக் கொண்டு பணத்தினை கட்டுப்படுத்தின. இவ் வங்கிகளின் இயக்குநர்கள் பல தொழிற்சாலைகளுக்கும் இயக்குநர்களாக இருந்து நாட்டின் பொருளாதாரத்தைத் தாங்கள் வைத்துள்ளனர் என்ற வாதத்திற்கு ஏற்ப ரூ. 50 கோடிக்கு மேல் வைப்புகளை உடைய 14 வங்கிகளை மட்டில் தேசியமயமாக்கினர்கள். எல்லா வங்கிகளையும் தேசியமயமாக்காமல் சில பெரிய வங்கிகளை மட்டில் தேசியமயமாக்கியது அரசாங்கத்தின் விவேகத்தைக் காட்டுகின்றது. தனியார் துறையில் வங்கிகளை இயங்க விட்டிருப்பதால் அரசாங்கம் வங்கிகளை தேசியமயமாக்கிய தற்குக் காரணம் அரசாங்க உடமை ஆக்கவேண்டும் என்ற தத்துவக் கொள்கையில்லை. ஆயின், சில பெரிய வங்கிகள் சமுதாய நலனுக்குப் பயனுள்ளதாக இயங்காததால் அரசாங்கம் வேறு வழியின்றி 14 வங்கிகளை ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது என்பதை மக்கள் தெரிந்து கொள்ள ஒரு வாய்ப்பாக அமைந்தது. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளே மொத்த வைப்பிலும், மொத்த வங்கிக் கடனிலும் 80% பொறுப்பு ஏற்றுள்ளது. எனவே, எல்லா வங்கிகளையும் அரசாங்கம் ஏற்று ஈட்டுத்தொகையும், நிர்வாக இன்னல்களையும் ஏற்காமல் சிறிய வங்கிகளை தனியார் துறையில் விட்டு வைத்துள்ளது. தனியார் துறையில் வங்கிகள் இருந்தால் அரசுத்துறை வங்கிகளின் சாதனைகளை ஒப்பிட்டு நோக்க வாய்ப்பு இருக்கின்றது.

ஜூலை 1-ம்நாள் 1955-ம் ஆண்டு இம்பீரியல் வங்கி, தேசிய உடமை ஆக்கப்பட்டு 'ஸ்டேட் பாங்க்' ஆக மாற்றப்பட்டது. பின்பு நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு ஸ்டேட் பாங்கு எட்டு பெரிய அரசாங்க தொடர்புடைய வங்கிகளை எடுத்துக் கொண்டது. இவற்றில் இரு வங்கிகள் இணைக்கப்பட்டு

இப்போது ஸ்டேட் பாங்கிற்கு 7 துணை வங்கிகள் (subsidiaries) இருக்கின்றன. இந்தியாவில் உள்ள பல சிறிய வங்கிகளை இணைப்பதின் மூலம் 566 வங்கிகளைக் குறைத்து ஜூன் 1971-ல் 86 வங்கிகளாக்கி, இவைகளும் ஆக்கப்பட்டன. (இவைகளில் 7 வங்கிகள் டிசம்பர் 1973-ல் 66 வங்கிகள் பின்பட்டியலில் சேர்க்கப்படாத வங்கிகள்).

இப்போது இந்தியாவில் உள்ள வணிக வங்கிகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

1) ஸ்டேட் பாங்க் அணியில் உள்ள எட்டு வங்கிகள் (இந்தியன் ஸ்டேட் பாங்க் உட்பட).

2) தேசியமயமாக்கப்பட்ட 14 வங்கிகள்.

3) தனியார் துறையில் உள்ள பின்பட்டியலில் சேர்க்கப் பட்ட, சேர்க்கப்படாத வங்கிகள்.

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளின் கிளைகளின் எண்ணிக்கை ஜூன் 30, 1969-ல் 6595-லிருந்து ஜூன் 30, 1974-ல் 13741 ஆக உயர்ந்தது. அதிகமாக உள்ள கிளைகளின் சதவீதம் 110 தனியார் துறையில் உள்ள "மற்றைய பின் பட்டியிலுள்ள வங்கிகளின் கிளைப் பெருக்கம்" இதே காலத்தில் 1320-லிருந்து 2143 ஆக உயர்ந்துள்ளது. அதிகமாக உள்ள கிளைகளின் சதவீதம் 12.3. எனவே கிளைகள் திறப்பதில் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளின் சாதனைக்கு தனியார்துறை வங்கிகள் எவ்விதத்திலும் குறைந்து விடவில்லை என்பதனை அட்டவணை 3-லிருந்து காணலாம்.

வைப்பு திரட்டும் (deposit mobilisation) பணியில் தனியார் துறை வங்கிகள் தொடர்ந்து முன்னேற்றம் காட்டியுள்ளன. ஜூன் 1974-ம் ஆண்டு இவ்வங்கிகளின் வைப்புகள் ரூ. 1701 கோடி. இது எல்லா வங்கிகளின் வைப்புகளில் (ரூ. 10635 கோடியில்) 16 சதவீதம் ஆகும். இச்சதவீதம் டிசம்பர் 1969-ல் 14·8 சதவீதமாகவே சேர்ந்தது. தனியார் துறை வங்கிகள் கிராமப் புறங்களிலும், நகர்சார் புறங்களிலும் வேகமாக கிளைகளைத் திறந்தும், தேசியமயமான வங்கிகளின் போட்டிகளைச் சமாளித்தும் வைப்புகளை அதிகமாகத் திரட்டியுள்ளது.

கடன் அளிப்பதில் தனியார் துறை வங்கிகளின் பங்கு வங்கிகள் அளித்த மொத்தக் கடனில் கிட்டதட்ட

அட்டவணை-3

## வங்கிக் கிளைகள் எண்ணிக்கை *

| விவரம் | ஜூன் 30 1969 | மொத்தத்தில் சதவீதம் | ஜூன் 30 1973 | மொத்தத்தில் சதவீதம் | ஜூன் 30 1974 | மொத்தத்தில் சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| 1. ஸ்டேட் பாங்க் | 1569 | — | 2867 | — | 3072 | — |
| 2. ஸ்டேட் பாங்கின் துணை வங்கிகள் | 893 | — | 1563 | — | 1652 | — |
| 3. தேசியமயமாக்கப்பட்ட 14 வங்கிகள் | 4133 | — | 8109 | — | 9017 | — |
| | 6595 | 79·8 | 12539 | 81·6 | 13741 | 81·1 |
| 4. மற்றைய பின் பட்டியலில் கண்டுள்ள இந்திய வணிக வங்கிகள் | 1320 | 16·0 | 2580 | 16·8 | 2943 | 17·4 |
| 5. நாணய மாற்று வங்கிகள் | 130 | — | 130 | — | 130 | — |
| 6. எல்லா ம. ப. கண்டுள்ள வங்கிகள் | 8045 | — | 15249 | — | 16814 | — |
| 7. ம. ப. காணப்படாத வணிக வங்கிகள் | 217 | — | 113 | — | 122 | — |
| 8. எல்லா வணிக வங்கிகள் | 8262 | — | 15362 | — | 16936 | — |

*Private sector Banks—K. Gopala Rao-Commerce 1974 Annual-P. 119

15 சதவீதமாக நிரந்தரமாக ஜூன் 1969-லிருந்து ஜூன் 1974 வரை அமைந்துள்ளது. ஜூன் 1973-ல் வங்கிகள் அளித்த மொத்தக்கடன் ரூ. 6916.1 கோடி. இவற்றில் தனியார் துறை வங்கிகள் மட்டில் ரூ. 1064.9 கோடி கடன் வழங்கியுள்ளது. இதுபற்றி அட்டவணை 4-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

முந்துமைத் துறைக்கு தனியார் துறை வணிக வங்கிகள் அளித்த கடன் 1969-ல் ரூ. 67 கோடியிலிருந்து 1973-ல் ரூ. 193 கோடியாக உயர்ந்தது. மும்மடங்கிற்கு மேல் பெருகியுள்ளது. எல்லா வணிக வங்கிகளும் முந்துமைத் துறைக்கு அளித்துள்ள கடன் இதே காலத்தில் ரூ. 505 கோடியிலிருந்து ரூ. 1560 கோடி ஆக (மூன்று மடங்கு) உயர்ந்தது.

தனியார் துறை வணிக வங்கிகள் தொடர்ந்து முன்னேறி வருகின்றன என்பதை மேலே கண்டுள்ள இவ் வங்கிகளின் சாதனைகளிலிருந்து அறியலாம். தனியார்துறை வங்கிகள் பெரிய தேசியமயமாக்கப்பட்டுள்ள வங்கிகளின் போட்டியைச் சமாளிக்க வேண்டுமென்றால் தங்களுடைய செயல் திறனை அதிகப்படுத்தி, வாடிக்கைக்காரர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி, அரசாங்கத்தின் ஆக்கப் பணிகளுக்கு உதவி செய்யும் வண்ணம் தங்கள் கடன் கொள்கைகளை அமைத்துக் கொள்ள வேண்டும். இன்னும் சில தனியார் துறை வங்கிகளுக்கு பொதுமக்களிடம் நல்ல மதிப்பு இருக்கின்றது. இவைகள் தொடர்ந்து முன்னேற வாய்ப்புகள் இருக்கின்றன.

பல தனியார் துறை வங்கிகள் தகுதி வாய்ந்த சிப்பந்திகளை வேலையில் எடுத்துக் கொள்வதில்லை. இதனால் சராசரிக்கு கீழே உள்ள பலர் வேலைக்கு அமர்ந்து கொண்டு வங்கியின் திறமையைக் குறைத்து விடுகிறார்கள். இயக்குநர்களின் உறவினர்கள், நண்பர்கள் எனக் கருதாது அறிவும், ஆற்றலும் மிக்க இளைஞர்களையே வேலைக்கு அமர்த்த வேண்டும்.

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள், மிகப் பெரிய வங்கிகள். எனவே, சிவப்பு நாடாவுக்கு அதிக வாய்ப்பு. இதை உணர்ந்து தனியார் துறை வங்கிகள் காலதாமதத்தை நீக்கி பொது மக்களுக்கும். வாடிக்கைக்காரர்களுக்கும் உடனடி சேவை செய்ய வேண்டும். அவர்களிடம் நேரடித் தொடர்பு, அவர்கள் வங்கிக்கு வந்தால் உடனடியாக அவர்களுடைய காசோலைப் பணம் அளித்தல் அல்லது அவர்கள் தேவையை உடனடி யாகப் பூர்த்தி செய்தல், காசோலையை வசூல் செய்ய கால

அட்டவணை–4

வைப்புகள்- கடன் பற்றிய விவரம்

ரூ. கோடியில்

| விவரம் | ஜூன் 1969 | டிசம்பர் 1969 | டிசம்பர் 1970 | டிசம்பர் 1971 | டிசம்பர் 1972 | டிசம்பர் 1973 | டிசம்பர் 1974 |
|---|---|---|---|---|---|---|---|
| வைப்புகள் : | | | | | | | |
| தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் | 3872 | 4862·80 | 4772 | 5742·10 | 6825·50 | 8338·4 | 8934 |
| தனியார் துறை வங்கிகள் | 774 | 711·50 | 823·20 | 1061·20 | 1263·60 | 1538·2 | 1701 |
| | 4646 | 4794·30 | 5595·20 | 6803·30 | 8088·80 | 9926·6 | 10635 |
| மொத்த வைப்பில் சதவீதம் தேசியமயம் | 83·3 | 85·2 | 85·3 | 84·4 | 84·4 | 84·5 | 84·0 |
| தனியார் துறை | 16·7 | 14·8 | 14·7 | 15·6 | 15.6 | 15·5 | 16·0 |

அட்டவணை-4 (தொடர்ச்சி)

ரூ. கோடியில்

| | ஜூன் 1969 | டிசம்பர் 1969 | டிசம்பர் 1970 | டிசம்பர் 1971 | டிசம்பர் 1972 | டிசம்பர் 1973 |
|---|---|---|---|---|---|---|
| கடன் : | | | | | | |
| தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் | 3017 | 2987·8 | 3743·90 | 4172·20 | 4500·4 | 5581·2 |
| தனியார் துறை வங்கிகள் | 582 | 541·5 | 635·80 | 753·90 | 827·6 | 1064·9 |
| | 3599 | 3529·3 | 4379·70 | 4926·10 | 5328·0 | 6916·1 |
| மொத்தக் கடனில் சதவீதம் தேசிய மயம் | 83·8 | 84·7 | 85·5 | 84·7 | 84·5 | 84·6 |
| தனியார் துறை | 16·2 | 15·3 | 4·5 | 15·3 | 15·5 | 15·4 |

தாமதம் தவிர்த்தல், கடன் மனுவை சீக்கிரம் பரிசீலித்தல் ஆகியவைகள் மிக அவசியம். தனியார் துறை வங்கிகள் இந்த வகையில் சிறப்பு எய்தினுல் வாடிக்கைக்காரர்களின் நன் மதிப்பைப் பெற்று மேலும் முன்னேற வாய்ப்புகள் அதிகம் இருக்கின்றன.

## பாட நூல்கள்

1. R. S. SAYERS—Modern Banking.

2. S.R. BASU—A Review of Current Banking Theory and Practice.

# 11. வைப்புத் திரட்டு

## (Deposit Mobilisation)

கடந்த சில ஆண்டுகளாக, குறிப்பாக வங்கிகள் தேசிய மயமாக்கப்பட்டபின் வைப்புகளைத் திரட்டுவதில் அதிக அக்கறை காட்டியுள்ளன. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு சேமிப்பு மிக அவசியம். சேமிப்பு இருந்தால்தான் பல தொழில்களுக்கும் வேண்டிய நிதி உதவி அளித்து, முதலீடு செய்து தொழில் பெருக்கத்திற்கு வழி செய்யலாம். தொழில் பெருக்கம் பலருக்கு வேலை வாய்ப்பும், அதிக ஊதியமும் அளிக்க வல்லது. தனிப்பட்ட நபர்கள் சேமிப்பை பெரும் அளவில் முதலீடு செய்ய முடியாது. குறிப்பாக சிறிய தொகை சேமித்து வைத்துள்ளவர்கள் முதலீடு செய்ய வாய்ப்பு ஏதும் இல்லை. சிலர் சேமிக்கக்கூடிய வருவாய் இருந்தும், சேமிக்காமல் தங்கள் நலனுக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் பயன் இல்லாமல் வீண் செய்கின்றனர். சாதாரண வருவாய் உள்ளவர்கள் கூட சிறிதளவு சேமிப்புச் செய்ய முடியும். பழங்காலத்தில் பலர் சேமிப்பு செய்து யாருக்கும் பயன் இல்லாமல் புதைத்து வைத்து பணம் அழிந்து போக வழி செய்கின்றனர். சேமிப்பில் வணிக வங்கிகளுக்குப் பெரும் பங்கு உண்டு. வைப்புகளைச் சேகரித்து பயனுள்ள தொழில்களுக்கு கடன் கொடுக்க வங்கிகள் உதவ வேண்டும். இந்தியாவில் வணிக வங்கிகள் நெடுங்காலம் வரை வைப்பு சேகரிக்க யாதொரு பெரிய முயற்சியும் செய்யவில்லை. யாரேனும் வைப்புகளைப் போட்டால் பெற்றுக் கொள்வது, தகுதி உடைய எவரேனும் கேட்டால் கடன் கொடுப்பது என்ற நிலையில் தங்கள் தொழில்களைச் செய்து வந்தன.

வங்கிகள் அதிக வைப்புகளைப் பெற அதிகமான சாத்தியக் கூறு இந்தியாவில் உள்ளது. சில ஆண்டுகளாக கிராமப் புறங்களில் ஏற்பட்டுள்ள "பசுமைப் புரட்சி" காரணமாக விவசாய வருமானம் அதிகமாக உயர்ந்துள்ளது. சில பெருநிலக்கிழார்களுக்கு அதிகக் கண்டுமுதல் காரணமாக மிக அதிக வருவாய் கிடைக்கின்றது. இதையும் அன்னியில் கிராமப்புறத்தில் "புதிய செல்வந்தர்" (new rich) என்ற தலைமுறை தோன்றியுள்ளது.

இவர்களிடமிருந்து அதிகமான வைப்புகளைப் பெறலாம். இது வரை கிராமப்புறங்களில் அதிகமான வணிக வங்கிகளின் கிளைகள் இல்லாததால் அவ்விடங்களிலிருந்து வைப்புகளைப் பெற இயலவில்லை. ஆயினும், இப்போது கிளைப்பெருக்கத்தின் காரணமாக கிராமங்களிலும் அதிக வங்கிகள் தோற்றுவிக்கப் பட்டுள்ளன. சிறிய விவசாயிகளின் வருவாயும் கணிசமாக உயர்ந்துள்ளது. நகர்ப்புறங்களில் சிறு தொழில்களின் முன் னேற்றம் காரணமாக தொழிலாளிகள், விற்பன்னர்கள் ஆகி யோரும் சிறிதளவேனும் சேமிக்கக்கூடும். நிரந்தர வருமானம் உள்ள அரசாங்க அலுவலர்கள், ஆசிரியர்கள், பொறியாளர்கள் மற்றும் வக்கீல், வைத்தியர், ஓய்வு பெற்று உதவித்தொகை பெறுவோர்கள் ஆகியோரிடமிருந்து சேமிப்பை எதிர்பார்க்க லாம். விலைவாசி உயர்வின் காரணமாக வருவாயில் சேமிப்பு என்பது நடுத்தரக் குடும்பங்களில் கடினமான காரியம் ஆனாலும், சேமிக்கவேண்டும். சிறிதளவேனும் சேமிக்க வேண்டும் என்ற எண்ணம் எல்லோரிடமும் இருக்கும். இவ் வெண்ணத்தைப் பயன்படுத்தி பல நல்ல திட்டங்களைக் காட்டி வணிக வங்கிகள் வைப்புகளைப் பெருக்கலாம். ஆயுள் காப்பு முகவரின் (Life Insurance Agent) வற்புறுத்தலுக்கு இசைந்து ஆயுள் காப்பு எடுத்துக்கொண்டு பயன் பெறுபவர்கள் பலர் ஆவர். இதே போல் வங்கிகள் தொடர்ந்து பொதுமக்களிடம் தொடர்பு கொண்டால் வைப்பு அதிகரிக்கும். "சிறு துளி பெரு வெள்ளம்" என்னும் பழமொழி வைப்பு சேகரித்தலுக்காகவே ஏற்படுத்தப்பட்டது போல் தோன்றுகிறது. இந்தியா போன்ற பெரிய நாட்டில் பலரிடமிருந்து சிறு தொகையை பெற்றால் இது பலகோடி ரூபாயாக ஆகிவிடும். ஆயினும், வைப்புகள் பெறுதல் ஒரு கடினமான காரியம்தான். வணிக வங்கிகள் மட்டில் அல் லாமல் பல நிறுவனங்கள், குறிப்பாகப் பல தொழில் நிறு வனங்கள் போட்டி போட்டுக்கொண்டு வைப்புகளைப் பெரும் முயற்சியில் அதிக வட்டி அளிக்கின்றது. தினத்தாள்களில் பெரிய கூட்டுப்பங்கு கம்பெனிகள் நிரந்தர வைப்பு கோரி அதிக வட்டி கொடுப்பதாக பெரிய விளம்பரங்கள் செய் கின்றன. மேலும், சிறு சேமிப்பு நிறுவனம், தபால் சேமிப்பு கணக்கு மூலம் அரசாங்கம் சேமிப்பைத் திரட்டுகின்றது. இத் துணை போட்டிகளுக்கு நடுவே வணிக வங்கிகள் வைப்புகளைப் பெற வேண்டியுள்ளது.

வைப்பு வைக்க ஊக்கமளிக்கக்கூடிய சில மனித உணர்ச் சிகள் (1) சொந்த வீடு வைத்துக்கொள்ள (2) குழந்தைகளின் மேல் படிப்புக்கும் (3) ஓய்வு பெற்றபின் பணம் பெற (4) மருத் துவம் போன்ற உடனடிச் செலவுக்கு வகை செய்ய ஆகியவை

ஆகும். இது போன்ற எண்ணங்களுக்கு ஆக்கம் கொடுக்கும் வகையில் வைப்பு ஈர்க்கும் திட்டம் அமைய வேண்டும்.

எல்லா வங்கிகளின் வைப்பும் 1951-ம் ஆண்டு இருந்த ரூ. 835 கோடியிலிருந்து மார்ச் 1971-ம் ஆண்டு ரூ. 5896 கோடி ஆகவும், ஜூன் 1974-ம் ஆண்டு ரூ. 10,635 கோடியாகவும் உயர்ந்தது. 1971-ம் ஆண்டிலிருந்து 1974-ம் ஆண்டுவரை கிட்டத் தட்ட 100% உயர்ந்துள்ளது. மொத்த பணப் புழக்கத்திற்கு (வைப்புகள்+புழக்கத்திலுள்ள பணம்) வைப்புகளின் சதவீதம் 1951-ம் ஆண்டு 37·3லிருந்து 1971-ம் ஆண்டு 55·7 ஆக உயர்ந்தது. ஒவ்வொரு வங்கிக் கிளையின் சராசரி வைப்பு 1951-ல் ரூ. 37 லட்சத்திலிருந்து 1971-ம் ஆண்டு ரூ. 51 லட்சமாக உயர்ந்தது.

### பலவித வைப்புத் திட்டங்கள்

வெகு காலமாக வணிக வங்கிகள் பொது மக்களிடமிருந்து பெற்று வந்த வைப்புகள் 1. நடைமுறை வைப்பு, 2. சேமிப்பு வைப்பு, 3. தவணை வைப்பு, 4. மீள் தவணை வைப்பு ஆகும். இவைகளைத் தவிர வேறு சில:—

### ரொக்கச் சான்றிதழ்

ரொக்கச் சான்றிதழ் என்பது வைப்புத் தவணை போல் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின் பணம் பெற்றுக்கொள்ளலாம். முதிர்வுக்கு முன் பணமும் பெற்றுக் கொள்ளலாம். ஆனால், காலத்தைப்பொறுத்து வட்டியில் தள்ளுபடி செய்யப்பட்டு மீதிப் பணத்தைப் பெறலாம். ஐந்து ஆண்டு ரொக்கச் சான்றிதழ் வாங்கினால் குறைந்தது ஒரு ஆண்டுக்குள் திரும்பப் பணம் பெற முடியாது. இதற்குமேல் ஒவ்வொரு 3 மாதங்களுக்கும் குறிப்பிட்ட வட்டித் தொகை இருக்கும். எப்போது திருப்பு கிறோமோ அப்போது உள்ள வட்டியும், முதலையும் பெற்றுக் கொள்ளலாம். சில வணிக வங்கிகள் மட்டும் அல்லாமல் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கிகளும் இவ்வித ரொக்கச் சான்றிதழ்களை வெளியிட்டுள்ளன.

### தினசரி சேமிப்புத் திட்டம்

தினந்தோறும் சாதாரண வருவாய் உள்ள கூலிகள், தொழிலாளிகள் குறிப்பிட்ட சிறிய தொகையைக் கட்டலாம். சிண்டிகேட் பாங்க் இத்திட்டத்திற்கு முன்னோடியாக உள்ளது.

### வயது வராதவர்கள் (Minors) சேமிப்புத் திட்டம்

இத்திட்டம் சிறுவர்களை சேமிப்பில் ஈடுபடுத்த ஏற்பட்டுள்ளது. அவர்கள் கணக்கை அரம்பித்து, தேவைப்பட்ட போது காசோலை விடுத்துத் திரும்ப பெறலாம். ஸ்டேட் பாங்க் இத்திட்டத்தை சிறப்பாக செயல்படுத்தி வருகிறது.

### பெண்கள் பிரிவு

பெண்களை மட்டுமே அலுவலர்களாகக் கொண்ட கிளைகளை சில வங்கிகள் திறந்துள்ளன. இக்கிளைக்கு பெண்கள் தாராளமாகச் சென்று கணக்குகளை வைத்துக்கொள்ள வாய்ப்பு அளிக்கின்றது.

### புதிய வைப்புத் திட்டங்கள்

### மாத வட்டி வருமானத் திட்டம்

வட்டி, மாதந்தோறும் வட்டிகளின் பேரில் அளிக்கும் திட்டம். இத்திட்டத்தின்படி வட்டியை ரொக்கமாகவோ அல்லது வாடிக்கைக்காரரின் சேமிப்பு கணக்கில் வரவாகவோ கொடுக்கப்படலாம்.

### ஓய்வு காலத் திட்டம்

குறிப்பிட்ட ஒரு தொகையினை மாதந்தோறும் கட்டி வந்தால் அக்காலம் முடிந்தபின் மாதந்தோறும் இரண்டு மடங்கோ அல்லது மூன்று மடங்கோ, மாதாமாதம், கட்டிய பணத்தையும், காலத்தையும் பொறுத்துத் திருப்பி அளிக்கப்படும்.

### விவசாயிகள் வைப்புத் திட்டம்

விவசாயிகள் அறுவடையாயின பிறகு ஆண்டுக்கு ஒரு முறையோ, இரு முறையோ வைப்பில் செலுத்தி மாதந்தோறும் பத்தில் ஒரு பங்கை திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

### காப்பீட்டுடன் இணைக்கப்பட்ட சேமிப்பு வங்கிக் கணக்கு

தனது கணக்கில் குறிப்பிட்ட ஒரு குறைந்த அளவு இருப்பு வைத்திருக்க ஒப்புக்கொள்ளும் 18 வயதிற்கு மேலும், 49 வயது ஆகாத ஆண்களும், தனிப்பட்ட முறையில் ஊதியம், தொழில் வருவாய், வாடகை பெறும் மேற்கண்ட வயதிற்குட்பட்ட பெண்களும் இத்திட்டத்தின் கீழ் கணக்கு வைத்துக் கொள்ளலாம். கிராமப்புறத்தில், மக்கள் தொகை 10,000க்குக்

குறைவாக உள்ள இடங்களில் கணக்கு வைத்திருப்பவர்கள் குறைந்தது ரூ. 500 கிடைக்கும் வைப்பும், மற்ற இடங்களில் குறைந்தது ரூ. 1,000 வட்டி கிடைக்கும் வைப்பும் வைத்திருக்க வேண்டும்.

கணக்கு வைத்திருப்பவர் 40 வயது அடையுமுன் திடீரென இறந்துவிட்டால் ரூ. 10,000க்கு மிகாமலும், இதற்குமுன் அரை யாண்டுக் கணக்கு காலத்தில் வைத்திருந்த வைப்பில் இருமடங் குத் தொகை அளிக்கப்படும். இறந்தவரின் வயது 41க்கு மேலிருப்பின் ரூ. 5,000க்கு மிகாமலும் இதற்குமுன் அரையாண் டில் இருந்த வைப்புத் தொகைக்குச் சமமான தொகை அளிக்கப்படும்.

### வீடு கட்ட வைப்புத் திட்டம்

சொந்த வீடு வாங்க, வீடுகட்ட, வசதி அளிக்கும் வைப்பு. மாதந்தோறும் குறிப்பிட்ட தொகை வைப்பாக செலுத்த வேண்டும். காலம் முடிந்தவுடன் இரண்டு மடங்குப் பணம் குறைந்த வட்டியில் வங்கியிடமிருந்துப் பெறலாம்.

### மறுமுதலீட்டுத் திட்டம் (Reinvestment Plan)

தவணை வைப்பில் வைத்திருக்கும் பணத்தை ஒவ்வொரு ஆறுமாதம் அல்லது ஓராண்டில் திரும்பத் திரும்ப முதலீடு செய்து அதிக வட்டியுடன் குறிப்பிட்ட காலத்திற்குப்பின் வங்கி பணம் அளிக்கும். திருமகள் திருமணத் திட்டம், முத்துக்குவியல் திட்டம் என்ற பெயரில் 10 அல்லது 20 ஆண்டுகளுக்குப் பிறகு திருமணம், கல்விக்குப் பயன்படும் திட்டம் இவ்வகையாகும்.

### சான்றிதழ் பரிசுத் திட்டம்

பாங்க் ஆஃப் மதுரை, தனியார்துறை வங்கி, ரூ. 50,000க்கு சான்றிதழ் வெளியிட்டு 10 ஆண்டுகளுக்குப்பின் இரட்டிப்புப் பணமாகத் தருகின்றது. மாதந்தோறும் இத்திட்டத்தில் சேர்ந் துள்ளோர்களின் சான்றிதழ் எண்களைக் குலுக்கி, பல பரிசுகளை வழங்குகின்றது.

ஒவ்வொரு வங்கியும் வைப்புத் திரட்டு மாதம் ஒன்றை நடத்தி, அம்மாதத்தில் கணக்குத் துவங்கியுள்ளோருக்கு என, சில சிறப்புப் பரிசுகள் வழங்குகின்றன. மேலும் தவணை

வைப்பு ஆரம்பிப்பவர்களுக்கு கைப்பை, டார்ச் விளக்கு, போன்ற பரிசுகளும் வழங்குகின்றன.

வணிக வங்கிகள் நல்ல முயற்சி எடுத்து புதுப்புது வைப்புத் திட்டங்களை ஏற்படுத்துவதோடு, அதிக முயற்சி எடுத்து எல்லோரையும் சந்தித்து சேமிப்பைப் பெருக்க வேண்டும். இதனால் தனிப்பட்ட நபர்கள் நன்மை பெறுவதோடு தொழில் வளர்ச்சிக்கும் பயன் ஏற்படும்.

## பாட நூல்கள்

1. Report of the Banking Commission, 1972.
2. R. S. Sayers—Modern Banking.

# 12. கிளைப் பெருக்கம்

வணிக வங்கிகள் தங்கள் கிளைகளைப் பெருக்க கிராமங்கள், நகர்சார்புறங்களுக்குச் செல்ல வேண்டும். கிராமப்புறங்களில் கிளைகளை ஏற்படுத்துவதன்மூலம் வணிக வங்கிகள் விவசாயிகளுக்கு அதிகக் கடன்வசதி அளித்து வேளாண்மையைப் பெருக்குவதற்கு மிகவும் உதவி செய்ய முடியும். கிராமிய வங்கி விசாரணைக் குழு, 1950–ல் (Rural Banking enquiry Committee) இம்பீரியல் வங்கி, தாலுக்கா தலைநகரங்களில் ஒரு கிளையை ஏற்படுத்த வேண்டும் என்று சிபாரிசு செய்தது. இதற்கு இணங்கி ரிசர்வு வங்கியின் இசைவு பெற்று ஜுலை 1, 1951-ல் இருந்து ஐந்து ஆண்டுகளில் 114 கிளைகளை திறக்க இசைந்தது. ஆயினும், இவற்றுல் 63 கிளைகளைத்தான் திறக்க முடிந்தது. 1955–ல் ஸ்டேட் பாங்கு தேசியமயமாக்கியவுடன், ஐந்து ஆண்டுகளில் 400 கிளைகளை ஏற்படுத்த இசைந்து, குறிப்பிட்ட காலத்திற்குள் இப்பணியினை முடித்தது.

1951-ம் ஆண்டு முடிவுவரை 4151 வங்கிக் கிளைகள் இருந்தன. இவைகளில் 2647, பின் பட்டியலில் கண்ட வங்கிகள் எஞ்சிய 1504 பின் பட்டியலில் காணப்படாத வங்கிகள்.

1956-ம் ஆண்டுவரை ரிசர்வு வங்கி புதிய கிளைகளை திறப்பதில் நிதானக் கொள்கையையே மேற்கொண்டிருந்தது. 1956க்குப்பின் ரிசர்வு வங்கி தாராளக் கொள்கையை மேற்கொள்ள ஆரம்பித்தது. ஜுலை 1959 முதல் சிறிய வணிக வங்கிகள்கூட கிளைகளைத் திறக்க ரிசர்வு வங்கி அனுமதி வழங்க ஆரம்பித்தது. ஆயினும், 1960–ம் ஆண்டு பலாய் மத்திய வங்கி (Palai Central Bank) லக்ஷ்மி வங்கி(Lakshmi Bank) ஆகிய இரு பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் முறிவு (failure) அடைந்தவுடன் ரிசர்வு வங்கி சிறிய வங்கிகளை இணைக்கும் பணியில் ஈடுபட்டு பெரிய வங்கிகளுக்கு மட்டில் கிளைகளைத் திறக்க அனுமதி அளிக்க ஆரம்பித்தது.

வணிக வங்கிகளின் கிளைகள் 1961–ம் ஆண்டு 5111 ஆகி இருந்தது. 1969–ல் 826 ஆகவும் 1974–ல் 16936 ஆகவும்

உயர்ந்தது. 1962-ம் ஆண்டு ரிசர்வு வங்கி, இந்நாட்டிலுள்ள வணிக வங்கிகளை மூன்று வகைகளாகப்பிரித்தது. அவையாவன: 1. அகில இந்திய வங்கிகள். 2. பெரிய, மாநில வங்கிகள் (Big Regional Banks). 3. சிறிய, மாநில வங்கிகள் (Small Regional Banks )

ஒவ்வொரு வகையான வங்கிக்கும் எத்துணை புதிய கிளை களைத் திறக்க அனுமதிப்பது என்பதினை முடிவு செய்து, வங்கிகள் தங்கள் அடுத்த 3 ஆண்டுகளுக்கு கிளைப்பெருக்கப் பட்டியலை ரிசர்வு வங்கி பெற்று, எவ்வெவ்விடங்களில் கிளைகள் தேவையோ, அங்குமட்டிலும் கிளைகளைத் திறக்க அனுமதி வழங்கியது.

1965-லிருந்து 1967-ம் ஆண்டுவரை இரண்டாவது கட்டத்தில் கிளைப் பெருக்கம் செய்யப்பட்டு இவ்விரு ஆண்டுகளில் 610 வங்கிக் கிளைகள் திறக்கப்பட்டன. இவற்றில் 219 கிளைகள் வேறு வங்கி ஏதும் இல்லாத இடங்களில திறக்கப்பட்டது.

மூன்றுவது கட்டமாக, வங்கிகள் மீது சமுதாயக் காட்டுப் பாடு கொண்டுவந்தவுடன் தேசியக் கடன் குழுவின் சிபாரிசின் பேரில் கிளைப் பெருக்கம் இன்னும் விரிவாக்கப்பட்டது. ஆகஸ்ட் 1967 முதல் டிசம்பர் 1970 வரை கிராமிய, நகர்சார் புறங்களில் அதிகக் கிளைகள் திறக்கும் முயற்சியில் வங்கிகள் ஈடுபடுத்தப்பட்டன. இரண்டாம் கட்டத்தில் திறந்த கிளை களைக் காட்டிலும் $\frac{1}{3}$ பங்கு அதிக கிளைகளைத் திறக்க வங்கிகள் ஊக்குவிக்கப்பட்டன. திறக்கும் புதிய கிளைகளில் குறைந்தது 50% கிராமபுறத்திலும், 50% வேறு வங்கிகள் இல்லாத இடங் களாகவும் இருக்க வேண்டும்.

இம்மூன்று கட்டங்களிலும் ஸ்டேட் பாங்க் 920 கிளைகளைத் திறந்தது. இவைகளில் 36% கிராமப்புறத்திலும், 64% நகர்சார் புறங்களிலும் திறக்கப்பட்டன. இத் திட்டங்களைத் தவிர்த்து 203 கிளைகளையும் ஸ்டேட் பாங்க் திறந்தது. இவைகள் பெரிய நகரங்களிலும், திட்டம் நிறைவேற்றும் இடங்களிலும் திறக்கப் பட்டன.

ஜுலை 19, 1969-ல் 14 வங்கிகள் தேசியமயமாக்கப்படும் போது அவ்வணிக வங்கிகளுக்கு 8284 கிளைகள் இருந்தன. இவற்றில் 22.4% கிராமங்களிலும், 40% நகர்சார்புறங்களிலும், 37·6 பெரிய நகரங்களிலும், துறைமுகங்களிலும் இருந்தன.

தேசியமயமான பின்னும் 1970-ம் ஆண்டு முதன்மை வங்கித் திட்டம் (Lead Bank Scheme) ஆரம்பித்த பின்னும் கிளைப் பெருக்கம் அதிகரித்துள்ளது. ஜூன் 1974-ல் 16,936 வங்கிக் கிளைகள் இருந்தன.

1969-ம் ஆண்டு வங்கிகள் மீது சமுதாயக் கட்டுப்பாடு கொண்டு வந்தவுடன் அமைக்கப்பட்ட தேசியக் கடன் குழு வங்கிகள் நிருவாக நிலையையும் சமுதாய பூர்த்தி செய்யவும் ஒரு ஆய்வுக் குழுவை ஏற்படுத்தியது. (The study group on organisational frame work for the implementation of social objectives). இவ்வாய்வுக் குழுவின் பெருந்தலைவராக பேராசிரியர் D. R. கேட்கில் நியமிக்கப்பட்டார். இக்குழு ஒவ்வொரு வங்கியும் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் விரிவுபடுத்தி, தங்கள் கிளைகளைப் பெருக்கம் செய்தல் வேண்டும் என்ற சிபாரிசு செய்தது. இம் முறையின் ஒவ்வொரு குறிப்பிட்ட மாவட்டத்திற்கு ஒரு வணிக வங்கியை "முன்னோடி வங்கியாக" அமைக்கலாம். இவ்வங்கி தன் விரிவுக்குள் அடங்கிய இடங்களில் எங்கெங்கு கிளைகள் இல்லையோ, அங்கே கிளைப் பெருக்கம் செய்யலாம். இம்முறையில் இவ்விடங்களில் அதிக வைப்புகளைப் பெருவதோடு மட்டும் இல்லாமல் அதிகக் கடன் அளிக்கும் பணியிலும் இம் "முன்னோடி வங்கி" ஈடுபடலாம் என்ற கருத்தினை வெளியிட்டது. ரிசர்வு வங்கி அமைத்த ஒரு குழுவின் தலைவர் F. K. F. நரிமன் என்பவரும் இக்கருத்தினை சிறந்ததாகக் கருதவே முதன்மை வங்கித் திட்டம் அமுல் செய்யப்பட்டது.

ஸ்டேட் பாங்க், அதன் துணை வங்கிகள், தேசியமயமாக்கப்பட்ட 14 வங்கிகள், தனியார்துறை வங்கிகள் இரண்டு (ஆந்திரா வங்கி, பாங்க் ஆஃப் ராஜஸ்தான்), ஆகிய வங்கிகள் முன்னோடி வங்கிகளாகப் பணியாற்ற ரிசர்வு வங்கியால் அனுமதிக்கப்பட்டு, 336 மாவட்டங்களில் (பெரு நகரங்களான பம்பாய், கல்கத்தா, சென்னை, சந்திகார், டில்லி, கோவா தவிர) மற்ற இடங்களில் இத்திட்டம் செயல்பட ஆரம்பித்தது. ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு முதன்மை வங்கி நியமிக்கப்பட்டது. இவ்வங்கி அம் மாவட்டத்தின், பொருளாதார, தொழில் நிலையை ஆய்வு செய்து, கடன் தேவையுள்ள துறைகள் எவை, அவற்றில் எத்துறைகளுக்குக் கடன் கிடைக்கவில்லை, என்பதைக் கணக்கிட்டு மற்ற வணிக வங்கிகளுக்கும் கூட்டுறவு வங்கிகளுக்கும் ஒருங்கிணைப்பை ஏற்படுத்தி, விவசாயம், சிறு தொழில் போன்றவைகளுக்கு மாவட்டத்தில் உள்ள கூட்டுறவுச்

சங்கங்களும், வணிக வங்கிகளும் கடன் கொடுக்க இயலாத நிலையில் முன்னோடி வங்கி தானே தன் கிளையைத் திறந்து நேரடிக் கடனுக்கு வழிசெய்யும்.

**முன்னோடி வங்கித் திட்டத்தின் நன்மைகள்**

1. முன்னோடி வங்கி மாவட்டத்திலுள்ள வங்கிகளின் போட்டி மனப்பான்மையை மாற்றும்.

2. வணிக மற்றும் கூட்டுறவு வங்கிகளிடம் ஒருங்கிணைப்பு ஏற்படுத்தும்.

3. கிளைப் பெருக்கத்திற்கு வகை செய்ய உதவும்.

4. ஒரே இடத்தில் பல வங்கிகள் கிளைகளை ஏற்படுத்துவதை தவிர்த்து, வங்கியில்லாத புதிய இடங்களில் கிளை திறக்க வகை செய்யும்.

5. பொருளாதார ஆய்வு நடத்தி எத்துறைக்குக் கடன் அளிக்க வேண்டும் என்று வணிக வங்கிகளுக்கு அறிவுரை அளித்து கடன் கொடுக்க வழி செய்யும்.

முன்னோடி வங்கித் திட்டத்தில் இந்த நன்மைகள் இருந்தாலும், இத்திட்டம் மட்டிலுமே பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்த முடியாது. தொழில், விவசாயம் போன்றவைகளுக்கு அரசு முழு ஆதரவு அளித்துப் பெருக்கினாலன்றி கடன் அளிக்கும் திட்டம் மட்டும் பொருளாதார மாற்றத்தை ஏற்படுத்த இயலாது.

## பாட நூல்

1. Report of the Banking Commission, 1972.
2. S. K. Basu—A Review of Current Banking Theory and Practice.

# 13. மைய வங்கி

## (Central Bank)

ஒவ்வொரு நாட்டிலும் பல வணிக வங்கிகள் இருக்கும். ஆயினும், ஒவ்வொரு நாட்டிலும் ஒரு மைய வங்கிதான் இருக்கும். இக்கொள்கைக்கு அமெரிக்கா ஒரு விதி விலக்கு. அமெரிக்க நாட்டில் 12 மைய வங்கிகள் இருக்கின்றன. இவைகளுக்கு பெடரல் ரிசர்வு வங்கிகள் என்று பெயர். ஒரே மைய வங்கியை பணத்தினைக் கட்டுப்படுத்தும் நிலையில் வைக்காமல் பணத்தைக் கட்டுப்படுத்த பரவலாக 12 மைய வங்கிகளின் கையில் அமெரிக்க நாட்டில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. மைய வங்கிகளில் மிகப் பழமையானது பாங்க் ஆஃப் இங்கிலாந்து என்னும் இங்கிலாந்து நாட்டின் மைய வங்கி. இது 1694-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. 19-ம் நூற்றாண்டில் டென்மார்க், பெல்ஜியம், ஸ்பெயின், ருஷ்யா, ஜெர்மனி, நார்வே, ஆஸ்திரியா, நெதர்லாண்ட்ஸ் ஆகிய நாடுகள் மைய வங்கியை ஏற்படுத்தின. 20-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் எல்லா நாடுகளும் மைய வங்கியைத் தோற்றுவிக்க ஆரம்பித்தன. 1920-ம் ஆண்டு முதல் 1955-ம் ஆண்டுவரை 47 மைய வங்கிகள் ஏற்படுத்தப்பட்டன. இப்போது மைய வங்கி இல்லாத நாடே கிடையாது.

மைய வங்கி, வணிக வங்கியினின்று வேறுபட்டு இருக்கிறது. இவ்வங்கிக்கு இலாப நோக்குக் கிடையாது. நாட்டிலுள்ள வணிக வங்கிகள், பல நிறுவனங்கள் ஆகியவைகளின் சீரான அமைப்பைப் பாதுகாத்து, பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்தி, பணச் சந்தையின் பாதுகாவலராக மைய வங்கி அமைகின்றது.

**மைய வங்கியின் பணிகள்**

1. **நோட்டு வெளியீடு:** ஒவ்வொரு நாட்டிலும் நோட்டுகளையும், நாணயங்களையும் அச்சடித்து வெளியிடும் உரிமை மைய வங்கிக்கு மட்டிலும் கொடுக்கப்பட்டுள்ளது. மைய வங்கிகள் துவக்கப்படுமுன் வணிக வங்கிகளே

நோட்டை அச்சிட்டு வெளியிட்டு வந்தன. பல வங்கிகள் நோட்டு வெளியிடுவதால் நாட்டில் பணப்புழக்கம் அதிகமாகி பணவீக்கம் ஏற்பட ஆரம்பித்தது. எனவே நோட்டை அச்சடித்து வெளியிடும் உரிமை ஒரு நிறுவனத்திற்கு மட்டும் தான் அளிக்கப்பட வேண்டும் என முடிவெடித்து நோட்டு அடிக்கும் உரிமையை மைய வங்கிக்கு அளிக்கப்பட்டது. இந்தியாவில் 1 ரூ. நோட்டைத் தவிர மற்ற எல்லா நோட்டு களையும் நாணயங்களையும் ரிசர்வு வங்கியே அச்சிட்டு வெளியிடு கின்றது. 1 ரூ. நோட்டை மட்டில் மத்திய அரசு அச்சிட்டு வெளியிடுகின்றது. மைய வங்கி மட்டில் நோட்டு வெளியிடு வதால், அவ்வப்போது புழக்கத்திலிருக்கும் தொகையை அறிந்து தேவையைப் பொறுத்து அதிகமாகவோ, குறை வாகவோ நோட்டினை வெளியிடும். நோட்டு வெளியிடுவதற்கு வெளியிடும் நோட்டுகள், நாணயங்களுக்கு ஏற்ப தங்கம், வெள்ளி, அன்னியச் செலாவணி, உள்நாட்டு, வெளிநாட்டுப் பத்திரங்களைக் காப்பாக வைத்திருக்கவேண்டும். இப்போது இந்திய ரிசர்வு வங்கி குறைந்த அளவு ரூ. 200 கோடி காப்பாக வைத்திருக்க வேண்டும். இவற்றில் ரூ. 115 கோடி தங்கத்தில் இருக்க வேண்டும்.

**2. அரசாங்கத்தின் வங்கி**

மைய வங்கி அரசாங்கத்தின் வங்கியாகப் பணி ஆற்றுகின்றது. தனிநபர்கள் தங்கள் பணத்தினை வங்கியில் வைப்பதுபோல மத்திய, மாநில அரசுகள் தங்கள் பணத்தினை மைய வங்கியில் வைத்துள்ளனர். அரசாங்கத்திற்கு பொது மக்கள் ஏதேனும் பணம் செலுத்த வேண்டு மென்றால் மைய வங்கியிடம் கட்டி விடலாம். இதே போல் அரசாங்கம் எவருக்கேனும் பணம் தரவேண்டுமென்றால் மைய வங்கியே அரசாங்கத்தின் சார்பில் பணத்தைக் கொடுத்துவிடும்.

அரசாங்க வங்கி என்னும் நிலையில் அரசாங்கத்திற்குத் தேவையான பண உதவியை அவ்வப்போது கடனைக் கொடுத்து உதவும். அரசாங்கத்தின் வருவாய், வரி முதலியன ஆண்டின் சில மாதங்களிலேயே வரும். ஆனால், அரசாங்கம் ஆண்டு முழுவதும் பல திட்டங்களுக்கும், கல்வி, சுகாதாரம், அரசுத்துறை, பொது மராமத்து ஆகிய பல பிரிவுகளில் பல கோடி ரூபாய்களை செலவு செய்ய நேரிடும். எனவே, அவ்வப்போது மைய வங்கியிடமிருந்து குறுகிய காலக்கடனை அரசாங்கம் பெற்றுக் கொள்ளும். அரசாங்கம் கேட்கும் குறுகிய காலக் கடனை அளிக்க மைய வங்கிகள் கருவூலச் சீட்டுகள்

(Treasury bill) விற்கும். இக்கருவூலச் சீட்டு 90 நாட்களுக்குப் பின் முதிர்வு அடையும். மைய வங்கி கருவூலச் சீட்டை வெளியிட்டவுடன் வணிக வங்கிகளும், மற்றைய நிதி நிறுவனங்களும் தங்களுக்குள் போட்டி போட்டுக் கொண்டு இதனை வாங்கிக்கொள்ளும். இச் சீட்டுகள் வெளியிட்டவுடன் சூடான பணியாரம் (Hot cakes) போல இவைகள் விற்றுப் போய்விடும். இதற்கு இருகாரணங்கள் உண்டு.

1. இச் சீட்டுகள் மிக எளிவரல் தன்மை வாய்ந்தது (90 நாட்களில் முதிர்வு).

2. மைய வங்கி வெளியிடுவதால் பணம் நிச்சயம் திரும்பப் பெற உறுதிப்பாடு உள்ளது.

3. அதிக ரொக்க இருப்பைக் கையில் வைத்திருக்கும் இந்திய வணிக வங்கிகளுக்கு, முதலீடு செய்ய இதைவிட சிறந்த வாய்ப்பு கிடைப்பது அறிது.

வெளியிடும் கருவூலச் சீட்டுகளை, ஒரு குறிப்பிட்ட பணத்திற்கு (cap rate) வெளியிடலாம், அல்லது டெண்டர் (Tender) கோரி விற்கலாம். ரூ. 100 மதிப்புள்ள கருவூலச் சீட்டை மைய வங்கி ரூ. 99.50 என்று வெளியிட்டால், குறிப்பிட்ட பணத்திற்கு வெளியிடும் முதல் முறையாகும். இது அல்லாமல் டென்டர் கோரி மிக அதிகப் பணத்திற்கு யார் வாங்க இசைகிறார்களோ அவர்களுக்கு அளிப்பது டென்டர் முறையாகும்.

வெளியிட்ட கருவூலச் சீட்டு முதிர்வு எய்தும் போது புதிய வரிசை கருவூலச் சீட்டை வெளியிட்டு முன் கருவூலச் சீட்டுக்கு முதிர்வின்போது பணம் அளித்து எப்போதும் அரசாங்கத்திற்குக் குறுகிய காலக் கடனை அளிக்கும் நிலையில் மைய வங்கி இருக்கும்.

ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் குறுகிய காலக் கடன் மட்டில் அல்லாமல் நீண்ட காலக் கடனும் தேவைப்படும். இந் நீண்ட காலக் கடனை 15 அல்லது 20 ஆண்டுகளுக்குப்பின் தான் அரசாங்கம் திருப்பித் தர இயலும். எனவே, இது போன்ற நீண்ட கடனுக்கு அரசாங்கம் கடன் பத்திரங்களை வெளியிட்டுப் பெறும். இக் கடன் பத்திரங்களை அரசாங்கம் வெளியிடுவதற்குப் பதிலாக அரசாங்கத்தின் பதிலாளி (Agent).

என்ற முறையில் மைய வங்கியே கடன் பத்திரம் வெளியிடும். கடன் பத்திரம் வெளியிட தத்க தருணத்தை மைய வங்கி நோக்கும். பணச் சந்தையில் சாதகமான நிலை நிலவும்போது மைய வங்கி அரசாங்கப் பத்திரத்தை வெளியிடும். இது அன்னியில் அளிக்க வேண்டிய வட்டிக் கணக்கினை மைய வங்கியே வைத்திருந்து, பத்திரம் முதிர்வு அடையும்போது பணத்தினை திருப்பி அளிக்கும். மைய வங்கியின் இப்பணிக்கு பொதுக் கடன் நிர்வாகம் (Public Debt Management) எனப் பெயராகும்.

### 3. வங்கிகளின் வங்கி

மைய வங்கி வங்கிகளின் வங்கியாகப் பணி ஆற்றுகின்றது. வணிக வங்கிகள் தங்களுடைய ரொக்க இருப்பில் ஓரளவு மைய வங்கியிடம் வைப்பாக வைத்திருக்கும். வங்கிச் சட்டப்படி ஒவ்வொரு நாட்டிலும் வணிக வங்கி தன்னுடைய வைப்பில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை ரொக்கமாக மைய வங்கியிடம் வைத்திருக்கவேண்டும். இந்தியாவில் ஒவ்வொரு வணிக வங்கியும் தன்னுடைய தவணை, நடப்பு வைப்புகளில், குறைந்தது 3 சதவீதத்தை ரொக்கமாக மைய வங்கியிடம் வைத்திருக்க வேண்டும். இதனை மைய வங்கி 15 சதவீதம் வரை எப்போது வேண்டுமானாலும் உயர்த்தலாம்.

வணிக வங்கிகள் மைய வங்கியில் ரொக்கம் வைப்பதினால் கீழ்க்கண்ட நன்மைகள் ஏற்படும்.

1. வணிக வங்கிகளுக்கு இது ஒரு பாதுகாப்புத் தொகையாக அமைகிறது.

2. மைய வங்கி வணிக வங்கிகள் வைத்துள்ள வைப்புகளைக் கொண்டு மற்ற தேவையான வங்கிகளுக்கு பண உதவி செய்ய வசதியாக இருக்கும்.

3. வணிக வங்கியின் கையில் உள்ள உபரி ரொக்க இருப்பு சுலபக் கடன் அளிப்பு மூலம் அதிகப் பணப்புழக் கத்தை ஏற்படுத்தி பணவீக்கம் ஏற்படலாம்.

4. மைய வங்கி அவ்வப்போது வைப்பில் அதிக சதவீதத்தை மைய வங்கியில் ரொக்கமாக வைக்கச் சொல்லி கடனைக் கட்டுப் படுத்தலாம்.

வங்கிகளின் வங்கி, என்னும் தோரணையில் மைய வங்கி எப்போதும் வணிக வங்கிகளுக்கு உதவக் காத்திருக்கும். வணிக வங்கிகளுக்கும் பணத் தட்டுப்பாடு நேரும்போது தங்களிடம் உண்டியல்களை மறு கழிவுப்பாடு (Rediscount) செய்து கொண்டோ அரசாங்கப் பத்திரங்களின் மீதோ கடன் பெற்றுக் கொள்ளலாம்.

வங்கிகளின் வங்கி என்னும் முறையில் வணிக வங்கிகள் மைய வங்கியின் கட்டுப் பாட்டில் உள்ளது. வங்கிகளின் நடத்தையை மைய வங்கி கண்காணித்து வரும்.

### உற்றுழி உதவுவோன் (Lender of last resort)

வணிக வங்கிகள் தங்களுக்குப் பணத் தட்டுப்பாடு நேரும் போது வேறு எந்த வழியிலும் பணம் கிடைக்காவிட்டால் மைய வங்கியை நாடி நிற்கும். இத்தருணத்தில் கடைசியாக நிதி அளிக்கும் நிறுவனம் என்ற முறையில் வணிக வங்கிக்கு அதன் மாற்று உண்டியலை மறுகழிவுப்பாடு செய்தோ, வணிக வங்கி வைத்துள்ள பத்திரங்களின் ஈட்டின் பேரிலோ பணம் தந்து உதவும். வணிக வங்கிகளுக்கு சில காலங்களில் பணத் தட்டுப்பாடு நேருவது இயற்கையே. உதாரணமாக சுறு சுறுப் பான காலத்தில் (busy season) வணிக வங்கிகளுக்குப் பணத் தேவை அதிகமாக இருக்கும். விவசாய நாட்டில், விவசாய காலத்தில் பணத்தேவை அதிகம் இருக்கும். அதிகக் கடன் கொடுக்க வணிக வங்கிகளின் ரொக்க இருப்பு போதாமல் போகலாம். மேலும், மைய வங்கியே தன்னிடம் உள்ள கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைக் கொண்டு (Credit control-weapon) பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்தி இறுக்கமான பணநிலை (tight money condition) ஏற்படுத்தலாம். இந்த நேரங்களில் வணிக வங்கிகளுக்கு பணத்தட்டுப்பாடு நேரலாம். வணிக வங்கிகள் மைய வங்கியை நோக்கி கடனுதவிக்கு வந்தவுடன் மைய வங்கி பணப்புழக்கம் இறுக்கமாக இருப்பதை உடனடியாகத் தெரிந்துகொள்ளலாம். மைய வங்கி கடன் உதவி தருவதற்கு முன் பல கண்டிப்புகளைச் செய்து அளிக்கலாம். இக் கண்டிப் புகளாவன: வங்கிகள் கடனை ஒரு சில தொழில்களுக்குக் கொடுக்கக்கூடாது, அல்லது சில முந்துமைத் துறைகளுக்குத் தான் கொடுக்கவேண்டும், அல்லது இந்த வட்டி வீதத்தில் தான் அளிக்க வேண்டும் என்று மைய வங்கி ஆணை இடலாம்.

**4. அந்நியச் செலாவணியின் பாதுகாவலர்**

மைய வங்கி நாட்டின் அந்நியச் செலவாணிப் பாதுகாவலர் என்ற முறையில் அந்த நாடு சம்பாதிக்கும் அந்நியச் செலாவணியை சேகரித்து வைக்கும். தனியார்களும், தொழில் நிறுவனங்களும், அரசாங்கமும் ஏற்றுமதி மற்றும் அந்நிய நாட்டுக்கு அளிக்கும் சேவைகளுக்கும் கிடைக்கும் அந்நிய நாட்டுப் பணத்தினைத் தாங்களே வைத்துக் கொள்ளக்கூடாது. இவைகளை உடனடியாக மைய வங்கிப் பெற்று பாதுகாக்கும். இறக்குமதி, அன்னியத் தொழில் நுட்பம், மேல் நாட்டில் கல்வி, தொழில் சுற்றுலா, மேல் நாட்டில் வைத்தியம் போன்ற செலவுகளுக்குத் தேவையான அந்நியச் செலாவணியை மைய வங் அனுமதித்தால்தான் அதனிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். கிடைத்துள்ள அன்னியச் செலாவணியை சிக்கன முறையில் தேவையான முக்கிய இறக்குமதிகளுக்கும், மற்றைய செலவினங்களுக்கு மட்டுமே மைய வங்கி செலவிட அனுமதி அளிக்கும்.

மேலும் ஒரு நாட்டின், பணத்தின் வெளிநாட்டு மதிப்பைச் சீராக வைத்திருக்க வேண்டிய பொறுப்பும் மைய வங்கியின் பொறுப்பே ஆகும். ஒவ்வொரு நாட்டின் பணத்திற்கும் உள் நாட்டு மதிப்பு, வெளிநாட்டு நாணய மதிப்பு என்ற இரு மதிப்புகள் உண்டு. உள்நாட்டு மதிப்பு, விலைவாசிகளைப் பொறுத்து இருக்கும். விலைவாசி அதிகமாக இருந்தால் உள் நாட்டு நாணய மதிப்பு குறையும். விலைவாசி குறைவாக இருந்தால் உள்நாட்டு நாணய மதிப்பு உயரும். இதே போல் வெளி நாட்டு நாணய மதிப்பு ஒரு நாட்டின் நாணயம் எந்த வீதத்தில் மற்றைய நாட்டு நாணயத்திற்கு மாற்றக்கூடும் என்பதினைப் பொறுத்து இருக்கும். அந்நிய நாட்டுப் பணத்தினை அதிகமாகத் தேவை செய்தால் நம் நாட்டு நாணயத்தின் வெளி மதிப்புக் குறையும். எனவே, அந்நிய நாணயத் தேவையைக் கட்டுப் படுத்தி தன் நாட்டின் வெளி நாணய மதிப்பைச் சீராக வைத் திருக்க வேண்டிய பணி மைய வங்கியுடையது ஆகும்.

**5. கடனை கட்டுப்படுத்தும் நிறுவனம்**

மைய வங்கி தன்னிடம் உள்ள கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைக் கொண்டு கடனைக் கட்டுப்படுத்தலாம். நாட்டில் பணப்புழக்கம் சீராக இருத்தல் வேண்டும். அதிகப் பணப் புழக்கம், பணவீக்கத்திற்கு வித்திட்டு விலைவாசிகளை உயர்த்தும். பணப்புழக்கம் குறைந்திருந்தால் தொழில், வாணிப வளர்ச்சிக்குத் தேவையான பணம் கிடைக்காமல் பொருளாதார மந்த நிலை தோன்றி வேலையின்மை, குறைந்த வருவாய் போன்ற

நிலை ஏற்பட்டு பொருளாதாரம் பாதிக்கப்படும். கடனைக் கட்டுப் படுத்தும் ஆயுதங்களாவன :

1. மைய வங்கி வீதம் (Bank rate)
2. வெளிச் சந்தை நடவடிக்கைகள் (Open market operations)
3. ரொக்கக் காப்பு மாற்று வீதம் (Variation of Cash Reserves)
4. தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு (Selective credit Control measures)

இவைகளில் முதல் மூன்று முறைகளையும், வழிமுறைக் (traditional) கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் என்று கூறு வார்கள். இவைகள் அளவைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் (Quantitative Credit Control Measures) என்றும், தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாட்டை, தரத்தைக் கட்டுப்படுத்தும் ஆயுதம் (Qualitative Credit Control Measures) என்றும் சொல்லப்படும். இவ்வாயுதங்கள் எவ்விதம் பயன்படுத்தப்படு கின்றன, அவைகள் எவ்விதம் பணப்புழக்கத்தைக் கட்டுப் படுத்துகின்றன என்பது பின் அத்தியாயங்களில் விவரிக்கப் பட்டுள்ளது.

6. தீர்வகப் பணி (Clearing house function)

இது மைய வங்கி செய்யும் மற்றுமொரு முக்கியமான பணி ஆகும்.

மைய வங்கியிடம் எல்லா வணிக வங்கிகளும் கணக்கு வைத்துள்ளன. ஒவ்வொரு வணிக வங்கியும் மற்ற வங்கி களிடமிருந்து அவர்கள் மீது எழுதப்பட்டுத் தங்களிடம் உள்ள காசோலைகளுக்குப் பணம் பெற வேண்டியிருக்கும். எல்லா வணிக வங்கிகளும் இக்காசோலைகளை மைய வங்கியின் தீர்வகப் பிரிவுக்கு எடுத்துச்செல்லும். தாங்கள் பெறவேண்டிய, பணத்தினை மைய வங்கி வைத்துள்ள தங்கள் கணக்கில் வரவு வைத்துக் கொள்ளும் எல்லா வணிக வங்கிகளும் ஒன்று சேர்த்து தாங்கள் பெறவேண்டிய கொடுக்க வேண்டிய காசோலைப் பணங்களைச் சரி செய்துகொள்ள தீர்வகம் மிகவும் பயனுடையதாக உள்ளது. எல்லா வணிக வங்கிகளும் மைய வங்கிக்குக் கட்டுக்கட்டாக காசோலைகளைக் கொணர்ந்து தினமும் கணக்கை நேர் செய்துகொள்ளும். ஏதேனும் வேலை நிறுத்தம் காரணமாக ஓர், இரு நாட்கள் தீர்வகப் பிரிவு வேலை

செய்யவில்லை என்றால் பல கோடி ரூபாய் பெறுமான காசோலைகள் தீர்வு செய்யப்படாமல், தொழில் வாணிபங்களில் மந்த நிலையை ஏற்படுத்திவிடும்.

**7. பணச்சந்தையின் பாதுகாவலர்**

மைய வங்கி பணச்சந்தையின் பாதுகாவலர் ஆவர். பணச் சந்தையின் பல பகுதிகளும் சீராகச் செயல்பட்டு, பணப் புழக்கத்தில் மாற்றம் ஏதும் இல்லாமல், நல்ல முறையில் இயங்கி வருகிறதா என்பதனைக் கண்காணிக்கும் பெரிய பொறுப்பு மைய வங்கியுடையது ஆகும்.

**8. ஏனைய பணிகள்**

மேலே கூறிய பணிகளைத் தவிர மைய வங்கிகள் தொழில் வளர்ச்சிக் கடன், விவசாயக் கடன் அளிப்பு போன்ற பொருளாதார வளர்ச்சித் திட்டங்களிலும் சில காலமாக நேரடியாக ஈடுபட்டுள்ளனர். இந்திய ரிசர்வு வங்கி விவசாயத்திற்கும், கூட்டுறவுகளுக்கும் அதிக அளவு கடன் வசதி அளித்து வருகிறது. மேலும், பன்னாட்டு நிதிக்குழு (I. M. F.) போன்ற நிறுவனங்களில் அரசின் பங்கை மைய வங்கியே ஏற்றுச் செய்கின்றது.

**மைய வங்கி வீதம் (Bank rate)**

'மைய வங்கி, வணிக வங்கிகளுக்கு எந்த வீதத்தில், தகுதியுள்ள, முதல் தர மாற்று உண்டியல்களை மறு கழிவுப்பாடு (Re discount) செய்கின்றதோ' அதுவே மைய வங்கி வீதம் ஆகும். மைய வங்கி வீதம் வெகு காலமாக மைய வங்கிகளால் பயன்படுத்தப்பட்டு வரும் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதம். மைய வங்கி வீதத்தை உயர்த்தியோ, தாழ்த்தியோ பணப்புழக்கத்தை அதிகரிக்கவோ, குறைக்கவோ கூடும். மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டால் வணிக வங்கிகள் மைய வங்கியிடமிருந்து அதிக வட்டி வீதத்திலே பணத்தைப் பெறுகின்றன. எனவே, வணிக வங்கிகளும் தங்களுடைய கடன் அளிக்கும் வட்டி வீதத்தை உயர்த்தும். இதன் காரணமாக பணச் சந்தையில் பொதுவாக வட்டி வீதம் உயரும். வட்டிவீதம் அதிகமாக இருப்பதால், கடன் வாங்குவது குறையும். முன்பே கடன் வாங்கியவர்கள் கடனைத் திருப்பிக் கொடுக்க முயல்வர். எனவே பணப்புழக்கம் குறையும். வட்டி வீதத்தைத் தவிர, எத்துணை அளவு பணம் வணிக வங்கிகளுக்கு மைய வங்கியிலிருந்து கிடைக்கிறது என்பதும், வணிக வங்கிகள் மேலும் கடன் அளிப்பதைக் கட்டுப்படுத்தும்.

மைய வங்கி வீதம் உயர்த்தப்படும்முன் மைய வங்கி வெளிச்சந்தை நடவடிக்கைகள், ரொக்கக் காப்பு மாற்று வீதம் ஆகிய கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைக் கொண்டு வணிக வங்கிகள் கையிலிருக்கும் உபரி ரொக்கத்தைக் குறைத்து விடும். (இவ்விரு கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களையும் அடுத்த அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ளது). கையில் இருக்கும் ரொக்கம் திடீர் எனக் குறைந்தவுடன் வணிக வங்கிகள் அச்சப்படும். ஏனெனில், வணிக வங்கிகள், இங்கிலாந்து போல் வளர்ந்த பணச் சந்தை உள்ள இடங்களில் தங்கள் வைப்புக்கு மிகக் குறைந்த கை இருப்பு ரொக்கம் வைத்திருக்கும் (10 முதல் 12 சதவீதம்). ரொக்க இருப்பு குறைந்துள்ளதால் வாடிக்கைக்காரர்களின் காசோலைகளுக்குப் பணம் அளிக்க இயலாமல் போய்விடுமோ என்ற அச்சத்தில் தங்களிடம் உள்ள உண்டியல்களை எடுத்துக்கொண்டு மைய வங்கியிடும் மறு கழிவுப்பாடு செய்துகொள்ள மைய வங்கியின் தயவை நாடி நிற்கும். இதுவே சரியான தருணம் என்று மைய வங்கி, மைய வங்கி வட்டி வீதத்தை உயர்த்துவதுடன், தன் கட்டளைகளையும் பிறப்பிக்கும்.

இதேபோல் பணப் புழக்கத்தினை அதிகப்படுத்தி, வணிக வங்கிகள் அதிகக் கடனை அளிக்க வகை செய்யவேண்டும் என மைய வங்கி விரும்பினால் மைய வங்கி வீதத்தைக் குறைக்கும். இதன் காரணமாக வணிக வங்கிகள் குறைந்த வட்டி வீதத்தில் மைய வங்கியிடமிருந்து தாராளமாக கடனைப் பெற்றுக் கொள்ளலாம். எனவே, அவைகள் குறைந்த வட்டி வீதத்திற்கு தொழில், வாணிபம், மற்றும் எல்லோருக்கும் சுலபமாக கடன் அளிக்கும். எனவே, பணப்புழக்கம் அதிகரிக்கும்.

**மைய வங்கிவீதக் கொள்கையில் ஒப்புக்கொள்ள வேண்டியவை**

1. வணிக வங்கிகளின் கடன் கொடுக்கும் வட்டி வீதத்திற்கும், மைய வங்கியின் வட்டி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருத்தல்.
2. வங்கிகள் உபரி கையிருப்பு ரொக்கம் வைத்திராமல், தங்களுடைய அன்றாட தேவைக்கு ஏற்ப குறைந்த அளவு ரொக்கம் வைத்திருக்கும்.
3. நாட்டு வாணிபம், தொழில்களில் அதிகமாக மாற்று உண்டியல்கள் பயன்படுத்தப்பட்டு அவைகள் வங்கிகளிடம் கழிவுப்பாடு செய்யப்படுகின்றன.
4. வாணிபப் பெருக்கம், தொழில் முதலீடு முதலியவைகள் வட்டி வீதத்தைப் பொறுத்தே செய்யப்படுகின்றன.

கடன் பெறுதல், முதலீடு போன்றவைகள் வட்டி வீதத்தைப் பொறுத்து அதிகரிக்கவோ, குறைக்கவோ கூடும்.

மேலே கண்டவைகள் மறுக்க முடியாத உண்மைகள் என்று ஏற்றுக்கொண்டால்தான் மைய வங்கி வீதம் கடனை கட்டுப்படுத்தவோ, அதிகரிக்கவோ பயன்படக்கூடிய ஆயுத மாகக் கொள்ளலாம்.

### மைய வங்கி வீதம் பற்றிய இரு தேற்றங்கள்

மைய வங்கி வீதம் எவ்விதம் பொருளாதார நிலையைப் பாதிக்கின்றது என்பதினை விளக்க இரு கோட்பாடுகள் உள்ளன. இவை ஹாட்ரேயின் தேற்றம் என்றும் கீன்சின் தேற்றம் என்றும் கூறப்படுகின்றன. ஹாட்ரேயின் கோட் பாட்டின்படி மைய வங்கி வீதம் குறுகிய கால வட்டி வீதத்தின் (Short term interest) ஊடே பொருளாதார நிலையை பாதிக்கும். கீன்சின் கோட்பாட்டின்படி நீண்ட கால வட்டி வீதத்தின் (Long term interest) ஊடே மைய வங்கி வீதம் பொருளாதார நிலையைப் பாதிக்கும்.

### ஹாட்ரேயின் கோட்பாடு

மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டவுடன் உடனடியாக உயர்வது குறுகிய காலக்கடனே ஆகும். ஏனெனில், வணிக வங்கிகள் தங்கள் வட்டி விதத்தை உயர்த்திவிடும். குறுகிய காலக் கடன் உயர்வு, மொத்த வியாபாரிகளை பெரும் பாதிப் புக்கு உள்ளாக்கும். பல மொத்த வியாபாரிகள் முடிவு பெற்ற, முடிவு பெரும் நிலையிலுள்ள (Semi-finished goods) பொருள்களை ஏராளமாக தங்கள் கிடங்குகளில் தேவையை எதிர்நோக்கி முடக்கி வைத்துள்ளார்கள். இவர்கள் பொருள்களை வங்கியில் பெற்றக் கடனைக் கொண்டே வைத்துக் கொண்டிருக்க முடிகிறது. திடீர் என வங்கி கடன் வீதம் (குறுகிய காலக் கடன் வீதம்) உயரவே இம் மொத்த வியாபாரிகள் இப்பொருள்களை வைத்திருக்கும் சிலவு மிக அதிகரிக்கும். எனவே, இச்சரக்குகளை வைத்திருக்க விருப்பமின்றி உடனடியாக விற்க ஆரம்பிப் பார்கள். எல்லா மொத்த வியாபாரிகளும் விற்க முனையவே பொருளின் அளிப்பு சந்தையில் மிக அதிகமாக இருக்கும். இதன் காரணமாக அப்பொருள்களின் விலை சந்தையில் வீழ்ச்சி அடையும். மேலும், மொத்த வியாயாரிகள் உற்பத்தியாளர் களிடம் பொருள்களை வாங்குவதை நிறுத்திவிடுவார்கள். பொருள்களின் விலையோ குறைந்துவிட்டது, பொருள்களைக்

கேட்பதும் குறைந்துவிடவே உற்பத்தியாளர்கள் அச்சப்பட்டு உற்பத்தியைக் குறைப்பார்கள். இதன் காரணமாக பலர் வேலையிலிருந்து நீக்கம் செய்யப்படுவர். அவர்கள் வருவாய் குறையும். இதன் காரணமாக பொருள்களின் தேவை மேலும் குறையும். விலைகள் மேலும் சரியும். உற்பத்தியாளர்கள் மூலதன இயந்திரத் தொழிற்சாலைகளிடம் (Capital goods industry) புது இயந்திரங்கள் தேவை செய்யாததால் அத்தொழிலும் பாதிக்கப் பட்டு, பலர் வேலையிலிருந்து நீக்கப்படுவர். இதன் காரணமாக விலைகள் மேலும் குறையும். இந்தச் சக்கரம் மேலும் மேலும் உழன்று பொருள்களின் விலைகளை குறைக்கச் செய்யும்.

இக்கோட்பாட்டில் சில குறைபாடுகள் இருக்கின்றன. 1. சில மிக அவசியமானப் பொருள்களுக்கு நெகிழ்ச்சியற்ற தேவை (Inelastic demand) உண்டு. இது போன்ற பொருள்களை எவ்விலையாயினும் நுகர்வோர் வாங்கியே தீரவேண்டும். எனவே, இது போன்ற பொருள்களுக்கு மேலே கூறிய வாதம் பொருந்தாது வங்கி வட்டி வீதம் அதிகரித்தாலும், மொத்த வியாபாரிகள் நட்டம் ஏதும் இல்லாமல் அதிக விலையில் விற்க முடியும். எனவே, குறுகிய கால வட்டி உயர்வு அவர்களைப் பொருள்களை விற்கச் செய்யாது.

2. மொத்த வியாபாரிகள் பொருள்களை வைத்துக்கொள்ள வட்டி மட்டும்தான் முக்கியம் என்னும் பொருள்பட வாதம் அமைந்துள்ளது. ஆனால், வட்டியைத் தவிர காப்புச் செலவு (Insurance expence), கிடங்குச் செலவு (godown expenses) ஆகியவைகளும் முக்கியமான செலவுகளே. வட்டி வீதம் உயர்ந்தாலும், மற்றைய செலவுகள் குறையுமேயானல் மொத்த வியாபாரிகள் பொருள்களை விற்க முனையமாட்டார்கள்.

### கீன்சின் கோட்பாடு

மைய வங்கி வீதம் பொருளாதர நிலையை நீண்ட கால வட்டி வீதத்தின் ஊடே பாதிக்கும் என்பது கீன்சீன் கோட் பாடு. கீன்சும், மைய வங்கி வீதம் உயர்ந்தால் உடனடியாக குறுகிய காலக் கடன் வீதம் உயரும் என்பதினை ஏற்றுக்கொள் கிருர். வணிக வங்கிகள் தங்கள் வைப்புக்குத் தரும் வட்டி வீதம் மற்றும் குறுகிய காலப் பத்திரங்களின் வட்டி வீதம், மாற்று உண்டியல் கழிவுப்பாடு வீதம் (இவை அனைத்தும் குறுகிய காலக் கடன்) உடனடியாக உயரும். எனவே, நீண்ட கால முதலீட்டைவிட (Long term investment) குறுகிய கால

முதலீடே (Short term investment) அதிக இலாபம் அளிக்க வல்லதாக இருக்கும்.

கீன்சின் கருத்துப்படி ஒவ்வொரு மூலதன இயந்திர தொழிற் சாலைக்கும், அதன் முதலீட்டிற்கும் முக்கியமான காரணிகள் இரண்டு. அவை: (1)எதிர் நோக்கு இலாபம் (Marginal efficiency of Capital). (2) வட்டிவீதம். எல்லா வியாபாரங்களுக்கும், தொழில்களுக்கும் எதிர்நோக்கு இலாபம் ஒரு குறிப்பிட்ட அளவே. இதில் மாற்றம் ஏதும் இருப்பதில்லை. எனவே, வட்டி வீதம் முக்கியமானது. வட்டி வீதம் அதிகமானல் இலாபம் குறையும், வட்டி வீதம் குறைந்தால் இலாபம் மிகும்.

மைய வட்டி வீதம் உயர்ந்தவுடன் குறுகிய கால முதலீடு அதிக இலாபம் அளிக்க வல்லதாக இருப்பதால், நீண்ட கால முதலீடு, (கடன் பத்திரங்களில்) செய்துள்ளவர்கள் தங்கள் கடன் பத்திரங்களை விற்று பணமாக்கி குறுகிய காலக் கடன் பத்திரத்தில் முதலீடு செய்ய விழைவார்கள். கடன் பத்திரங் களில் முதலீடு செய்த பலர் தங்கள் கடன் பத்திரங்களை உடன டியாக விற்க முனைவதால் இக்கடன் பத்திரங்களின் விலை குறையும். உதாரணமாக ரூ. 100 மதிப்புள்ள கடன் பத்திரம் ரூ. 95, 90, 85 என்று குறைந்துகொண்டே செல்லும். மேலும், கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய எவரும் அதிக விருப்பம் கொள்ளமாட்டார்கள். எனவே, இனிமேல் மூலதன இயந்திரத் தொழிற்சாலையை ஆரம்பிக்கவோ, விரிவுபடுத்தவோ, நவீனப் படுத்தவோ இத் தொழிற்சாலைகளுக்கு மூலதனம் தேவைப் பட்டால் கடன் பத்திரங்களுக்கு அதிகமான வட்டி வீதம் அளிக்க வேண்டும். அப்போதுதான் பலர் முதலீடு செய்ய விருப்பப்படுவர். அதிக வட்டியின் காரணமாக எதிர்நோக்கு இலாபம் குறையும். இதன் காரணமாக புதிய முதலீடோ, விரிவு முயற்சியோ மூலதன இயந்திரத் தொழிற்சாலைகள் செய்யாது. மேலும், இலாப நோக்கு குறைவதால் உற்பத்தி யைக் குறைத்து, வேலையில் இருக்கும் பலரை நீக்கம் செய்யும். இதன் காரணமாக அவர்கள் வருவாய் குறையும். இவர்கள் நுகர்வோர் பொருள்களுக்கு (Consumer goods) செய்யும் தேவை யைக் குறைத்துக்கொள்வார்கள். எனவே, நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் பாதிக்கப்பட்டு, தங்கள் தொழிலில் வேலை செய்யும் சிலரை நீக்குவதோடு மூலதன இயந் திரங்களுக்குத் தேவை ஏதும் செய்யாது. இதன் காரணமாக மூலதன இயந்திரத் தொழிற்சாலைகள் மேலும் பாதிக்கப்பட்டு, பலர் மேலும் வேலையினின்று நீக்கப்பட்டு, இச் சக்கரம் தொடர்ந்து செயலாற்றி விலைகளைக் குறைக்கும்.

ஹாட்ரே, கீன்ஸ் ஆகிய இருவர்களுடைய கோட்பாட்டின்படி மையவட்டி வீத உயர்வு, விலைவாசிகளை குறைக்க உதவும். எவ்விதம் இது ஏற்படுத்தப்படுகின்றது என்பதில் தான் இரு வாதங்களிலும் வித்தியாசங்கள் இருக்கின்றன.

பணவீக்க காலத்தில் மைய வட்டி வீதம் உயர்த்தப்பட்டால் பணப்புழக்கம் குறைந்து விலை வாசிகளைக் கட்டுப்படுத்தும். வட்டி வீத உயர்வு பொருளாதாரத்தை பண அளவு மூலம் கட்டுப்படுத்துவது அன்றி, மைய வங்கியின் இந்நோக்கமே வியாபார, தொழில் மற்றும் வங்கிகளின் வட்டாரங்களில் ஒரு இனம் புரியாத கடுமையான எச்சரிக்கையாக அமைந்து பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தும் என்று சில வங்கியல் நிபுணர்கள் எண்ணுகிறுர்கள்.

தங்க நிலையில் (Gold standard) பல நாடுகளும் இருந்த போது, மைய வட்டி வீதம் ஒரு முக்கிய பணியைச் செய்து வந்தது. தங்க நிலை முறிவு அடையாமல் இருக்க வேண்டுமானுல் பல நாடுகளும் தங்க நிலைக்கான விளையாட்டினை (game of the gold standard) நேர்மையாக விளையாட வேண்டும். இவ் விளையாட்டானது எந்த ஒரு நாடு தொடர்ந்து தங்கத்தினை ஏற்றுமதி செய்கின்றதோ (அதிகப் பொருள் இறக்குமதி காரணமாக) அந்த நாடு மைய வட்டி வீதத்தை உயர்த்தி, கடனைக் கட்டுப்படுத்தவேண்டும். இதன் காரணமாக பணப் புழக்கம் குறைந்து, விலைவாசி குறைந்து அந்த நாடு பொருள் இறக்குமதியைக் குறைப்பதோடு, ஏற்றுமதியையும் அதி கரிக்கும். இதேபோல் எந்த ஒரு நாடு தொடர்ந்து தங்கத்தினைப் பெற்றுக் கொண்டே இருக்குமோ (அதிக ஏற்றுமதியின் காரணமாக) அந்த நாடு மைய வட்டி வீதத்தைக் குறைத்து, கடனைப் பெருக்க வேண்டும். இதன் காரணமாக பணப் புழக்கம் அதிகரித்து விலைவாசி உயரும். எனவே, ஏற்றுமதி குறைந்து இறக்குமதி அதிகரிக்கும். ஆனுல், இவ்விளையாட்டைப் பன்னுடுகளும் நன்னம்பிக்கையுடன் செய்யாததால் தங்கநிலை, 1931-ம் ஆண்டு இங்கிலாந்து நாட்டால் தகர்த்து எறியப்பட்டது. இதனைத் தொடர்ந்து மற்ற எல்லா நாடுகளும் தங்க நிலையைத் துறந்தன.

நாட்டு நாணயத்தின் வெளிநாட்டு மதிப்பை அதிகரிக்கவும் மைய வங்கி வீதம் உதவும். நாணய வெளிநாட்டு மதிப்பு உயரவேண்டுமானுல் மைய வங்கி வீதம் உயர்த்தப்பட வேண்டும். இதனுல் நாட்டில் பொதுவாக வட்டி வீதம் உயரும்.

எனவே, மற்ற நாட்டினர் இந்த நாட்டில் முதலீடு செய்ய விரும்பி இந்த நாட்டு நாணயத்திற்கு தேவை செய்வர். இதன் காரணமாக நாணய வெளி மதிப்பு உயரும்.

### மைய வங்கி வீதத்தின் குறைபாடுகள்

1. மைய வங்கி வீதத்திற்கும், நாட்டில் பொதுவாக நிலவும் வட்டி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். வணிக வங்கிகள் மற்றும் நிதி நிறுவனங்களின் வட்டி வீதம் மைய வங்கி வீதத்தைப் பொறுத்தே இருக்க வேண்டும். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற வளர்ந்த பணச் சந்தை உள்ள நாடுகளில் இத் தொடர்பு நெருக்கமாக உள்ளது. மைய வங்கி வீதம் உயர்ந்தவுடன் பொது வட்டிவீதம் உடனடியாக உயரும். இதே போல் மைய வங்கி வீதம் குறைந்தவுடன் பொது வட்டிவீதம் குறையும். ஆனல், இந்தியா போன்ற பின் தங்கிய பணச் சந்தைகளில் மைய வங்கி வீதத்திற்கும் பொது வட்டி வீதத்திற்கும் ஒற்றுமை ஏதும் இல்லை. இந்தியாவில் நாட்டு வங்கிர்ய வட்டி வீதத்திற்கும் மைய வங்கி வீதத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது.

2. அதிகமான, தகுதியுள்ள மாற்று உண்டியல்கள் புழக்கத்தில் இருக்கவேண்டும். இவைகளை பெரும் அளவில் வணிக வங்கிகள் கழிவுப்பாடு செய்யவேண்டும். இந்த நிலையில் தான் வணிக வங்கிகள் மாற்று உண்டியல்களை மறு கழிவுப் பாட்டிற்கு மைய வங்கிகளிடம் எடுத்துச் செல்ல முடியும். ஆனல், இந்தியாவில் நல்ல மாற்று உண்டியல் சந்தை இல்லை. சமீப காலமாக ரிசர்வு வங்கி ஒரு சிறிய மாற்று உண்டியல் சந்தை வளர வழி கோலியுள்ளது. வணிகர்களும், தொழில் நிறுவனங்களும். அதிகப்பற்று, ரொக்கக்கடன், கடன் ஆகியவைகளை விரும்புகின்றன. இதன் காரணமாக மாற்று உண்டியல் அதிகப் புழக்கத்தில் இல்லை. இங்கிலாந்து போன்ற நாடுகளில் மாற்று உண்டியல் வியாபாரத்தில் முக்கியமாக இருக்கின்றது.

3. வணிக வங்கிகள் மைய வங்கியிடம் உண்டியல்களை மறுகழிவுப்பாடு செய்து கொள்ளும் பழக்கம் இருக்க வேண்டும். பல நாடுகளில் வணிக வங்கி மைய வங்கியை நாடி இம் முறையில் கடன் உதவி பெறுவதை ஏதோ குறைபாடு என்று கருதி மைய வங்கியின் உதவியை நாட மறுக்கும்.

4. வணிக வங்கிகளிடம் உபரி ரொக்க இருப்பு இருக்குமே ஆனால் மைய வங்கி வீதம் வெற்றி பெருது. எடுத்துக்காட்டாக இந்தியாவில் வணிக வங்கிகள் எப்போதும் தேவைக்கு அதிகமான ரொக்கம் வைத்திருக்கும். மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டாலும் வணிக வங்கிகள் தங்கள் கடன் கொள்கையை முன் போலவே கையில் உள்ள ரொக்கத்தைக் கொண்டு பின்பற்றிவரும்.

5. மைய வங்கி வட்டி வீதம் பணவீக்கத்தனைக் கட்டுப்பட பயன்படுமே அன்றி பொருளாதார மந்த நிலையிலிருந்து (depression) மாற்றம் ஏற்பட மைய வட்டி வீதத்தைக் குறைத்தால்கூட பொருாதாரத்தில் மாற்றம் ஏற்படுவதில்லை. கீனஸ் பெருமகனர் இந்நிலையிலிருந்து பொருளாதாரம் மாற்றம் அடைய அரசு பல பொதுத்துறை, மற்றும் இதர திட்டங்களில் முதலீடு செய்து மக்கள் வருவாயைப் பெருக்கி, பொருள் தேவைகளை அதிகரிக்கச் செய்வதே வழி எனக் கூறியுள்ளார்.

### மைய வங்கி வீதம்-மறைவும்-தோற்றமும்

மிகப் பழம் பெரும், கடனைக் கட்டுப் படுத்தும் ஆயுதமான மைய வங்கி வீதம் 1918-ம் ஆண்டுக்குப்பிறகு, குறிப்பாக 1929-30இல் ஏற்பட்ட பொருளாதார மந்தத்திற்குப் பிறகு முக்கியத்துவத்தை இழந்து விட்டது. இதற்கான காரணங்கள்:

1. 1920-ம் ஆண்டுக்குப்பிறகு மாற்று உண்டியல்கள் குறைந்து போய் அவைகளின் இடத்தை கருவூலச் சீட்டுகளும் குறுகிய கால அரசாங்கக் கடன் பத்திரங்களும் பிடித்துக் கொண்டன.

2. கூலி, வட்டி, விலைகளை ஒரே நிலையில் ஊர்ச்சிதப் படுத்தும் அரசாங்கக் கொள்கை.

3. இரண்டாவது உலகப் போருக்கு முன்னல் மலிவுப் பணக் கொள்கை (cheap money policy) பல அரசாங்கங் களாலும் போர்த் தேவைகளுக்காக கடைப்பிடிக்கப்பட்டது.

4. வணிக வங்கிகளின் வைப்புகள், போர்க்கால பண வீக்கத்தினல் அதிகரிக்கவே வணிக வங்கிகள் மைய வங்கியைப் பணத் தேவைக்காக அணுகவில்லை.

5. பணத்தைக் கட்டுப்படுத்த அரசின் வருவாய் மற்றும் வரிக் கொள்கைக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

இவை காரணமாக மிக மென்மையான, மிக முக்கியமான கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதத்தை மறந்து மைய வங்கியின் பட்டறையில் வெகுகாலம் துருப்பிடிக்கவிடப்பட்டது. இதற்குப் பதிலாக வெளிச்சந்தை நடவடிக்கைகள், மற்ற கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் பயன் படுத்தப்பட்டன.

1951-ம் ஆண்டு மைய வங்கி வீதத்தின் சரித்திரத்தில் ஒரு திருப்பு மயமாக இருந்தது. 1950-ம் ஆண்டு நேர்ந்த கொரியப் போர் உலகமுழுவதும் பணவீக்கத்தை எதிரொலிக்கச் செய்தது. வணிக வங்கிகள் தங்கள் பாசறையில் உள்ள எல்லா ஆயுதங்களையும், அரசு தன் வரிக் கொள்கையையும் வைத்து சமாளிக்க இயலாதபோது பாதி மறந்து போயிருந்த மைய வங்கி வீதத்தின் குணதிசயங்களை நினைவு படுத்தி பாங்க் ஆஃப் இங்கிலாந்து வட்டிவீதத்தை உயர்த்தி பணவீக்கத்தைக் கட்டுப் படுத்த முன் வந்தது. மைய வங்கி வீதத்தை இது 2 இலிருந்து $2\frac{1}{2}$% ஆக உயர்த்தியது. இதற்குமுன் 1932முதல் 1951 வரை மைய வட்டிவீதம் 2% ஆகவே இருந்து வந்தது (போர்க் காலத்தில் 2 மாதங்களுக்கு 2%லிருந்து $2\frac{1}{2}$% உயர்வு இருந்தது). பிறகு 1952-ம் ஆண்டு $2\frac{1}{2}$% லிருந்து 4% ஆக உயர்த்தியது. பாங்க் ஆஃப் இங்கிலாந்து 1951-இல் மைய வங்கி வீதத்தை உயர்த்திய உடன் இதற்காகவே காத்திருந்ததுபோல் உலகிலுள்ள எல்லா மைய வங்கிகளும் தங்கள் மைய வங்கி வீதத்தை உயர்த்தின. இந்திய ரிசர்வு வங்கி தன் வட்டி வீதத்தை நவம்பர் 1951-ல் 3 இலிருந்து $3\frac{1}{2}$% ஆக உயர்த்தியது. 1950-ல் இருந்து 1956 வரை அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் தங்கள் மைய வங்கி வீதத்தை 9 முறை மாற்றினர்கள். 1951-க்கு பிறகு மைய வங்கி வீதம் மீண்டும் ஒரு முக்கிய கடனைக் கட்டுப் படுத்தும் ஆயுதமாக திரும்ப வந்து இன்றும் முக்கியமாக இருக்கின்றது,

## வெளிச் சந்தை நடவடிக்கைகள் (Open Market operations)

மைய வங்கி பத்திரங்கள், கடன் பத்திரங்கள் மற்றும் கருவூலச் சீட்டுகளை வாங்குவதும், விற்பதும் வெளிச்சந்தை நடவடிக்கை ஆகும். இதன் மூலம் மைய வங்கி கடனைக் கட்டுப் படுத்தலாம். மைய வங்கி பணப் புழக்கத்தினைக் குறைக்க வேண்டும் என்றால் பத்திரங்களையும், கருவூலச் சீட்டுகளையும் விற்கும். இவைகளை வணிக வங்கிகள் மட்டும் அல்லாமல்

பொதுமக்களும், பல நிறுவனங்களும் வாங்க விரும்புவார்கள். மைய வங்கியே விற்பனை செய்வதால் இவைகளுக்குப் பெரு மதிப்பு உண்டு. பலர் வாங்க விரும்பும் போது வங்கியில் தங்களுடைய வைப்பிலிருந்து பணத்தை எடுத்து மைய வங்கிக்குக் கொடுப்பார்கள். இதன் காரணமாக வணிக வங்கிகளின் கையிலுள்ள ரொக்கம் மிகவும் குறையும். எனவே, அவைகள் அதிகக் கடனை ஏற்படுத்த முடியாது. பணப் புழக்கம் குறையும். இதேபோல் மைய வங்கி பணப் புழக்கத்தை அதிகரிக்க விருப்பினால் பல தனிப்பட்டவர்கள், நிறுவனங்கள், சந்தை ஆகிய இடங்களிலிருந்து பத்திரங்களை விலைக்கு வாங்கும். இதற்கு மைய வங்கி அளிக்கும் பணத்தினை விற்றவர்கள் வணிக வங்கிகளில் வைப்பாக வைப்பார்கள். வணிக வங்கிகளின் வைப்புகள் அதிகரிக்கவே அவைகளின் கடன் ஏற்படுத்தும் திறன் அதிகரிக்கும். பணப் புழக்கம் அதிகரிக்கும்.

வெளிச் சந்தை நடவடிக்கை மைய வங்கி வீதத்தைவிட ஒரு விதத்தில் சிறப்பானது ஆகும். மைய வங்கி வீதம் செயல் படுத்தப் பட வேண்டுமென்றால் வணிக வங்கிகள் மைய வங்கியை அணுகிய நிலையில்தான் செய்ய முடியும். எனவே, மைய வங்கி தானாகவே செயல்பட முடியாது. ஆயினும், வெளிச்சந்தை நடவடிக்கையைப் பொருத்த வரையில் எந்த சக்தியையும் எதிர் நோக்காது மைய வங்கி தானாகச் செயல் பட முடியும். எப்போது தேவையோ அப்போது பத்திரங்களை வாங்கவோ, விற்கவோ செய்யலாம்.

வெளிச்சந்தை நடவடிக்கை மைய வங்கி வீத மாற்றத்துக்கு முன்னோடியாகச் செயல்படுத்தப் படலாம். வெளிச்சந்தை நடவடிக்கையால் வங்கிகளிடம் உள்ள உபரி ரொக்கத்தைக் குறைத்து, இதன்பின் மைய வங்கி வீதத்தை உயர்த்தினால் நல்ல பலன் கிடைக்கும்.

அரசாங்கப் பத்திரத்தின் விலையை நிரந்தரப் படுத்த அவ்வப்போது வெளிச்சந்தை நடவடிக்கை தேவைப்படும்.

மைய வங்கி வீதம் உடனடிப் பயனை அளிக்காது சிறிது காலதாமதத்திற்குப் பிறகு தான் வேண்டிய முடிவை அடையலாம். ஆனால், வெளிச்சந்தை நடவடிக்கை நேரடி, உடனடி முடிவு அளிக்க வல்லது.

குறைபாடுகள்

1. எந்த நாட்டில் நல்ல, முதல்தர கடன் பத்திரங்கள் இருக்கின்றனவோ அந்த நாட்டில்தான் வெளிச்சந்தை நடவடிக்கையை மைய வங்கி திறம்பட செய்யமுடியும். இந்தியா போன்ற நாடுகளில் இவை அதிக அளவில் இல்லாததால் பெருமளவில் மைய வங்கி இதனைச் செய்ய முடிவதில்லை.

2. வெளிச்சந்தை நடவடிக்கை காரணமாக பத்திரங்களின் மதிப்பு உயர்வதும், தாழ்வதுமாக இருக்கும். இதன் காரணமாக ஊக வணிகம் (speculation) ஏற்படலாம்.

3. பொருளாதார மந்த நிலையில் மைய வங்கி பத்திரங்களை வாங்கி வணிக வங்கிகளின் கையிருப்பு ரொக்கத்தை அதிகரித்தாலும், வாணிபம் பொருளாதார நிலையைக் கண்டு அஞ்சி கடன் பெற மறுத்து நிற்கும். எனவே, பணப் புழக்கம் அதிகமாகும் எனக் கூறமுடியாது.

ரொக்கக் காப்பு மாற்றுவீதம் (Variation of cash reserves)

வணிக வங்கிகள் மைய வங்கியிடம் தங்கள் வைப்புகளின் பேரில் குறைந்த அளவு ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை ரொக்கக் காப்பாக மைய வங்கியிடம் வைத்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட அதிகபட்ச சதவீதம்வரை மாற்றி அமைக்க மைய வங்கிக்கு உரிமை உண்டு. இம்முறையைக் கொண்டு கடனைக் கட்டுப் படுத்த முடியும்.

குறைந்த அளவு ரொக்கக் காப்பை மைய வங்கியிடம் வைக்கும் பழக்கம் முதன் முதலில் அமெரிக்க நாட்டில் ஆரம்பிக்கப்பட்டது. இம் முறையின் சிறப்பு அம்சங்களாவன:

1. வணிக வங்கிகளின் எளிவரல் தன்மையையும் பண நிலையையும் கண்காணிப்பது.

2. மைய வங்கிக்கு பணச்சந்தைக்கு வேண்டிய நிதி உதவியைச் செய்ய வசதியாக பணம் கிடைப்பது.

3. கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதமாகப் பயன் படுத்துவது.

இந்தியாவில் வணிக வங்கிகள் தங்கள் தவணை, நடப்பு வைப்புகளின் பேரில் குறைந்தது 3% ரொக்கக் காப்பை ரிசர்வு

வங்கியிடம் வைத்திருக்க வேண்டும். இதனை எப்போது வேண்டுமானாலும் 15% வரை ரிசர்வு வங்கி மாற்றலாம்.

கடனைக் கட்டுப்படுத்த மைய வங்கி விரும்பினால் வணிக வங்கிகளை அதிகமான சதவீத ரொக்கக் காப்பை வைக்கச் சொல்லும். இதனால் வணிக வங்கிகளுக்கு கையில் இருக்கும் ரொக்கம் குறையும். எனவே, கடன் அளிப்பதில் கட்டுமானம் செய்வதோடு முன்பே கடன் பெற்றவர்களை உடனடியாகக் கடனைத் திருப்பித்தர மைய வங்கி கோரும். இதனால் பணப் புழக்கம் குறையும். இதற்கு மாறாக மைய வங்கி பணப் புழக்கத்தை அதிகரிக்க விரும்பினால் வணிக வங்கிகள் வைக்க வேண்டிய ரொக்கக் காப்பு சதவீதத்தைக் குறைவாகவைக்கும். இதனால் வணிக வங்கிகளின் ரொக்கக் கை இருப்பு அதிகமாக இருக்கும். அதிகக் கடனைக் கொடுத்து பணப்புழக்கத்தை வணிக வங்கிகள் அதிகரிக்கும்.

இக் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதத்தின் சிறப்பு யாதெனில் மைய வங்கி தன் ஆணையால் உடனடியாக கடன் பெருக்கத்திற்குத் தடையோ, கடன் பெருக்கத்திற்கு வகையோ செய்யலாம். மைய வங்கியின் ஆணை கிடைத்த உடனேயே வணிக வங்கிகள் அதிக ரொக்கக்காப்பை வைக்க வேண்டும். இது உடனடியாக கடனைக் கட்டுப்படுத்தும். கீன்ஸ் தன்னுடைய புகழ்பெற்ற புத்தகமாகிய (Treatise on Money) என்ற புத்தகத்தில் இம் முறையை முதன் முறையாக வகுத்து, கடனைக் கட்டுப்படுத்த சிறந்த முறை என எடுத்துக் கூறினார். அவர் இங்கிலாந்து வணிக வங்கிகள் தவணை வைப்பு மீது O-லிருந்து 6 சதவீதமும் நடப்புக் கடன்கள் மீது 10-லிருந்து 20 சதவிதம் வரை மைய வங்கிக்கு மாற்றும் உரிமை கோரி வாதிட்டார்.

பல மைய வங்கிகள் தற்போது வைப்பின் பேரில் மாற்றி அமைக்கும் ரொக்கக்காப்பைத் தவிர மாற்றி வைக்கும் ரொக்கக் காப்பு எளிவரல் சொத்தின் பேரிலும் வைக்கப்படுகின்றது.

### தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு (Selective credit control measures)

மைய வங்கி வீதம், வெளிச்சந்தை நடவடிக்கை, ரொக்கக் காப்பு மாற்றுவீதம் ஆகிய எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தும் கடன் கட்டுப்பாட்டு ஆயுதங்கள் பொருளாதாரத் துறைகள் அனைத்தையும் பாதிக்கும். உதாரணமாக மைய வங்கி வீதம்

உயர்த்தப்பட்டால் வங்கிகள் கொடுக்கும் மொத்தக் கடன் எல்லாத் துறைகளுக்கும் கட்டுப்படுத்தப்படும். ஆனால், பல நேரங்களில் மைய வங்கி சில முந்துமைத் துறைகளுக்கு மட்டில் தாராளமாகக் கிடைத்து, தேவையற்ற மற்ற துறைகளுக்குக் கடன் கட்டுப்படுத்த வேண்டும் என மைய வங்கி விரும்பலாம். தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாட்டில் பாகுபாடு இருக்கும். வேண்டிய முந்துமைத்துறைக்கு அதிகக் கடன் கிடைக்குமாறு செய்யக் கூடும்.

வகைகள்

1. இடைவெளி மாற்றுமுறை (Variation of margin requirement)

2. நுகர்வோர் கடன் கட்டுப்பாடு (Regulation of Consumer credit)

3. கடனைப் பகிர்ந்தளித்தல் (Rationing of credit)

4. மனந்தொடு வேண்டுகொள் (Moral suasion)
5. நேரடி நடவடிக்கை (Direct Action)

இடைவெளி மாற்று முறை

வணிக வங்கிகள் கடன் அளிப்புக்கு ஈடாக தங்கம், இயந்திர சாதனம், கச்சாப் பொருள், முடிவுற்ற பொருள்கள், கையிருப்புச் சரக்கு, அரசாங்கப் பத்திரங்கள் ஆகிய எவையேனும் பெற்றுத்தான் கடன் அளிக்கும். இவைகள்தான் பணம் திரும்பிப்பெற பொறுப்பு, ஈடு வைக்கப்பட்டுள்ள பொருளின் முழு மதிப்பிற்கு வங்கிகள் கடனைக் கொடுக்காது. ஏனெனில், பொருள்களின் மதிப்பு அவ்வப்போது மாறக் கூடும். திடீர் என மதிப்பு குறைந்துவிட்டால் வங்கி அளித்தக் கடனுக்குப் போதிய பாதுகாப்பு இருக்காது. ரூ. 100 மதிப்புள்ள பொருளின் பேரில் ரூ. 70 வணிக வங்கி கடன் அளித்தால் இடைவெளி ரூ. 30 ஆகும். மைய வங்கி அவ்வப்போது வங்கிகள் பலவிதமான பொருள்கள்மீது எத்துணை இடைவெளி வைக்க வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கும். இடைவெளியை அதிகப்படுத்தியோ குறைவுபடுத்தியோ கடனை வேண்டிய துறைகளுக்கு அளிக்கவும், வேண்டாத துறைகளுக்கு மறுக்கவும் இயலும். உதாரணமாக விவசாய விளை பொருள்கள்

அறுவடை காலத்தில் மைய வங்கி இப்பொருள்கள்மீது அளிக்கும் கடன்களுக்கு அதிகமான இடைவெளி வைக்கக் கோரும். இதன் காரணமாக நெல், கோதுமை போன்ற தானியங்களை மொத்த வியாபாரிகள் சந்தைக்கு வருவதைத் தடுத்து, விலைகள் உயரும் காலத்தில் தானியங்களை விற்க முயலும் ஊக வணிகம் தடை செய்யப்படுகிறது. இதேபோல் தனிப்பட்ட நகர்கள் நுகர்வுக் கடனைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றால் தங்கம், தங்க நகைகள் மீது அளிக்கப்படும் கடனுக்கு அதிக இடைவெளி வைக்க மைய வங்கி ஆணை இடலாம்.

## நுகர்வோர் கடன் கட்டுப்பாடு

இம் முறையில் முக்கியமாக வாடகைக் கொள்முதல் நிறுவனங்களுக்கு அளிக்கும் கடன் கட்டுப்படுத்தப்படும். ரேடியோ, குளிர்சாதனப் பெட்டி, மின்விசிறி, போன்ற பொருள்கள் வாங்க வணிக வங்கிகள் வாடகைக் கொள்முதல் நிறுவனங்களுக்கு அளிக்கும் கடனும், நேரடியாக வாடகைக் கொள்முறைக் கடன் வாடிக்கைக்காரர்களுக்கு அளிப்பதும், சில நேரங்களில் கட்டுப்படுத்த மைய வங்கி விரும்பும். ஏனெனில், இவ்வாடகைக் கொள்முதல் கடன் அளிக்கப் பட்டால் பொதுமக்கள் இம்முறையில் பொருள்களை வாங்க விரும்புவார்கள். இதனால் இந்த நுகர்வோர் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் விரிவு அடையும். ஆனால், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை உத்தேசித்து சில முந்துமைத் துறை தொழிற்சாலைகள் வளர்வதே சாலச் சிறந்தது என மைய வங்கி எண்ணும். எனவே, வாடகைக் கொள்முதல் கடனும், நுகர்வோர் கடனையும் மைய வங்கி கட்டுப்படுத்த விரும்பும்.

மைய வங்கி வாடகைக் கொள்முறையில் எந்தெந்த பொருள்களுக்கு வணிக வங்கி நிதி வசதி அளிக்கலாம் என ஒரு பட்டியலைத் தயாராக்கலாம். இப்பொருள்கள் தவிர வேறு பொருள்களுக்கு வாடகைக் கொள்முறை நிதி, வணிக வங்கி அளிக்கக்கூடாது. வாடகைக் கொள்முதல் அளித்தால், பொருளை வாங்குபவர் வாங்கும்போது முதல் தவணையாக பொருள் விலையில் 30% அல்லது 40% பணத்தினைக் கட்ட வேண்டும் என்றும் மொத்த தவணை 5 அல்லது 6-க்கு மிகக் கூடாது என்று கட்டளைகளைப் பிறப்பித்து வாடகைக் கொள்முறை திட்டத்தின் எளிய தன்மையைக் கடினமாக ஆக்கலாம்.

அமெரிக்க நாட்டில் இரண்டாவது உலகப்போருக்குப் பிறகு மைய வங்கி இக்கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதம் பயன்படுத்தப்பட்டது. பொருளாதார நிபுணர்கள் பலர் இம் முறை மிகச் சிறந்தது என்றும் இது போன்ற கட்டுப்பாடு இல்லை என்றால் எந்த நாட்டிலும் முந்துமைத் துறை வளர்ச்சி பெற இயலாது எனக் கருதுகிறார்கள்.

### கடனைப் பகிர்ந்தளித்தல்

வங்கிகள் அளிக்கும் கடன் ஒரு சில துறைகளுக்கே செல்லாமல், எல்லா துறைகளுக்கும், குறிப்பாக மிக முக்கியமான முந்துமைத் துறைகளுக்கு கிடைக்கும் வண்ணமும், மற்றைய அவசியமற்ற துறைகளுக்கு கிடைக்காமலும் அல்லது குறைந்த அளவே கிடைக்கும்படி கடனை பகிர்ந்தளிக்க மைய வங்கி ஆணையிடலாம். எந்த எந்த தொழில்களுக்குக் கடன் வழங்கலாம், எத்தொழில்களுக்கு வழங்கலாகாது என வணிக வங்கி பட்டியல் தயாரித்து வணிக வங்கிகளுக்கு தெரிவிக்கலாம் இத்தொழில்களுக்குள் எத்தொழில்களுக்கு முக்கியத்துவம் அளித்துக் கடன் வழங்கவேண்டும், தனிப்பட்ட தொழிற் சாலைக்கு அதிகபட்சமாக எத்துணை கடன் வழங்கலாம் என வரையறை செய்யலாம். இதற்குமேல் கடன் அளிக்க வேண்டு மென்றால் மைய வங்கியின் அனுமதியைப் பெற வேண்டும். அது பரிசீலித்து தேவையானால் அனுமதி அளிக்கும்.

### மனந்தொடு வேண்டுகோள்

இம்முறையில் மைய வங்கி வணிக வங்கிகளுக்குப் பொருளாதார மற்றும் பண நிலையை விளக்கி இந்நிலையில் வணிக வங்கிகள் எக்கொள்கையை மேற்கொள்ள வேண்டும் என அறிவுரை வழங்கும். கடனைப் பெருக்கவோ, கடனைக் கட்டுப் படுத்தவோ அல்லது எத்தொழிற்சாலைகளுக்குக் கடன் அளிக்க வேண்டும் அல்லது கூடாது என்பது பற்றியோ மைய வங்கி தெரிவிக்கும். இது ஒரு வேண்டுகோளே தவிர ஆணை இல்லை. சில வங்கியல் நிபுணர்கள் இம்முறை சிறந்த முறை எனக் கூறுகின்றனர், ஆணையோ, கட்டாயமோ இல்லாததோடு நிலைமையினைக் கூறி விளக்குவதால் இம்முறை வெற்றி பெற இயலும். ஆனால், மற்றும் சிலர் இம்முறையில் கட்டாயம் இல்லாததால் பல நேரங்களில் அறிவுரைகளும், வேண்டு கோளும் 'செவிடர் காதில் ஊதிய சங்கு போல்' கேளா வார்த்தைகளாகச் செல்லக் கூடும்.

### நேரடி நடவடிக்கை

மனந்தொடு வேண்டுகோள் பயன்பெறவில்லை எனில், மைய வங்கி நேரடி நடவடிக்கை எடுக்க வேண்டிய நிலை ஏற்படும். இடைவெளி மாற்று முறை, நுகர்வோர் கடன் கட்டுப்பாடு, கடனைப் பகிர்ந்தளித்தல் எல்லாமே நேரடி நடவடிக்கை என்றே கொள்ளல் வேண்டும். நேரடி நட வடிக்கை மூலம் மைய வங்கி வணிக வங்கிக்குக் கடன் அளிப் பதை மறுக்கலாம் அல்லது குறைந்த அளவுக் கடனை மட்டும் அளிக்கலாம், வட்டி வீதத்தை உயர்த்தலாம். இம்முறைகளால் வணிக வங்கிகளை தண்டனைக்குள்ளாக்கி மைய வங்கி நோக்கு போல் நடக்குமாறு செய்ய முடியும்.

தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு பொதுக் கடனளிப்புக் கட்டுப்பாட்டைவிட கீழ்க்கண்ட வழிகளில் சிறந்தது.

1. குறிப்பிட்ட துறைகளுக்குக் கடன் அளிக்கலாம்.

2. தேவையற்ற துறைகளுக்கு அளிக்கப்படும் கடன்களை எளிதில் கட்டுப்படுத்தலாம்.

3. மைய வங்கி உடனடியாக தேவைக்கு ஏற்ப வங்கி களின் கடன் கொள்கைகளை மாற்றி அமைக்கலாம்.

4. வளையுந் தன்மையுடையது (Flexible)

எனினும், தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு பணவீக்க காலத்தில் பயன்படுமே அன்றி பொருளாதார மந்த நிலையில் பயனடையாது என்றும் சிலர் கருதுகின்றார்கள். உதாரணமாக மைய வங்கி வணிக வங்கிகள் அளிக்கும் கடன் இடைவெளியை மிகக் குறைத்தாலும், பொருளாதார மந்த நிலையில் வாணிபத் தினர் வணிக வங்கிகளிடம் அதிகக் கடன் வாங்க விரும்ப மாட்டார்கள்.

கடந்த சில ஆண்டுகளாக உலகிலுள்ள எல்லா மைய வங்கிகளும் தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடுகளை அதிக மாகப் பயன்படுத்தி வருகின்றன. பழைய கடனைக் கட்டுப் படுத்தும் பொது ஆயுதங்களா அல்லது நவீன-தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடா? இவைகளில் எது சிறந்தது? ஒரு குறிப்பிட்ட முறைதான் சிறந்தது எனக் கூற இயலாது. சந்தை நிலைமையையும், வணிக வங்கிகளின் பழக்கத்தை ஒட்டியும்

தான் எது சிறந்த முறை எனக் கூறப்படும். பொதுவாக எல்லா நாடுகளிலும் இருமுறைகளையும் சேர்த்தே பயன்படுத்துகின்றனர். மைய வங்கி வீதத்தை உயர்த்தி, ரொக்கக் காப்பு மாற்ற முறையில் அதிக காப்பை மைய வங்கி பெற்று மேலும் தேர்வுக் கடனளிப்பு முறையும் கையாளப்படுகின்றது. இதனால் தேவையான முடிவு கிடைக்கின்றது.

### மைய வங்கியின் வளர்ச்சி (Evolution of Central Bank)

மைய வங்கியின் கோட்பாட்டில் சென்ற நூறு ஆண்டுகளாகப் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுள்ளது. மைய வங்கியின் பணிகள் யாவை என்பதை வெகு காலம் அறுதியிட்டுக் கூற முடியவில்லை. மிகப் பழம்பெரும் மைய வங்கியான பாங் ஆஃப் இங்கிலாந்தை மாதிரியாக எடுத்துக்கொண்டு பல காலம் வரை அவ்வங்கி எப்பணிகளைச் செய்கின்றதோ அவைகள் தான் மைய வங்கியின் பணிகள் என எல்லா நாடுகளிலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. இன்றும் பல பொருளாதாரப் பின்தங்கிய நாடுகளும், சமீபத்தில் விடுதலை பெற்ற ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் எல்லாம் இங்கிலாந்தின் மைய வங்கியின் பணியைப் பார்த்து தங்களுடைய பணிகளை மாற்றி அமைத்துக் கொள்கின்றன.

மைய வங்கியின் வைதீகக் (orthodox) கொள்கைப்படி அது கடனைக் கட்டுப்படுத்தவும், பணச் சந்தையை கண்காணிக்க வேண்டும். மைய வங்கி, வங்கிகளை மேற்பார்வை செய்து, கண்காணிக்கும் வங்கியே தவிர, அதுவே ஒரு வங்கியாக இயங்கக் கூடாது. சமீப காலங்களில் பல சிறிய நாடுகள் மைய வங்கிகளை ஏற்படுத்தியிருக்கின்றன. அவைகள் மைய வங்கிக்கு இந்தெந்த பணிகள் என்று அறுதியிட்டுக் கூறவில்லை. ஏதோ அரசாங்கம் என்ற அமைப்பே போல் பணத்திற்கு என்று ஒரு நிறுவனம் என்னும் முறையிலும், எவ்விதம் ஒரு நாட்டிற்கு விமானப்படை, கப்பற்படை, தரைப்படை ஒரு கவுரமிக்க அணியோ அதேபோல் மைய வங்கியும் ஒரு நாட்டுக்கு இருக்க வேண்டிய ஒரு நிறுவனம் என்ற முறையிலும் தோற்றுவிக்கப் பட்டுள்ளது.

எல்லா மைய வங்கிகளும், பொருளாதார வளர்ச்சி தங்களின் முக்கிய பணி என்னும் முறையில் பொருளாதார வளர்சிக்கு நேரடிக் கடன் அளிக்க முன் வந்துள்ளன. பொருளாதார மேம்பாடு அடையாத நாடுகளில் பண உதவி செய்யும் பல நிதி நிறுவனங்களில் மைய வங்கியும் ஒன்ருக அமைகிறது.

இந்தியாவில் ரிசர்வு வங்கி தொழிற் கடனுக்கு பல கழகங்கள் ஏற்படுத்தி பெருமளவு கடன் அளிப்பதோடு விவசாயக் கடன் கூட்டுறவுகள் மூலம் பெரும் அளவுக்கு அளித்து வருகின்றது. இது மைய வங்கியின் பழம் பெரும் கொள்கைக்கு மாறுனது. சில பொருளாதார, வங்கியியல் நிபுணர்கள் இம்மாறுதலைப் பார்த்து மைய வங்கிகள் தங்கள் தூய சேவையினின்று நீர்த்து விட்டன (diluted) என்றும் கூறுகிறுர்கள்.

பொருளாதாரம் வளர்ச்சி பெருத பின்தங்கிய நாடுகளில் மைய வங்கி தேவைதானு என்பது ஒரு முக்கியமான வினு? இது போன்ற நாடுகளில் வைதீகக் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் பயன் ஏதும் அளிக்க முடியாது. மைய வங்கியின் பழங்கோட்பாட்டின்படி கடனைக் கட்டுப்படுத்துவது அதன் முக்கிய குறிக்கோளாகும். நைஜீரியா நாட்டில் மைய வங்கி தேவையா என்று J.L. ஃபிஷர் (J.L. Fisher) என்பார் தலைமையில் 1952-ம் ஆண்டு அமைக்கப்பட்ட குழு "நிலவும் நிதி நிலைமை, பணச் சந்தையை நோக்கும்போது மைய வங்கி செய்யக்கூடிய பணி மிக மிகச் சிறியதாகத்தான் உள்ளது. மைய வங்கி ஆரம்பித்தால் இதில் வேலை ஏற்க போதிய திறமை வாய்ந்த அலுவலர்கள் கிடைப்பார்களா என்பதே சந்தேகமாக இருக்கிறது. இந்நிலையில் உடனடியாக மைய வங்கி தேவை இல்லை" என்று இக்குழு பரிந்துரை செய்தது. இக்குழுவின் எண்ணப்படி நைஜீரிய நாட்டிற்கு உடனடியாகத் தேவையானது, சேமிப்பும், முதல் அமைப்பும் (Capital formation) ஆகும். இவை அமைந்த பிறகு பல கட்டங்களுக்குப் பிறகே மைய வங்கி அமைப்பைத் திட்டமிடலாம். பாங்க் ஆஃப் இங்கிலாந்தின் முன்னுள் ஆளுநர், சீமான் கோபால்டு கருத்துப்படி "பின்தங்கிய பொருளாதாரமும் வங்கியலும் கொண்ட நாடுகளில் மைய வங்கி அதிகச் செலவுள்ள போகப் பொருளேயாகும். ஆரம்பப் பொருளாதார வளர்ச்சி காலத்தில் மைய வங்கியிடம் நம்பிக்கை வைப்பது மிகவும் அபாயகரமானதாகும்."

பொருளாதார பின்தங்கிய நாடுகளில் கீழ்க்கண்ட இடையூறுகள் மைய வங்கி செயல்பாட்டிற்கு முட்டுக்கட்டையாக அமையும்.

1. ஒழுங்குபடாத பணச் சந்தையில் வங்கிகள் அன்றி மற்றைய நிறுவனங்களில் அதிகப் பணம் முடங்கி இருக்கும்.

2. சீரான வட்டி வீதம் இல்லாமை.

3. வணிக வங்கிகளுக்கும், மைய வங்கிக்கும் தொடர்பு இல்லாமை.

4. சேமிப்பும், முதலமைப்பும் இல்லாமை.

5. பங்குச் சந்தை இல்லாமை.

மேற்கண்ட காரணங்களினுல் மைய வங்கியின் முக்கியத் துவம் மிகவும் குறைந்து விடுகின்றது.

ஆனுல், மேற்கூறிய காரணங்களினுல் மைய வங்கியைப் பொருளாதார வளர்ச்சியடையாத பின் தங்கிய நாடுகளில் அமைக்காமல் இருப்பது பெருந்தவறு என சில நிபுணர்கள் கருதுகிருர்கள். இவர்கள் கருத்துப்படி இந்த நிலேயே மைய வங்கியின் அவசியத்திற்கு அறிகுறியாகும்.

நவீன காலத்தில் மைய வங்கி கடனேக் கட்டுப்படுத்துவதுடன் நோட்டை அடித்து வெளியிடும் பணியும், அரசாங்கத்தின் வங்கியாக இருப்பதும் இரு முக்கிய பணிகளாக அமைந்துள்ளன. பணத்தினே அடித்து வெளியிடும் முக்கியமான நிறுவனம் என்னும் முறையிலும், அரசாங்கத்தின் வங்கி என்ற முறையில் அரசாங்கத்தின் பணத்தை வைத்திருக்கவும், தேவைப்பட்டபோது கடனளிக்கவும் மைய வங்கி தேவைப் படுகின்றது. இப்பணிகள் பொருளாதாரமும், வங்கியியலும் வளர்ச்சியடையாத நாடுகளிலும் தேவைப்படுகின்றது. இப் பணிகளே அளிக்க பொருளாதாரம் வளர்ந்த, வளராத எல்லா நாடுகளிலும் மைய வங்கி தேவைப்படுகின்றது. மேலும், பொருளாதார வளர்ச்சிப் பெருத நாடுகளில் பணச் சந்தை இரு கூருகப் பிரிந்துள்ளது. ஒரு பகுதி மைய வங்கியின் கட்டுப் பாட்டில் இல்லாமல் இருக்கின்றது. இப்பகுதியைக் கட்டுப் படுத்தி, இதன் நடவடிக்கைகளே ஒழுங்குபடுத்த மைய வங்கியின் தேவை மிக அவசியப்படுகின்றது.

பின் தங்கியப் பொருளாதார நிலேயில் உள்ள நாடுகளில் மைய வங்கி பொருளாதார வளர்ச்சிக்கு முக்கியமான ஒரு நிறுவனமாகக் கருதப்படுகிறது. 1950-ம் ஆண்டுக்குப் பிறகு ஆரம்பிக்கப்பட்டுள்ள பல மைய வங்கிகள் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு என்று ஏற்பட்ட நிறுவனம் போல் செயல்படத் தொடங்கியுள்ளன. தொழில் கடன் மற்றும் விவசாயக் கடன் ஆகியவைகளுக்கு நேரடி, மற்றும் மறை முகக் கடனேப் பெரிய அளவில் அளிக்க ஆரம்பித்துள்ளன.

பல நிதிக் கழகங்கள் ஏற்படுத்தி அதில் முழு பங்கினையோ, பெரும் பங்கினையோ ஏற்று தொழில் மற்றும் விவசாயக் கடன்களை அளித்து வருகின்றது. இந்தியாவில் ரிசர்வு வங்கி கடந்த 20 ஆண்டுகளில் தொழில் மற்றும் விவசாயக் கடன் அளிக்கப் பெரிய அளவில் முன் வந்துள்ளது தெரிந்ததே.

பின் தங்கியப் பொருளாதார நாடுகளில் மைய வங்கியைத் தோற்றுவிக்காமல் அப்பணியினை ஒரு பெரிய வணிக வங்கிக்கு அளிக்கலாமா? மைய வங்கி தோற்றுவிக்க நல்ல சூழ்நிலை இல்லாத நாடுகளில் வணிக வங்கி மைய வங்கியின் பணியினை ஏற்றுச் செய்யலாம் என்று சிலர் கருத்து தெரிவித்துள்ளனர். ஆனால், இந்த நிலையில் சில சங்கடங்கள் உள்ளன. வணிக வங்கியே மைய வங்கிச் செயலைச் செய்வதால் மற்ற வணிக வங்கிகள் தங்களுடன் போட்டி போட வந்துள்ள ஒரு வங்கி எனக் கருதுவார்களே தவிர ஒரு மதிப்புக்கும், மரியாதைக்கும் உரிய உயர்ந்த வங்கி என நோக்க மாட்டார்கள். ஆகவே, அவ்வங்கியிடம் தங்கள் உண்டியல்களை மறு கழிவுப்பாடு செய்துகொள்ளவோ, கடனைப் பெறவோ வணிக வங்கிகள் விரும்ப மாட்டா. இந்தியாவில் ரிசர்வு வங்கி தொடங்கும்முன் இம்பீரியல் வங்கி வணிக வங்கியாக இருந்த போதிலும் மைய வங்கிப் பணியினை செய்து வந்தது. பல வணிக வங்கிகள் இம்பீரியல் வங்கியிடம் உதவி நாடி நிற்பது தங்கள் தகுதிக்குக் குறைவு என்றே கருதின. எனவேதான், ரிசர்வு வங்கி தோற்றுவிக்கப்பட்டது.

மைய வங்கிகள் வளர்ச்சியில் மைய வங்கி உயர்ந்ததா கருவூலம் (Treasury of Government) சிறந்ததா என்ற சர்ச்சை வெகு காலமாக இருந்து வந்தது. மைய வங்கிகள் ஆரம்பத்தில் அவற்றின் தனித் தன்மையும், சுதந்திரமும் முக்கியமாகக் கருதப்பட்டது, அரசாங்கம் மைய வங்கியை உடமையாக்கக் கூடாது, மைய வங்கியின் கோட்பாடுகளுக்கும் நடைமுறைகளுக்கும் எவ்வித முட்டுக் கட்டையும் போடக்கூடாது என்று எண்ணி மைய வங்கி தனிப்பட்ட பங்குதாரர்கள் வங்கியாகவே இருந்து வந்தது. பாங்க்ஆஃப் இங்கிலாந்து ஆரம்பத்தில் தனிப்பட்ட பங்குதாரர்கள் வங்கியாகவே இயங்கி வந்தது. இச் சீமாட்டியை (ஆங்கிலத்தில் இம் முதுபெரும் சீமாட்டியை old lady of the Thread needle Street என்று மரியாதையுடன் குறிப்பிடுவர்) அரசாங்கம் பல முறை தனக்குத் தேவையான கடனுக்கு அணுகி வாங்கிக்கொண்டு வந்தது. பல நேரங்களில் அரசுக் கொள்கையையும், நிதி நிலைமையையும், பணம்,

செய்யும் கொள்கைகளையும் மைய வங்கி கண்டித்தும், உதவியை மறுத்தும் வந்தது. உலகப் போர் நேரத்தில் அரசுக்கும் மைய வங்கிக்கும் பணக் கொள்கை வேற்றுமையில் கடைசியாக மைய வங்கியின் முடிவே மாற்ற முடியாத முடிவாக அமைந்தது. அரசுக்கும், மைய வங்கிக்கும் ஏற்பட்டுவந்த வேற்றுமைகள், அதிகரிக்கவே சட்டம் இயற்றும் உரிமை கொண்டிருந்த அரசு மைய வங்கியை பல காரணங்களைக் காட்டி தேசியமயமாக்கியது. இதனைத் தொடர்ந்து எல்லா மைய வங்கிகளும் தேசியமயமாக்கப்பட்டது. மைய வங்கியைப் பற்றி தேசியமயமாக்கப்பட வேண்டுமா என்ற கேள்வி முற்றுபெற்று எல்லா நாடுகளும் மைய வங்கிகளை தேசிய மயமாக்கி விட்டார்கள்.

மைய வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டதற்கு கீழ்க்கண்ட காரணங்கள் ஆகும்.

1. மைய வங்கி, நோட்டை அச்சடித்து வெளியீடு செய்வதோடு, நாட்டின் பணச் சந்தையைக் கட்டுப்படுத்தும் ஒரு முக்கிய நிறுவனம். சில பங்குதாரர்கள் கையில் இதனைவிட்டு வைப்பது அபாயகரமானது.

2. மைய வங்கி இலாப நோக்கின்றி செயல்பட வேண்டும். பங்குதாரர்கள் வங்கியாக இருந்தால் இலாப நோக்கே இருக்கும்.

3. அரசின் கொள்கைக்கும், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கும் பயனுள்ளவாறு செயல்பட வேண்டும்.

மைய வங்கியின் அமைப்பிலும், கோட்பாட்டிலும் மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே வந்துள்ளன. வணிக வங்கி, மைய வங்கிகள் ஆகியவற்றின் கோட்பாடுகளில் மாற்றம், பொருளாதார மாறுதலாலும், பொருளாதார வளர்ச்சிக்கு வங்கிகள் முக்கிய அங்கங்களாகத் திகழ வேண்டும் என்ற எண்ணங்கள் காரணமாகும்.

## மைய வங்கியும்–பணவாக்க கைக்கோளும் (Central Bank and monetary Policy)

பணத்தினை அதிகரித்தலும், கட்டுப்படுத்தலும் மைய வங்கியின் கையில் உள்ளது. மைய வங்கி நோட்டுகளையும்,

நாணயங்களையும் வெளியிடுவது தவிர வணிக வங்கிகளின் கடனை ஏற்படுத்தவும், குறைக்கவும் செய்யத் தேவையான சக்தியைப் பெற்றுள்ளது.

பணம் என்பது எல்லோராலும், தங்கள் பொருள்களுக்கும், தாங்கள் செய்யும் சேவைக்காக பெற்றுக் கொள்ள ஒப்புக் கொள்ளும், ஒன்றேயாகும். பணம் என்பது பணம் செய்யும் பணிகளேயாம் (Money is what money does) என்றும் சொல் வார்கள். பணவாக்கக் கைக்கோள் என்பது மைய வங்கி பணம் பற்றி எக் கொள்கையை மேற் கொள்கிறது என்பதேயாகும். பணத்தை அதிகரிக்க வேண்டுமா, பணத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமா, மைய வங்கி வீதம் உயர்த்தப்பட வேண்டுமா அல்லது தளர்த்தப்பட வேண்டுமா, சுலபப் பணக் கொள்கை கையளப் பட வேண்டுமா என்பது போன்ற பண சம்பந்தப் பட்டக் கொள்கையே பணவாக்கக் கைக்கோள்.

ஐந்து வகையான பணவாக்கக் கைக்கோள் உள்ளன. அவையாவன:

1. நடுநிலைமைப் பணம் (Neutral money)
2. அந்நியச் செலாவணி வீதக் கட்டுப்பாடு (Exchange-rate stability)
3. விலையை நிரந்தரப் படுத்தும் கொள்கை (Price-stabilisation polioy)
4. முழுமை வேலைப்பாடு (Full emploment)
5. பொருளாதார வளர்ச்சி (Economic development)

**நடு நிலைமைப் பணம்**

மைய வங்கியின் பணக் கொள்கை நடுநிலைமைப் பணத்தை நிலை நிறுத்துதல் என்னும் கருத்து D.H. ராபர்ட்ஸன், ஹேக், போன்ற பணப் பொருளாதார நிபுணர்களின் கருத்தாகும். இக் கொள்கைப்படி பணம் என்பது பொருள்களை ஒருவரிடமிருந்து மற்றவர் வாங்கவோ, விற்கவோ பயன்படக் கூடியதாக மட்டும் இருக்க வேண்டும். பணத்தின் பணி வியாபாரங்கள் அதனூடே செய்ய வகை செய்வதாகும் (Medium of exchange). ஆனல், பணம் பொருளாதாரத்தில் சங்கடம் ஏதும் செய்ய அனுமதிக்கக்கூடாது. பணத்தின்

மதிப்பு சில நேரங்களில் உயர்வதும் மற்றும் சில நேரங்களில் குறைவதும் தவிர்க்கப் படவேண்டும். பணம் துணியினை அளக்கும் அளவு கோலுக்கு ஒப்பிடலாம். இந்த அளவு கோலே சில நேரங்கள் நீள்வதும், சிலநேரங்களில் குறைவதும் அனுமதிக்கப்படலாமா? இதே போல் பணமதிப்பு உயர்வும், தாழ்வும் தவிர்க்கப்பட வேண்டியவைகள் பணம் நடு நிலைமையாக இருக்க வேண்டும்.

நடுநிலைக் கொள்கையை வலியுறுத்துபவர்கள், பொருளா தாரத்தில் ஏற்படும் மாறுதல்களுக்குப் பணத்தின் அளவு (Quantity) உயர்வதும் தாழ்வதும் காரணம் எனக் கருதுகிறார்கள். இச்சித்தாந்தத்தின்படி மைய வங்கியோ அல்லது பணத்தைக் கட்டுப்படுத்தும் எந்த நிறுவனமோ நாட்டில் உலவி வரும் மொத்தப் பணத்தை நிலைப் படுத்தினால் பொருளாதாரத்தில் ஏற்படும் பல இடைஞ்சல்களை நீக்கலாம். பணம் நிரந்தரப் படுத்தப்பட்டு, பண எண்ணிக்கை மாறுதல் இல்லாமல் இருந்தால் உற்பத்தி சக்தியைப் பொறுத்து பணத்தின் மதிப்பு அமையும். பொருளாதாரத்தில் புதிய கண்டு பிடிப்பு, இரசாயன தொழில் முன்னேற்றம் காரணமாக உற்பத்தித்திறன் அதிகரித்தால், பண அளவில் மாறுதல் ஏதும் இல்லாததால் விலைகள் வீழ்ச்சி அடையும்.

மேலே கூறிய தத்துவத்தில் சில குறைபாடுகள் உண்டு. பணத்தினை நிலைப் படுத்த வேண்டுமென்றால், பணம் என்பது மைய வங்கி வெளியிடும் பணத்தினைத்தவிர வங்கிகள் ஏற்படுத்தும் கடனும் உட்பட்டது ஆகும். மைய வங்கி தான் வெளியிடும் பணத்தின் அளவை வேண்டுமென்றால் நிலைப்படுத்தலாம். ஆனால், வணிக வங்கிகள் ஏற்படுத்தக்கூடிய கடன் முழுவதற்கும் மைய வங்கி தடை செய்ய இயலாது. மேலும், உற்பத்தி பெருக பணமும், கடனும் அவசியமானது. நிலையான பண அளவைக் கொண்டு பொருளாதார வளர்ச்சியை எதிர் நோக்க முடியாது. உற்பத்தி பெருகி பண அளவு அதிகரிக்காவிட்டால் விலைகள் வீழ்ச்சி அடைந்து உற்பத்தியில் மந்த நிலை ஏற்பட வாய்ப்புகள் உண்டு. நடு நிலைமைப் பணக் கொள்கை பண அளவுத் தேற்றத்தின் (Quantity theory of money) அடிப்படையில் அமைந்தது. இத் தேற்றமே பல குறைபாடுகளைக் கொண்ட தேற்றம். நடு நிலைமைப் பணக் கொள்கை பொருளாதார மந்த நிலையைத் தோற்றுவிக்கும். உற்பத்தி பெருகி, பண அளவு அதே நிலையிலிருந்தால் விலைகள் வீழ்ச்சி அடையும். பொருளாதார

மந்த நிலையில் உற்பத்தியும் குறையும், விலையும் குறையும். ஆனால், இக் கொள்கைப் படி உற்பத்தி அதிகரிக்கும், உற்பத்திச் செலவில் மாற்றமிராது. ஆனால், விலைவாசிகள் குறையும். இது சாத்தியமான காரியம் அல்ல. பணத்தின் மதிப்பு பணத்தின் எண்ணிக்கையைத் தவிர அது சுற்றிவரும் வேகத்தினையும் (Velocity of circulation) பொருத்ததே. இம் முக்தியக் கருத்து இக் குறிக்கோளில் விடப்பட்டுள்ளது.

## அந்நியச் செலாவணி வீதக் கட்டுப்பாடு

மைய வங்கியின் பணக் கொள்கையின் முக்கிய குறிக்கோள் அந்நியச் செலாவணி வீதக் கட்டுப்பாடு என்ற கருத்தினை சிலப் பொருளாதார நிபுணர்கள் கருதுகிறார்கள்.

தங்க நிலை இருந்த காலத்தில் நிரந்தர அந்நியச் செலாவணி வீதம் (stable exchange rate) ஒரு முக்கிய குறிக்கோளாக இருந்தது. அந்நியச் செலாவணி வீதத்தில் வீழ்ச்சி ஏற்பட்டால் பன்னாட்டு வாணிபத்தில் அந் நாட்டின் ஏற்றுமதி குறைந்து இறக்குமதி அதிகரிக்கும். அந்நாட்டில் முதலீடு செய்வது குறையும். இக்காரணங்களால் முதலீடு செய்வது பாதிக்கப் பட்டு பொருளாதாரம் சீர் குலைவு அடையும். எனவே, சீரான நிலைமை ஏற்பட அந்நியச் செலாவணி வீதம் கட்டுப்படுத்தப் படல் வேண்டும். இதுவே விலைவாசிகளைக் கட்டுப படுத்தும். மேலும், தங்கநிலை நிலைத்திருக்க வேண்டுமானல் எந்த ஒரு நாடும் அதிகமாக தங்கத்தினை பெற்றுக்கொண்டே இருக்கக் கூடாது. அதே போல் எந்த ஒருநாடும் தங்கத்தினை இழந்து கொண்டே இருக்கக்கூடாது. தங்க நிலையின் விளையாட்டை (game of the gold standard) ஒழுங்காக விளையாட வேண்டும். இவ் விளையாட்டானது. எந்த ஒரு நாடு அதிகமாக தங்கத்தினை இழந்து கொண்டே இருக்கின்றதோ அந்த நாடு மைய வங்கி வீதத்தை உயர்த்திக் கடனைக் கட்டுப்படுத்த வேண்டும். இதே போல் எந்த ஒருநாடு தங்கத்தினை அதிகமாகப் பெற்றுக் கொண்டே இருக்கின்றதோ அந்த நாடு மைய வங்கி வீதத்தைக் குறைத்து, கடனைப் பெருக்க வேண்டும். இம் முறைகளினல் தங்கம் இழந்து கொண்டிருக்கும் நாடுகளில் பணப் புழக்கம் குறைந்து விலைவாசிகள் குறையும். தங்கம் அதிகமாகப் பெற்றுக் கொண்டிருக்கும் நாட்டில் இம் முறையினல் பணப் புழக்கம் அதிகரித்து விலைவாசிகள் அதிகரிக்கும். எனவே, தங்கத்தை இழக்கும் நாட்டின் ஏற்றுமதி அதிகரித்து இறக்குமதி குறையும். இதற்கு மாருன நிலை மற்றைய நாட்டில் ஏற்படும்.

இவ் விளையாட்டு சரிவர விளையாடாத காரணத்தினால்தான் தங்கநிலை 1931-ம் ஆண்டு தகர்த்து எறியப்பட்டது. மைய வங்கி வீதம், மற்றைய கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் ஆகிய பணவாக்கக் கைக்கோள் தங்கம் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குச் செல்வதைக் கட்டுப்படுத்தும் வகையில் பயன்படுத்தப்பட்டு வந்தது.

### விலையை நிரந்தரப்படுத்தும் கொள்கை

தங்க நிலை காலத்தில் அந்நியச் செலாவணி வீதக் கட்டுப்பாடு, பணவாக்கக் கைக்கோளின் முக்கிய தத்துவமாக இருந்து வந்தது. தங்க நிலை முறிவு அடைந்த பின் விலைவாசிகளை நிரந்தரப்படுத்தும் கொள்கை முக்கியமாக கருதப்படுகின்றது விலைவாசிகள் பணத்தின் அளவைப் பொருத்து இருக்கும். நாட்டில் அதிகப் பணப்புழக்கம் இருந்தால், விலைவாசிகள் உயர்ந்து பணவீக்க நிலையை ஏற்படுத்தும். பணப்புழக்கம் குறைந்தால் விலைவாசிகள் வீழ்ச்சி அடையும். நாட்டில் ஏற்படும் பணப்புழக்கம் மையவங்கி வெளியிடும் நோட்டுகள், பணம், வணிக வங்கிகள் ஏற்படுத்தும் கடன் மற்றும் பணம் சுற்றிவரும் வேகம் (velocity) ஆகியவைகளை பொருத்திருக்கும். பணப்புழக்கம் அதிகமாகி விலைவாசிகள் உயர்ந்த நிலையில் மைய வங்கி வணிக வங்கிகளின் கடன் ஏற்படுத்தும் திறனைக் குறைத்து பணப்புழக்கத்தைக் குறைக்கவும், பணப்புழக்கம் மிகவும் குறைந்து மந்த நிலையில் அதனை அதிகரிப்பதுவும் மைய வங்கியின் முக்கிய குறிக்கோளாக கருதப் படுகின்றது. இதைத் தவிர வாணிபச் சுழல் (Trade cycle) காரணமாக பொருளாதாரத்தில் சில நேரங்களில் நம்பிக்கை ஏற்பட்டு முதலீடு நுகர்வு அதிகரித்துக் கொண்டே போய் அதிக விலைவாசிக்குக் கொண்டு நிறுத்தி, அச்சத்தின் காரணமாக மந்த நிலைமை சில காலங்களில் ஏற்படுத்துவதும் மாறி, மாறி நடக்கும் வியாபார சக்கரம் ஆகும். மந்த நிலையிலிருந்து சீரான நிலக்கும், வியாபார சக்கரம் உச்ச கட்டத்தை அடைந்து முறியாமல் இருக்கவும் பணவாக்க கைக்கோள் பயன் படுத்தப்படுகிறது.

### முழுமை வேலைப்பாடு

நாட்டின் பொருளாதாரம் நலம் பெற்றிருக்க எல்லோருக்கும் வேலை வாய்ப்பும், நாட்டில் உள்ள எல்லா உற்பத்திக் காரணிகளும் முழுமையாகப் பயன் படுத்தலும் வேண்டும். முழுமை வேலைப்பாடு பொருளாதார நல்வாழ்விற்கு இன்றியமையாதது. இக் கொள்கை பணவாக்கக் கைக்கோளாக இருத்தல் வேண்டும் என்ற கீன்சு பெருமான் General Theory of Interest

Employment and Money என்ற தன்னுடைய ஆராய்ச்சி நூலில் வெளியிட்டார்.

முழுமை வேலைப்பாடு என்ற தொடருக்கு பொருளாதாரத்தில் தெளிவான வரையறை இல்லை. இத் தொடரைப் பல பொருளாதார நிபுணர்கள் பலவிதத்தில் விவரிக்கின்றனர். வேலை செய்யக்கூடிய, வேலை செய்ய விருப்பமுள்ள எல்லோருக்கும், நடை முறை கூலியில் வேலை வாய்ப்பு அளிப்பது முழுமை வேலைப்பாடு ஆகும். முழுமை வேலைப்பாடு உள்ள பொருளாதாரத்தில் எத்துணைபேர் வேலை விரும்புகின்றனவோ அத்துணை அளவு வேலைகள் இருக்கும். மிகக் குறைந்த அளவு, 2 அல்லது 3 சதவீதம் பேர் வேலை வாயப்பு இல்லாமல் இருக்கலாம் இது கால வேலையின்மை (seasonal unemployment) இயந்திரசாதன வேலையின்மை (Structural-unemployment) காரணமாக இருக்கலாம்.

பொருளாதாரம் மிகவும் மேம்பாடு அடைந்துள்ள நாடுகளில் முழுமை வேலைப்பாடு நிலை ஏற்படும். பின் தங்கிய நாடுகளில் வேலையின்மை அதிகமாக இருக்கும். முழுமை வேலைப்பாடு நிலைமை ஏற்படாத காரணம் முதலீடு (Investment) குறைவதால் இருக்கலாம். இந்நிலையில் சேமிப்பை (Savings) விட முதலீடு அதிகமாக ஆக்க வேண்டும். முதலீடு அதிகரிக்க வங்கிகள் கடன் ஏற்படுததும் திறனை அதிகரிக்கலாம் அல்லது பணம் சுற்றிவரும் வேகத்தினை அதிகரிக்கலாம். இவை ஏற்பட வட்டி வீதத்தைக் குறைக்கவேண்டும் மைய வங்கி மலிவு பணக் கொள்கையை (cheap money policy) கையாளவேண்டும். இதனல் வங்கிகளிலிருந்து கடனை அதிகம் பெற்று, முதலீடு அதிகரிக்கும். இம்முறையினுல் முதலீடு அதிகரிக்க அதிகரிக்க வேலை வாய்ப்பு அதிகரித்துக் கொண்டே போகும். வேலை வாய்ப்பு பன்மடங்கு பெருக்கத்தால் (Multiplier) அதிகரிக்கும். இம்முறையில் முழுமை வேலைப்பாடு அடைந்தவுடன் பணவாக்கக் கைக்கோள் முதலீட்டையும் சேமிப்பையும் முழுமை வேலைப்பாட்டு நிலையிலே வைத்திருக்கவேண்டும். முழுமை வேலைப்பாடு அடையும்வரை விலைவாசிகள் சற்று உயர்ந்து கொண்டே போகும். இது தேவையான உயர்வு· பொருளாதார வளர்ச்சிக்கு இவ்வுயர்வு ஒரு டானிக் போல் அமையும். முழுமை வேலைப்பாடு அடைந்தவுடன் விலைவாசிகளை நிரந்தரப்படுத்துதலும் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

### பொருளாதார வளர்ச்சி

மைய வங்கியின் பணவாக்க கைக்கோள் பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தும் வகையில் இருத்தல் வேண்டும் என்ற கொள்கையினை சில நிபுணர்கள் கூறுகிறார்கள். வெகு காலமாக மைய வங்கியின் கடனைக் கட்டுப்படுத்தும் குறிக் கோள் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை குறைத்து வியா பாரத்தில் நிரந்தரம் ஏற்படுத்தி முழுமை வேலைப்பாட்டை அடைவதேயாகும் என்ற கருத்து நிலவி வந்தது. ஆனால், இந்தத் தத்துவம் பொருளாதார வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கே உகந்தது என்றும், பொருளாதாரத்தில் பின் தங்கிய நாடுகளில் மைய வங்கியின் குறிக்கோள் பொருளாதார வளர்ச்சிக்கு வித்திடுவதேயாகும் என்ற கருத்து நிலவ ஆரம்பித்தது. முழுமை வேலைப்பாடு என்பது வேலை வாய்ப்புகளை அதிகரித்து, வேலையின்மையை போக்குவது ஆகும். இது ஒரு குறுகிய காலத் திட்டம். இருக்கக் கூடிய பொருளாதார நிலையில் தேவையை அதிகரித்து, முதலீட்டை அதிகரித்து வேலை வாய்ப்பை அதிகரிப்பதாகும். ஆனால், பொருளாதார வளர்ச்சி என்பது இதனினும் பெரிய ஒன்று. இது ஒரு நீண்ட காலத் திட்டம். உற்பத்திக்கான நான்கு காரணிகளையும் பயனில்லாமல் இருக்கும் நிலையினைக் கண்டு மேலும் உற்பத்தியைப் பெருக்கி, தேசிய வருமானத்தை அதிகரிப்பதாகும். பொருளாதார வளர்ச்சிக்கு மைய வங்கி உதவவேண்டும் என்ற நிலையில் மைய வங்கிகள் பின் தங்கியப் பொருளாதாரம் உடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கு என, நேரடியாக தொழில் மற்றும் விவசாயம் போன்ற துறைகளுக்குக் கடன் அளிப்பது மட்டுமில்லாமல் இத் துறைகளுக்கு ஆக்கம் அளிக்கும் வண்ணம் வட்டிவீதத்தினையும், வங்கிகளின் கடன் கொள்கை யையும் மாற்றி அமைக்கின்றது.

### அரசு வருவாய் கைக்கோள் (Fiscal Policy)

அரசு வருவாய் கைக்கோள் என்பது அரசின் வரிக் கொள்கை, பொதுக்கடன், பொதுக்கடன் நிருவாகம் ஆகியவைகளை குறிக்கும். ஒவ்வொரு அரசும் வரி விதிக்கின்றது. இவ் வரிகள் நேரிடை வரியாகவோ மறைமுக வரியாகவோ இருக்கலாம். இவ் வருவாயைக் கொண்டே அரசு செய்ய வேண்டிய பல செலவுகள் செய்யப் படுகின்றன. அரசு நிர்வாகம், பொதுப்பணி, சட்டம், ஒழுங்கு, கல்வி, சுகாதாரம், பாதுகாப்பு ஆகிய பல செலவினங்களை அரசு ஏற்க வேண்டி உள்ளது. ஆண்டுதோறும் தன் வருவாய்க் கொள்கையை

அரசு மாற்றி அமைக்கும். வருமானவரி மற்றும் கூட்டுப் பங்கு கம்பெனி, வியாபார நிறுவனங்கள் பெறும் இலாபத்தில் வரி ஆகியவைகளை அதிகரித்தோ, குறைத்தோ நாட்டின் பணப் புழக்கத்தை குறைக்க முடியும்.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் மைய வங்கியின் பணவாக்கக் கைக்கோள் குறை உடையது என்றும், அதனைவிட அரசு வருவாய் கைக்கோளே நாட்டின் பண நிலைமையையும், விலைவாசிகளையும் கட்டுப்படுத்தக் கூடியது என்று கருதப்பட்டது. 1951-ம் ஆண்டில் பாங்க் ஆஃப் இங்கிலாந்து மைய வங்கி வீதத்தை உயர்த்தியதும் மற்ற மைய வங்கிகளும் மைய வங்கி வீதம், மற்றும் இதர பணவாக்கக் கைக்கோள்களை பயன்படுத்த ஆரம்பித்தன.

இப்போது பணநிலைமை சீராக்கி, விலை வாசியைக் கட்டுப்படுத்த இரு கைக்கோள்களும் சேர்த்தே நடவடிக்கை எடுத்தல் சிறந்தது என்ற கருத்து நிலவி வருகின்றது.

## பாட நூல்கள்


1. J. M. KEYNES—A Treatise on Money.
2. DE KOCK—Central Banking.
3. H. V. R. IYENGAR—Monetary Policy and Economic Growth.
4. R. S. SAYERS—Modern Banking.
5. S. N. SEN—Central Banking in Undeveloped Money Markets.

# 14. வங்கியல்களை ஒழுங்குபடுத்தும் சட்டங்கள்

## (Acts to Regulate Banks)

வங்கியல்களின் நடத்தையை ஒழுங்குபடுத்த இந்தியாவில் ஏற்பட்ட சட்டங்களின் மாற்றங்கள் கீழே விவரிக்கப் பட்டுள்ளன.

### கம்பெனிச் சட்டம், 1913 (Companies Act 1913)

1937-ம் ஆண்டுவரை வங்கியல்கள் கம்பெனிச் சட்டம் 1913-ன் கீழ் பதிவுச் செய்யப்பட்டன. இச்சட்டத்தின் சில பிரிவுகளே வங்கிகளுக்கும் மற்றைய கம்பெனிகளுக்கும் உள்ள வேற்றுமைகளைக் குறித்து வங்கிகளுக்காக இருந்தன.

இச்சட்டத்தில் வங்கிகளின் தொழிலுக்கான ஒழுங்கு முறைச் சட்டங்கள் ஏதும் இல்லாததால் இச்சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட வங்கிகள் சரியான சட்ட திட்டத்திற்குள் அமையாமல் தங்கள் இச்சை போல் கட்டுபாடு ஏதும் இல்லாமல் வங்கிகள் நடந்துவந்தன. இது பெரும் குறைபாடு என்றும் வைப்புதாரர்களின் பணம் நல்ல முறையில் முதலீடு செய்யப்படுகின்றதா என்பதை கண்காணிக்க இச்சட்டத்தில் வழி ஏதும் இல்லை. இச்சட்டத்தின் கீழ் பல போலி வங்கிகளும், வங்கிகள் என்ற பேரில் வியாபார நிறுவனங்களும் தோன்றின. நாட்டின் அச்சாணியான வங்கிகளை ஒழுங்குபடுத்த தனியான சட்டம் ஏதும் இல்லாமை பெரும் குறையாக பல நிபுணர் குழுக்களால் கருதப்பட்டது.

### கம்பெனித் திருத்தச் சட்டம் 1936 (Companies Amendment Act 1936)

மத்திய அரசு வங்கிகளுக்கு என்று ஒரு தனிச் சட்டம் தேவையில்லை என்றும் கம்பெனி சட்டத்தை திருத்தம் செய்தாலே போதும் எனக் கருதி இத் திருத்தச் சட்டத்தை 1936-ம் ஆண்டு இயற்றியது. இச் சட்டத்தின்படி:

(i) ஒரு வங்கிக் கம்பெனி என்பது முக்கிய வியாபாரமாக வைப்புகளை ஏற்று அவைகளை காசோலை, பணவிடை, அல்லது ஆணை மூலம் திரும்ப எடுத்துக்கொள்ள அனுமதிப்பதோடு கீழ்க்கண்டுள்ள ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கீழ்க் கண்ட வகையான தொழில்களைச் செய்யும் கம்பெனி

(அ) கடனைப் பெறுவதோ அல்லது கடன் அளிப்பதோ உண்டியல்கள், வெண்கடன் பத்திரம், பங்கு மார்க்கெட் துணையீடுகள் ரயில்வே ரசீது ஆகிய வைகளை தொழிலில் பயன்படுத்தி, தங்கம், பணம் ஆகியவைகளை பெற்று மறு இடங்களுக்கு அனுப்பும் பணிகளோ.

(ஆ) அரசு, நகராட்சி அல்லது தனிப்பட்ட நபர்களுக்கு பதிலாளியாகவோ, வேறு பதிலாளாக, மேனேஜிங் ஏஜென்ட் தவிர, தொழில் செய்வதோ.

(இ) அரசாங்கப் பொதுக் கடனுக்காக அல்லது தனியார் கடனுக்காக ஒப்பந்தம் செய்து கடனை பெற்றுக் கொள் வதோ, அல்லது கடன் பத்திரங்களை வெளியிடும் பணியினை ஏற்றுக்கொள்வதோ.

(உ) அரசாங்க, நகராட்சி கடன்கள், பங்குகள், கடன் பத்திரங்கள் ஆகிய வெளியீட்டுகளை தோற்று விப்பதோ, உத்திரவாதம் செய்வதோ, காப்புரிமை செய்வதோ.

(ஊ) உத்திரவாதம், நட்டஈடு சம்பந்தமான எல்லா விவகாரங்களையும் செய்வதும்.

(எ) வியாபார நிறுவனத்திற்கான நிதியை தோற்று விப்பதோ, நிதி அளிப்பதோ

(ஏ) அசையும், அசையாத பொருள்களின் மேல் உள்ள உரிமை கொண்டு பாங்கு, கம்பெனி வசம் உள்ள கடனுக்காக கொடுக்கப்பட்டுள்ள ஈடு சொத்துகளின் மேல், நடவடிக்கை செய்தல்.

(ஐ) நம்பிக்கை (Trust) ஏற்று நடத்துதல்.

(ஒ) இக்கம்பெனிபோல் குறிக்கோள் உள்ள மற்ற கம்பெனிகளில் பங்கேற்றுதல்.

(ஓ) வேலையில் இருப்போர்களுடைய நலனுக்காக நிதியை ஏற்படுத்தல், ஆதரித்தல் மேலும் நல்வாழ்வுக்கான நிதிகளுக்கு உதவி மற்றும் உத்திரவாதம் செய்தல்.

(ஔ) கம்பெனிக்கான கட்டடங்களை வாங்குதல், கண்காணித்தல், விற்றல், முன்னேற்றம் செய்தல், குத்தகைக்கு விடுதல், அடமானம் செய்தல் அல்லது எவ்விதமாவது சொத்தின் உரிமையை நடத்துதல்.

(i) மற்று எந்தவிதமான தொழிலோ, இத்தொழிலுக்குத் தேவையானவைகள் அனைத்தையும் தோற்றுவித்தல்.

(ii) வைப்புகளை ஏற்று பிரிவு (1) இல் கூறப்பட்டுள்ள சில அல்லது எல்லா பணிகளையும் செய்யாது. எந்த ஒரு பாங்கு கம்பெனியையும் இச்சட்டப்படி பதிவு செய்ய முடியாது.

(iii) எந்த ஒரு பாங்கு கம்பெனியும், இந்தியாவில் பதிவு செய்யப்பட்டிருந்தாலும், அல்லது இந்தியாவுக்கு வெளியில் பதிவு செய்திருத்தாலும் மேலே கண்டுள்ள (1) பிரிவில் சொல்லியுள்ள வியாபாரம் அன்னியில் வேறு ஏதும் செய்யக்கூடாது. அரசாங்கம் வேறு எந்த தொழிலையும் வங்கி செய்ய குறிப்பிடலாம்.

(iv) ஒரு வங்கி கம்பெனி மேனேஜிங் ஏஜென்ட்டால் நிருவகிக்கப்படக் கூடாது.

(v) நடைமுறை முதல் ரூ. 50,000-க்கு குறையாமல் ஒதுக்கப்பட்டபின்பே, இதுபற்றி உத்திரவாதம் இயக்குநர்கள், நிர்வாகி ஆகியோரால் கம்பெனி பதிவாளருக்கு அளித்தாலன்றி ஒரு வங்கிக் கம்பெனியும் தன் தொழிலை செய்ய ஆரம்பிக்கக் கூடாது.

(vi) தன்னுடைய செலுத்தப்படாத மூலதனத்தில் எவ்விதமான வில்லங்கமும் ஏற்படுத்தக் கூடாது.

(vii) ரிசர்வு வங்கியின் பின் பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் தவிர மற்றைய எல்லா வங்கிகளும் இந்தச் சட்டம்

அமுலுக்கு வரும் நாளிலிருந்து தன்னுடைய வருடாந்திர இலாபத்திலிருந்து, இலாப ஈவுத்தொகை ஏதேனும் அளிக்கும் முன், 20 சதவீதத்தை ஒரு காப்பு நிதிக்கு ஒதுக்க வேண்டும். காப்பு நிதி செலுத்தப்பட்ட மூலதனத்திற்கு சமமாகும் வரை ஒதுக்கினல் போதுமானது. காப்பு நிதி அரசாங்க அல்லது நம்பிக்கை பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டோ அல்லது பின் பட்டியலில் காணப்பட்டுள்ள வங்கியில் வைப்பாகவோ வைத்திருக்கவேண்டும்.

(viii) ரிசர்வு வங்கியின் பின் பட்டியலில் கண்டுள்ள வங்கியைத் தவிர ஒவ்வொரு வங்கியும் தங்களுடைய கால வைப்பு, நடப்பு வைப்புகளின் பேரில் முறையே $1\frac{1}{2}$, 5 சதவீதம் ரொக்க காப்பு வைத்திருக்க வேண்டும். ஒவ்வொரு வார வெள்ளிக்கிழமையும் கம்பெனி, பதிவாளருக்கு வைப்பு, ரொக்க இருப்பு ஆகியவற்றைப் பற்றிய நமூனவை அனுப்பி வைக்க வேண்டும். இதில் ஏதேனும் தவறு இருந்தால், அதன் காரண மான ஒவ்வொரு நிருவாகர் மற்றும் ஆபீசர் தவறு உள்ள ஒவ்வொரு நாளுக்கும் தண்டனை அபராதம் கட்டவேண்டும்.

(ix) ஒரு பாங்கு கம்பெனி, வேறு எந்த துணைக் கம்பெனி யிலும், மேலே (1) குறிப்பிட்டுள்ள காரணத்திற்கான துணைக் கம்பெனி தவிர, பங்குகள் ஏற்கக் கூடாது.

(x) நீதி மன்றம், ஒரு வங்கிக் கம்பெனியின் மனுவும், கம்பெனி பதிவாளருடைய நிதி நிலை அறிக்கையையும், பொருத்து பணம் அளிக்க இயலாத நிலையில் உள்ள ஒரு வங்கியின் தொழிலை ஆரம்பிப்பதையோ, தொடர்ந்து நடத்து வதையோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு தடை செய்யலாம்.

**ரிசர்வு வங்கியின் சிபாரிசும், கம்பெனி சட்டத்தின் மேல் திருத்தங்களும்**

1939-ம் ஆண்டு ரிசர்வு வங்கி ஒரு மாதிரி மசோதாவை அரசாங்கத்திற்கு சமர்பித்தது. இதில் கண்ட அம்சங்களாவன :

1. தென் இந்தியாவில் சில வங்கிகள் முறிவு அடைந்தது, வங்கிகள் மீது கடுமையான கண்காணிப்புக்கான சட்டம் தேவை என்பதை வெளிப்படுத்தியுள்ளது.

2. பின் பட்டியலில் காணப்படாத வங்கிகள் கம்பெனித் திருத்தச் சட்டம் 1936-ம் ஆண்டின்படி அனுப்ப வேண்டிய

வாராந்தர நமூனுக்களை, (தங்கள் வைப்பு, ரொக்க காப்பு பற்றி) நீதி மன்றம் இவ்வங்கிகள் வங்கி கம்பெனி என்று கூறப் பட்டுள்ள வரையறைக்குள் வரவில்லை என்று தீர்ப்பு கூறியதால், கம்பெனி பதிவாளருக்கு அனுப்புவதில்லை.

3. இது போன்ற வங்கிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்க ஏதும் வழி இல்லை.

4. 1937-ம் ஆண்டுக்கு முன் பதிவு செய்யப்பட்ட கம்பெனி வங்கிகள் என்று கூறப்பட்டு வந்தாலும் அவைகள் வங்கித் தொழிலை செய்து வரவில்லை.

5. சிறிய பின்பட்டியலில் காணப்படாத வங்கிகள் தாங்கள் செய்யும் தொழில் மிகவும் நட்டவச்சம் உடையதாக உள்ளது. இதற்குக் காரணங்கள் (அ) இவற்றின் மூலதனம் மிகவும் குறைவு (ஆ) இவைகளின் காப்பு நிதி மிகவும் குறைவாக உள்ளது, அதிக இலாப ஈவு அளிப்பதால் (இ) பெரும் பான்மையானவைகள் நீண்ட கால வைப்புகளைப் பெற்று, கடன் அளிக்கும் நிறுவனமாக உள்ளனவே தவிர, நடப்பு வைப்பு ஏற்று வங்கியல் தொழில் செய்யும் நிறுவனமாக இல்லை. (ஈ) இவ் வங்கிகள் தங்கள் நிதியை பெரும்பாலும் கடனுகக் கொடுத்துள்ளன. இக்கடன் வைப்புகளில் 86 சதவீதம் ஆகும். பெரும்பாலானக் கடன் காப்பற்றக் கடன் (Unsecured loan).

இந்திய அரசு வங்கியலுக்கு என்ற தனிச் சட்டம் போர் முடிந்தபின் இயற்றினல் போதும் என்றும், இதற்கு இடையில் தேவையானல் கம்பெனி திருத்தச் சட்டம் கொண்டு வந்தால் போதும் என எண்ணியது. இதற்கு இணங்க 1942-ம் ஆண்டு ஒரு திருத்த சட்டம் கொண்டுவரப்பட்டு எந்த ஒரு கம்பெனி வங்கி (banks), வங்கியர் (banker) அல்லது வங்கியியல் (banking) என்ற வார்த்தைகளை தங்கள் பேரில் கொண்டிருந்தால் அக் கம்பெனிகள் பணத்தை வைப்பாக நடப்புக்கணக்கில் பெற்றுலும் பெருவிட்டாலும், பணத்தினை காசோலை மூலும் எடுத்துக் கொள்ளும் உரிமை கொடுத்தாலும், கொடுக்கா விட்டாலும் வங்கிகளே என வரையறுக்கப்பட்டது.

பாங்கு கம்பெனிகள் தொடர்பான சட்டங்களை ஒன்று படுத்தவும், திருத்தவும், ஒரு மசோதாவினை மத்திய சட்ட சபையில் (Central Legislative Assembly) 1944-ம் ஆண்டு அரசு சமர்ப்பித்தது. ஆனல், சட்டசபை கலைக்கப்பட்டு மசோதா

காலாவதியாகிவிட்டதால், மார்ச்சு 1946-ல் ஒரு மாற்றியமைக்கப் பட்ட மசோதா மத்திய சட்டசபையில் சமர்ப்பிக்கபட்டு, ஒரு தேர்வுக் குழுவின் (Select Committee) பரிசீலனைக்கு அனுப்பப் பட்டது. இது திரும்பவும் மார்ச்சு 1948-ல் இந்தியப் பாராளு மன்றத்தால் இயற்றப்பட்டது. இதில் இருந்த முக்கிய ஒழுங்குச் சட்டங்கள்.

1. வங்கியல் என்பது வைப்புகளை ஏற்று தேவைப் படுத்தும்போதோ மற்றும் வேறுவிதமாகவோ திரும்பத் தரும் தொழில் என்று வரையறுக்கப்பட்டது.

2. இச் சட்டம் அமுலுக்கு வந்த இரண்டு ஆண்டு களுக்குப் பிறகு வங்கித் தொழில் செய்யும் எந்த கம்பெனியும், 'வங்கி' 'வங்கியர்' வங்கியியல்' என்ற தொடரைத் தங்கள் பெயரின் ஒரு பகுதியாய்க் கொள்ளாமல் வங்கித் தொழிலை செய்யலாகாது. இத் தொடர்களை தங்கள் பெயரில் கொண்டுள்ள எந்தக் கம்பெனியும் இச்சட்டத்திற்கு உட்படும். வங்கிக் கம்பெனி தவிர எந்த கம்பெனியும் தேவை செய்யும் போது உடனடியாக திருப்பித்தரும் வைப்புகளை ஏற்கக் கூடாது.

3. எந்த ஒரு வங்கிக் கம்பெனியும் உண்டியல்களை வாங்குவது, விற்பது, மாற்றுவது தவிர மற்றைய எந்த நேரடி, மறைமுக வியாபாரம், பொருள்களை வாங்கி, விற்றல் போன்ற எந்த தொழிலையும் செய்யக்கூடாது.

4. தனக்கு வரவேண்டிய கடன்களுக்காக தன் வங்கித் தொழிலில் தான் சட்டபூர்வமாக வியாபாரம் செய்யக்கூடாத எந்த சொத்துக்களையோ பெற்ருல் அந்த வங்கி அச் சொத்துகளை 7 ஆண்டுக்குள் விற்றுவிடல் வேண்டும்.

5. பொதுவாக வங்கிகளில் நிலவிவரும் சம்பளத்திற்கும் நிகரில்லாமல் எவரும் நியமிக்கப்படக் கூடாது. மேலும், ஒருவருடைய சம்பளம் கழிவுத் தொகையாகவோ, இலாபத்தில் பங்காகவோ, மற்றைய கம்பெனியின் நிர்வாகியாக இருந்தால் ஐந்து ஆண்டுகளுக்கு மிகுதியாக ஒப்பந்தம் செய்தோ கொள்ளக்கூடாது.

6. (அ) இச்சட்டம் அமுலுக்கு வந்து மூன்று ஆண்டு களுக்குப்பின், அல்லது ரிசர்வு வங்கி ஒப்புக் கொண்டால் அதற்குப்பின் ஓராண்டுக்கு மிகாமல் எந்த நாணயமாற்று வங்கி கம்பெனியும், தன் செலுத்தப்பட்ட மூலதனமும், காப்புநிதியும்

ரூ. 15 லட்சத்திற்கு குறைந்திருந்தால் தொழில் செய்யக்கூடாது. இவ்வித கம்பெனி பம்பாய் அல்லது கல்கத்தா அல்லது இரு இடங்களிலும் கிளை வைத்திருந்தால் இத்தொகைக்குமேல் ரூ. 5 லட்சமும் செலுத்திய முதலாக இருக்க வேண்டும்.

7. ஒரு வங்கிக் கம்பெனியின் ஒப்பியமுதல், அனுமதித்த முதலுக்கு பாதிக்குக் குறையாமலும், செலுத்தியமுதல் ஒப்பிய முதலுக்குப் பாதிக்குக் குறையாமலும் இருக்கவேண்டும்.

8. ஒரு வங்கிக் கம்பெனியின் பங்குதாரரின் ஓட்டுரிமை மொத்த ஓட்டுரிமையில் 5 சதவீதத்திற்கு மேலாக இருக்கக் கூடாது.

9. எந்த ஒரு வங்கிக் கம்பெனியும் தன் சொந்த பங்குகளின் ஈட்டின் பேரில் கடனே, காப்பற்ற கடனே இயக்குநர்களுக்கோ அல்லது இயக்குநர்கள் விருப்பம் கொண்டுள்ள கூட்டு வணிகம், கம்பெனி ஆகியவைகளுக்கோ கடன் வழங்கக் கூடாது.

10. மூலதனமாக்கப்பட்ட செலவீனங்கள் அனைத்தும் நீக்கப்பட்டால் அன்றி எந்த வணிக வங்கியும் தன் பங்குகள் பேரில் இலாப ஈவுத்தொகை கொடுக்கலாகாது.

11. மற்றொரு வங்கி கம்பெனியில் இயக்குநராக இருக்கும் ஒருவரை இயக்குநராக எந்த ஒரு வங்கிக் கம்பெனியும் கொள்ளக்கூடாது.

12. 1936-ம் ஆண்டு சட்டப்படி வங்கிகள் கால வைப்புகளில் வைக்க வேண்டிய ரொக்க இருப்பு $1\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து 2 சதவீதமாக உயர்த்தப்பட்டுள்ளது.

13. எந்த வங்கிக் கம்பெனியும் தரகு, கழிவுத் தொகையாக, பங்குகள் வெளியீட்டில் ஒப்பிய முதலில் $2\frac{1}{2}$ சதவீதத்திற்கு மேல் கொடுக்கக்கூடாது.

14. (அ) எந்த ஒரு வங்கிக் கம்பெனியும் எந்த துணைக் கம்பனியையும் (நிறைவேற்றுபவர், பொறுப்பாளர் பணி அல்லது இது போன்ற பணிகளைத் தவிர வேறெந்தப் பணிக்கும்) ஆரம்பிக்கக் கூடாது.

(ஆ) மேலே கூறிய காரணத்திற்காக துணைக் கம்பெனி துவக்கப்பட்டால் அக்கம்பெனியில் 30 சதவீத பங்கு அல்லது மொத்த ஓட்டுரிமையில் 30 சதவீதத்திற்குமேல் கட்டுப்படுத்தக் கூடாது.

15. ஒவ்வொரு வங்கிக் கம்பெனியும் ரிசர்வு வங்கியிடமிருந்து உரிமம் (Licence) பெற வேண்டும்.

16. ரிசர்வு வங்கி அனுமதி வழங்கும் முன் வைப்புதாரர்களுக்கு முழுத் தொகையைத் திருப்பித்தர அவ்வங்கியால் இயலுமா, வங்கி கம்பெனி ஒழுங்காக நடைபெறுகின்றதா என்பதனை நோக்கும்.

17. கொடுக்கப்பட்ட அனுமதியை நீக்க ரிசர்வு வங்கிக்கு உரிமை உண்டு.

18. எந்த ஒரு வங்கியும் புதுக் கிளையையோ, தன் தொழிலை புதிய இடத்திலோ ரிசர்வு வங்கி உத்திரவு இல்லாமல் செய்யக் கூடாது.

19. ரிசர்வு வங்கி தானாகவோ, அரசாங்க உத்திரவு மேலோ எந்த வணிக வங்கியின் நடத்தை பற்றியும் ஆய்வு செய்யலாம்.

20. ஆய்வுக்குப் பிறகு எச்சரிக்கை விடுக்கலாம் அல்லது இணைப்பு யோசனை (Amalgamation) கொடுக்கலாம்.

21. தேவைப்பட்டால் 30 நாட்களுக்குள் இணைப்பு செய்யாவிட்டால், நீதிமன்றத்தில் கலைப்புக்காக (liquidation) மனு செய்யலாம்.

மேலே கூறப்பட்ட வங்கிக் கம்பெனி சட்டம் 1949-க்கு திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. திருத்தங்கள் 1950, 1953, 1959-ம் ஆண்டுகள் கொண்டு வரப்பட்டன.

1959-ம் ஆண்டு திருத்தப்படி

1. வங்கிக் கம்பெனிகள், ரிசர்வு வங்கி இசைவு பெற்று, இந்தியாவுக்கு வெளியில் வங்கித் தொழில் செய்ய துணைக் கம்பெனிகள் ஏற்படுத்தலாம்.

2. பெருந்தலைவர், இயக்குநர், முக்கிய நிருவாக அதிகாரி ஆகிய இவர்கள், சட்டத்திற்கு அப்பாற்பட்ட செயல்கள் செய்தால் ரிசர்வு வங்கியால் நீக்கப்படலாம்.

3. இயக்குநர் நியமிப்பு, சம்பளம் ஆகிய விதிகளில் எந்த மாற்றமும் ரிசர்வு வங்கியின் இசைவு இல்லாமல் செய்யலாகாது.

4. ஒரு வங்கியை கலேக்க நீதிமன்றத்திற்கு ரிசர்வு வங்கி மனுப் போடலாம்.

5. எந்த ஒரு வங்கிக் கம்பெனியும் தன் இச்சை கலேப்பை (Voluntary Winding up) ரிசர்வு வங்கி ஏற்பு இல்லாமல் செய்யலாகாது.

6. பெயர் மாற்றம் ரிசர்வு வங்கி இசைவு இல்லாமல் செய்யப்படலாகாது.

1960-ம் ஆண்டு திருத்தப்படி ரிசர்வு வங்கி, மத்திய அரசாங்கத்திற்கு ஒரு வங்கியின் வியாபாரத்தை 6 மாதம் வரை நிறுத்தி வைக்க ஆணையிட சிபாரிசு செய்யலாம்.

1965-ல் கொண்டு வந்த திருத்தம் வங்கிச் சட்டத்தை வங்கி கம்பெனி ஒழுங்குச் சட்டம் (Banking Companies Regulation Act) என்று மாற்றி அமைத்தது.

இவ்விதம் சட்ட பூர்வமாக வங்கிகளே ஒழுங்குபடுத்த முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

## பாட நூல்கள்

1. M. L. TANNAN—Banking Law and Practice in India.

# 15. வங்கிகளுக்கான வைப்புக் காப்பு

வைப்புதாரர்கள் பணம் பத்திரமாக வேண்டும்போது திருப்பித் தரப்படவேண்டும். வங்கிகள் முறிவு (Bank failure) ஏற்பட்டால் வைப்புதாரர்கள் தங்கள் முழுப் பணத்தினையும் திரும்பப் பெற்றுக் கொள்ள முடியாது. வைப்புதாரர்கள் பல ஆண்டுகளாக இன்னல்பட்டு சேமித்து வைத்திருந்த வைப்பு திரும்ப வராவிட்டால் பெரும் துயரத்திற்கு உள்ளாக்கப்படு வார்கள். அதிலும் சிறிய வைப்புதாரர்களுக்கு ஏற்படும் நட்டம் ஈடு செய்யப்பட முடியாத ஒன்று. வங்கிகள் முறிவினுல் சேமிப்பு தடைப்படும். சேமிப்புகளை வைப்பாக வைத்திருக்க விரும்பமாட்டார்கள். இதனுல் பொருளாதார திட்டங்களுக்கும் மேம்பாட்டிற்கும் வங்கிகள் கடன் கொடுத்து உதவ இயலாது. மேலும் ஒரு வங்கி முறிவுற்ருல் அது அத்துடன் நில்லாமல் பல வங்கிகளுக்கும் பரவும். மற்றைய வங்கிகளும் முறிவு பெறுமோ என்று பயந்து வைப்புதாரர்கள் எல்லாம் தங்கள், தங்கள் வைப்புகளை திரும்பப் பெற முயல்வர். இதுவே அவ்வங்கிகள் உடனடியாகக் கொடுக்க முடியாத நிலையினை ஏற்படுத்தி முறிவுக்கு வழிகோலியாக அமையும். இந்திய வங்கிச் சரிதத்தை நோக்கினுல் பல வங்கிகள் ஆரம்ப காலங்களில் முறிவு அடைந் துள்ளன. இதற்குக் காரணங்கள் :

1. போதிய மூலதனம் இன்றி சில வங்கிகள் துவக்கப் பட்டன.

2. போதிய நிருவாகத் திறமையின்றி சில வங்கிகள் ஆரம்பிக்கப்பட்டன.

3. வைப்புதாரர்களை ஏமாற்ற வேண்டும் என்ற நோக்கத் துடன் சில வங்கிகள் ஆரம்பமாயின.

4. வதந்திகள் காரணமாக சில வங்கிகள் துவக்கப்பட்டு முறிவடைந்தன.

5. பொய்யான விளம்பரங்களைச் செய்து வைப்புதாரர்களை சில வங்கிகள் ஏமாற்றி வைப்பைப் பெற்று முறிவு அடைந்தன.

வங்கிகள் முறிவுக்குக் காரணம் அவைகளின் நடவடிக் கைகளை சரியான வழியில் கண்காணிக்காததே என்று கருதி வங்கிக் கம்பனி சட்டம் 1949-ல் ஏற்படுத்தியபின் வங்கிகள் சம்மந்தமாக எல்லாவித கண்காணிப்பும் உள்ளது என்றும், ரிசர்வு வங்கி சட்டப்படி ரிசர்வு வங்கி வணிக வங்கிகள் மீது பல ஒழுங்கு நடவடிக்கைகள் கொள்ளலாம். எனவே, வங்கிகள் முறிவு இனி இந்தியாவில் இராது என்று எண்ணி வந்த நேரத்தில் பலாய் சென்டரல் பாங்கு பலாய், இலக்குமி வங்கி அகோலா ஆகிய இரு வங்கிகளின் முறிவு 1960-ம் ஆண்டு பெரிய அதிர்ச்சியாக அமைந்தது. எவ்விதமேனும் வைப்பாளர் களின் தொகை காப்பாற்றப்படல் வேண்டும் என்ற எண்ணம் எங்கும் நிலவியது.

கிராமிய வங்கி விசாரணைக்குழு 1950-ம், சராப் குழு 1953 ஆகியவைகள் வைப்புக் காப்பு தேவை என்ற எண்ணத்தினை வெளியிட்டன. 1961-ம் ஆண்டு இந்திய அரசாங்கம் காப்பு வைப்புக் கழகம் மசோதாவை சமர்ப்பித்தது. இது சட்டமாகி 1962-ம் ஆண்டு ஜனவரி 1-ம் நாள் இந்தக் கழகம் ஆரம்பிக்கப்பட்டது.

இந்தக் கழகம் வைப்புதாரர்களுக்கு, குறிப்பாக சிறிய வைப்புதாரர்களுக்கு, வங்கி முறிவிலிருந்து பாதுகாப்பு அளிக்க ஆரம்பிக்கப்பட்டது. மேலும், இந்தக் கழகம் மக்களிடையே வங்கிக் கணக்கை ஏற்படுத்தி வைப்பை அதிகரிக்கும் நோக்கமும் கொண்டுள்ளது. இந்தக் கழகத்தின் செலுத்திய மூலதனம் ரூ. 1 கோடி. இம் முழுத் தொகையையும் ரிசர்வு வங்கி அளித்துள்ளது. இந்தக் கழகத்தின் நிர்வாகம் ஐவர் அடங்கிய இயக்குநர் குழுவிடம் உள்ளது. இக் குழுவின் பெருந்தலைவர் ரிசர்வு வங்கி ஆளுநர், இவரைத்தவிர துணை ஆளுநர், ரிசர்வு வங்கி, மத்திய அரசின் ஒரு ஆபீசர். மேலும் மத்திய அரசால் சிபாரிசு செய்யப்பட்ட இருவர் இக் குழுவில் இருப்பர்.

வங்கிகள் கம்பெனி ஒழுங்குச் சட்டம் 1949-க்கு உட்பட்ட எல்லா வங்கிகளும் வைப்புக்காப்பைப் பெற்றுக்கொள்ளலாம். மொத்தைய வைப்புகளில் (அரசாங்க வைப்பு, வங்கிகளுக்குள் (Inter-Banking) வைப்பு தவிர) ஒவ்வொரு ரூ. 100-க்கும் 15-பை வரை முனைமமாக (Premium) வசூலிக்கலாம். தற்போது கட்டணம் ரூ. 100-க்கு 5 பைசாவே. இக்கழகம் ஆரம்பித்த போது ஒவ்வொரு வைப்பாளருடைய கணக்கில் உள்ள

தொகை ரூ. 1,500 வரையே பாதுகாப்பு அளிக்கப்பட்டது. இத் தொகை படிப்படியாக உயர்த்தப்பட்டு ஒவ்வொரு வைப்பு தாரரின் தொகை ரூ. 10,000 வரை பாதுகாக்கப்படுகின்றது. வங்கி ஏதேனும் முறிவுற்ருல் உடனடியாக வைப்புதாரர் இத் தொகைவரை தன் கணக்கில் அதிகபட்டசமாக எவ்வளவு இருந்தோ அதனை உடனடியாக கழகம், வைப்புதாரருக்கு அளிக்கும்.

இக்கழகத்தின் மூலதனம் 1968-ல் ரூ. 5 கோடியாக உயர்த்தப் பட்டது. பல மாநிலங்கள் தங்கள் கூட்டுறவுச் சங்கத்தின் சட்டங்களை திருத்தி கூட்டுறவு வங்கிகளுக்கும் இப்பயன் கிடைக்கச் செய்துள்ளனர். 1974-ம் ஆண்டுவரை ஆந்திரா, ஜம்மு காஷ்மீர், மத்திய பிரதேசம், மகாராஷ்ட்ரா, யூனியன் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் 423 கூட்டுறவு வங்கிகள் இப் பயனைப் பெற்றுள்ளன.

இந்தக் கழகம் வைப்புக்காப்பு நிதியை தனிப்படுத்திவரும், முனைமப் பணத்தை முதலீடு செய்து, வரும் வட்டியினையும் இந் நிதியில் சேர்த்து வைக்க வேண்டும். அரசாங்க கடன் பத்திரங் களில் மட்டுமே முதலீடு செய்ய அனுமதிக்கப்பட்டுள்ளது.

### அமெரிக்க நாட்டு வைப்பு முறை—ஒப்பீடு

அமெரிக்க நாட்டில் 1920-லிருந்து 1930-வரை பல வங்கிகள் முறிவடைந்து பெரிய நட்டத்தை ஏற்படுத்தின. எனவே, ஃபெடரல் வைப்புக் கழகம் (Federal Deposit Insurance Corporation) 1934-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. ஆரம் பத்தில் வைப்புதாரர்கள் 2,500 அமெரிக்க டாலர் வரை காப்பு செய்யப்பட்டனர். இத்தொகை படிப்படியாக உயர்ந்து 10,000 டாலர் வரை காப்பு அளிக்கப்படுகின்றது. 1958-ம் ஆண்டி லேயே கிட்டத்தட்ட 98 சதவீத வைப்பாளர்களின் வைப்புகள் முழுவதுமாக பாதுகாக்கப்பட்டுள்ளது. ஆனல், இச்சதவீதம் 75 சதவீதமே.

மேலும், அமெரிக்காவில் ஃபெடரல் வைப்புக்கழகம் வங்கி களின் செயலைப் பற்றி விமரிசித்து எவ்விதம் தொழில் செய்ய வேண்டும் என்று தெரிவிக்கின்றது. ஆயின், இதுபோன்ற செய்கையை கழகம் இந்தியாவில் செய்வதில்லை. இதனை ரிசர்வு வங்கியே செய்கின்றது.

எந்த ஒரு வங்கி சரவர தன் தொழிலைச் செய்யவில்லையோ அவ்வங்கியை காப்பு திட்டத்திலிருந்து நீக்கும் உரிமை அமெரிக்காவில் வைப்புக் கழகத்திற்கு உண்டு. இந்தியாவில் வைப்புக் கழகத்திற்கு இவ்வித உரிமை இல்லை.

## பாட நூல்கள்

1. S. K. BASU—A Review of Current Banking Theory and Practice.

2- Banking Commission Report, 1972.

# 16. நாட்டு வங்கியர்கள்

இந்திய நாடு ஒரு விவசாய நாடு. 70 சதவீதத்திற்கு மேலான மக்கள் விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்களில் பெரும்பாலானோர் சிறிய விவசாயிகளே. விவசாயிகளுக்கு அவ்வப்போது கடன் தேவைப்படுகின்றது. இக்கடன் விவசாயத்திற்கும், குடும்ப சம்பந்தமான தேவைகளுக்குமாகும். கடன் கிடைக்காவிட்டால் விவசாயம் செய்ய முடியாது. இக் கடனும் காலத்தே கிடைக்க வேண்டும், நியாய வட்டியில் கிடைக்க வேண்டும். அவ்வப்போது பல செலவுகளையும் விவசாயி ஏற்க வேண்டியுள்ளது. திருமணம், வைத்தியச் செலவு, இறப்புச் செலவு மற்றும் சமுதாய பந்தங்களில் கட்டுப் பட்டு பலவித செலவுகள் செய்து தீர வேண்டிய சூழ்நிலையில் விவசாயி இருக்கின்றான். எதிர்பாராத விதமாக பருவகாலம் தவறினாலோ, விவசாயத்தில் வேறு இன்னல்கள் விளைந்தாலோ, கடனைத் திருப்பித் தராத நிலை ஏற்படக்கூடும். விவசாயிக்குக் கிடைக்கும் கடனே அதிக வட்டியிலேயே கிடைக்கும். எனவே, கடன்பளு அதிகரித்துக்கொண்டே போகும்.

இந்தியாவில் விவசாயக் கடன் பளுவைப் பற்றி பல குழுக்கள் ஆய்வு நடத்தியுள்ளன. தக்கிண விவசாயிக் குழு (Deccan Ryots Commission) 1875-ம் ஆண்டு விவசாயிகளில் 1/3 பங்கினர் கடன் பளுவில் அழுத்தப்பட்டுள்ளனர் என்றும், விவசாயியின் சராசரி கடன் பளு ரூ. 371 என்று கணக்கிட்டது. 1911-ம் ஆண்டு எட்வர்டு மக்ளகான் கிராமியக் கடன் ரூ. 300 கோடி என்று மதிப்பிட்டார். 1923-ம் ஆண்டு டார்லிங் என்பவர் கிராமியக் கடனை ரூ. 600 கோடி என்று மதிப்பிட்டார். 1934-ம் ஆண்டு மைய வங்கி விசாரணைக்குழு கிராமியக் கடனை ரூ. 900 கோடி என்று மதிப்பிட்டது. டாக்டர் பி. ஜே. தாமஸ், 1935-ம் ஆண்டு ரூ. 1,200 கோடி கடன் என்று மதிப்பிட்டார். ரிசர்வு வங்கி 1937-ம் ஆண்டு செய்த மதிப்பீடுபடி கிராமியக் கடன் ரூ. 1,800 கோடி, இதற்கான ஆண்டு வட்டி ரூ. 100 கோடி எனவும் மதிப்பிடப்பட்டது. கிராமியக் கடன் அனுமானக் குழு (Rural Credit Survey Commitee) 1954-ம் ஆண்டு, கிராமக் குடும்பங்களில் 63 சதவீதம் கடன்பட்டுள்ளது என்றும், ஒரு

குடும்பத்தின் சராசரிக் கடன் ரூ. 283 என்றும், சிறிய விவசாயி களுக்கு கடன் பளு அதிகமாக இருக்கிறது என்றும் குறிப் பிட்டது.

இதற்குப் பின் ரிசர்வு வங்கி ஏற்று நடத்திய பல ஆய்வுகள் கிராமியக் கடன் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றது என்பதினைக் காட்டியுள்ளது.

நெடுங்காலமாக விவசாயிகளுக்குக் கடன் வழங்கும் முக்கிய நபர்கள் நாட்டு வங்கியரும் (Indigeneous bankers), வட்டித்தொழிலரும் (Money-lenders) ஆகும்.

நாட்டு வங்கியர்

இவர் தனிப்பட்டவராகவோ அல்லது கூட்டு வணிக மாகவோ இருக்கலாம். இவர் கடன் அளிப்பதோடு, வைப்பு களையும் பெற்றுக் கொள்வர், இதற்காக பாஸ் புத்தகத்தையும் அளிக்கின்றனர். உண்டியல்கள் கழிவுப்பாடு செய்கின்றனர். இதைத் தவிர வியாபாரங்களிலும் இவர்கள் ஈடுபடுகின்றனர்.

வட்டித் தொழிலர் தனி நபர்களாகவே பெரும்பாலும் இருக்கின்றனர். இவர்கள் தங்களிடம் உள்ள பணத்தினை கடனாக அளிப்பதைத் தவிர வங்கி சம்மந்தமான வேறெந்த பணியினையும் செய்வதில்லை. நாட்டு வங்கியரும், வட்டி தொழிலரும் கடன் கொடுக்கின்றனர். ஆனால், இவர்கள் செயலில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

1. நாட்டு வாங்கியர் வைப்புகளைப் பெறுகின்றனர். உண்டியல்களைக் கழிவுப்பாடு செய்கின்றனர். ஆனால், வட்டித் தொழிலர் வைப்புகளைப் பெறுவதில்லை, சிலநேரங்களில் தங்கள் வாடிக்கைக்காரர்கள் பாதுகாப்புக்காக ஏதேனும் பணம் கொடுத்து வைத்திருந்தால் இதனைத் தொழிலில் பயன் படுத்தக் கூடும். இவர்கள் உண்டியல்களை கழிவுப்பாடு செய்வது இல்லை.

2. வட்டித் தொழிலர், குறிப்பாக நகர்ப் புறங்களில் நுகர்வுக்கடன் (Consumption loan) அதிகமாக அளிக் கின்றனரே தவிர வியாபாரக் 'கடன், தொழில் கடன் அளிப்ப தில்லை. நாட்டு வங்கியர் நுகர்வுக் கடனை விட வியாபார, தொழில் கடன்களை அதிகமாக அளிக்கின்றனர்.

3. கடன் எதற்காகப் பெறப்படுகின்றது என்பதினை அறிந்து கொள்வதில் நாட்டு வங்கியர்கள், வட்டித் தொழிலரை விட அதிக அக்கரை காட்டுகின்றனர்.

4. வட்டித் தொழிலர் பணத்திலே மட்டும் புழங்கு கின்றனர். ஆனால் நாட்டு வங்கியர் பணம் தவிர, உண்டியல், குறுகியகால சீட்டுகளிலும் புழங்குகின்றனர்.

5. நாட்டு வங்கியரின் வட்டி வீதம், வட்டித் தொழிலரின் வட்டி வீதத்தைக் காட்டிலும் சிறிதளவு குறைவாகவே இருக்கின்றது.

6. பணம் திருப்பித்தருவதில் நாட்டு வங்கியரின் வாடிக்கைக் காரர்கள் மற்றவரின் வாடிக்கைக்காரரைவிட ஒழுங்காக இருப்பர்.

வட்டித் தொழிலர்கள் பொதுவாக சில குறிப்பிட்ட இனத்தினைச் சேர்ந்தவர்களாகவே இருக்கின்றனர். வட்டித் தொழிலர்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒரு வகையினர் வட்டித் தொழிலையே முக்கியத் தொழிலாகக் கொண்டு செயல் படுபவர்கள். சௌகார், பணியா, மஹஜன் ஆகிய இனத்தைச் சேர்ந்தவர்கள் இவ்வகைப் படுவர். மற்றொரு வகையினர் வட்டித்தொழிலர்கள் ஆயினும் இதுவே அவர்கள் தொழில் அல்ல. உதாரணம் நிலக்கிழார்கள், விவசாயிகள், வியாபாரிகள், வழக்கறிஞர்கள், ஒய்வுத்தொகை பெறுபவர்கள், கைம் பெண்கள் ஆகியோர் இல்வகையினர்.

வட்டித் தொழிலையே முக்கியத் தொழிலாகக் கொண்டு இயங்குபவர்கள், தங்கள் புத்தகத்தில் குறிப்பெழுதிக் கொண்டோ, அல்லது வாய்முறையாக சத்தியத்தின் பேரிலோ, பிராமிசரி கடன் பத்திரத்தின் பேரிலோ கடன் அளிக்கின்றனர். பொதுவாக நடைமுறை விவசாயக் கடனுக்காக நபர் கடனாக அளிக்கப்படுகின்றது. கொடுக்கப்பட்ட கடனுக்கு விவசாய அறுவடையின் போது வட்டித் தொழிலர் மூலம் விற்க சம்மதம் தெரிவிக்கின்றனர். கடன்தொகை அதிகமாகவும், சில ஆண்டு களுக்குப் பின்னேதான் திருப்பித் தரக்கூடியது என்றால் நிலம் அல்லது வீட்டை அடமானம் பெற்றோ, நகைகள் பேரிலோ கடன் அளிக்கப்படுகின்றது. கடன் கொடுக்கப்படும் போது கடன் எதற்காகப் பெறப்படுகிறது என்று கேட்பதல்லை. கடனை பணமாகவும், நகையாகவும் அளிக்கின்றனர். அவ்வப்போது வட்டியை முதலுடன் சேர்த்து விடுகின்றனர்.

இவர்களில் மற்ருெரு வகை நடமாடும் வட்டித் தொழிலர் (Itinerant money lenders). பட்டாணியர்கள், காபூலியர்கள் இவ்வகைப்பட்டவர்கள். இவர்கள் ஊர் ஊராகச் சென்றுக் கடன் வழங்குவார்கள். ஒவ்வொரு ஊரிலும் சில ஆண்டுகள் தங்கி தங்கள் கடன் வசூலான பிறகு மற்ருெரு ஊருக்குச் சென்று தங்கள் தொழிலைச் செய்வர். கைரேகை அல்லது பிராமிசரிக் கடன் பத்திரத்தின் பேரில் இவர்கள் கடன் வழங்குவர். இவர்கள் கொடுக்கும் கடன் குறுகிய காலத்திற்கே வட்டி வீதம் அதிகம். பணத்தினை தவணையாகவும் திரும்ப பெற்றுக் கொள்வர். இவர்கள் பொதுவாக வழக்கு மன்றங்களுக்குச் செல்வதில்லை. அச்சுறுத்தல் பேரில் திரும்பப் பெற்றுக்கொள்ள முனைவர். தமிழ்நாட்டில் கடன் வழங்கும் காபூலியர்கள் இந்திய விடுதலைக்குமுன் பல ஊர்களில் இருந்து தொழில் நடத்தி வந்தனர். இவர்களுக்கு தமிழ் நாட்டில் 'ஆறுமாச கடங்காரன்' என்றும் பெயர் உண்டு. மிக உயரமும் பராக்கிரம தோற்றமும் கொண்ட இவர்கள் தலைப்பாகையும், கையில் ஒரு தடியும் கொண்டு மாலை நேரங்களில் தன்னிடம் கடன் வங்கியவர்கள் இருக்கிருர்களா என்று நோட்டம் பார்த்துச் செல்வர். கடன் வாங்கியவர் இறந்துவிட்டால் தங்கள் கைத் தடியைக்கொண்டு பிணத்தினை மூன்று அடி அடித்துவிட்டுச் செல்வர்.

வட்டித் தொழிலர்கள் கடனை எப்போதும், எந்நேரத்திலும் உடனடியாகக் கொடுப்பர். இவர்கள் நோக்கு கடன் பெற்றவர் நம்பிக்கையுள்ளவரா என்பதேயாகும். பல காரணங்களுக்காக விவசாயிகள் கடன் பெறுகின்றனர். விவசாயக் கடன், குடும்பச் செலவு, நீதிமன்ற வழக்குக்கு வேண்டிய் தொகை, ஆகியவைகளே முக்கிய காரணமாக அமைகின்றன.

வட்டித் தொழிலர்கள் செய்யும் தவருன செய்கைகள் :—

1. கடனுக்குரிய வட்டியை கடன் கொடுக்கும்போதே எடுத்துக் கொள்வர்.

2. முதன் முறையாகக் கடன் பெறுபவரிடம் கணக்கு துவக்க என்றும், ஊர் மாரியம்மன் கோவில் திருவிழாவுக்கு என்றும் பணம் வசூலிக்கப்படுகின்றது.

3. பொதுவாக வெற்றுத் தாளில் கையெழுத்தோ, கை ரேகையோ பெற்றுக் கொள்கின்றனர்.

4. கடனுக்கு கட்டாயமாக தங்கள் விளைச்சலை விற்பதாக ஒப்பந்தம் செய்கின்றனர்.

5. கடன் தொகையைவிட அதிகத் தொகையை புத்தகத்தில் குறிக்கின்றனர்.

6. திருப்பிக் கொடுக்கும் கடன் தொகைக்கு அத்தாட்சி ரசீது ஏதும் கொடுப்பதில்லை.

7. வட்டி வீதம் மிக அதிகம்.

8. திருப்புப் பணம் எதனையும் வட்டிக்கு வரவு வைப்பார்களே தவிர, முதலுக்கு வரவு வைப்பதில்லை.

வட்டித் தொழிலர் வாங்கும் வட்டி வீதம் 12 முதல் 37.5 சதவீதம் வரை வசூலிக்கப்படுவதாக பல்வேறு மாகாண வங்கியக்குழு (Provincial Banking Committee) தெரியப் படுத்தியது. நடமாடும் வட்டித்தொழிலர் 75 முதல் 360 சதவீதம் வரை வட்டி வசூலிக்கின்றனர். கிராமப்புறத்தில் உள்ள வட்டித் தொழிலர் நகர்ப்புறத்தில் இருக்கும் வட்டித் தொழிலரைவிட அதிக வட்டி வசூலிக்கின்றனர்.

இவ்விதம் அதிக வட்டி வாங்குவதற்குச் சில காரணங்கள்:

1. கொடுக்கும் கடனில் நட்டவச்சம் அதிகமாக உள்ளது.

2. நல்ல சொத்துக்கள் ஈடாகக் கொடுக்கப்படுவதில்லை.

3. வராக் கடன் இருப்பதுண்டு.

4. வணிக வங்கிகளோ மற்ற இயக்கங்களோ கடன் அளிப்பதில்லை.

5. கடன் தேவை குறிப்பிட்ட காலங்களில் மிக அதிகமாக உள்ளது.

6. நடைமுறைச் செலவு அதிகம்.

### கடன் பாதுகாப்பு சட்டங்கள்

அதிக வட்டி வீதத் தொல்லையிலிருந்து விவசாயிகளைக் காப்பாற்ற அவ்வப்போது சட்டங்கள் இயற்றப்பட்டு வந்துள்ளன. அதிக வட்டிக்கடன் சட்டம் (Usurious Loans Act of 1918) 1918-ன் படி, நீதி மன்றங்கள் வட்டி வீதம் மிக அதிகம் என்று கருதினால் ஒப்பந்தத்தை திரும்ப பரிசீலித்து, ஒப்பந்தத்

திற்குப் பின்னுல் சென்று நியாயமான வட்டியினை நீதி மன்றம் நிருணயிக்கலாம். பல் வகையான கடன்களுக்கு நியாயமான வட்டிவீதம் எது என்பதினை நீதிமன்றம் முடிவு செய்யும்.

மேலும், நீதி மன்றங்கள் தம்துபுட் (Damduput) என்னும் தத்துவப்படி வட்டி எந்த நிலையிலும் முதலுக்கு அதிகமாகக் கூடாது என்ற கோட்பாட்டினை அமுல் நடத்தின.

பஞ்சாப் கணக்கு ஒழுங்கு முறைச் சட்டம் 1930 (Punjab Regulation of Accounts of Act 1930) படி வட்டிக்கு கடன் கொடுப்போர் எவரும், ஒவ்வொரு கடனளிக்கும் தனிப் பேரேடு வைத்திருப்பதோடு, கடன் கொடுக்கப்பட்ட தேதி, கடனளி பெயர், தொகை, வட்டி வீதம், கடனளி கடந்த ஆறு மாதத்தில் திருப்பித் தந்த தொகை, கடனளியிடமிருந்து வரவேண்டிய தொகை ஆகியவைகள் கணக்குப் புத்தகத்தில் காட்டப்பட வேண்டும். வட்டி, முதல் தொகையிலிருந்து தனியாகக் காட்டப்படவேண்டும். வட்டியை முதலுடன் எக்காரணத் தாலும் கூட்டப்பட்டு காட்டப்படாது. ஆறு மாதத்திற்கு ஒரு முறை கடனளியிடமிருந்து வர வேண்டிய முதல் வட்டி குறித்து ஒரு அட்டவணை கடனளிக்கு அளிக்கப் படவேண்டும். நீதிமன்றம், எந்த ஒரு லேவாதேவிக்காரராவது மேற் கூறிய வகையில் கணக்கினை சரிவர வைத்திருக்காவிட்டால் ஓரளவு வட்டியையோ அல்லது முழு வட்டியையோ தள்ளிவிட உரிமை பெற்றுள்ளது. மத்திய வங்கிக் குழு, இதே போன்ற சட்டத்தை மற்ற மாநிலங்களும் நிறைவேற்ற சிபாரிசு செய்தது.

இதேபோன்ற சட்டம் உ.பி., ம.பி , பம்பாய் ஆகிய மாநிலங் களில் இயற்றப்பட்டது. வட்டித்தொழிலர் கணக்குப் புத்தகங் களில் எல்லா விவரங்களும் கொண்டு பதிய வேண்டியது சட்ட பூர்வமாக்கப்பட்டது. பஞ்சாப் சட்டம்போல் உ.பி, வங்காளம், ம.பி. ஆகிய மாநிலங்கள் கடன் கொடுத்தவர் கடனளிக்கு குறிப்பிட்ட கால அளவில் அவர்களிடமிருந்து வரவேண்டிய முதல், வட்டி குறித்த அட்டவணை அனுப்பிவைக்க வேண்டியது. சட்டத்தில் கொண்டு வரப்பட்டது. மற்ற மாநிலங்கள் ஒரு குறிப்பிட்ட கட்டணம் செலுத்தி எப்போது வேண்டுமானுலும் இந்த அட்டவணையைப் பெற வகை செய்தது. உ.பி. சட்டப்படி எந்த லேவாதேவிக்காரராவது கடன் கொடுத்த பணத்திற்கு அதிகமாகத் தன் கணக்கில் குறிப்பு எழுதினுல் தண்டனைப் பணம் அளிக்க நீதிமன்றத்

துக்கு உரிமை உண்டு. பீகார், ஒரிசா மாநிலங்களில் இக்குற்றத்திற்கு தண்டனைப் பணம் அல்லது சிறைதண்டனை கொடுக்க நீதி மன்றங்களுக்கு உரிமை அளிக்கப்பட்டது.

மேலே கூறப்பட்டச் சட்டங்கள் 1930-லிருந்து 1940-வரை பல மாநிலங்களில் அமுலாக்கப்பட்டன. இச் சட்டங்கள் வட்டித் தொழிலர் அதிக பட்சமாக எவ்வளவு வட்டி வீதம் வசூலிக்கலாம் என்பதை குறித்திருந்தன. இவ்வட்டி வீதத்திற்கு அதிகமாக வசூலிப்பது குற்றம். பல மாநிலங்களில் அப்போது சட்டபூர்வமாக நிருணயிக்கப்பட்ட அதிகபட்ச வட்டி வீதம் சதவீதத்தில் கீழ்வருமாறு:—

| | காப்புள்ள கடன் (Secured loan) | காப்பற்ற கடன் (Unsecured loan) |
|---|---|---|
| சென்னை | 9 | 15 |
| கி. பஞ்சாப் | 12 | 18 |
| ம. பிரதேசம் | 12 | 18 |
| உ. பி. | 12 | 24 |
| பீஹார் | 9 | 12 |
| ஒரிசா | 9 | 12 |
| மஹாராஷ்ட்ரா | 9 | 12 |
| மே. வங்காளம் | 9 | 12 |
| அஸ்ஸாம் | 9½ | 12½ |

இவை அதிக பட்ச வட்டி வீதம் என்றாலும் சில வழக்குகளில், கொடுக்கப்பட்டக் கடனை நோக்கி சட்டத்தில் குறிப்பிடப்பட்ட வட்டி வீதம் அதிகமாகத் தோன்றினுல், அதனைக் குறைக்க நீதிமன்றத்திற்கு உரிமை உண்டு.

பல மாநிலங்களில் வட்டித் தொழிலர் தொழில் நடத்த கட்டாயமாகப் பதிவும் அனுமதியும் (Registration and Licensing) பெற வேண்டும். தற்போது எல்லா இந்திய மாநிலங்களிலும் இது அமுலில் இருக்கிறது.

வட்டித் தொழிலருக்கும், நாட்டு வங்கியருக்கும் உள்ள வேற்றுமைகள் முன்பே குறிப்பிடப்பட்டன. நாட்டு வங்கியர் சில குறிப்பிட்ட சாதி அல்லது, இனத்தினைச் சேர்ந்தவராகவே இருக்கின்றனர். மூல்தானியர், சராப், மார்வாரியர் முறையே மேற்கு மத்திய வட இந்தியாக்களிலும் தென்னிந்தியாவில்

நாட்டுக்கோட்டை செட்டியார், கல்லிடைக்குறிச்சி பிராமணர் ஆகியோரும் இத் தொழிலில் பரம்பரையாக ஈடுபட்டுள்ளனர். இவர்கள் வங்கித் தொழிலோடு, கமிஷன் ஏஜன்ட் மண்டி, தவணைக் கொள்முதலுக்கு கடனுதவி, வியாபாரம் ஆகிய வற்றைச் சேர்ந்தே செய்கின்றனர். ஒருவர் நாட்டு வங்கியரா அல்லது லேவாதேவிக்காரரா என்று அறுதியிட்டுச் சொல்வது சிறிதளவு கடினமே. சில லேவாதேவிக்காரர்களை நாட்டு வங்கியர் தொழிலையும், சில நாட்டு வங்கியர் என அழைக்கப் படுபவர் லேவாதேவித் தொழிலை மட்டுமே செய்யலாம். பம்பாய் சராப்புகள், தமிழ் நாட்டுச் செட்டியார்கள், மார்வாரி ஆகியோர் வங்கித் தொழிலை மட்டுமின்றி வணிகத் தொழிலையும் செய்கின்றனர்.

### சிகாபுரி அல்லது மூல்தானி சராப்புகள்

மூல்தானி சராப்புகள் பல்வகையான வங்கிப் பணிகளைச் செய்யும் முக்கியமான நாட்டு வங்கியராவர். 40 ஆண்டுகளுக்கு முன் மிக முக்கியத்துவமில்லாத இவர்கள் நாட்டுப் பிரிவினைக்குப்பின் அதிக எண்ணிக்கையில் முக்கியமான நாட்டு வங்கியர்களாக ஆகியுள்ளனர். பம்பாயில் மட்டும் 253 நாட்டு வங்கியரும், அகில இந்தியாவில் 400 நாட்டு வங்கியரும், இச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள். மிக அதிகத் தொகையை உடனடியாக அளிக்கவல்லவர்கள். சிறிய, நடுத்தர வியாபார, தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான குறுகிய கால கடனை முழு அளவில் இவர்கள் பூர்த்தி செய் கின்றனர். மூல்தானியர்கள் பிணைப்புக் கடனுக கொடுக்காமல் கடன் வாங்குபவரின் தகுதி, நாணயத்தைக் கருதி நபர் கடனுகவே அளிக்கின்றனர். உண்டிகளை கழிமானம் செய்யும் தொழிலைப் பெருமளவில் ஏற்கின்றனர். தனி வியாபாரிக்கு ரூ. 2,500 முதல் 10,000 வரை ஈடு ஏதும் இல்லாமல் கடன் அளிக்கின்றனர். வங்கிக்குழு 1972-ன் அனுமானப்படி 1969–ம் ஆண்டு 319 மூல்தானிய நாட்டு வங்கியரின் சொந்த முதல் (owned capital) ரூ. 16.4 கோடி. இந்த 319 நாட்டு வங்கியரின் வைப்புகள் இதே ஆண்டில் ரூ. 3.73 கோடியாக இருந்தது. அவர்கள் வைப்பு அளிக்கும் வட்டி வீதம் 6-இலிருந்து 10 சத வீதம் வரை இருந்தது. மூல்தானிய நாட்டு வங்கியர் வணிக வங்கிகளிடமிருந்து கணிசமான தொகையைக் கடன் வாங்கி தொழில் நடத்துகின்றனர். வணிக வங்கிகள் ஆண்டொன்றுக்கு சராசரி ரூ. 35 கோடி முதல் ரூ. 40 கோடி வரை கடன் அளிக் கின்றது. இத் தொகையில் 40-இலிருந்து 50 சதவீதத் தொகை வரை மூல்தானியநாட்டு வங்கியரால் பயன்படுத்தப்படுகின்றது.

உண்டியல் கழிவுப்பாடு, வாங்குதல் ஆகியவைகளுக்கு மட்டும் ஆண்டுதோறும் ரூ. 40 கோடி வரை இவர்களால் முதலீடு செய்யப்படுகின்றது.

### குஜராத்தி சராப்புகள்

இவர்கள் மற்றொரு பழம்பெரு நாட்டு வணிக இனத்தினைச் சார்ந்தவர்கள். இவர்களில் சிலர் 200 ஆண்டுகளாக பரம்பரை பரம்பரையாக நாட்டு வணிகத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்களை இருவகையினராகப் பிரிக்கலாம்:

(1) வங்கித் தொழிலை மட்டும் செய்பவர்;

(2) வங்கித் தொழிலும், கமிஷன் ஏஜென்ட் தொழிலும் செய்பவர்.

இவர்களில் முதல் வகையினைச் சார்ந்தவர் வைப்புகளை ஏற்று ஈட்டின்பேரில் கடன் வழங்குகின்றனர். கடனைப் பணமாகவும், உண்டியலாகவும் தருகின்றனர். தங்கள் வாடிக்கைக்காரர்களுக்காக உண்டியலையும் ஏற்றுக் கொள்ளு கின்றனர். பொருள்களை கிராமத்தினின்று மண்டிகளுக்கும், சந்தைகளுக்கும் எடுத்துச் செல்வதற்கான நிதி வசதியினை இவர்கள் அளிக்கின்றனர். அகமதாபாத்தில் உள்ள இவ்வகை யான 150 சராப்புகள் வங்கித் தொழிலை மட்டும் செய்கின்றனர். இதில் மற்றொரு வகையினர் பம்பாயில் காணப்படுகின்றனர். 200 குஜராத்தி சராப்புகள் இங்கு வங்கியல் தொழிலுடன் கமிஷன் ஏஜென்ட் தொழிலும் செய்கின்றனர். இவர்களுக்கு உண்டியல் வியாபாரத்தைவிட கமிஷன் ஏஜென்ட் தொழிலே முக்கியமாக அமைந்துள்ளது. இவர்கள் கூட்டு வணிக வியாபாரமாக ஆரம்பித்து பல இடங்களில் கிளைகளையும் ஏற் படுத்தியுள்ளனர். சில குஜராத்தி நாட்டு வணிகர் 30 முதல் 35 கிளைகள் வரை வைத்துள்ளனர். சில பெரிய குஜராத்தி நாட்டு வணிகர் ரூ. 125 கோடி முதல் ரூ. 150 கோடி வரை மதிப்புள்ள உண்டியல்களை வியாபாரத்தில் ஏற்கின்றனர்.

### நாட்டுக்கோட்டை செட்டியாரும் கல்லிடைக்குறிச்சி பிராமணரும்

இவர்களில் முன்னவர் தமிழ்நாட்டில் மதுரை, இராமனாத புரம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் அதிக மாகவும், மற்ற மாவட்டங்களில் குறைவாகவும் இயங்கி வருகின்றனர். இந்திய விடுதலைக்குமுன் பர்மா, இலங்கை, தாய்லாந்து ஆகிய வெளிநாடுகளிலும் இவர்கள் தொழில் செய்து வந்தனர். கடன் கொடுப்பதைத் தவிர உண்டியல்களை கழிவு செய்யும் தொழிலையும் செய்து வந்தனர். இவர்கள்

வைப்புகளை ஏற்று, வட்டி கொடுத்து, காசோலைக்குப் பணமும் கொடுத்து வந்தனர்.

சென்னை மாநில வங்கி விசாரணைக்குழு (The Madras Provincial Banking Enquiry Committee) நாட்டு வங்கியர் தொழிலைச் செய்யும் இந்த இனத்தாரின் நடைமுறை முதல் ரூ. 75 கோடி என மதிப்பிட்டது. இவற்றில் ரூ. 58 கோடி சொந்த மூலதனமாகவும் ரூ. 17 கோடி கடன் வாங்கிய தொகையாகவும் இருந்தது.

கல்லிடைக்குறிச்சி பிராமணர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் தங்கள் தொழிலை நடத்தி வந்தனர். கடன் கொடுப்பதோடு, விவசாய, தொழில் தேவைக் கடன்களையும் கொடுத்து வந்தனர். இவர்களில் 175 நாட்டு வங்கியர் ரூ. 5·5 கோடி இத் தொழிலில் ஈடுபடுத்தியுள்ளதாக மதிப்பிடப்பட்டுள்ளது.

### மார்வாரி கயாக்கள்

அஸ்ஸாம் மாநிலத்தில் கயாக்கள் என்ற மார்வாரிகள் நாட்டு வங்கியத் தொழிலைச் செய்கின்றனர். கிட்டத்தட்ட 400 பேர்கள் இம்மாநிலத்தில் இந்த இனத்தினைச் சேர்ந்தவர்கள். இவர்கள் கடன் கொடுப்பதோடு தேயிலைத் தோட்டங்களுக்குத் தேவையான பல பொருள்களையும், இங்கு வேலை செய்வோர்களுக்குத் தேவையான மளிகை, ஷாப் சாமான்களை அளிக்க வல்ல கடைகளையும் ஏற்று நடத்துகின்றனர்.

### நாட்டு வாங்கியரும் உண்டியல்களும்

உண்டியல்கள் மூலம் கடன் வழங்குவது நாட்டு வங்கியரின் தொழிலில் முக்கியமாக அமைந்துள்ளது. மாற்று உண்டியல் (Bill of Exchange) அதிகமாக இல்லாத குறையினை ஓரளவுக்கு இந் நாட்டு வணிகர்களின் உண்டியல்கள் (Hundis) நீக்குகின்றது.

உண்டியல்கள் கீழ்க்கண்டவாறு பயன்படுகின்றன:

(1) தேவையான பணத்தினை தோற்றுவிக்க;

(2) ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பணத்தினை அனுப்ப;

(3) உள்நாட்டு வணிகத்திற்கு நிதிவசதி அளிக்க.

இவ்வுண்டியல்கள் இருவகைப் படுகின்றன :

(1) தர்ஷனி (Darshani): நோக்கு அல்லது தேவைப்பட்ட போது முதிர்வு அடையக் கூடியவை.

(2) முதாதி (Muddati): குறிப்பிட்ட காலத்திற்குப் பின் முதிர்வு அடையக் கூடியவை.

இந்தியாவில் மேற்கூறிய இரு வகைகளில் பலவிதமான உண்டியல்கள் புழக்கத்தில் இருக்கின்றன. இவையாவன: 1. சா ஜோக் (Shaw Jog), 2. நாம் ஜோக் (Nam Jog), 3. தேக்கர்னர் ஜோக் (Dekharnar Jog), 4. ஃபர்மனி ஜோக் (Farmani Jog), 5. ஜோகாமி (Jokhami), 6. தனி ஜோக் (Dhani Jog).

புழக்கத்திலுள்ள உண்டியல்களில் நாட்டு வாங்கியர் தொடர்ந்து விரிவுபடுத்தி தொழில் நடத்த ஊக்குவிக்கப் பட்டால் நல்ல உண்டியல் சந்தையை தோற்றுவிக்கலாம்.

வட்டித் தொழிலர் குறைந்துபோகக் காரணங்கள்

வட்டித் தொழிலர் எண்ணிக்கை நாளடைவில் குறைந்து வருவதற்குச் சில காரணங்கள் உண்டு:

1. கொடுத்த கடனை திரும்பப் பெருவதில் சட்டபூர்வமான இன்னல்கள் சில இருக்கின்றன.

2. அதிக வட்டி வாங்குவதைச் சட்டங்கள் தடை செய்வதோடு வழக்கு மன்றங்கள் ஒப்பந்த வட்டியைக் குறைத்து விடுகின்றன.

3. அவ்வப்போது சட்டம் இயற்றி விவசாயிகளிடமிருந்து திரும்பப் பெறவேண்டியக் கடனை ஒத்திவைத்து சட்டம் இயற்றப்படுகின்றது.

4. கூட்டுறவுச் சங்கங்களும், வணிக வங்கிகளும் போட்டி போட்டுக் கொண்டு குறைந்த வட்டி வீதத்தில் கிராமப் புறங்களில் கடன் வழங்குகின்றன.

5. கடன் கொடுப்பவருக்கும், கடன் வாங்குபவருக்கும் இடையே இருந்த சுமுக உறவு நாளடைவில் குறைந்து கடன் கொடுப்பவர் எதிரி, நியாயமற்றவர் என்ற தோற்றம் ஏற்படுத்தப்பட்டுள்ள நிலை.

6. கடன் கொடுப்பதைவிட வியாபாரத்தில் அதிக இலாபமும் குறைந்த நட்டவச்சமும் இருக்கும் நிலை.

7. பதிவு, அனுமதி ஆகியவைகள் பெறுதலில் அரசாங்க அலுவலர்களை அணுகி பெற்றுக்கொள்வதில் உள்ள இன்னல்கள்.

எனினும், லேவாதேவிக்காரர்களும், நாட்டு வங்கியரும் முழுவதுமாக நீங்கிவிடவுமில்லை, அவர்களை முழுவதுமாக நீக்கப்படவும் முடியாது. அவர்கள் நடைமுறையில் எத்துணை குறைபாடு இருந்தாலும் நீக்கப்படக் கூடியவர்கள் அல்லர். கிராமியக் கடன் அனுமானக்குழு 1954, மொத்த விவசாயக் கடனில் சுமார் 93 சதவீதம் வரை நாட்டு வங்கியர்கள் மற்றும் லேவாதேவிக்காரர்களால் கொடுக்கப்படுவதாக மதிப்பீடு செய்யப்பட்டது. தற்போது கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்களும், தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளும் கிராமப் புறத்தில் விவசாயக் கடனை அதிகரித்த போதிலும் இன்றும் நாட்டு வங்கியர்கள் மற்றும் லேவாதேவிக்காரர்கள் கணிசமான கடன் தொகை அளிக்கின்றனர். திரு. வேங்கடபையா தலைமையில் இயங்கிய கிராமியக் கடன் விமரிசனக்குழு, 1969 (Rural Credit Review Committee, 1969), கூட்டுறவு இயக்கம் மட்டில் விவசாயக்கடனை கொடுக்க இயலாது, எல்லா வகையான கடன் வழங்கும் நிறுவனங்களும் ஒன்றுசேர்ந்து விவசாயக் கடன் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளது. எனவே, நாட்டு வங்கியர்களையும், லேவாதேவிக்காரர்களையும் எவ்வகையில் சீர்படுத்தி பொருளாதாரத்திற்குப் பயனுள்ளவராக ஆக்கலாம் என்பதே முக்கியமானது ஆகும். இது சம்பந்தமாக சில யோசனைகள் கீழே தரப்பட்டுள்ளன:

1. மத்திய வங்கிக் குழு சிபாரிசு செய்ததே போல, வங்கித் தொழில் மட்டும் செய்யும் நாட்டு வங்கியர்களும் வணிகத் தொழிலை விட்டு விட்டு வங்கித் தொழில் மட்டில் செய்யத் தயாராக இருக்கும் நாட்டு வங்கியர்களையும் ரிசர்வு வங்கி ஒரு தனிப்பட்டியலில் வைத்து, இவைகளுக்கு மற்ற வணிக வங்கிகளுக்குத் தருவது போன்ற உண்டியல் மறு கழிவுப்பாடு வசதி இவைகளுக்கும் அளிக்கப்படலாம். இவ் வசதிக்காக நாட்டு வங்கியர்கள் கணக்குப் பதிவு ஏடுகளை சரியான முறையில் வைத்திருப்பதோடு அவர்களுடைய கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டு ரிசர்வு வங்கி பார்வைக்குக் கொண்டு வரல் வேண்டும்.

2. ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி மற்றைய வணிக வங்கிகள் நாட்டு வங்கியர்களை தங்களுடைய உண்டியல், காசோலைகளை

வசூலிக்க பதிலாளாக ஏற்கலாம். மேலும், ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, மற்ற வணிக வங்கிகளுக்கு அளிக்கும் பண அனுப்பும் வசதியை இவர்களுக்கும் கொடுக்கலாம்.

3. வங்கிகளின் கணக்குப் புத்தக சாட்சிய சட்டம் (Bankers' Book Evidence Act) அளிக்கும் பாதுகாப்பு நாட்டு வங்கியர்களுக்கும் அளிக்கப்படாலாம்.

4. வணிக வங்கிகள் நாட்டு வங்கியர்களுக்குக் கடன்வசதி தாராளமாகத் தருவதோடு இவர்களுடைய உண்டியல்களைக் கழிவுப்பாடு செய்தும் கொடுக்கலாம்.

5. மத்திய வங்கி விசாரணைக்குழு, ரிசர்வு வங்கியின் பட்டியலில் ஏற்றுக் கொள்ளப்பட்ட நாட்டு வங்கியர்கள் அகில இந்திய வங்கியர்கள் சங்கத்தில் அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளலாம் என சிபாரிசு செய்தது.

6. நாட்டு வங்கியரும், வணிக வங்கிகளும் கூட்டாக கடன் வழங்கும் சாத்தியக் கூறை ஆராயலாம்.

வங்கிக் குழு 1972, நாட்டு வங்கியர்கள்பற்றி கீழ்க்கண்ட சிபாரிசுகளைச் செய்தது:

1. வணிக வங்கிகளிடமிருந்து தங்களுக்குத் தேவையான முழுக் கடனையும் பெற்று தொழில் செய்யும் நாட்டு வங்கியர்களை ஒழுங்குபடுத்த மாதிரி மசோதா தயாரித்து எல்லா மாநில அரசுகளுக்கும் சட்டம் இயற்ற வசதி செய்ய வேண்டும்.

2. நாட்டு வங்கியர்கள் நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்தவும், கண்காணிக்கவும் வணிக வங்கிகளைப் பயன் படுத்த வேண்டும். ரிசர்வு வங்கி மறைமுகக் கட்டுப்பாட்டை வணிக வங்கிகளின் மூலமாகவே வைத்துக் கொள்ளவேண்டும், அவ்வப்போது ரிசர்வு வங்கி வணிக வங்கிகள் மூல்தானி உண்டியல் வியாபாரத்திற்குச் செய்யும் பண உதவி சரியான நிலையில் செய்யப்படுகின்றதா என ஆராய வேண்டும்.

3. வணிக வங்கிகள் அவ்வப்போது நாட்டு வங்கியர்களிட மிருந்து குறிப்பிட்ட நமூனுக்களைப் பெற்று அவைகள் போதிய உள் ஆய்வு, தணிக்கை பெற்றுள்ளதா என்பதனைக் காண வேண்டும்.

4. வணிக வங்கிகளிடமிருந்து உண்டியல் கழிவுப்பாடு வசதிபெற நாட்டு வங்கியர்கள் கீழ்க்கண்டவைகளைச் செய்ய வேண்டும்:

(அ) இந்த நாட்டு வங்கியர்கள் வியாபாரம் ஏதும் செய்யக் கூடாது.

(ஆ) குறைந்தது ரூ. 1 லட்சம் சொந்த முதலை நாட்டு வங்கியர் பெற்றிருக்க வேண்டும்.

(இ) கணக்குப்பதிவு ஏடுகளை சரியாக வைத்திருக்க வேண்டும். அவை தகுதி வாய்ந்த தணிக்கையாளரால் தணிக்கை செய்யப்படவேண்டும்.

(ஈ) தாங்கள் செய்த தொழில் அளவு, எவ்வகையான வழியில் தொழில் நடத்தப்பட்டது ஆகியவை பற்றிய அறிக்கை ரிசர்வு வங்கிக்கு அளிக்கப்படவேண்டும். மேலும், ரிசர்வு வங்கியும் வணிக வங்கியும் நாட்டு வங்கியர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிதி வசதி சமுதாயத்தில் பயனுள்ள துறைகளுக்கு கடன் வசதி அளிக்கப் பயன்படுத்தப்பட்டதா என்பதை பரிசீலனை செய்ய வேண்டும்.

(உ) கூடியவரை நாட்டு வங்கியர் ஒரு வணிக வங்கியினிடமிருந்தே கடன் பெற வேண்டும்.

(ஊ) நாட்டு வங்கியர்கள் ஒரு சங்கத்தின் அங்கத்தினராக இருத்தல் வேண்டும்.

5. நாட்டு வங்கியர் தாங்கள் அளிக்கும் கடனுக்கு அதிகபட்சமாக எத்தனை வட்டி வீதம் வசூலிக்கலாம் என்பதைப் பற்றி வணிக வங்கிக்கும் நாட்டு வங்கியருக்கும் ஒரு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு அதிகமாக வட்டி வீதத்தை நாட்டு வங்கியர் வசூலிக்கக் கூடாது.

6. அவ்வப்போது வட்டிவீதம் பற்றி பரிசீலனை செய்யப் படவேண்டும். முந்துமைத் துறைகளுக்கு குறைந்த வட்டி வீதத்தில் நாட்டு வங்கியர் கடன் வழங்க வேண்டும். அப்போது தான் வணிக வங்கிகள் குறைந்த வட்டி வீதத்தில் பண வசதியினை நாட்டு வங்கியருக்கு அளிப்பதில் நியாயம் இருக்கும்.

7. அவ்வப்போது வணிக வங்கிகள் நாட்டு வங்கியர் கடன் பெறுவோருக்கு எந்த வட்டி வீதத்தில் கடன் அளிக்கின்றனர்

என்பது பற்றி மாதிரிச் சோதனையாக சிலரை விசாரிக்க வேண்டும்.

8. நாட்டு வங்கியர்கள் தங்கள் தொழில் முறையை ஒழுங்குபட செய்கிறார்களா என்பதனை நோக்கவும், தவறு செய்பவர்களைத் தண்டிக்கவும் தங்களுக்குள் நடத்தைபற்றி ஒழுங்குச் சட்டம் (Code of Conduct) அவர்களே ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

9. வட்டி, மற்றும் பல செலவினங்கள் வசூல் செய்யும் அளவில் எல்லா நாட்டு வங்கியரும் ஒரே மாதிரியாக்கப்பட வேண்டும். வட்டி தவிர மற்ற செலவு வசூல் செய்யப்படுவது எத்துணை என்பதைத் தனியாகக் காட்ட வேண்டும்.

10. வணிக வங்கிகள் நாட்டு வங்கியரின் நிதி அறிக்கைகளை நன்கு நோக்கி வரவேண்டும்.

11. மூல்தானி உண்டியலை வங்கியல் ஒழுங்குச் சட்டம் 24ஆம் பிரிவின்படி எளிவரல் சொத்து என ஏற்க வேண்டாம்.

12. மூல்தானி உண்டியல் மதிப்பை ரூ. 5,000-லிருந்து கால கட்டங்களில் ரூ. 10,000-ம், ரூ. 25,000-ம் ஆக உயர்த்த வேண்டும்.

13. உண்டியல்களை ஒரேவிதமாக ஒழுங்குபடுத்த வேண்டும்.

14. தங்களுடைய வங்கியல் அனுபவம், பரம்பரை திறமையைக் கொண்டு நாட்டு வங்கியர்கள் ஏற்பகமாகவும் (Acceptance Houses), உண்டியல் கழிவுப்பாடகமாகவும் (Discount Houses) மாறலாம்.

பாரதப் பிரதமரின் 20அம்ச பொருளாதாரக் கொள்கையில் கிராமியக் கடனைக் குறைப்பதும், கடனளிக்கும் நிறுவனங்களை ஒழுங்குபடுத்துவதும் முக்கிய திட்டமாக அமைந்துள்ளது. கூட்டுறவு இயக்கங்கள், வணிக வங்கிகள் தவிர நாட்டு வங்கியரை ஒழுங்குபடுத்தினல் பொருளாதாரத்திற்கு நன்மை விளையும்.

### ரிசர்வு வங்கியும் நாட்டு வங்கியரும்

நாட்டு வங்கியரின் செயல்பாட்டை ரிசர்வு வங்கி ஒழுங்கு படுத்த வேண்டியதற்குச் சில காரணங்கள் உண்டு. மைய

வங்கி பணச் சந்தையின் கண்காணிப்பாளர். நாட்டு வங்கியர் கடன் அளிக்கும் தொகை மொத்தக் கடனில் கணிசமான தொகை ஆகும். வசூலிக்கும் வட்டி வீதமோ அதிகம். ரிசர்வு வங்கியின் மைய வங்கி வீதத்திற்கும் நாட்டு வங்கியரின் வட்டி வீதத்திற்கும் எந்த ஒற்றுமையும் இருப்பதில்லை. மேலும் நாட்டு வங்கியர்கள் ரிசர்வு பாங்கின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டே இருக்கின்றனர்.

மைய வங்கி விசாரணைக் குழு நாட்டு வங்கியரை ரிசர்வு வங்கியுடன் இணைத்து, பணச் சந்தையின் இரு பெரும் பிரிவுகளையும் ஒருங்கிணைக்க வேண்டும் என்று சிபாரிசுசெய்தது. இப்பரிந்துரைக்கு ஒப்ப ரிசர்வு வங்கி 1937ஆம் ஆண்டு நாட்டு வங்கியரைத் தன்னுடன் இணைக்கும் திட்டத்தை உருவாக்கியது. குறைந்த பட்சம் ரூ. 2 லட்சம் நடைமுறை முதல் கொண்ட வங்கியருக்கு மூன்று சலுகைகளைத் தர ரிசர்வு வங்கி இசைந்தது:

1. அரசு கடன் பத்திரங்கள்மீது கடன்.
2. உண்டியல்களை மறு கழிவு செய்தல்.
3. பணம் அனுப்பும் வசதி.

மேற்படி வசதி பெற நாட்டு வங்கியர் தங்கள் வணிகத் தொழிலை அறவே விட்டுவிட வேண்டும். தங்கள் கணக்குப் புத்தகங்களை தணிக்கை செய்து இலாப நட்ட கணக்கு, இருப்பு நிலைச் சீட்டு தயார் செய்வதோடு, அப் புத்தகங்களை பார்த்து ஆய்வு செய்ய ரிசர்வு பாங்கு உரிமை பெறும். ஆனால், இத் திட்டம் அமலாக்கப்படவில்லை. மீண்டும் 1941 ஆம் ஆண்டு ரிசர்வு வங்கி இத் திட்டத்தை அமலாக்க இந்த யோசனைகளை எல்லா நாட்டு வங்கியர் சங்கங்களுக்கும் அனுப்பி வைத்தது. சராப் சங்கம் 'எந்த தன்மானம் உள்ளவனும் தங்கள் திட்டத்திற்கு ஏற்கமாட்டான்—உங்கள் உதவியும் தேவை இல்லை' என குறிப்பிட்டது. மறுமுறையும் திட்டம் கைவிடப் பட்டது.

## பாட நூல்கள்

1. Banking Commission Report, 1972.
2. S. G. PANANDIKAR—Banking in India.

# 17. கிராமியக் கடனும் கூட்டுறவு வங்கிகளும்

விவசாயத்திற்கு கடன் தேவைப்படுகிறது. தேவைப் பட்ட நேரத்தில் கடன் கிடைக்காவிட்டால் பருவம் தவறி விவசாயம் செய்ய முடியாது. இந்தியாவில் பெரும்பாலான விவசாயிகள் சிறு விவசாயிகளே. இவர்களிடம் விவசாயம் நடத்த தனி மூலதனம் ஒன்றும் கிடையாது. கடனைப் பெற்று, விவசாயம் செய்து, அறுவடைக்குப்பிறகு கடனைத் திருப்பித் தருவார்கள். பல நூற்றுண்டுகளாக கிராம லேவாதேவிக்காரர், உறவினர், நாட்டு வங்கியர், பெருநிலக்கிழார்கள், ஆகியோர் விவசாயிக்குக் கடன் அளித்து வந்தனர். நாட்டு வங்கியர் மற்றும் லேவாதேவிக்காரர்களிடமிருந்து கடன் வாங்குவதில் உண்டான பல இடையூறுகளைச் சென்ற அத்தியாத்தில் பார்த்தோம். அதிக வட்டி, பொய் நடவடிக்கைகள் காரணமாக பல சிறு விவசாயிகள் தங்கள் நிலங்களை இழந்துகொண் டிருக்கும் நிலையைக் கண்டு இந்தியாவில் கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்கள் 1904ஆம் ஆண்டு துவக்கப்பட்டன. இச் சங்கம் ஆரம்பிக்க சிபாரிசு செய்த F. நிக்கல்சன் என்பார் ஜெர்மானிய நாட்டு 'ரெய்ஃபீசன்' (Raifeeisen) மாதிரி இச் சங்கங்கள் அமைய வேண்டும் என எண்ணம் தெரிவித்தார். இச் சங்கங்களின் சிறப்பு : 1. ஒரு கிராமத்திற்கு ஒரு சங்கம், 2. வரையறுக்கப்படாத பொறுப்பு, 3. கௌரவ நிருவாகம் (honorary management).

கூட்டுறவுச் சங்கங்களின் கோட்பாடு 'ஒவ்வொருவரும் எல்லோருக்கும், எல்லோரும் ஒவ்வொருவருக்கும்' இச் சங்கங்கள் இலாப நோக்கு உடையன அல்ல. இவற்றின் நோக்கமும் தொண்டு நோக்கமே. இதன் பங்குத் தொகை மிகக் குறைவானது. எளியவரும் பங்கு ஏற்கலாம். ஒவ்வொரு வருக்கும் ஒரு வாக்கே (Vote). ஒருவர் குறிப்பிட்ட அளவுக்கு மேல் பங்கினை கூட்டுறவுச் சங்கத்தில் வாங்கமுடியாது. பங்கினை மற்றவர்களுக்கு மாற்றவும் முடியாது. இலாப ஈவுத்தொகை ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை விட அதிகமாக இருக்க முடியாது. இலாபத்திலிருந்து ஒவ்வொரு அங்கத்தினருக்கும் போனஸ்,

அவர்கள் அச் சங்கத்துடன் எத்துணை தொழில் அல்லது வியாபாரம் செய்துள்ளார்கள் என்பதனைப் பொறுத்தே அளிக்கப்படும்.

**விவசாயக் கடனின் சில குணாதிசயங்கள்**

1. விவசாயியின் கடன் பொதுவாக ஒரே நிரந்தரமாக அமைகின்றது. அதிக விளைச்சல் காரணமாக கடன் தேவை குறைவதில்லை.

2. விவசாயி அளிக்கக்கூடிய ஈடு நிலமே. இதனை மதிப்பீடு செய்வதோ, ஈடாக எடுத்துக் கொள்வதோ வங்கியர் களுக்கு கடினமானதொரு காரியம்.

3. விவசாயி நட்டவச்சம் முழுவதையும் தானே ஏற்க வேண்டியிருக்கிறது. தொழிற்சாலைகள்போல் நட்டத்தை மற்ற வருக்கு மாற்றும் காப்பு ஏதும் இல்லை.

4. விவசாயம் சிறிய விவசாயமாகவே அமைகிறது. பெரிய அளவில் கம்பெனி அமைத்து தேவையான நிதி வசதி பெறும் வாய்ப்பு இல்லை.

5. விவசாயம் மற்ற தொழில்களினின்று வேறுபட்டு நிற்கின்றது. உற்பத்தி விவசாயியின் கையில் இல்லை. இயற் கையை பொருத்தே இருக்கின்றது. இவ் வித்தியாசத்தின் காரணமாக விவசாயக் கடனை மற்றைய கடனைப்போல் பாவிக்கலாகாது.

6. உற்பத்தி உடனடியாக இருப்பதில்லை. பல மாதங் களுக்குப் பிறகே விவசாயி தன் உழைப்பின் ஊதியத்தைப் பெற முடிகிறது.

விவசாயிக்கு கடன் தேவைப்படுகின்றது. இக் கடனும் நல்ல முறையில் அமையவேண்டும். ஒரு ஃபிரெஞ்சு பழமொழி 'கடன் விவசாயியை தூக்கிலே தொங்குபவனை கயறு பற்றி நிற்பதேபோல் காப்பாற்றுகின்றது' எனக் கூறுகிறது.

**விவசாயக் கடன் வகைகள்**

1. **குறுகிய காலக் கடன் :** இது (1) விதை, உரம், கால் நடைத் தீவனம் வாங்க; (2) வாடகை, கூலி, நிலவரி, மற்றைய செலவினம்; (3) நீர்ப்பாசன செலவு, குழாய் வாடகைச் செலவு; (4) மற்றைய நடைமுறை விவசாயச் செலவுகளுக்குத் தேவைப் படுகின்றன.

2. மத்திய காலக் கடன் : இது (1) கால்நடை வாங்க; (2) நில எல்லை, நிலத்தைப் பண்படுத்த; (3) விவசாயக் கருவிகள் இயந்திர சாதனம் ஆகியவைகள்; (4) கிணறு சுத்தம், ஆழப் படுத்துதல் ஆகியவைகளுக்குத் தேவைப்படுகின்றன.

3. நீண்ட காலக் கடன் : இது (1) நிலம் வாங்க, நிலத்தை பண்படுத்த; (2) புதிய நில முன்னேற்றத் திட்டங்கள்; (3) குழாய், கிணறு ஆகியவைகளைத் தோற்றுவிக்க; (4) மற்றைய மூலதன முன்னேற்றங்கள்.

கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்கள் தங்களுடைய அங்கத்தினர்களுக்குத் தேவையான நடைமுறை விவசாயச் செலவுக்கான கடனையே அளிக்கும். எனவே, இவை குறுகிய காலக் கடனாகும். கடன் பெற்ற அங்கத்தினர் கடன் வாங்கியதி லிருந்து 12 மாதத்திற்குள், 15 மாதத்திற்கு மிகாமலும், அறுவடை யானவுடன் கடனைத் திருப்பித் தரவேண்டும். இச் சங்கங்கள் குறைந்த அளவு வட்டி வீதமே வசூலிக்கின்றன.

கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கச் சட்டம், 1904-படி ஒரு கூட்டுறவுச் சங்கம் கீழ்க்கண்ட குணதிசயங்களைக் கொண் டிருந்தன:

1. குறைந்தது அதே கிராமத்தில் வசிக்கும் 10 நபர்கள் சங்கத்தின் அங்கத்தினராக வேண்டும்.

2. அங்கத்தினர்களிடமிருந்து வைப்புகளும், அங்கத்தினர் அல்லாதவரிடமிருந்து கடனும் பெற்று அங்கத்தினருக்குக் கடன் வழங்கலாம்.

3. கூட்டுறவுப் பதிவாளரின் கட்டுப்பாட்டில் இச் சங்கம் இயங்கவேண்டும்.

4. இச் சங்கங்களின் கணக்கை கூட்டுறவுப் பதிவாளர் தணிக்கை செய்யவேண்டும்.

5. கிராமச் சங்கத்தின் அங்கத்தினர்களில் $\frac{4}{5}$ விவசாயி களாக இருக்கவேண்டும்.

6. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்படாதது.

7. இலாபத்தை ஒரு காப்பு நிதிக்கு ஒதுக்கவேண்டும். இந்த நிதி குறிப்பிட்ட அளவு எட்டிய பிறகே இலாபத்தில் அங்கத்தினர்களுக்கு போனஸ் அளிக்கலாம்.

8. அங்கத்தினர்களுக்கு மட்டும் நபர் ஜாமீனாகவோ, சொத்தின் ஈட்டின் பேரிலோ கடன் கொடுக்கலாம்.

9. இச் சங்கங்கள் ஸ்டாம்ப், பதிவுச் செலவு, வருமான வரி ஆகியவற்றிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டன.

கூட்டுறவுச் சங்கங்கள் 1904ஆம் ஆண்டே ஆரம்பிக்கப் பட்டாலும் இச் சங்கங்களின் வளர்ச்சி முதல் 50 ஆண்டுகளில் மிகக் குறைவாகவே அமைந்திருந்தது. கிராமியக் கடன் அனு மானக் குழு 1954ஆம் ஆண்டு இந்தியாவின் கிராமியக் கடன் பற்றிய முக்கியமான அறிக்கையை வெளியிட்டது. இக் குழு மொத்த கிராமியக் கடனில் அரசாங்கம் சற்றேரக் குறைய 3 சதவீதமும், கூட்டுறவுச் சங்கங்கள் 3 சதவீதமும், வங்கிகள் 1 சதவீதமும்தான் அளிக்கின்றன. மீதி 93 சதவீதமும் மற்றைய லேவாதேவிக்காரர்கள், நாட்டு வங்கியர்களால் அளிக்கப்படுகின்றது என்றும் 'கூட்டுறவு தோற்றுவிட்டது, ஆனால் கூட்டுறவு வெற்றி பெற வேண்டும்' என்ற ஆழ்ந்த கருத்தைத் தெரிவித்தது. மேலும், இக் குழு கீழ்க்கண்ட முடிவுகளை தெரியப்படுத்தியது :

(1) பொதுவாக, கூட்டுறவுச் சங்கங்கள் பெரிய விவசாயி களுக்கே பயன் அளித்துள்ளன.

(2) கூட்டுறவுச் சங்கம் சொத்து மதிப்பின்பேரில்தான் கடன் அளித்து வருகின்றதே தவிர உற்பத்தித் திறனை அடிப்படி யாகக் கொண்டு கடன் அளிக்கவில்லை.

(3) கூட்டுறவு பிரதமச் சங்கங்கள் மிகவும் பலவீன நிலையில் இருக்கின்றன.

இக் குழு கீழ்க்கண்ட பரிந்துரைகளைச் செய்தது :

(1) கூட்டுறவு மூலதனத்தில் எல்லா நிலையிலும் அரசு பங்கேற்றல்.

(2) கடனை விவசாயப் பொருள் விற்பனையுடன் இணைத்தல்.

(3) கூட்டுறவில் வேலை பார்ப்போர் அனைவருக்கும் பயிற்சி.

(4) நாடெங்கும் கிடங்குகள் கட்டுதல்.

(5) இம்பீரியல் வங்கி தேசியமயமாக்கப்பட்டு கூட்டுறவு இயக்கத்திற்குப் பயனளிக்க வேண்டும்.

மேலே கண்ட முதல் பரிந்துரைக்கு ஏற்ப ரிசர்வு வங்கி இரண்டு நிதிகளை ஏற்படுத்தியது. இவை முறையே தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால நடவடிக்கை) நிதியும் [National Agricultural Credit (Long term operation) Fund]. தேசிய வேளாண்மைக் கடன் (நிலைப் பேருக்க) நிதியும் [National Agricultual (Credit Stabilisation) Fund] ஆகும்.

### தேசிய வேளாண்மைக் கடன் (நீண்டகால நடவடிக்கை) நிதி

இந் நிதி கீழ்க்கண்டவாறு பயன்படுத்தப்படுகிறது:

1. கூட்டுறவுக் கடன் நிறுவனங்களின் பங்கு மூலதனத்தை வாங்குவதற்காக, மாநில அரசுகளுக்கு 20 ஆண்டுகளுக்கு அதிகப்படாத கடனும், முன் பணமும் அளித்தல்.

2. விவசாயம் அல்லது அதைச் சார்ந்த நோக்கங்களுக்கு, மாநிலக் கூட்டுறவு வங்கிககளுக்கு ஐந்து ஆண்டிற்கு மேற்படாத மத்திய காலக் கடன் முன் பணம்.

3. நிலவள வங்கிகளுக்கு 20 ஆண்டுகளுக்கு அதிகப்படாத கடன்களைக் கொடுத்தல்.

4. நிலவள வங்கிகளின் கடன் பத்திரங்கள் வாங்குதல்.

1956-ல் இந் நிதி ஆரம்பிக்கப்பட்டபோது ரூ. 10 கோடி ஒதுக்கப்பட்டது. இதன்பின் ஆண்டொன்றுக்கு ரூ. 5 கோடி வீதம் நான்கு ஆண்டுகளுக்குத் தொடர்ந்து ஒதுக்கப்பட்டது. பிறகு கூட்டுறவுக் கடன் குழுவின் (Committee on Co-operative Credit) பரிந்துரையின் பேரில் ரிசர்வு வங்கி இந்த நிதிக்கு தனது செலுத்தல்களை அதிகமாக்கியது.

### தேசிய வேளாண்மைக் கடன் (நிலைப்பேருக்க) நிதி

இந் நிதி 1956ஆம் ஆண்டு ரூ. 1 கோடியுடன் தொடங்கப்பட்டது. ஆண்டொன்றுக்கு ரிசர்வு வங்கி, இந் நிதிக்கு, ஒரு கோடி ரூபாயை ஒதுக்கியது. பின்னர் அத்தொகை மேலும் அதிகரித்தது.

இந் நிதி மாநில கூட்டுறவு வங்கிக்கு எந்த ஆண்டிலேனும் பஞ்சம் காரணமாக குறுகிய காலக் கடனை ரிசர்வு வங்கிக்குத் திருப்பித்தர முடியவில்லை என்றால் குறுகிய காலக் கடனை மத்திய காலக் கடனாக மாற்ற, இக்கடன் வசதி அளிக்கப்படுகின்றது.

ரிசர்வு வங்கி தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால நடவடிக்கை) நிதியிலிருந்து மாநில அரசுகளுக்கு அளிக்கும் கடனைக் கொண்டு மாநில அரசுகள் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் எல்லா மட்டங்களிலும், மாநில கூட்டுறவு வங்கி, மாவட்ட மைய வங்கி, பிரதம வங்கி ஆகிய நிலைகளில் மூலதனம் அதிகரிக்கப்பட்டுள்ளது. இதனால் அவைகளுடைய சொந்த நிதி (own funds) அதிகமாக்கப்பட்டு அவைகள் கடனளிக்கும் தொகை மிகுதியாக உயர்ந்துள்ளது.

ரிசர்வு வங்கி 1956–57ஆம் ஆண்டிலிருந்து ஆண்டுத் தொடர் ஆய்வு (Annual follow-up Survey) செய்து வருகின்றது. இவ் ஆய்வு சில மாவட்டங்களில் மட்டும்.

(1) கடன் தேவையைப் பொருத்தமட்டில் குறிப்பிடத் தகுந்த மாறுதல் ஏதேனும் உண்டா? பலவித விவசாயக் கடனின் அளவு என்ன?

(2) பல கடன் வழங்கும் நிறுவன இயக்கங்களின் சாதனை யாது?

(3) கிராமிய சமுதாயப் பின்னணியில் மாறுதல் ஏதேனும் ஏற்பட்டுள்ளதா, என்பது போன்றவைகளை நோக்குகின்றது.

1956–57-ல் 11 மாவட்டங்களிலும், 1957–58-ல் 12 மாவட்டங்களிலும் ஆய்வு செய்தது. 1959ஆம் ஆண்டு 5 மாவட்டங்களில் ஆய்வு எடுத்து ரிசர்வு வங்கி கீழ்க்கண்ட கருத்தைத் தெரிவித்தது :

(1) பீகார் மேற்கு வங்காளங்களில் இயங்காத சங்கங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன.

(2) பீகார், மேற்கு வங்காளம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் மிகக் குறைந்த கிராம குடும்பங்களுக்கே கடன் வசதி அளிக்கின்றது.

(3) மகராஷ்டிரம், குஜராத்து, தமிழ்நாடுகளில் மொத்த கிராமக் கடனில் கூட்டுறவின் பங்கு அதிகமாக உள்ளது.

(4) பல மாநிலங்களிலும் தவணை கடந்த கடன் (Overdues) அதிகமாக உள்ளது.

### கூட்டுறவுக்கடன் குழு (1959) (Committee on Co-operative Credit, 1959)

மைசூரில் நடைபெற்ற மாநில அமைச்சர்கள் மாநாட்டின் பரிந்துரைப்படி கூட்டுறவுக் கடன் பற்றி ஆய்வு நடத்த ஒரு

குழு திரு. V. L. மேத்தா தலைமையில் அமைக்கப்பட்டது. இக் குழு தன் அறிக்கையை 1960-ல் சமர்ப்பித்தது. இக் குழு 'நிலச் சொந்தக்காரர்கள் இல்லை என்றோ, அல்லது சொத்தின் உரிமையாளர் என்ற பத்திரத்தைக் காட்ட இயலவில்லை என்றோ, குத்தகைக்கு பயிரிடுபவர் என்றோ எந்த ஒரு விவசாயிக்கும் கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கம் கடனை மறுக்கக்கூடாது. குத்தகைதாரருக்கு விவசாயத்திற்குத் தேவையான கடனை திருப்பித் தரும் திறமை குறித்தும், ஜாமீன்தார் கையெழுத்தின் பேரிலும் கடன் வழங்கப்பட வேண்டும்' எனக் கூறியது.

இக்குழுவின் மற்றைய பரிந்துரைகள் :

1. ஒரு பிரதம கூட்டுறவுச் சங்கத்தின் அளவு பொருளாதாரமாக இயங்கவல்ல நிலையைக் குறித்தே முடிவு செய்யப்படல் வேண்டும்.

2. மிக அதிகமான பரப்பையோ அல்லது சிறிய பரப்பையோ ஒரு கூட்டுறவுச் சங்கம் தன் ஆதிக்கத்திற்குக் கொள்ளக்கூடாது. அது மக்கள் தொகை 3,000 (600 குடும்பங்கள்) கொண்டதாக இருப்பது நல்லது.

3. கொடுக்கும் கடன் அளவு உற்பத்திக்குப் போதியதாக இருக்க வேண்டும். அக் கடன் நுகர்வுக்குப் பயன்படுத்தாமல் இருக்கப்படுகின்றதா என்பதைக் கண்காணிக்க வேண்டும்.

4. சங்கத்தின் அங்கத்தினர்கள் தாங்கள் பெறும் கடனுக்கேற்ப மூலதனப் பங்கு எடுத்துக் கொள்ளவேண்டும். ஒருவர் பெறும் கடன் தான் அளித்துள்ள மூலதனப் பங்கிற்கு 8-லிருந்து 10 மடங்குக்கு மிகையில்லாமல் இருக்கவேண்டும்.

5. மாநில அரசும், கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்துள்ளோர்களும் எந்த விதமான சங்கம் அமைய வேண்டும் என்பதனைத் தாங்களே முடிவெடுத்துக் கொள்ள வேண்டும்.

6. பிரதம கடன் வழங்கும் சங்கங்களுக்கு இப்போது கிடைக்கும் கடன் போதுமானதே. ஆனால், சில பிரதம சங்கங்களுக்கு சொந்த நிதியில் 10-12 மடங்கும்

சில மத்திய வங்கிகளுக்கு 12–15 மடங்கும், சில மாநில வங்கிகளுக்கு 15–20 மடங்கும் உயர்த்தப்படல் வேண்டும்.

7. ஓர் அங்கத்தினர் பெரும் கடன் தான் அளித்துள்ள செலுத்திய முதலில் 8–10 மடங்குக்கு அதிகமாக இருக்கக் கூடாது.

8. வைப்புகளை ஈர்க்கும் பொருட்டு அதிக வட்டியினை சங்கங்கள் கொடுக்கலாம்.

9. பயிர்க் கடன் திட்டம் (Crop Loan System) அமல் படுத்த வேண்டும்.

10. தன் கடன் வழங்கும் கொள்கையை ரிசர்வு வங்கி சற்று தாராளமாக்க வேண்டும்.

11. கூட்டுறவுச் சங்கங்கள் தாங்கள் அளிக்கும் கடன் வகைகளைப் பெருக்க வேண்டும்.

12. கூட்டுறவு இயக்கத்தில் பணிபுரிவோருக்குப் போதிய பயிற்சி அளித்தல் வேண்டும்.

13. பொருளாதார வலுவுடன் இயங்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு பங்கு மூலதனம் ரூ. 5,000 வரை இருக்கலாம். சில விசேஷ சங்கங்களுக்கு ரூ. 10,000 வரையும் அரசு பங்கு ஏற்கலாம்.

அகில இந்திய கிராமியக் கடன் விமரிசனக்குழு (1969) (All India Rural Credit Review Committee, 1969.)

இக் குழு திரு. B. வேங்கடபையா தலைமையில் இயங்கியது. இக் குழு 1954ஆம் ஆண்டிலிருந்து 1969 ஆம் ஆண்டு வரை, அதாவது கிராமியக் கடன் ஆய்வுக்குழு 1954 ஆம் ஆண்டு வெளியிட்ட அறிக்கைக்குப்பின் 1969 வரை கிராமியக் கடனில் ஏதேனும் மாறுதல் ஏற்பட்டுள்ளதா, நிறுவனக் கடன்கள் (institutional credit) முன்னேற்றமடைந்துள்ளதா என்பதனை ஆராய அமைக்கப்பட்டது.

இக் குழு கீழ்க்கண்ட பரிந்துரைகளைச் செய்தது:

1. புதியவித பொறுக்கு வித்துக்களின் பயனால் விவசாயத்தில் பெரும் மாற்றம் ஏற்பட்டு பல போகப் பயிர் (multi-cropping), சிறிய, மத்தியதர விவசாயிகளாலும் கையாளப்படுகின்றது.

2. விவசாயப் பொருள்கள் விலை அதிகரித்துள்ளது.

3. அதிகக் கடன் தேவை பல சிறிய விவசாயிகளிட மிருந்து கோரப் பட்டு வருகின்றது.

4. நீண்ட காலக் கடன் கோரி நிற்போர் எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது.

1954ஆம் ஆண்டுக் குழுவின் பரிந்துதுரைக்குப் பின் 15 ஆண்டுகள் கழித்து விவசாயக் கடனை நோக்கும் போது கூட்டுறவுத்துறை அளிக்கும் கடன் வசதி வியக்கத்தகும் விதத்தில் உயர்ந்துள்ளது. கூட்டுறவுக் குறுகிய காலக்கடன் 1951-52இல் இருந்த ரூ. 24 கோடியிலிருத்து 1967-68இல் ரூ. 405 கோடியாக உயர்ந்துள்ளது. ஆனல், இவ்வித ஒளிமயமான முன்னேற்றம் சில பகுதிகளில் தான் அமைந்துள்ளது. இதே நேரத்தில் ஒப்புக்கொண்டு அமுலுக்குக் கொண்டு வரப்பட்ட கடன் திட்டத்தில் பல கரும்புள்ளிகள் பல இடங்களில் காணப் படுகின்றன என இக்குழு ஆணித்தரமாகத் தெரிவித்தது.

இதன் பரிந்துரைகள்:

1. பிரதம கூட்டுறவு வங்கிகளை புனரமைப்பு செய்து வலுவாக்க வேண்டும்.

2. பலவீனமான சங்கங்கள் நீக்கப்பட்டு, வலுவான சங்கங்கள் ஏற்பட இணைப்புகள் செய்யவேண்டும்.

3. கடன் அளிக்கும் முறையில் மாற்றம் தேவைப் படுகின்றது.

4. கூட்டுறவை நல்ல முறையில் நிருவாகம் செயதல் வேண்டும்.

இக்குழு விவசாயத்திற்கு 1973-74ஆம் ஆண்டில் இறுதியில் குறுகிய காலக்கடன் ரூ. 2,000 கோடியும், மத்திய காலக் கடன் ரூ. 500 கோடியும் நீண்ட காலக் கடன் ரூ. 1500 கோடியும் தேவைப்படும் என்றும், இதில் கூட்டுறவுச் சங்கங்கள் குறுகிய காலக் மற்றும் மத்திய காலக் கடன்கள் ரூ. 850 கோடியும் நீண்ட காலக் கடன் ரூ. 900 கோடியும் தான் அதிக பட்சமாகக் கொடுக்க இயலும் என்றும், எனவே விவசாயக் கடன் தேவையில் பெரிய இடைவெளி இருக்கும் என்றும், எனவே பல முனை இயக்கமுயற்சி (Multi-agency approach) வேண்டும்,

விவசாயக் கடன் முழுவதினையும் கூட்டுறவு இயக்கம் மட்டும் தான் தரவேண்டும் என்ற நிலையை மாற்றவேண்டும். கூட்டுறவு மட்டில் இப்பெரும் தேவையை பூர்த்திசெய்ய முடியாது. எல்லாவித நிதிவசதி நிறுவனங்களும். குறிப்பாக வணிக வங்கி களும் இக் கடன் அளிக்கும் முயற்சியில் பெரும் பங்கு கொள்ளவேண்டும்.

திட்டக்குழு தன் அறிக்கைகள் எல்லாவற்றிலும் விவசாயக் கடன் கூட்டுறவுகள் மூலம் அதிக அளவில் கொடுக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்திவந்தது. கூட்டுறவு இயக்கத் திற்கு பங்கு மூலதனம் அளித்ததோடு அரசும், ரிசர்வு வங்கியும் கூட்டுறவு இயக்கத்திற்குப் பலவகையான உதவிகள் கொடுத் ததன் காரணமாக கூட்டுறவு விவசாயக் கடன் முதலாண்டு திட்ட காலத்தில் இருந்த ரூ. 43 கோடியிலிருந்து ரூ. 225, ரூ. 680, ரூ. 2,900 கோடியாக முறையே இரண்டாவது, மூன்றாவது, நான்காவது திட்டங்களில் உயர்ந்தது.

| திட்டகாலம் | குறுகிய, மத்திய காலக் கடன் | நீண்ட காலக் கடன் |
|---|---|---|
| முதல் திட்டம் | ரூ. 40 கோடி | ரூ. 3 கோடி |
| இரண்டாம் திட்டம் | ரூ. 200 கோடி | ரூ. 25 ,, |
| மூன்றாம் திட்டம் | ரூ. 530 கோடி | ரூ. 150 ,, |
| நான்காம் திட்டம் | ரூ. 2000 கோடி | ரூ. 900 ,, |

மேலே கண்டுள்ள அட்டவணை, திட்ட காலத்தில் படிப்படி யாக கூட்டுறவுச் சங்கங்கள் குறுகிய, மத்திய காலக் கடன்கள் அளிப்பதிலும் நீண்டகாலக் கடன்கள் அளிப்பதிலும் உள்ள அதிகரிப்பைக் காணலாம்.

விவசாயக் கடன் வழங்கும் சங்கங்களின் முன்னேற்றம் பற்றிய அட்டவணை 5-லிருந்து குறுகிய, மத்தியக் கடன் 1951-52ஆம் ஆண்டில் இருந்த ரூ. 24 கோடி அளவிலிருந்து 1972-73இல் ரூ. 686 கோடியாக உள்ளது. சங்கங்களின் எண்ணிக்கை குறைந்துள்ளதற்குக் காரணம் நலிவுற்ற சங்கங்களை நீக்கு வதற்கும், இணைப்பு முயற்சியும் ஆகும். இச் சங்கங்களின் வைப்பு 1951-52-லிருந்த ரூ. 4 கோடியிலிருந்து 1972-73 இல் 77 கோடியாகவும், இதே காலத்தில் சொந்த நிதி ரூ. 18 கோடியி லிருந்து ரூ. 237 கோடியாக உயர்ந்துள்ளது.

அட்டவணை–5

## விவசாயக் கடன் வழங்கும் சங்கங்களின் முன்னேற்றம் பற்றிய அட்டவணை

| ஆண்டு | சங்கங்களின் எண்ணிக்கை லட்சத்தில் | உதவி அளிக்கும் கிராமங்களின் எண்ணிக்கை லட்சத்தில் | அங்கத்தினர்கள் லட்சத்தில் | கடன் அளிக்கப்பட்டது | | | சொந்த நிதி (own funds) ரூ. கோடி | வைப்பு ரூ. கோடி |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | குறுகிய காலக் கடன் ரூ. கோடி | மத்திய காலக் கடன் ரூ. கோடி | மொத்தம் ரூ. கோடி | | |
| 1951—52 | 1·08 | — | 48 | — | — | 24 | 18 | 4 |
| 1960—61 | 2·12 | 4 23 | 170 | 183 | 20 | 203 | 76 | 15 |
| 1965—66 | 1·92 | 5·03 | 261 | 305 | 37 | 342 | 149 | 34 |
| 1968—69 | 1·68 | 5·35 | 292 | 456 | 47 | 502 | 215 | 57 |
| 1969—70 | 1·63 | 5·33 | 298 | 488 | 52 | 540 | 241 | 63 |
| 1970—71 | 1·61 | — | 310 | — | — | 578 | 265 | 69 |
| 1971—72 | 1·57 | — | 320 | — | — | 613 | 292 | 75 |
| 1972—73 | 1·58 | — | 344 | — | — | 686 | 237 | 77 |

இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள் பல்நோக்கு உடையன. இச் சங்கங்கள் கடன்தொகை வழங்குவதோடு விவசாயத்திற்குத் தேவையான விதை, உரம், பூச்சி கொல்லி மருந்து ஆகியவைகளையும் அளிக்கின்றன. மேலும், கூட்டுறவு நுகர்வோர் சங்கம் இயங்காத கிராமத்தில் இச் சங்கங்கள் நுகர்வோர் பொருள்களையும் விநியோகிக்கின்றன. கொடுக்கும் கடன்தொகை ரொக்கமாகவும், விதை, உரம் என்ற வகையாகவும் அளிக்கின்றது. எனவே, கடன் மட்டுமின்றி விவசாயத்திற்குத் தேவையான பொருள்களைக் கூட்டுறவுச் சங்கங்கள் அளிக்கின்றன. கூட்டுறவு இயக்கத்தில் பெரும் நம்பிக்கை கொண்ட மிகப்பெரும் ஜனநாயக வாதியும், கூட்டுறவு இயக்கம் இந்தியாவில் பரவ அரும்பாடுபட்டவரும், நமது ஒப்பிலா மனிதகுல மாணிக்கம், மறைந்த மாமேதை, ஜவஹர்லால் நேரு அவர்கள் "ஒவ்வொரு கிராமத்திலும் மூன்று மிக முக்கியமானவை. அவை: கிராம ஆசிரியர், கிராமக் கூட்டுறவுச் சங்கம், கிராம பஞ்சாயத்து" என பல முறை தம் கருத்தை வெளியிட்டார். இவ்வெண்ணமேபோல் கூட்டுறவு கடன் வழங்கும் சங்கம் கடன் வசதி மட்டும் அளிக்காமல் விவசாயியின் எல்லா தேவையையும் பூர்த்திசெய்யுமாறு அமைந்துள்ளது.

## பயிர்க்கடன் திட்டம்

விவசாயிகளை லேவாதேவிக்காரர்கள் மற்றும் நாட்டு வங்கியர்களின் கடும் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டுமென்றால் விவசாயிக்கு வேண்டிய முழுக் கடனை கூட்டுறவுச் சங்கங்கள் அளிக்கவேண்டும். வெகு காலமாக இச் சங்கங்கள் நிலம், மற்றும் நபர் ஜாமீன் பேரிலேயே கடன் வழங்கி வந்தது. இந்த நிலை விவசாயிக்கு அனுகூலமாக இல்லை. பல நேரங்களில் விவசாயி நிலச் சொந்தக்காரராய் இல்லாததாலோ, நிலத்தின் மதிப்பு குறைவாக இருப்பதாலோ போதிய கடன் அளிக்கப்படவில்லை. மகராஷ்டிரா, குஜராத் ஆகிய மாநிலங்களில் பயிர்க் கடன் திட்டம் 1950ஆம் ஆண்டிலிருந்தே நடைமுதலுக்கு வந்துள்ளது. அகில இந்திய கிராமிய கடன் அனுமானக் குழு 1954, கூட்டுறவுக் கடன் குழு 1960 ஆகிய குழுக்கள் இத் திட்டம் நாடு முழுவதும் அமுல் செய்யப்படவேண்டும் என்று சிபாரிசு செய்தன. இத் திட்டத்தின்படி ஒரு அங்கத்தினருக்குக் கொடுக்கும் கடன் அவர் திருப்பித் தரும் தகுதியைப் பொறுத்து இருக்கவேண்டும். நிலத்தில் இருக்கும் அல்லது உற்பத்தியாகப் போகிற பயிரின் மதிப்பைக் கொண்டு, விவசாயியின் திருப்பித் தரும் தகுதியை நிருணயித்துக் கடன் வழங்கவேண்டும்.

இத் திட்டத்தின் முக்கிய அம்சங்கள் :

1. முக்கியத்துவத்தை சொத்திலிருந்து பயிருக்கு மாற்றுவது.

2. விவசாயத்திற்குத் தேவையான முழுக் கடனை அளிப்பது.

3. நிலம் படைத்தோர்கள் மற்றுமின்றி குத்தகைதாரர்களுக்கும் கடன் பெற வழி செய்தல்.

இத்திட்டம் நாடு முழுவதும் அமுல் செய்யப்படவில்லை என்ருலும் பல மாநிலங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் பயிர்க் கடன் திட்டத்திற்குத் தங்களை மாற்றி அமைத்துக் கொள்கின்றன.

பல குழுக்களும் கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்களின் நடைமுறையில் கீழ்க்கண்டுள்ள குறைபாடுகளைக் கண்டுள்ளன:

1. கூட்டுறவுச் சங்கங்களின் பயன் பெரும் விவசாயிகளுக்கு கிடைத்துள்ளனவே தவிர சிறிய விவசாயிகள் புறக்கணிக்கப்பட்டுள்ளனர்.

2. கொடுக்கப்பட்டுள்ள விவசாயக் கடன் அனைத்தும் விவசாயத்திற்கு மட்டில் பயன்படுத்தாமல் குடும்ப நுகர்வுச் செலவிற்கும் கடன்தொகை பயன்படுத்தப்படுகின்றது.

3. விவசாயிகளுக்கு வேண்டிய முழுக் கடனையும் கூட்டுறவுச் சங்கங்கள் அளிக்கவில்லை.

4. நிருவாகத் திறமை மிகவும் குறைந்த நிலையில் உள்ளது. கடன்பெற இயக்குநர்களின் நல்லெண்ணம் பெற்றிருந்தால் அன்றி முடியாது.

5. தவணை கடந்த கடன் எல்லா மட்டத்திலும் அதிகமாக உள்ளது.

மேலே கூறப்பட்ட குறைபாடுகளை நீக்கினுல் கூட்டுறவுச் சங்கங்கள் சிறந்த முறையில் பணியாற்றலாம்.

**மத்திய கூட்டுறவு வங்கிகள் (Central Co-operative Banks)**

பொதுவாக ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு கூட்டுறவு மத்திய வங்கி உண்டு. மாவட்ட அளவில் கூட்டுறவு இயக்கத்தின் முக்கிய அங்கமாக விளங்குகிறது. மாவட்டத்தில் உள்ள பிரதம கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்கள் மட்டுமின்றி மற்றைய எல்லாவிதமான கூட்டுறவுச் சங்கங்களும் இவ் வங்கியில் பங்குத்தொகை கட்டி அங்கத்தினராகியுள்ளன. பிரதம சங்கங்களுக்குத் தேவையான நிதி உதவியை அளிப்பதுடன், இச் சங்கங்களின் உபரித் தொகையினைப் பெற்றுக்கொள்ளல், வைப்பு திரட்டுதல், பிரதம சங்கங்களின் காப்பு நிதியைப் பெற்று முதலீடு செய்தல், பிரதம சங்கங்களின் நடப்பைக் கண்காணித்தல், மேற்பார்வை செய்தல், மாவட்டத்தில் கூட்டுறவு இயக்கத்தை வளர்த்தல் ஆகிய நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன. சில மத்திய வங்கிகள் பிரதம சங்கங்களைத் தவிர, தனி நபர்களையும் அங்கத்தினராகக் கொண்டுள்ளது. ஆனால், இவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. நாளாவட்டத்தில் தனி நபர்களை நீக்கிவிட இவ் வங்கிகள் விழைகின்றன. மைய வங்கிகள் மாவட்டத்தின் பல இடங்களில் கிளைகளை அமைத்துக் கொண்டுள்ளன. வணிக வங்கிகள் செய்யும் அத்துணை பணிகளையும் இவ் வங்கியும் செய்கின்றது.

மத்திய வங்கியின் நடைமுறை முதல், செலுத்தப்பட்ட பங்குமுதல், வைப்புகள், காப்புநிலை மற்றும் பெரும் கடன்கள் ஆகியவைகளைப் பொறுத்து இருக்கின்றது. மாநில அரசு மத்திய வங்கிக்கு கணிசமான அளவு பங்கு முதல் அளித்துள்ளது. மாவட்டத்திலுள்ள பிரதம சங்கங்கள் மத்திய வங்கியினின்று பெறக்கூடிய கடன், அவைகள் எடுத்துக்கொண்டுள்ள பங்கு மூலதனத்தின் குறிப்பிட்ட பங்காக அமைவதால் பிரதம சங்கங்கள் கணிசமான பங்குத்தொகை எடுத்துள்ளன. மத்திய வங்கியின் சொந்த நிதி மட்டும் பிரதம சங்கங்களுக்குத் தேவையான நிதியினை அளிக்க இயலாததால் மத்திய வங்கி கடன் பெறுகின்றது. மிகக் கணிசமான தொகையை மாநில கூட்டுறவு வங்கியினிடமிருந்து பெறுவதோடு ஸ்டேட் வங்கி மற்றும் இதர வணிக வங்கிகளிடமிருந்தும் கடன் பெறுகின்றது.

அட்டவணை 6ஐ நோக்கவும்*.

இந்த அட்டவணையிலிருந்து 1972–73ஆம் ஆண்டு 344 மத்திய கூட்டுறவு வங்கிகள், ரூ. 245 கோடி சொந்த நிதி (பங்கு மூலதனம் + காப்பு நிதி)யும் ரூ. 645 கோடி வைப்புகளுடனும்

இயங்கின என்பதும் இவைகள் ரூ. 961 கடன் வசதி அளித்து உள்ளதையும் அறியலாம்.

அட்டவணை-6

மத்திய கூட்டுறவு வங்கிகள்

| | ஆண்டுகள் 1970-71 | 1971-721 | 972-73 |
|---|---|---|---|
| 1. எண்ணிக்கை | 341 | 341 | 344 |
| 2. சொந்த நிதி (Own funds) ரூ. கோடியில் | 199 | 226 | 245 |
| 3. வைப்புகள் ரூ. கோடியில் | 439 | 510 | 645 |
| 4. ரிசர்வு வங்கி/உச்சி (Apex) வங்கியின்று கடன் ரூ. கோடியில் | 353 | 358 | 364 |
| 5. நடை முறை முதல் ரூ. கோடியில் | 1081 | 1194 | 1369 |
| 6. அளிக்கப்பட்ட கடன் ரூ. கோடியில் | 891 | 1056 | 961 |
| 7. கடன் நிலுவை ரூ. கோடியில் (Outstanding) | 813 | 889 | 955 |

*Annual Report and Trend and progress of Banking in India—1973-74 – R.B.I. பக்கம் 59.

வங்கிக் கம்பெனி ஒழுங்குமுறைச் சட்டம் 1949-ன் சில பிரிவுகள் கூட்டுறவு வங்கிகளுக்கு 1966ஆம் ஆண்டு விஸ்தரிக் கப்பட்டாலும், இவ் வங்கிகள் புதிய கிளைகளை தங்கள் பரப் பிற்குள் திறக்க ரிசர்வு வங்கியின் இசைவு தேவை இல்லை. மேலும், சிறிய நகரங்களிலும், கிராமங்களிலும் கிளை திறப்பில் மத்திய கூட்டுறவு வங்கியின் முயற்சிக்கு உதவ ரிசர்வு வங்கி மற்றைய வணிக வங்கிகள் இங்கு கிளை திறக்க அனுமதியையும் மறுத்து வந்துள்ளது. ரிசர்வு வங்கியின் விவசாயக் கடன் பகுதி அவ்வப்போது மைய வங்கிகளை கிளை பெருக்க அவ்வப்போது அறிவுரையும் கூறுகின்றது.

மத்திய கூட்டுறவு வங்கியின் கிளைகள் பற்றிய விவரங்கள் அட்டவணை 7-இல் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த அட்டவணையிலிருந்து குஜராத், மத்தியபிரதேசம், மஹாராஷ்டிரா, கர்நாடக மாநிலங்கள் அதிகமான கிளைகளைப் பெற்றிருப்பதைக் காணலாம்.

அட்டவணை-7

## மத்திய கூட்டுறவு வங்கி, கிளைகள், ஜனத்தொகை பற்றிய அட்டவணை*

| மாநிலத்தின் பெயர் | மத்திய கூட்டுறவு வங்கியின் எண்ணிக்கை | | தலைமை ஆபீஸ் உள்பட கிளைகளின் எண்ணிக்கை | | ஒவ்வொரு கிளைக்கும் சராசரி ஜனத்தொகை | |
|---|---|---|---|---|---|---|
| | 1961 | 1970 | 1961 | 1970 | 1961 | 1970 |
| ஆந்திரா | 25 | 25 | 63 | 136 | 575 | 318 |
| அஸ்ஸாம் | 9 | 7 | 18 | 29 | 666 | 535 |
| பீகார் | 35 | 28 | 50 | 113 | 936 | 510 |
| குஜராத் | 24 | 18 | 198 | 365 | 105 | 72 |
| அரியானு | — | 9 | — | 64 | — | 156 |
| ஹிமாசல் பிரதேசம் | — | 2 | — | 20 | — | 180 |
| ஜம்மு-காஷ்மீர் | 4 | 3 | 18 | 30 | 179 | 135 |
| கேரளா | 7 | 9 | 10 | 72 | 1704 | 295 |
| மத்தியபிரதேஷ் | 48 | 43 | 191 | 565 | 171 | 72 |
| மஹராஷ்ட்ரா | 36 | 25 | 374 | 857 | 107 | 58 |
| கர்ஞடகா | 23 | 19 | 138 | 299 | 172 | 98 |
| ஒரிசா | 17 | 17 | 26 | 83 | 680 | 260 |
| பஞ்சாப் | 34 | 17 | 122 | 153 | 92 | 96 |
| ராஜஸ்தான் | 29 | 25 | 75 | 127 | 271 | 206 |
| தமிழ் நாடு | 15 | 16 | 22 | 195 | 1539 | 203 |
| உத்திர பிரதேசம் | 55 | 56 | 97 | 254 | 766 | 357 |
| மேற்கு வங்காளம் | 29 | 21 | 43 | 76 | 820 | 587 |
| மொத்தம் | 390 | 340 | 1445 | 3438 | 295 | 157 |

* Banking Commission Report, 1872—P. 158.

மத்திய வங்கிகள் சில மாநிலங்களில் வலுவற்று இருக்கின்றன. நாடு முழுவதிலும் 1970ஆம் ஆண்டு இருந்த 340 மத்திய கூட்டுறவு வங்கிகளில் 121 வங்கிகள் ரிசர்வு வங்கி குறிப்பிட்டிருந்த தன்னிறைவு பெற்றத் தன்மையை (viability) அடையவில்லை. இவ்வங்கிகளில் 147 C வகை அல்லது D வகை வங்கியாக தணிக்கையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன (A அல்லது B வகை வலுவுள்ள வங்கிகளைக் குறிக்கும்). மொத்த கூட்டுறவு மத்திய வங்கிகளில் 100 வங்கிகள் புனரமைக்க வேண்டியவை.

### மத்திய வங்கியும் வைப்புத் திரட்டும்

மத்திய வங்கிகள் வணிக வங்கிகள் போல் எல்லா பணியினையும் செய்கின்றன. வைப்பு திரட்டுவதில் இன்னும் அதிக முன்னேற்றம் தேவைப்படுகின்றது. சில மாநிலங்களில் மட்டுமே மத்திய வங்கிகள் வைப்பு திரட்டில் நல்ல சாதனை செய்துள்ளன. மகாராட்டிரத்தில் 8 மத்திய வங்கிகளும் குஜராத்தில் 5 மத்திய வங்கிகளும், இந்தியாவில் உள்ள எல்லா கூட்டுறவு மத்திய வங்கிகளும் பெற்ற வப்புகளில் 25 சத வீதத்தைப் பெற்றுள்ளன. 1969-1970ஆம் ஆண்டு இந்தியாவில் உள்ள 340 மத்திய கூட்டுறவு வங்கிகள் பெற்ற வைப்புகளில் 45 சதவீதம் மகாராட்டிரம், குஜராத்து, தமிழ்நாடு, கேரளம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் உள்ள 40 மத்திய வங்கிகள் பெற்றிருந்தன. அகில இந்திய கிராமியக் கடன் விமரிசனக் குழு "வைப்புகள் பெறுவதிலும், வைப்புகள் வளர்ச்சியிலும் அதிக வாய்ப்பிருந்தும் மத்திய வங்கிகளின் சாதனை சிறப்புடையதாக இல்லை" எனக் கூறியுள்ளது.

போதிய வைப்பு பெருமைக்கு கீழ்க்கண்ட காரணங்கள் ஆகும் :—

1. வகையுள்ள இடங்களில் கிளை இல்லாமை.

2. இயக்குநர்களின் நிருவாகத் திறமையின்மை.

3. சரியான போக்கில் கடன் கொடுக்காததால் நேர்ந்த காலந்தாண்டிய கடன்கள்.

4. சில அரசியல் கட்சி நோக்குடையவர்களின் நிருவாகப் பொறுப்பில் அமைந்துவிடல்.

5. திறமையற்ற சிப்பந்திகள்.

6. போதிய விளம்பரமின்மை.

கூட்டுறவு மத்திய வங்கிகளின் முக்கிய பணி தங்களிடம் இணைந்துள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தேவையான நிதி வசதியினை அளித்தலாகும். வணிக வங்கிகள் போல் இலாப மிகுந்த எந்த வழியிலும் பணத்தினை முதலீடு செய்யும் உரிமை கூட்டுறவு மத்திய வங்கிகளுக்குக் கிடையாது. கூட்டுறவு மத்திய வங்கி கூட்டுறவுச் சங்கங்களுக்குத் திறம்பட நிதி உதவி அளிக்கப் போதுமான வைப்புகள் பெறவேண்டும். அதிக வைப்புகளைப் பெற மத்திய வங்கி வலுவான நிதிநிலையுடன் இயங்கவேண்டும். இதற்காக ரிசர்வு வங்கியின் சட்டத்தை திருத்தம் செய்து கூட்டுறவு வங்கிகள் நீர்த்த நிதி (fluid resource) ஒரு குறிப்பிட அளவு வைத்திருக்க வகை செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு கூட்டுறவு வங்கியும் தன்னிடம் உள்ள தேவை மற்றும் காலவைப்புகளில் 3 சதவீதம் ரொக்க காப்பாக தன்னிடமாவது ரிசர்வு வங்கி அல்லது ஸ்டேட் வங்கியின் நடப்புக் கணக்கிலாவது பிரதம கூட்டுறவு சங்கம் மத்திய கூட்டுறவு வங்கியிடமாவது, வைத்திருக்க வேண்டும். மேலும், ஒவ்வொரு கூட்டுறவு வங்கியும் ரொக்கம், தங்கம், வில்லங்கம் செய்யப் படாத பங்குகளாக தன் கால, தேவை வைப்புகளில் 20 சதவீதத்தை வைத்திருக்க வேண்டும்.

**மத்திய கூட்டுறவு வங்கிகளின் குறைபாடுகள்**

1. மூலதனம் வலுவாக இல்லை. சராசரி நடைமுறை மூலதனம் ரூ. 25 லட்சமாக இருக்கிறது. இது மிகக் குறைவு. அரசாங்கம் ஏற்றிருக்கும் பங்குத்தொகையைத் தவிர தன்னிடம் இணைந்துள்ள சங்கங்களிடமிருந்து அதிகமாக பங்கு மூலதனம் பெற முயல வேண்டும்.

2. இவற்றின் காப்புநிதி போதிய நிலையில் இல்லாததோடு இந்நிதி திறமையுடன் முதலீடு செய்யப்படவில்லை.

3. காலங்கடந்த கடன் மிக அதிக நிலையில் உள்ளது. இதன் காரணமாக மாநில வங்கியிடமிருந்து போதிய கடன் வசதிபெற இயலவில்லை. சங்கங்களிடமிருந்து சரிவர காலக் கிரமத்தில் வசூல் செய்ய வேண்டும்.

4. வைப்புப் பெருக்கத்திற்கான வழிகளை மேற்கொள்ள வேண்டும்.

5. வங்கித் தொழிலில் திறமையை அதிகரிக்கச் செய்தல் வேண்டும்.

கூட்டுறவு மத்திய வங்கிகள் குறுகிய கால கடன் அமைப்பில் தேவைப்படாத ஒன்ரு? மத்திய வங்கிகள் நீக்கப் படலாமா? இதுபற்றி பல குழுக்கள் ஆராய்ந்துள்ளன. பொதுவாக மாவட்ட நிலையில் மாநில கூட்டுறவு வங்கிக்கும், பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்கும் நடுவே சமன் செய்யும் நிலையில் இவ்வங்கிகள் இருக்கலாம் என்ற கருத்தினையே பல குழுக்களும் தெரிவித்துள்ளன. வங்கிக் குழு 1972, பலவீனமான மத்திய வங்கிகள் பற்றி கீழ்க்கண்டுள்ள பரிந்துரையை அளித் துள்ளது.

1. எந்த ஒரு மாநிலத்தில் எல்லா கூட்டுறவு மத்திய வங்கி களும் நலிவுற்று பலவீனத்துடன் காணப்படுகின்றனவோ அந்த மாநிலத்தில் அமைப்பில் மாறுதல் செய்து மாநில கூட்டுறவு வங்கியின் கிளைகளாக மாற்றி விடலாம்.

2. எந்த ஒரு மாநிலத்தில் சில வலுவான மத்திய வங்கியும், பல பலவீனமான மத்திய வங்கிகளும் இருக்கின்றனவோ, பின்னே குறிப்பிட்ட இடங்களில் உச்சி வங்கி (afex Bank) தன் கிளைகளை திறக்கலாம்.

3. எந்த ஒரு மாநிலத்தில் அதிகபட்சமான மத்திய கூட்டுறவு வங்கிகள் வலுவோடு இருக்கின்றனவோ அந்த மாநிலங்களில் இப்போதுள்ள அமைப்பு தொடர்ந்து இருக்கலாம்.

மத்திய கூட்டுறவு வங்கி அமைப்பில் மேலே குறிப்பிட்ட வழியில் மாற்றம் செய்து அவ்வங்கிகள் கூட்டுறவுத் துறைக்கு நல்ல பணியினை செய்ய ஊக்குவிக்கவேண்டும். இந்தியா விலேயே மிகச் சிறந்த மத்திய கூட்டுறவு வங்கியாக கும்பகோணம் கூட்டுறவு மத்திய வங்கி தொடர்ந்து மூன்ருவது ஆண்டாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இவ்வங்கிக்கு காலங் கடந்தக் கடன் யாதும் இல்லை என்பது பெருமைப் படக்கூடிய செய்தி.

### மாநில கூட்டுறவு வங்கி

மத்திய கூட்டுறவு வங்கிகள் ஒன்றிணைந்து அந்தந்த மாநிலத்திலும் மாநில கூட்டுறவு வங்கி ஒன்றினை ஏற்படுத்தி உள்ளது. மாநிலத்தைப் பொறுத்த வரை இதுவே உச்சி வங்கி. மாநிலக் கூட்டுறவு வங்கியில் மத்திய கூட்டுறவு வங்கிகளைத்

தவிர, பிரதம கூட்டுறவுச் சங்கங்களும், தனி நபர்களும் கூட அங்கத்தினர்களாக உள்ளனர். தனி நபர்களை குறைப்பதோடு காலக் கிரமத்தில் அவர்களை நீக்கிவிட வேண்டும் என்பதினைக் கொள்கை அளவில் மாநில கூட்டுறவு வங்கிகள் ஏற்றுக் கொண்டுள்ளன. இயக்குநர் குழுவில் மத்திய வங்கியின் பிரதி நிதிகள், தனிநபர்களுக்காகவும், பிரதம சங்கங்களுக்காகச் சிலரும் கூட்டுறவு நிலவள வங்கி, கூட்டுறவுத் தொழில் வங்கி ஆகியவைகளின் பிரதிநிதிகளுடன், அரசாங்கத்தின் பிரதி நிதியும் இடம் பெருகின்ருர்.

1973ஆம் ஆண்டு இந்தியாவில் மொத்தம் 25 மாநில கூட்டுறவு வங்கிகள், ரூ. 117 கோடி சொந்த நிதியும், வைப்புகள் ரூ. 406 கோடியும், நடை முறை மூலதனம் ரூ. 845 கோடியுடன் செயல்பட்டு வந்தன. இவைகள் மொத்தம் ரூ.1067 கோடி கடன் அளித்திருந்தன. இவற்றில் ரூ. 623 கோடி திரும்பவர வேண்டியிருந்தது

மாநில வங்கி வைப்புகள் பெருவதோடு ரிசர்வு வங்கியிட மிருந்து பெருமளவில் கடன் பெற்று கூட்டுறவு மத்திய வங்கிகள் மற்றும் இதர கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் அளிக்கின்றது. சில நேரங்களில் மாநில அரசிடமிருந்தும் கடன் பெருகின்றது. இது அளிக்கும் கடன்களில் முக்கிய மானது பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்கு மத்திய கூட்டுறவுச் சங்கம் மூலம் விவசாயத்திற்கான குறுகிய, மத்திய காலக் கடன்களை அளிப்பதாகும்.

மாநில வங்கிகளின் வளர்ச்சி பற்றிய அட்டவணை கீழே கொடுக்கப்பட்டுள்ளது*

| மாநில வங்கிகள் | | | ஆண்டுகள் 1970-71 | 1971-72 | 1972-73 |
|---|---|---|---|---|---|
| 1. | எண்ணிக்கை | | 25 | 26 | 25 |
| 2. | சொந்த நிதி | ரூ. கோடி | 92 | 102 | 117 |
| 3. | வைப்புகள் | ,, ,, | 279 | 330 | 406 |
| 4. | ரிசர்வு வங்கியிட மிருந்து பெற்ற கடன் | ,, ,, | 242 | 211 | 259 |
| | (அ) இதில் குறுகிய கால விவசாயக்கடன் | ,, ,, | 190 | 153 | 155 |
| 5. | நடைமுறை மூலதனம் | ,, ,, | 685 | 731 | 845 |
| 6. | கடன் அளிப்பு | ,, ,, | 749 | 924 | 1067 |
| 7. | கடன் நிலுவை | ,, ,, | 534 | 552 | 623 |
| | (அ) இதில் குறுகிய கால விவசாயக் கடன் | ,, ,, | 288 | 348 | 282 |

*Annual Report and Trend and progress of Banking in India 1973-74-R.B.I. P. 59

குறுகியகால, மத்தியகால கடன் அளிப்பு அமைப்பில் உச்சி வங்கியாக அமைந்துள்ள மாநில வங்கிகள் மிக முக்கிய வங்கியாகும். இவைகள் வலுவாக இருந்தால் அன்றி ரிசர்வு வங்கியிடமிருந்து அதிகமான கடன் தொகையைப் பெற்று கூட்டுறவுத் துறை மூலம் அதிகபட்சமான கடனை அளிக்க முடியாது. விவசாயக் கடன் கூட்டுறவு மூலம் அதிகரிக்கச் செய்வதில் மாநில வங்கிகளுக்குப் பெரும் பங்குள்ளது.

இவ்வங்கிகளின் நடைமுறை செயல்பாட்டில் கீழ்க்கண்ட குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. ரிசர்வு வங்கியிடம் கடன் திருப்பித்தருவதில் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டு சரிசெய்யப்படுகின்றதே தவிர முழுக்கடன் திரும்பப்படவில்லை. இதனால், ரிசர்வு வங்கியிடம் இருந்து பெறும் கடனில் கணிசமான பகுதி இச்சரிக்கட்டலுக்குப் போகின்றது. இந்நிலை மாற்றப்பட்டு மத்திய கூட்டுறவு வங்கிகளிடமிருந்து நிலுவை பாக்கிகளை சரிவர வசூல் செய்ய வேண்டும்.

2. ரிசர்வு வங்கியின் ஆலோசனையைக்கூட கேட்காமல் சில மாநில வங்கிகள் தங்கள் நிதியைப் போதுமான கவனம் செலுத்தாமல் சில கூட்டுறவுச் சங்கங்களில் முதலீடு செய்து உள்ளன.

3. வைப்புத் திரட்டலில் கவனம் சரிவரச் செலுத்தப் படவில்லை.

4. கூட்டுறவு மத்திய வங்கிக்குக் கடன் அளிக்கும் வரையறை சரிவர நிர்ணயிக்கப்படவில்லை.

### கிராமிய வங்கிகள் (Rural Banks)

பிரதம மந்திரி அறிவித்த 20 அம்சப் பொருளாதார திட்டத்தின் முக்கியமான அம்சமான கிராமக்கடன் நிவாரணமும், போதிய கிராமக் கடன் அளிக்கும் திட்டத்தின் அடிப்படையில் பிரதேச கிராம வங்கிகள் (Regional Rural Banks) அமைக்கப்பட்டுள்ளன. 1975ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் தேதி ஐந்து கிராமிய வங்கிகள், இரண்டு உத்திரப் பிரதேசத்தில், அரியானா, ராஜஸ்தான், வங்காளம் ஆகிய ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு வங்கியும் துவக்கப்பட்டுள்ளன. இவைகள் சிண்டிகேட் வங்கி, யுனைட்டெட்

கம்மர்சியல் வங்கி, ஸ்டேட் வங்கி, பஞ்சாப் நேஷனல் வங்கி யூனைடெட் கமர்சியல் வங்கி ஆகியவைகளால் நிறுவப் பட்டுள்ளன. கிராமிய வங்கிகள் துவக்க வசதி செய்ய குடி யரசுத் தலைவர் ஒரு சட்டப் பிரகடனம் (ordinance) செய்தார். இவ்வங்கிகளின் மூலதனம் மத்திய அரசு, மாநில அரசு, துவக்கும் வணிக வங்கி ஆகியவைகளால் மூலதனம் 50 : 15 : 35 என்ற வீதத்தில் முறையே அளிக்கப்படுகின்றது. இவ் வகையால் வணிக வங்கி, அரசு ஆகிய இருவரும் இணைந்து வங்கித் தொழிலில் ஈடுபட வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. கிராமிய வங்கித் திட்டம் முழுவதும் செயல் படுத்தப் படும்போது இந்தியா முழுமைக்கும் 50 வங்கிகள் இருக்கும். ஒவ்வொரு வங்கியும் 100 கிளைகளைக் கொண்டிருக்கும். இத் திட்டம் மார்ச்சு 1977-க்குள் நிறைவு படுத்த அரசு முடிவெடுத்து உள்ளது. அப்போது நாடு முழுவதும் 5,000 கிராமிய வங்கிகளின் அலுவலகங்கள் செயல்படும்.

கிராமிய வங்கிகள் சிறிய விவசாயிகளுக்கு மட்டில் கடன் அளிக்கும். கூட்டுறவு மற்றும் விவசாயக் கடன் பற்றிய பலக் குழுக்களும் சிறிய விவசாயிக்குப் போதுமான கடனை வணிக வங்கிகளோ, கூட்டுறவுச் சங்கங்களோ கொடுக்கவில்லை எனக் கூறியுள்ளன. கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்களை தன்னிறைவுச் சங்கங்களாகவும், பொருளாதார வலுவுடையச் சங்கங்களாயும் ஆக்கி அரசு பல முறற்சிகள் எடுத்தும் முழு வெற்றி கிட்டாமையாலும், தேயசிமயமாக்கப்பபட்ட வணிக வங்கிகளின் வளர்ச்சியிலும், விவசாயக் கடன் அதிகரிப்பிலும், முன்னேற்றமிருந்தாலும் எதிர்பார்த்த அளவு வெற்றி இல்லாத தால் கிராமிய வங்கிகள் அமைக்கப்பட்டுள்ளன. இதுபோன்ற வங்கி அமைக்கப்பட வேண்டும் என்று வங்கிக் குழு 1972-ல் சிபாரிசு செய்திருந்தது. ஆனால், நடைமுறையில் வந்துள்ள கிராமிய வங்கியின் அமைப்பும், மூலதனமும் வங்கிக் குழு சிபாரிசினின்று வேறுபட்டுள்ளது.

வணிகவங்கிகள் போதிய அளவு விவசாயத்துறைக்கு கடன் வசதி அளிக்காததற்குக் காரணம் இவ்வங்கிகள் தங்களுடைய பல்வேறு பணிகளான வைப்புத் திரட்டுதல், வாடிக்கைக்காரர் களுக்குப் பல்வேறு சேவை, பெரிய மற்றும் சிறு தொழில் கடன்கள் இவற்றின் மத்தியில் விவசாயக்கடன் அளிக்க வேண்டியுள்ளது. எனவே, போதிய கவனம் செலுத்த அவகாசம் இருப்பதில்லை. கிராமிய வங்கிகளோ, விவசாயக் கடன் இதுவும் சிறுய விவசாயிகளுக்கே அளிக்கப் போவதால்

சிறப்புடன் செயலாற்ற வாய்ப்புகள் இருக்கின்றன. இவ் வங்கியின் பல நமூனுக்கள், ரசீது, கச்சை புத்தகம் (Pass book) ஆகியவைகள் அந்தந்த மாநில மொழியிலேயே இருக்கும். இவைகளை விவசாயிகள் பூர்த்திசெய்யத் தேவை இல்லை. கிராமிய வங்கி அலுவலர்களே பூாத்தி செய்வர். அலுவலர்களுக்கு மற்றைய வங்கிகளில் வேலையிலிருப்போர் பெறும் ஊதிய நிலையில் இல்லாமல் மாநில அரசு, அரசு ஊதிய நிலை அனுசரிக் கப்படும். இவ்வங்கிகள் இலாபமும் இல்லை, நட்டமும் இல்லை என்ற நிலை அடைய குறைந்தது ஐந்து ஆண்டுகள் ஆகும்.

இந்தியாவைப் பொருத்தமட்டில் வணிக வங்கிகளிடம் போதிய நிதியும், நிருவாகத் திறமையும் இருக்கின்றது. ஆனல், இவ்வணிக வங்கிகளுக்கு கிராமப் புறங்களில் அமைப்புகள் இல்லை. கூட்டுறவைப் பொருத்தமட்டில், இவைகள் கிராமத்தில் வேரூன்றி இருக்கின்றன. ஆனல், இவற்றிற்குப் போதுமான நிதி வசதியோ, நிருவாகத் திறமையோ இல்லை. இது வரை வணிக வங்கிகளுக்கும் கூட்டுறவு இயக்கத்திற்கும் ஒருங்கிணைக்கும் முயற்சிகள் செய்யப்பட்டு வந்தன. ஆனல், போதிய பலனைக் கொடுக்காததால் அரசுக்கும், வணிக வங்கிக்கும் ஒருங்கிணைப்பு ஏற்படுத்தி சிறு விவசாயி கடன் மற்றும் கொடுப்பதில் வெற்றி காண முடியுமா என்ற முயற்சியில் கிராமிய வங்கி துவக்கப் பட்டுள்ளது.

கிராமிய வங்கி துவக்கப்பட்டதினுல் கூட்டுறவு இயக்கத்தில் நம்பிக்கை இல்லை என்று கொள்ளக் கூடாது. கிாமிய வங்கி கூட்டுறவு வங்கிகளுக்குப் போட்டி நிறுவனமும் அல்ல. கூட்டுறவு முயற்சிக்கு பேருதவி செய்யவே கிராமிய வங்கிகள் துவக்கப்பட்டுள்ளன. கிராமியக் கடன் விமரிசனக் குழு கண்டுள்ள முடிவு போல் கூட்டுறவு இயக்கம் மட்டுமே விவசாயக் கடன் முழுவதையும் கொடுக்க இயலாது. கிராமிய வங்கி, நிதி வசதி பெற்ற, தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளால் நடத்தப்படுவதால் பெரிய அளவில் சிறிய விவசாயின் தேவையை பூர்த்தி செய்யக்கூடும்.

கிராமிய வங்கி வெற்றிபெற வேண்டுமேயானுல் கீழ்க்கண்ட வைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும்.

1. அதிகமான சிறிய விவசாயிகளும், அதிகக் கடனை நோக்கும், விவசாய முன்னேற்றம் ஏற்பட்டுள்ள கிராமங்களி லேயே அவை செயல்படவேண்டும்.

2. இங்கு வணிக வங்கியின் கிளையோ, கூட்டுறவுச் சங்கமோ இல்லாமலோ அல்லது சரிவர செயல்படாமலோ இருக்கவேண்டும்.

3. சிறப்புப் பயிற்சி பெற்ற அலுவலர்கள் வேண்டும்.

4. கடன் கொடுப்பதில் தாராளமும் கடன் வசூலிப்பதில் கண்டிப்பும் தேவை.

5. எக்காரணம் கொண்டும் கடனை காலம் தவிர்ந்த கடனாக ஆக்கக்கூடாது.

### நிலவள வங்கிகள்

விவசாத்திற்கு குறுகிய காலக் கடன்களைத் தவிர நீண்ட காலக் கடன்களும், கீழ்க்கண்டுள்ள காரணங்களால் தேவைப் படுகின்றன:

1. நிலத்தை பண்படுத்த;
2. நிலத்தில் ஏதேனும் முன்னேற்றம் செய்ய;
3. முன் கடனைத் திருப்பித்தர;
4, கிணறு வெட்ட, குழாய்கள் அமைக்க.
5. பக்கத்தில் அமைந்துள்ள நிலங்களை விலைக்கு வாங்கி நிலத்தின் அளவைப் பெரிதாக்க.

இக் காரணங்களுக்காக அதிகமான கடன் தொகை தேவைப்படுகின்றது. இத் தொகையை விவசாயி நீண்ட காலத்தில் ஆண்டு தோறும் சிறிது சிறிதாக மட்டில் திருப்பித்தர இயலும். கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்கள் நீண்ட காலக் கடனைக் கொடுக்க இயலாமைக்கு கீழ்க்கண்ட காரணங்கள் ஆகும்:

1. அவைகள் நடைமுறை விவசாயக் செலவுக்கே கடன் அளிக்க முடியும்.

2. அவைகள் மத்திய வங்கியிடமிருந்து குறுகிய காலக் கடனையே பெறுகின்றன. எனவே, தங்கள் நிதியை நீண்ட காலக் கடனாக அளித்தல் இயலாது.

3. பெருமளவில் கடனளிக்கும் வகையில் அவைகளின் மூலதனம் வலுவாக இல்லை.

4. குறுகிய காலக் கடனளிக்கும் நிறுவனத்துடன் நீண்ட காலக் கடனளிப்பும் இணைக்கப்பட்டால் இருவகைக் கடன் அளிப்பிலும் போதிய கவனம் செலுத்த முடியாது,

இந்தியாவில் முதல் நிலவள வங்கி பஞ்சாப் மாநிலத்தில் ஜங்கு என்ற இடத்தில் துவக்கப்பட்டது. இரண்டாவது வங்கி வங்காளத்தில் நௌகான் என்ற இடத்திலும், மூன்ருவது வங்கி அஸ்ஸாம் மாநிலத்தில் கௌஹாத்திலும் 1926ஆம் ஆண்டு துவக்கப்பட்டது. பதிவாளர்கள் மாநாடு, நாடெங்கும் இவ்வகை வங்கிகள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்ற முடிவை 1926ஆம் ஆண்டு எடுத்தது. தமிழ் நாட்டில் 12 நில வங்கிகள் (வெகு காலம் வரை இவைகள் நில அடமான வங்கி என்று கூறப் பட்டன) 1927ஆம் ஆண்டு நிறுவப்பட்டன. டௌன் சென்ட் குழு, 1927-28ல் (Townsend Committee 1927-28) செய்த பரிந்துரைக்கேற்ப ஒவ்வொரு மாநிலமும் மத்திய நிலவள வங்கி ஒன்றை நிறுவ ஆரம்பித்தது.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் துவக்கப்படும்வரை நிலவள வங்கிகள் முன் கடன் அடைக்கும் கடன்களையே அதிகமாகக் கொடுத்து வந்தன. நில முன்னேற்றத்திற்கான கடன் அதிக அளவில் கொடுக்கவில்லை. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலிருந்து நிலவள வங்கிகள் முன் கடன் அடைப்புக்கான கடனை நிறுத்தி நிலவள முன்னேற்றத்திற்கான கடன்களை அளிப்பதில் முழு அளவில் முயற்சி செய்து வருகின்றன.

நிலவள வங்கிகள் மாநில அளவில் மத்திய நிலவள வங்கியிடம் இணைந்துள்ளன. மத்திய நிலவள வங்கிகள் கீழ்க் கண்ட குறிக்கோள்களுடன் இயங்குகின்றன.

1. தன்னுடைய சொத்துக்கள், நிலவள வங்கிகள் தன் பேரில் மாற்றியுள்ள அடமானப் பத்திரங்கள் ஆகியவைகளின் ஈட்டின் பேரில் கடன் பத்திரங்கள் வெளியிடுதல்.

2. வைப்புகளைப் பெறுதல்.

3. நிலவள வங்கிகளுக்குக் கடனளித்தல்.

4. பணியினைச் சரிவர செய்ய வேண்டிய கிளைகள், அலுவலகங்கள் திறத்தல்.

5. நிலையான சொத்துக்களை வாங்கி தனக்கு வேண்டிய கட்டடங்கள் கட்டிக் கொள்ளல்.

6. நிலவள வங்கிகள் நடத்தையை ஆய்வு செய்தல். மற்றும்,

7. தன் பணியினை சிறந்த முறையில் செய்வதற்குத் தேவையான அனைத்தையும் செய்தல்.

ஒவ்வொரு மாநிலத்திலும் கூட்டுறவு நீண்ட காலக் கடன் அமைப்பில் உச்சி வங்கியாக மத்திய நிலவள வங்கிகளும், அதன்கீழ் நிலவள வங்கிகளுமாய் இரண்டு படியாக அமைந்துள்ளன (குறுகிய காலக் கடன் மூன்று படியாக அமைந்துள்ள நிலை முன்பே விளக்கப்பட்டுள்ளது). சில மத்திய நிலவள வங்கிகளின் தனிநபர்களும் அங்கத்தினராக உள்ளனர். பொதுவாக நிருவாக இயக்குநர்களின் எண்ணிக்கை 16 லிருந்து 18க்குள் இருக்கின்றது இந்த எண்ணிக்கையில் $\frac{3}{4}$ பங்கு நிலவள வங்கிகளின் பிரதிநிதி களுக்கும், மற்றைய எண்ணிக்கையில் அரசு பிரதிநிதியும், கடன்பத்திரம் வாங்கியுள்ளோர்களின் பிரதிநிதியும், தனிநபர் பங்குதாரர்களின் பிரதிநிதியும் அமைவர்.

நிலவள வங்கிகள் தங்கள் கடன் நிலுவையில் 4 இல் இருந்து 5 சதவீதம்வரை மத்திய நிலவள வங்கியின் பங்கு மூலதனத்தில் முதலீடு செய்கின்றனர். மீதித் தொகையை தங்கள் அங்கத்தினர்களுக்கு 15 இலிருந்து 20 ஆண்டுகளில் திருப்பித் தரக்கூடிய கடன்களாக அளிக்கின்றனர். நிலவள வங்கியினின்று கடன் வாங்க விரும்புபவர் அங்கத்தினராகப் பதிவு செய்து கொண்டு தேவையான பங்கு மூலதனம் எடுத்துக் கொள்ளவேண்டும். இதன்பின் தன் கடன் விண்ணப்பத்தை நிலவள வங்கிக்கு அனுப்பவேண்டும். வங்கியின் ஆய்வாளர் முதல் கட்ட ஆய்வினை நடத்தி, நிலத்தின் மதிப்பு, நிலத்தின் உரிமை பத்திரம் ஆகியவைகள் சரியாக இருக்கின்றனவா என்று ஆராய்ந்து கடனளிக்கலாமா என்பது பற்றிய தன் சிபாரிசை வங்கிக்கு அனுப்புவார். கடன் சிபாரிசு செய்யப் பட்டால் வங்கி, அடமானம் செய்து கடன் பெற வேண்டிய நிலம் பற்றி 23 ஆண்டுகளுக்கான வில்லங்கப் பத்திரங்களை, பதிவுத்துறை அலுவலகத்திலிருந்து பெறும். இந்தப் பத்திரங் களையும் ஆய்வாளர் பார்த்து தன் பரிந்துரைகளைத் தெரிவிப்பார். கடன் விண்ணப்பம், உரிமை மற்றும் வில்லங்கப் பத்திரங்கள் வங்கியின் வழக்கறிஞரின் அறிவுரைக்கு அனுப்பப் படும். பத்திரங்கள் சட்டபூர்வமாக குறையேதும் இல்லை என்று

சட்ட ஆலோசகர் அறிவுரை வழங்கினுல், நிலவள வங்கி தன் இயக்குநர்களில் ஒருவரை நிலத்தின் மதிப்பை அறிய நிலத்திற்கு ஆய்வுக்கு அனுப்பும். நிலத்தின் மதிப்பு தவிர கடனைத் திருப்பித்தரும் திறமை பற்றியும் கேட்டு அறியப்படும். நிலத்தின் மதிப்பில் 40 இலிருந்து 50 சதவீதத்திற்கு மிகாமல் கடன் தொகையை அளிக்க சிபாரிசு செய்யப்படும். இதன்பின் கடன் கோருபவரின் முழு ஃபைலும் (File) இயக்குநர் குழுக் கூட்டத்தில் வைக்கப்பட்டு கடன் சிபாரிசுத் தீர்மானம் இயற்றப்படும். இதன்பின் கூட்டுறவுத் துறைக்கு கடன் விண்ணப்பமும், மற்றைய பத்திரங்களும், இயக்குநர் தீர்மானமும் அனுப்பப்படும். கூட்டுறவுத் துறையினர் இதனை மத்திய நிலவள வங்கிக்கு அனுப்புவர். இவ் வங்கியின் சட்ட ஆலோசகர்கள் பரிசீலனைக்குப்பின் நடைமுறை இயக்குநர் குழுவுக்கு அனுப்பப்படும். இக்குழு கடனை அளிக்கவோ, குறைக்கவோ, மறுக்கவோ செய்யலாம். கடன் அளித்தால், கடன் கொடுக்க உத்திரவு நிலவள வங்கிக்கு அளிக்கப்படும். இதன்பின் நிலவள வங்கி முந்தைய வில்லங்கப் பத்திரம் வாங்கிய தேதிமுதல் கடன் கொடுக்கும் நாள் வரை வில்லங்கப் பத்திரம் பெற்று கடன் பெறுவோரிடமிருந்து நிலத்திற்கு அடமானப் பத்திரம் பெற்று பதிவு செய்து கடனை அளிக்கும். முன்கடன் தீர்க்கக்கடன் என்ருல் நேரடியாக அந்த நபருக்கு காசோலை அளிக்கப்படும். விவசாயக் கருவி வாங்கக் கடன் என்ருல் அதை விற்கும் நிறுவனத்திற்குக் கடன் நேரடியாக அளிக்கப்படும். நில அபிவிருத்திக்கடன், அபிவிருத்திக்கு ஏற்ப அவ்வப்போது அளிக்கப்படும்.

அடமானமாகக் கொடுக்கப்படும் நிலங்கள் முதல் அடமானமாகவும் கீழ்க்கண்ட வகையான நிலங்களாகவும் இருக்கலாம்.

1. நஞ்சை நிலமாகவும், நீர்ப்பாசன வசதியுடையவை களாகவும்.

2. பூந் தோட்டம்.

3. பழத் தோட்டம்.

4. நீர்ப்பாசன வசதியுடைய புஞ்சை நிலங்கள்.

5. மானவாரிப் புஞ்சை.

மத்திய நிலவள வங்கி, தன்கீழ் அமைந்துள்ள நிலவள வங்கிகளின் தேவைக்காக பெருமளவில் நிதி திரட்டவேண்டி உள்ளது. இதற்காக கடன் பத்திரங்கள் (debentures) வெளியிடு கின்றது. இக்கடன் பத்திரங்கள் மூன்று வகைகளாக அமைகின்றன.

1. சாதாரண கடன் பத்திரங்கள் (ordinary debentures).

2. கிராமிய கடன் பத்திரங்கள் (Rural debentures).

3. சிறப்பு வளர்ச்சி கடன் பத்திரங்கள் (Special development debentures)

சாதாரணக் கடன் பத்திரங்கள் பொதுமக்கள், நிறுவனங்கள் தனிநபர்கள் வாங்க வெளியிடப்படுகின்றது. அளிக்கப்படும் வட்டிவீதம் அவ்வப்போது சந்தையில் நிலவும் வட்டியைப் பொருத்து அமையும். அரசு இக்கடன் பத்திரங் களின் முதல் மற்றும் வட்டி திருப்பித் தருவதற்கான உத்திர வாதத்தை அளித்துள்ளது. காப்பாளர் பத்திரமாக (Trustee Securities) இவைகள் அறிவிக்கப்பட்டுள்ளன. பொதுமக்கள் தவிர ஆயுள் இன்சுயரன்சு கழகம், ஸ்டேட் வங்கி, ரிசர்வு வங்கி இக்கடன் பத்திரங்கள் வாங்குவதில் பெரும் தொகையை முதலீடு செய்துள்ளன.

ரிசர்வு வங்கி 1948ஆம் ஆண்டுமுதல் மத்திய நிலவள வங்கியின் கடன் பத்திர வெளியீட்டில் 10 சதவீதம் அல்லது விற்க இயலாத கடன் பத்திரங்கள் இவைகளில் எது குறைவோ அந்த அளவுக்கு வாங்கி வந்தது. 1950ஆம் ஆண்டுமுதல் 10 சதவீதத்தை 20 சதவீதமாக உயர்த்தியது. மேலும், ரிசர்வு வங்கி பிரிவு 17 (4) (a) படி கடன் அளிக்க நிலவள வங்கி கடன் பத்திரங்களை ஏற்றுள்ளது. 1974-75ஆம் ஆண்டுக்குச் சாதாரண கடன் பத்திரம் வெளியீடு ரூ. 102.39 கோடியாக உத்தேசிக்கப் பட்டுள்ளது. இவற்றில் ரூ. 52.92 கோடியை ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, ஆயுள்காப்பு நிறுவனம் ஆகியவைகள் வாங்க உத்தேசித்துள்ளன. சமீப காலங்களாக வணிக வங்கிகளும் கணிசமான அளவு நிலவள வங்கிக் கடன் பத்திரங்கள் வாங்குகின்றன.

கிராமியக் கடன் பத்திரங்கள் 1957ஆம் ஆண்டுமுதல் வெளியிடப்படுகின்றன. இத்திட்டத்தின்படி மத்திய நிலவள வங்கிகள் விவசாயிகளுக்கு உற்பத்திக்காக 6 அல்லது

7 ஆண்டுக் கடன் நில அடமானத்தில் கொடுக்கவேண்டும். இக்கடன் பத்திரங்களை விவசாயிகள் வாங்குவதற்கு வசதியாக விவசாயப் பொருள்கள் அறுவடை காலத்தில் வெளியிடப் படும். சாதாரண கடன் பத்திரங்களின்பேரில் அளிக்கப்படும் வட்டியை விட சற்று அதிகமான வட்டி வீதம் இக் கடன் பத்திரங்களுக்கு அளிக்கப்படும். கிராமியக் கடன் பத்திரங்கள் இரண்டு வகைகளாக வெளியிடப்படுகின்றன.

(1) வெளியிடப்படும் கிராமியக் கடன் பத்திரங்களில் 7/15 பங்கு ஏழு ஆண்டுகள் கடன் பத்திரமே. இவை பொது மக்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

(2) ஏனைய கடன் பத்திரம் 15 ஆண்டு கடன் பத்திரம். இவை அனைத்தும் ரிசர்வு வங்கியால் எடுத்துக் கொள்ளப்படும்.

(3) ரிசர்வு வங்கிக்கு, பொதுமக்களுக்கு வெளியிடப்படும் கடன் பத்திர வட்டியைவிட ஒரு சதவீதம் குறைவாகவே கொடுக்கப்படும்.

(4) கிராமியக் கடன் பத்திரங்களை தனி நபர்கள் மட்டும் தான் பெறலாம், நிறுவனங்களுக்கு விற்பனை இல்லை.

சிறப்பு வளர்ச்சிக் கடன் பத்திரங்கள், சில விவசாய சிறப்புத் திட்டங்களுக்கு நிதி வசதி அளிக்கும் வண்ணம் வெளியிடப்படுகின்றன. இவற்றில் 90 சதவீதம் விவசாய மறுநிதி கழகம் எடுத்துக் கொள்கிறது. மீதியை தனிநபர்களோ மாநில அரசோ எடுத்துக் கொள்ளலாம்.

நிலவள வங்கிகள் முன்னேற்றம் பற்றிய விவரங்கள் அட்டவணை 8ல் தரப்பட்டுள்ளது:

குறுகிய காலக் கடன், நீண்டகாலக் கடன் ஆகியவைகளை அளிக்க இரண்டு அமைப்புகள் தேவையா அல்லது ஒரு அமைப்பே போதுமா என்ற கேள்வி இப்போது ரிசர்வு வங்கியால் எழுப்பப்பட்டு இதுபற்றி ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. ரிசர்வு வங்கியின் எண்ணப்படி ஒரு வங்கியே இவ் விருவகையான கடனை அளித்தால் விவசாயி கடனைப் பெற்றுக்கொள்ள எளிதாக இருக்கும். மேலும், மற்றொரு குழு நிலவள வங்கிகள் அனைத்தும் கடன் பத்திரம் வெளியிடுதல், வட்டி வீதம் ஆகியவற்றை எவ்விதம் ஒழுங்கு படுத்தலாம் என்பதைப்பற்றி ஆய்வு செய்கின்றது. இக்

குழுக்கள் டாக்டர். ஹசாரே, திரு. டேடி ஆகியோர்களைத் தலைவர்களாகக் கொண்டு இயங்கி வருகின்றன.

அட்டவணை 8.

## நிலவள வங்கிகள் முன்னேற்றம்

ரூ. கோடியில்

| விவரிப்பு | 1951-52 | 1961-62 | 1966-67 | 1967-68 | 1968-69 |
|---|---|---|---|---|---|
| 1. வங்கிகளின் எண்ணிக்கை | 289 | 536 | 707 | 731 | 740 |
| 2. அங்கத்தினர் எண்ணிக்கை (லட்சத்தில்) | 214 | 852 | 2157 | 24.47 | 2800 |
| 3. பங்கு மூலதனம் | .58 | 2.83 | 14.14 | 18.69 | 25.26 |
| 4. கடன் வாங்கியது | 6.84 | 34.26 | 152.83 | 197.64 | 277.90 |
| 5. நடைமுறை மூலதனம் | 7.59 | 38.31 | 173.59 | 223.40 | 309.76 |
| 6. கடன் அளிக்கப்பட்டது | 1.30 | 12.59 | 40.84 | 64.90 | 103.76 |
| 7. கடன் நிலுவை | 6.96 | 35.28 | 154.67 | 203.50 | 285.56 |

**நகரக் கூட்டுறவு வங்கிகள் (Urban Cooperative Banks)**

நகர கூட்டுறவு வங்கிகள் வணிக வங்கிகள் போல எல்லா பணிகளையும் செய்கின்றன. நகர்ப்புறத்திலுள்ள கைவினைஞர்கள், சிறு தொழிலாளிகள், நிரந்தர வருவாய் உடையவர்கள் மற்றும் வழக்கறிஞர்கள், மருத்தவர் ஆகியோர் தங்களுக்குத் தேவையான தொழில் மற்றும் குடும்பச்செலவுகளுக்கு இவ்வங்கி கடன் அளிக்கின்றது. வணிக வங்கியே போல் நடப்பு வைப்பு, காலவைப்பு, சேமிப்பு வைப்பு, மீள் தவணை வைப்புகள் ஆகியவைகளைப் பெற்றுக்கொள்கின்றன. சாதாரணமாக

இவ் வங்கி செயலாற்றும் இடத்தில் உள்ள வணிக வங்கிகள் அளிக்கும் வட்டி வீதத்தை விட சற்று அதிகமாக அளிக்கின்றது. வீட்டு அடமானம், பொறுப்பாளர் கையொப்பம், நகைகள், பிராமிசரி கடன் பத்திரம் ஆகியவைகள்பேரில் கடனளிக்கும். பொதுவாக இவ் வங்கியின் செயல்பாடு அந்த நகரம் அல்லது நகராட்சி எல்லைக்குள் அமைகின்றது. தனி நபர்கள் தவிர, நிறுவனங்களும் இவ் வங்கியில் அங்கத்தினராகலாம். A வகை அங்கத்தினர் B வகை அங்கத்தினர் என இருவகையான அங்கத்தினர்களைக் கொண்டுள்ளது. கடன் மட்டும்கோரி நிற்பவர் Bவகை அங்கத்தினர். இவர்களுக்கு பொதுச்சபை கூட்டத்தில் பங்கேற்று வாக்களிக்க உரிமை இல்லை.

நகரக் கூட்டுறவு வங்கிகள் ஒரு படி அமைப்பாகவே அமைந்துள்ளன. இவைகளுக்கு மாவட்ட அளவிலோ, மாநில அளவிலோ எந்தவித கூட்டிணைப்பும் இதுவரை உருவாக்கப் படவில்லை,

நகர கூட்டுறவு வங்கிகளின் மூலதனம், வைப்புகள் பற்றிய விவரங்கள் அட்டவணை 9-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

1 வங்கிக்குழு அறிக்கை, பக்கம் 228.

அட்டவணை 9.

நகர கூட்டுறவு வங்கிகள்

ரூ. கோடியில்

| நிலை | 30—6—1969 | | 30—6—1960 | |
|---|---|---|---|---|
| | தொகை | நடைமுறை மூலதனத்திற்கு சதவீதம் | தொகை | நடைமுறை மூலதனத்திற்கு சதவீதம் |
| 1. சொந்த நிதி | 31.14 | 18.9 | 33.88 | 18.4 |
| 2. வைப்புகள் | 125.92 | 76.4 | 140.63 | 76.4 |
| 3. கடன் பெற்றது | 7.68 | 4.7 | 9.58 | 5.2 |
| 4. மொத்த நடைமுறை மூலதனம் | 164.74 | )) | 184.09 | 100 |

கூட்டுறவு மூலம் தொழிற்கடனளிக்க வகை செய்யும் ரிசர்வு வங்கியின் நடைமுறைக்கு குழு, 1967 (Working group on Industrial Financing through Cooperative Banks set by R.B I. 1967) நகர கூட்டுறவு வங்கிகளுக்கு சிறு தொழில்களுக்கு கடன் அளிப்பதில் பெரிய பொறுப்பினைத் தரவேண்டும் என்று பரிந்துரை செய்தது. இப்பரிந்துரைக்கு ஏற்ப ரிசர்வு வங்கி மாநில அரசுகளுக்கு இவ் வங்கிகளின் பங்கு மூலதனம் எடுத்துக் கொள்ள நீண்ட காலக்கடனைத் தர இசைந்தது. மேலும், ரிசர்வு வங்கி பிரிவு 17 (2) (bb) கீழ் 22 சிறுதொழில் களுக்கு மறுநிதி வசதி அளிக்கவும் ஒப்புக் கொண்டது. எனினும், மாநில அரசுகளும், நகர கூட்டுறவு வங்கிகளும் இவ் வசதியினை சரிவரப் பயன் படுத்திக் கொள்ளவில்லை.

## தொழில் கூட்டுறவு வங்கிகள் (Cooperative Industrial Banks)

தொழில் கூட்டுறவுச் சங்கங்களுக்கு இயந்திரம், தளவாடங்கள், கருவிகள் வாங்கவும், பட்டறை கட்டவும், தொழிற்கூடத்திற்கு இடம் வாங்கவும் நீண்டகால மத்திய காலக் கடன் தேவைப்படுகின்றது. மேலும், கச்சாப் பொருள் வாங்கவும், கூலி கொடுக்கவும், உற்பத்தியான பொருள்களை விற்கும்வரை வைத்திருக்கவும், பிற செலவுகட்கும் குறுகிய காலக் கடன் இச் சங்கங்களுக்குத் தேவைப்படுகின்றது. இச் சங்கங்களின் நிதித் தேவைகளை ஓரளவு அரசு, கதர்கிராமத் தொழில்குழு, அகில இந்தியக் கைத்தறிக்குழு, அனைத்திந்திய கைவினைக்குழு, மத்தியப் பட்டுக்குழு, மாநில நிதிக் கழகங்கள் மத்திய கூட்டுறவு, வங்கி ஸ்டேட் வங்கி போன்ற நிதி நிறுவனங்கள் பூர்த்தி செய்தாலும் தொழில் கூட்டுறவுச் சங்கங் களுக்குத் தேவையான நிதி உதவியை அளிக்க சில மாநிலங்களில் தொழில் கூட்டுறவு வங்கிகள் நிறுவப் பட்டுள்ளன.

தொழில் கூட்டுறவு வங்கி, குடிசைத் தொழில், கிராமத் தொழில், சிறிய அளவுத்தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டுள்ள தம் உறுப்பினர் சங்கங்களுக்கு நிதி உதவி செய்வதும், கைவினைஞர், தொழிலாளரிடையே சிக்கனம், தன்னுதவி என்ற பண்புகளை வளர்ப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு செயல் படுகிறது.

இந்தியாவில் 1971 ஜூன் வரை மாநில அளவில் 4 தொழில் கூட்டுறவு வங்கிகளும் மாவட்ட அளவில் 45 வங்கி

களும் செயல்பட்டு வந்தன. மாநில கூட்டுறவு வங்கிகள் 1971 ஜூன் இறுதிவரை ரொக்கக்கடன் ரூ. 2.77 கோடியும் கடன் ரூ. 43 கோடியும் கடனுக அளித்திருந்தன. இதே காலம் வரை மத்திய வங்கிகள் ரூ. 37.48 ரொக்கக் கடனும், ரூ 2.56 கோடி கடனும் கொடுத்திருந்தன.

## பாட நூல்கள்

1. கு. ஆளுடைப்பிள்ளை—இந்திய வங்கியல்.
2. Report of the Banking Commission, 1972.

# 18. இந்திய வணிக வங்கிகள்

முன் அத்தியாயங்களிலேயே, இந்திய வணிக வங்கிகளின் வளர்ச்சியில் முக்கிய கட்டமான தேசியமயமாக்கப்பட்ட 14 பெரிய வங்கிகள் பற்றியும், தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளின் வளர்ச்சி பற்றியும் கூறப்பட்டுள்ளது. வணிக வங்கிகள் இந்தியாவில் செயல்படும் முறை இந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

இந்திய வணிக வங்கிகள் மற்றெல்லா நாட்டு வணிக வங்கிகளேபோல் வைப்புகளைப் பெற்று கடனை அளிக்கின்றன. மேலும், கிராமத்தினின்று, ஏற்றுமதி செய்யப்படும் துறைமுகம் வரையும், இறக்குமதி துறைமுகத்தினின்று வினியோகம் செய்யப்படும்வரை விளைபொருள்களுக்குத் தேவையான நிதிவசதியினையும் அளிக்கின்றன. சமீப காலம்வரை விவசாயக் கடன் பெருமளவில் அளிக்கவில்லை. வணிக வங்கிகள் பெரிய நிலக்கிழார்களுக்குமட்டில் கடனுதவி அளித்துவந்துள்ளது. இந்திய வணிக வங்கிகள் தேசியமயமாக்கப்படும்வரை வைப்புகளுக்கு அளிக்கும் வட்டி வீதம் வெவ்வேறாக அமைந்திருந்தது. போட்டி நோக்கம் கொண்டு சில வங்கிகள் அதிக வட்டியையும் கொடுத்து வந்தன. ஆனால், தேசியமயமாக்கப்பட்டபின் நாட்டு உடைமையான வங்கிகள் மட்டுமன்றி மற்றைய தனியார்துறை வங்கிகளும் வைப்பு மீது அளிக்கும் வட்டி பற்றி கருத்து ஒருமித்து ஒரே சீரான வட்டி வீதம் அளித்து வருகின்றன.

கடனைப் பொருத்தமட்டில் பெரும் நகரங்களில் பங்கு மார்க்கெட்டுகளின் பங்கு ஈட்டின் பேரில் கடன் அளிக்கப்படுகின்றன. உள்நாட்டுப் பிரதேசங்களில், இவ்வித பங்குகள் இல்லாத இடங்களில் விவசாய விளைபொருள், பஞ்சு, சணல் ஆகியவை ஈட்டின் பேரில் கடன் வழங்கப்படுகின்றது. பொதுவாக, இச்சரக்குகள் வைத்துள்ள கிடங்குகளின் சாவியைப் பெற்று, சாவிக் கடன் (Key loan) அளிக்கின்றன. வியாபாரிகள் கையில் உள்ள சரக்கின் பேரில் முன்கடன் அளிக்கப்படுகின்றது. வங்கிகள் தனியார் கடனுகை பிராமிசரி நோட்டில் இருவர் கடன் கையெழுத்து பேரில் கடன் அளிக்கின்றது.

வியாபாரம், தொழில் ஆகியவைகளுக்கு கீழ்க்கண்ட வகையில் கடன் அளிக்கப்படுகின்றன :—

1. ரொக்கக் கடன்
2. அதிகப் பற்று
3. கடன்
4. உண்டியல் கழிவுப்பாடு

அளிக்கப்படும் கடன், கடன் வாங்குபவருடைய நடப்புக் கணக்கில் வரவு வைக்கப்படலாம் அல்லது ரொக்கமாக அளிக்கப்படலாம். அதிகப்பற்று, பொருள், நகை அல்லது பங்குகள் ஈட்டின்பேரில் ஒரு குறிப்பிட்ட அளவு அளிக்கப்பட்டு அது வரை விடுவிக்கப்படும் காசோலைகளுக்குப் பணம் அளிக்கப்படுகின்றது.

மாற்று உண்டியல் கழிமானம் பெருமளவுக்குச் செய்யப்படுவதில்லை. போதிய உண்டியல்கள் புழக்கத்தில் இல்லை. வியாபாரிகள் உண்டியல்கள் புழக்கத்தில் இல்லை. வியாபாரிகள் உண்டியல் மிகக் குறைவாகவே பயன்படுத்துகின்றனர். உண்டியல் கழிவுப்பாடு நாட்டு வங்கியர்கள் செய்யும் கணிசமான அளவு வணிக வங்கிகள் செய்வதில்லை.

பணவிடை, தந்தி மாற்றம், அஞ்சல் வழி மாற்றம் ஆகிய முறைகளில் பணத்தினை ஓரிடத்தினின்று மற்ற இடங்களுக்கு அனுப்ப வணிக வங்கள் பயன்படுகின்றன. இந்திய வணிக வங்கிகள் பாதுகாப்புப் பெட்டகம், அறக்காப்பாளர் பணி ஆகியவைகளை அதிக அளவில் செய்ய ஆரம்பித்துள்ளன.

இந்திய வங்கிகள் நெடுங்காலமாக குறுகிய காலக் கடன் மட்டும் அளித்து வந்திருந்தாலும் இப்போது பல வணிக வங்கிகள் மத்திய அளவு தொழிற்சாலைகளுக்கு மத்திய காலக் கடன்கள் அளிக்க ஆரம்பித்துள்ளன.

இந்திய வணிக வங்கிகள் கடந்த பத்து ஆண்டுகளாக இது வரை செய்து வராத சில புதியமுறைக் கடன்களும், பணிகளும் செய்ய ஆரம்பித்துள்ளன.

**தனிநபர் கடன்**மூலம் தனிநபர்கள், வேலை அல்லது வியாபாரம்மூலம் நிரந்தர வருவாய் உடையவர்கள் வங்கிகளிட

மிருந்து வானொலிப்பெட்டி, குளிர்ச்சாதனப்பெட்டி, தையல் இயந்திரம் வாங்கக் கடன் அளிக்கின்றது. இதற்கான பணத்தை வங்கி விற்பனையாளருக்கு காசோலைமூலம் நேராகக் கொடுத்து விடுகின்றது. பொருளைப் பெற்ற வாடிக்கைக்காரர் வங்கிக்கு மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட பணத்தை கட்டிவர வேண்டும். பணம் கட்டத் தவறினால் அப்பொருளை பறிமுதல் செய்ய வங்கிக்கு உரிமை உண்டு. இத் திட்டத்தை எல்லா வங்கிகளும் செயல்படுத்த ஆரம்பித்துள்ளன.

சில வங்கிகள் ஒன்றுகூடி ஒரு கடனை அளிக்கும் திட்டத்தில் சில இந்திய வணிக வங்கிகள் ஈடுபட்டுள்ளன. இதற்குக் காரணம் கடன் தொகை அதிகமாகவோ அல்லது நச்சவட்டம் அதிகமாக இருப்பதாகும். 1970ஆம் ஆண்டு நாணயமாற்று வங்கி ஒன்று பங்கேற்கும் அத்தாட்சிப் பத்திரம் (Participation Certificate) வெளியிட்டது. இதன்மூலம் இவ் வங்கி அளித்த கடனை விற்கின்றது. இந்த அத்தாட்சிப் பத்திரம் வாங்கும் வங்கி சட்டபூர்வமாக அக்கடனுக்கு ஈடாகப்பெற்ற சொத்தினை மற்றைய வங்கிக்கு மாற்றி அமைக்கின்றது. இந்த அத்தாட்சிப் பத்திரத்தின் குறைந்தபட்ச மதிப்பு ரூ. 1 லட்சம். இந்த அத்தாட்சிப் பத்திரக் கடன் 30 நாட்கள், 60 நாட்கள், 90 நாட்களில் முதிர்வடையும் வகையாக வெளியிடப்படுகின்றன. தேவையான முதிர்வு தேதியுடைய அத்தாட்சிப் பத்திரத்தை வங்கிகள் இந்த வங்கியிடமிருந்து வாங்கிக்கொள்ளலாம். இதனைத் தொடர்ந்து சில இந்திய வணிக வங்கிகளும் இம் முறையினைப் பின்பற்றி உள்ளன.

வணிக வங்கிகள் காலக் கடன் வசதியை சிறிய தொழில் நிறுவனங்களுக்கு தொழில் விரிவமைப்பு, நவீனப்படுத்துதல் ஆகியவைகளுக்குத் தேவையான நடைமுறை மூலதனத்தை அளிக்கின்றது. தொழில் நுணுக்கம் தெரிந்தவர்கள், தொழில் அதிபர் ஆகியோருக்கும், தொழில்பேட்டையில் தொழில் நிறுவனங்கள் நிலம் வாங்கி, பட்டறை அமைக்கவும் இந்திய வணிக வங்கிகள் கடனுதவி செய்கின்றன.

வாடிக்கைக்காரர்களுக்கு வசதி அளிக்கும் வகையில் கடன் அட்டைகளை (Credit Cards) சில வணிக வங்கிகள் வெளியிட்டுள்ளன. இந்த அட்டை பெற்றிருந்தால் அதில் குறிப்பிட்டிருக்கும் அதிகபட்சத் தொகைவரை இந்த வங்கியின் எக்கிளையிலும் காசோலை விடுத்து பணம் பெற்றுக்கொள்ளலாம்.

பயணக் காசோலை (Traveller's Cheques) பல வணிக வங்கிகளால் வெளியிடப்படுகின்றன. தொழில் மற்றும் யாத்திரை நிமித்தம் பல இடங்களுக்குப் பயணம் செய்வோர் இக் காசோலையை இதனை வெளியிட்டுள்ள வங்கியின் எந்தக் கிளையில் வேண்டுமானாலும் கொடுத்து பணத்தினைப் பெறலாம். திருடர் பயமேதும் இல்லாமல் நிம்மதியாகப் பயணம் செய்ய இக் காசோலைகள் வகை செய்கின்றன. ஸ்டேட் வங்கியின் பயணக் காசோலை பிரசித்தி பெற்றது. இக் காசோலைகள் பல ரூபாய் மதிப்புக்களில் வெளியிடப்படுகின்றன. மற்றும் சில வணிக வங்கிகளும் பயணக் காசோலையை விற்பனை செய்கின்றன.

சில வங்கிகள் பரிசுக் காசோலைகள் (Gift Cheques) வெளியிடுகின்றன. திருமணம் மற்றும் சில முக்கிய நிகழ்ச்சிகளுக்குப் பரிசு அளிக்கும் வண்ணம் அழகிய அட்டையும் மேலுரையும் கொண்டுள்ள பரிசுக் காசோலையை குறிப்பிட்ட நாட்களுக்குப் பிறகு அதே மதிப்பிற்கு ரொக்கம் அந்த வங்கியின் எக் கிளையினின்றும் பெறலாம். சில வங்கிகள் இத்துடன் பரிசளிப்புத் திட்டத்தையும் இணைத்துள்ளன.

பூட்டகப்பெட்டி, இரவு காப்புப்பணி (Lock Box and Night Safe Service)யின்படி சில வணிக வங்கிகள் தங்கள் வாடிக்கைக்காரர்கள் இரவில் தங்கள் மதிப்புயர்ந்த பொருள்களை ஒரு பெட்டகத்தில் வணிக வங்கியிடம் வைத்துவிட்டு மறுநாள் காலை பெற்றுக்கொள்ளும் வசதியினை அளித்துள்ளன.

### வணிக வங்கிகளின் சொத்துக்கள்–பொறுப்புகள்

#### பொறுப்பு அமைப்பு

**மூலதனமும் காப்பு நிதியும்:** இது கடன் கொடுத்தோருக்கு ஓரளவு உத்திரவாதமாகவும், கடன் வாங்கி முதலீடு செய்யத் தேவையில்லா சில முதலீட்டிற்கும் முக்கியமாக அமைகின்றது. மொத்த பொறுப்பில் இவற்றின் பங்கு 1906ஆம் ஆண்டு 18 சதவீதமாகவும், 1914ஆம்ஆண்டு 14 சதவீதமாகவும் 1948ஆம் ஆண்டு 4·2 சதவீதமாகவும் 1954ஆம் ஆண்டு 5·18 சதவீதமாகவும் அமைந்திருந்தது. 1962ஆம் ஆண்டு இச் சதவீதம் பின்பட்டியலில் காணப்பட்ட பெரிய வங்கிகளுக்கு 3 சதவீதமும் பின்பட்டியலில் காணப்பட்ட சிறிய வங்கிகளுக்கு 4 சதவீதமுமாய் இருந்தது. இச்சதவீதம் குறைந்துகொண்டே வந்துள்ளதற்கு வைப்பு அதிகரிப்பும், காப்பு நிதிக்கு வணிக

அளவு ஒரே அளவை இலாபத்திலிருந்து ஒதுக்குவதே காரண மாகும்.

**வைப்புப் பொறுப்பு:** இது பொறுப்பு பக்கத்தில் முக்கியமான தொரு பதிவாகும். வணிக வங்கிகள் வைப்புத் திரட்டலில் அதிக அக்கரைகாட்டி வருகின்றன. எனினும், காசோலைப் பழக்கம் இன்னும் பரவாததாலும் தபால் சேமிப்புக் கணக்கு, நாட்டு வங்கியர்கள், பொதுக் கம்பெனிகள் ஆகியவை வணிக வங்கிகளுடன் போட்டி போடுவதால் கணிசமான வைப்புத் தொகை வங்கிகளுக்குவந்து சேருவது இல்லை.

### சொத்துக்கள்

#### கடன்களும் முன் பணமும்

மொத்த பொறுப்பிற்கு கடனின் மடங்கு இந்தியாவில் மிகக் குறைவாகவே உள்ளது. போதிய கடன் தகுதி உடைய கடன் பெறக்கூடியவர்கள் இல்லாதது ஒரு காரணமாக அமை கிறது. வணிக வங்கிகள் தங்கள் நிதியை போதிய பாதுகாப்பு இன்றி கடனளிக்க முடியாது. தேவையான ஈடோ, உத்திர வாதமோ அளிக்க இயலாததால் கடனளிக்க இயலாத நிலை வணிக வங்கிகளுக்கு ஏற்படுகின்றன. மேலும், வணிக வங்கிகள் பொதுவாக குறுகிய காலக் கடன்களையே அளிக்கும். இந்தியாவில் விசித்திரமாக நீண்ட கால வட்டி, குறுகிய கால வட்டியைவிடக் குறைவாக உள்ளதால் தொழிற்சாலைகள் வணிக வங்கிகளிடம் குறுகிய காலக் கடனைப் பெறுவதைவிட நீண்ட காலக் கடனை பணச் சந்தையில் பெறுவதை விரும்பு கின்றன.

வணிக வங்கிகள் கடன் தொகையை, கடன், முன்பணம், அதிகப்பற்று, ரொக்கப்பற்று, சாவிக் கடன் ஆகிய முறைகளில் அளிக்கின்றன.

இவைகளைத் தவிர பணச் சந்தைக்கு கீழ்க்கண்ட கடன்களை வணிக வங்கிங்கள் அளிக்கின்றன.

1. உண்டியல் சந்தைக்கு அழைப்புக் கடன்.
2. பங்கு சந்தைக்கு அழைப்பு, மற்றும் காலக் கடன்.
3. வங்கிகளுக்குள் கடனளிப்பு.

இந்தியாவில் பெரிய உண்டியல் சந்தை இன்னும் ஏற்படுத் தப்படவில்லை. ரிசர்வு வங்கியின் முயற்சியால் ஓரளவு சிறிய

உண்டியல் சந்தை நடைமுறையில் இருக்கின்றது. உண்டியல் சந்தை சரிவர ஏற்படாததற்குக் காரணம் வியாபாரிகள் உண்டியல் எழுதும் பழக்கத்தைவிட வணிக வங்கிகளிடமிருந்து அதிகப்பற்று, கடன் ஆகியவைகள் பெறுவதில் மிகுந்த விருப்பம் காண்பிப்பதேயாகும்.

அரசு வெளியிடும் கருவூலச்சீட்டு உண்டியல் சந்தை இல்லாத பெரும் குறையை ஓரளவு பூர்த்தி செய்கின்றது. இச் சீட்டுகளின் எளிவரல் தன்மையினாலும், அரசு உரிமையின் காரணமாகவும் வணிக வங்கிகள் தங்கள் உபரி ரொக்கத்தை முதலீடு செய்ய இதனை பெரிதளவு விரும்புகின்றனர்.

பங்கு சந்தைக்கு வணிக வங்கிகள் அளிக்கும் கடன் தொகை மிகக்குறைவே. அமெரிக்க நாட்டில் வணிக வங்கிகள் பங்குச் சந்தைககு அதிக அளவில் வேண்டும்போது திரும்பப் பெற்றுக்கொள்ளக்கூடிய கடனை அளிக்கின்றன.

வங்கிகள் தங்களுக்குள் கடன் அளித்துக்கொள்ளுகின்றன. வாராந்தர குறைந்த பட்ச ரொக்கக் காப்பு சட்டபூர்வமாக வைத்திருக்கவேண்டியதைவிட குறைவாக இருக்குமேயானால் இக்குறைவை நிறைவு செய்ய மற்ற வணிக வங்கிகளிடமிருந்து கடன் பெருகின்றன.

முதலீடுகள்

இந்தியாவில் வணிக வங்கிகளுக்கு உண்டியலிலேயோ, பணச் சந்தையிலேயோ முதலீடு செய்ய போதிய வாய்ப்பு இல்லாததால் அரசுப் பத்திரங்களில் பெருமளவு முதலீடு செய்கின்றன.

1960ஆம் ஆண்டுக் கடைசியில் வணிக வங்கிகளின் மொத்த சொத்துகளில் 25 சதவீதம் அரசு பத்திரங்களில் முதலீடு செய்துள்ளன.

ரொக்க இருப்பு

இந்திய வணிக வங்கிகள் அதிக ரொக்கக் கை இருப்புடன் தொழில் நடத்துகின்றன. இங்கிலாந்தில் வைப்புகளில் சற்றேரக்குறைய 10 சதவீதமும் அமெரிக்காவில் 15 சதவீதமாகவும் அமைகின்றது. முதலீடு செய்ய நல்ல வாய்ப்புக்கள் இல்லாததால் அதிக ரொக்க இருப்பை வணிக வங்கிகள் வைத்திருக்க வேண்டியுள்ளது.

**அட்டவணை 10.**

ஏப்ரல் 26, 1974 அன்று எல்லா இந்திய வங்கிகளின் இருப்பு நிலைக் குறிப்பு*

| பொறுப்புகள் | ரூ. கோடியில் | சொத்துக்கள் | ரூ. கோடியில் |
|---|---|---|---|
| 1. தேவைப் பொறுப்பு | | 1. ரொக்கம் | 258.36 |
| (அ) தேவை வைப்புகள் | 194.11 | ரிசர்வு வங்கியிடம் ரொக்கம் | 522.63 |
| i வங்கிகளிடமிருந்து | | நடப்புக் கணக்கில் மற்றைய | |
| ii மற்றவைகளிடமிருந்து | 4443.69 | வங்கிகளிடம் | 122.44 |
| (ஆ) (i) வணிகவங்கிகளிடமிருந்து கடன் பெற்றமை | 96.96 | | |
| (இ) மற்றவை | 439.15 | 2. அழைப்புக் கடன் | 32.07 |
| 2. காலப் பொறுப்பு | | | |
| (அ) கால வைப்புகள் | 83.37 | 3. அரசுப் பத்திரங்களில் முதலீடு | 2400.06 |
| i வங்கிகளிடமிருந்து | | | |
| ii மற்றவைகளிடமிருந்து | 5895.17 | | |
| (ஆ) வங்கிகளிடமிருந்து கடன் பெற்றமை | 17.71 | 4. உண்டியல் கழிவுப்பாடு (உள்நாடு மற்றும் வெளிநாடு) | 1457.59 |
| (இ) மற்றவை | 39.94 | | |
| 3. ரிசர்வு வங்கியிடமிருந்து கடன் பெற்றமை | 333.18 | 5. கடன் (கடன், ரொக்கக் கடன், அதிகப் பற்று, மற்றைய வங்கிகளிடமிருந்து சேரவேண்டியவை) | 6082.39 |
| 4. ஸ்டேட் வங்கி/குறிப்பிடப்பட்ட வங்கி, மாநில அரசிடமிருந்து கடன் | 90.80 | | |

*Banking in India, S.G. Panandikar & Dr. M Mithani. P. 228.

**நிலைச் சொத்துக்கள்**

மனை, கட்டடம் போன்ற வங்கிக்குச் சொந்தமான நிலைச் சொத்துக்கள் சொத்தாக அமைகின்றது. இச் சொத்துக்களை குறைத்து மதிப்பீடு செய்து ரகசிய காப்பாக (Secret reserve) வைத்திருக்க சில வணிக வங்கிகள் விரும்புகின்றன.

இந்தியாவிலுள்ள எல்லா வணிக வங்கிகளின் மொத்த இருப்பு நிலைக் குறிப்பு ஏப்ரல் 26, 1974ஆம் ஆண்டு அன்று இருந்த நிலை அட்டவணை 10-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்திய வணிக வங்கள் வெகு காலம் வரை கீழ்க்கண்ட குறைபாடுகளுடன் தொழில் நடத்தி வந்தன.

1. பெரிய வங்கிகள் தேசியமயமாக்கப்படுமுன் அரசு மற்றும் நகரசபை, துறைமுக அதிகாரிகள் ஆகியவைகளிடமிருந்து போதிய ஊக்கம் பெறவில்லை.

2. வெகு காலம்வரை அந்நியச் செலாவணித் தொழிலை செய்ய அனுமதிக்கப்படவில்லை.

3. நாணய மாற்று வங்கிகள், இந்திய வணிக வங்களுக்குப் பெரிய போட்டி வங்கிகளாக இயங்கி வந்துள்ளன.

4. இந்திய விடுதலைக்கு முன் இந்தியாவின் தொழில், வியாபாரம் இந்தியர் அல்லாதாரால் பெருமளவு கட்டுப்படுத்தப் பட்டு வந்தது. அவர்கள் தங்கள் நாட்டு வங்கிக்கே ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தனர்.

5. இம்பீரியல் வங்கி, வணிக வங்கியாயினும் மைய வங்கிப் பணிகள் சில செய்ய அனுமதிக்கப்பட்டது. இதன் சிறப்புத் தன்மையால் மற்றைய வணிக வங்கிகளின் வளர்ச்சி தடைபட்டது.

6. பல வங்கி முறிவுகள், இந்திய வணிக வங்கிகளின்மீது வாடிக்கைக்காரர்கள் கொண்டிருந்த நம்பிக்கையைக் குறைத்தது.

7. வங்கி அலுவலர்களுக்கும் நிருவாகிகளுக்கும் அடிக்கடி ஊதியம் பற்றி எழுந்த சர்ச்சை காரணமாக வேலைநிறுத்தங்கள்,

வேலையில் கவனமின்மை ஆகியவைகள் ஏற்பட்டு வங்கி வளர்ச்சி தடைப்பட்டு வந்தது.

8. வணிக வங்கிகளுக்குள் தொழில் ரீதியான ஒற்றுமை உணர்ச்சியும் கட்டுப்பாடும் இல்லாமல் போட்டி மனப்பான்மை நிலவி வந்தது. கிளை திறப்பதில் ஒரே இடத்தில் பல வங்கிகள் போட்டி போட்டு திறக்கலாயின.

9. வங்கி சம்மந்தப்பட்ட ரசீதுகள், கச்சை புத்தகம், நமூனுக்கள் ஆங்கிலத்தில் இருப்பதால் பலர் வங்கிக் கணக்கு ஏற்படுத்திக்கொள்ளவில்லை.

இந்திய வணிக வங்கிகள் சிறப்பாகச் செயலாற்ற கீழ்க் கண்ட மாறுதல்கள் தேவைப்படுகின்றன:

1. கூட்டுறவுத் துறைக்கு அளிப்பதுபோல் எல்லா ஊக்கமும் அரசு வணிக வங்கிகளுக்கும் அளிக்கவேண்டும். 14 வங்கிகள் தேசியமயமாக்கப்பட்ட பின் இவ் வாதத்தின் முக்கியத்துவம் பெரிதளவும் குறைந்துள்ளது. எனினும், தேசிய மயமாக்கப்படாத வங்கிகள் பொருத்தமட்டில் அரசு ஊக்க மளிக்க முன் வரலாம்.

2. வங்கிகளுக்குள் நிலவும் போட்டி மனப்பான்மை மாற வேண்டும். தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளைப் பொருத்த மட்டில் ஓரளவு போட்டி மனப்பான்மை நீங்கியுள்ளது. ரிசர்வு வங்கியும் புதிய கிளைகள் திறப்பதில் போட்டியை நீக்கி வங்கிகள் கிளை திறக்க உரிமம் வழங்குகின்றது.

3. பின் பட்டியலில் காணப்படாத வங்கிகள் மற்றைய வங்கிகளுடன் தங்களை இணைத்துக்கொண்டு தொழில் செய்தல் சாலச் சிறந்ததாக அமையும்.

4. பிராந்திய மொழியில் வங்கிக்கான அனைத்து ரசீது, காசோலை முதலியன ஆக்கப்படல் வேண்டும்.

5. நிருவாகத்தில் திறமையும், சிக்கனத்தையும் கடைப் பிடிக்கவேண்டும்.

6. தகுதி வாய்ந்த, திறமை மிக்கவர்களையே அலுவலர் களாக நியமிக்க வேண்டும். வங்கித்துறை வேலைக் குழு (Banking Service Commission) அமைத்து இனி தேசிய

மயமாக்கப்பட்ட வங்கியில் வேலை அளிக்க இக் குழுவே முடிவு செய்யும்.

7. பல வங்கிகளில் தேவைக்கு அதிகமான சிப்பந்திகளும், அதிக நேர ஊதியமும் (Overtime remuneration), வங்கியின் இலாபத்தைக் குறைக்கின்றது. இது தவிர்க் கப்படல் வேண்டும்.

8. கிராமங்களில் கிளைகளைத் திறப்பதுடன், வேலை செய்யும் நேரங்களையும் மாற்றி அமைக்கலாம். சோதனைக்காக சில வங்கிகள் இரவு, பகல் முழு நேரமும், ஞாயிற்றுக் கிழமையன்றும் செயல்பட ஆரம்பித்துள்ளன.

9. கடன் அளிக்கும் முறையில் மேலை நாடுகளில் கண்டுள்ள மாற்றங்களேபோல் புதுமையும், தைரிய நோக்கும் இந்திய வணிக வங்கிகள் கைக்கொள்ள வேண்டும்.

இந்திய வங்கியர்கள் மாநாடு, 1962 (Indian Banker's Seminar) கீழ்க்கண்ட பரிந்துரைகளைச் செய்துள்ளது.

1. நாட்டு வங்கியர் தற்போது செய்துவரும் தொழில் முழுவதையும் வணிக வங்கிகள் எடுத்து அவர்களை நீக்க வழி செய்யவேண்டும்.

2. படக்காட்சி, வானொலி மூலம் வங்கியில் கணக்கு வைத்துக் கொள்ளும் நன்மை பற்றி பொது மக்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.

3. புதிய பணிகளைக் கொடுத்து ஒவ்வொரு வங்கியும் வாடிக்கைக்காரர்களின் எண்ணிக்கையை அதிகரிக் வேண்டும்.

4. அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள் ஊதியங்களை காசோலை மூலம் அளிக்கும் பழக்கத்திற்கு ஊக்க மளிக்கவேண்டும்.

5. ரிசர்வு வங்கி 180 நாட்களில் முதிர்வு அடையக்கூடிய கருவூலச் சீட்டுக்களை வெளியிடவேண்டும்.

6. ஆண்டின் சுறுசுறுப்பான காலத்தில் (busy season) வைப்புக்கு கடன் அளிப்பு அதிக சதவீதத்தில் இருத்தலை குறைபாடாக எண்ணக்கூடாது.

7. வங்கிகளுக்குள் ஒற்றுமை உணர்ச்சி ஏற்படவேண்டும்.

8. வங்கிகள் ஒன்று சேர்ந்து முக்கியமான வாடிக்கைக் காரர்கள், பெரிய வணிக நிறுவனங்கள் ஆகியவை பற்றிய கடன் தகுதி நிலைபற்றிய செய்திகளை சேமிக்க வேண்டும்.

9. தள்ளுபடி சந்தை, ஏற்புச்சந்தை ஆகியவைகளை ஏற்படுத்தி நல்ல உண்டியல் சந்தையை ஏற்படுத்த வேண்டும்.

10. ஏற்றுமதிக் கடன் அளிப்பில் வணிக வங்கி அதிக அக்கறை காட்ட வேண்டும்.

11. கணக்குப்பதிவு மற்றும் வங்கி நடத்துதல் ஆகியவற்றில் அலுவலக இயந்திரங்கள் ஓரளவேனும் பயன்படுத்த வேண்டும்.

மேலும் வணிக வங்கிகள் வாடிக்கைக்காரர்களுக்கு அளிக்கும் தொண்டு சீரியதாக அமைந்தாலன்றி வங்கியின் வளர்ச்சி பெரிதளவாக முடியாது.

பொதுவாக வாடிக்கைகாரர்கள் இந்திய வணிக வங்கிகளில் கீழ்க்கண்ட இடர்ப்பாடுகளை அடைவதாக வங்கிக்குழு 1972-ல் கூறியுள்ளது:

1. பணம் கட்டவோ, காசோலைக்குப் பணம் பெறவோ நீண்ட நேரம் ஆகின்றது. பல நேரம் வரிசையில் காத்துக் கிடக்க வேண்டியுள்ளது. மேலை நாடுகளில் வங்கிகள் சில நொடிகளே எடுத்துக் கொள்ளும் இப்பணிக்கு இந்திய வங்கிகள் மணிக்கணக்கில் எடுத்துக் கொள்கின்றன.

2. காசோலை, உண்டியல்கள் வசூலிக்கக் கொடுத்தால் பல நாட்கள் ஆவதோடு பல நேரங்களில் வசூலிக்கப்பட்ட பின்னும் வாடிக்கைக்காரர்களுக்கு சில வணிக வங்கிகள் தெரிவிப்பதில்லை.

3. கச்சைப் புத்தகத்தில் பதிவு செய்து உடனடியாகத் தரப்படுவதில்லை.

4. அதில் கண்டிருக்கும் பதிவு தெளிவாக இல்லாததால் வாடிக்கைக்காரர்கள் அதினின்று ஒன்றும் அறிந்து கொள்ள முடிவதில்லை.

வங்கியில் காத்திருக்கும் நேரத்தை குறைக்கும் வண்ணம் விசாரணை (Enquiry) அலுவலர் ஒருவர் வைக்கப்படுவதுடன், அலுவலர்கள் வாடிக்கைக்காரர்களிடம் நல்ல முறையில் அணுக வேண்டும்.

காசோலை, உண்டியல்கள் வசூலான உடன் வாடிக்கைக் காரர்களுக்கு இது பற்றித் தெரிவிக்கப்பட வேண்டும். ஏழு நாட்களுக்குள் வசூலுக்கு அனுப்பிய காசோலை வசூல் செய்யப் படாமலும், மறுக்கப்படாமலும் இருந்தால் வசூலிக்கும் வங்கி வாடிக்கைக்காரர்களின் கணக்கில் வரவு வைத்து அப் பணத்தினை உடனடியாகப் பெற வாடிக்கைக்காரருக்குப் பயனளிக்க வேண்டும்.

பாஸ் புத்தகங்கள் உடனுக்குடன் எழுதப்பட்டு வாடிக்கைக் காரர்களுக்குத் திருப்பித் தருவதுடன் அதில் கண்டுள்ள பதிவுகள் புரியும்படி இருத்தல் வேண்டும்.

வங்கியில் கால தாமதம் ஆவற்கு முக்கிய காரணம் ஒவ்வொரு ரசீது, காசோலை, பணவிடை ஆகியவைகளில் முதல் நிலை ஆய்வரும், வங்கி மேனேஜர் அல்லது கணக்கர் ஆகிய இருவருடைய கையொப்பம் தேவைப்படுவதேயாகும். இதனை நீக்கி ரூ. 5,000 அல்லது ரூ. 10,000 வரை பணவிடை விடுக்க முதல் நிலை ஆய்வருக்கே உரிமை வழங்கப்படலாம். இதே போல் பணம் கட்டும்போது ரசீதிலுள்ள மறு பாதிச் சீட்டை கருவூலரே அளிக்கலாம். வேண்டுமென்றால், இக் கருவூலர் அருகில் மற்றொரு எழுத்தர் தன் புத்தகத்தில் பணம் கட்ட வந்த ரசீதுகளைப் பதிவு செய்து கருவூலரிடம் கொடுத்தால் அகத் தணிக்கை ஏற்படும்.

கூறுவான் முறை (Teller System) எல்லா வணிக வங்கி களிலும் அமுலுக்குக் கொண்டு வரல் வேண்டும். இது பணம் உடனடி கொடுக்கம் முறை. கூறுவான், வாடிக்கைகாரர்களின் மாதிரிக் கையெழுத்தை வைத்திருப்பான். அவனுக்கு ஓதுக்ககப்

பட்டுள்ள வாடிக்கைக்காரர்களின் கணக்கை அவன் முன் அறிவான். குறிப்பிட்ட அளவு காசோலைக்கு அவனே உடன டியாக ரொக்கம் அளித்துவிடுவான். கூறுவான் முறை அமுலில் இல்லாத வங்கிகளில் முதல் நிலை ஆய்வர் ரூ. 5,000 வரை காசோலைக்கு பணமளிக்க உத்திரவு பெறலாம்.

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் வாடிக்கைக்காரர் களுக்கு அதிக சேவை அளிப்பதினை முக்கிய கொள்கையாக ஏற்கும் என்று அரசு தேசியமயமாக்கியபோது கூறியது. எனினும், இவ்வங்கிகளோ, மற்றைய வங்கிகளோ பெரு மளவில் தங்கள் தொண்டினை உயர்த்தவில்லை. இவைகள் செவ்வனே அளிக்கப்பட்டால் இந்திய வணிக வங்கிகளின் வளர்ச்சிக்கு மிகவும் பயன்படும்.

## பாட நூல்கள்


1. கு. ஆளுடையப்பிள்ளை — இந்திய வங்கியல்.
2. Report of the Banking Commission, 1972.
3. S. G. Panandikar — Banking in India.

# 19. நாணய மாற்று வங்கிகள்

(Foreign Exchange Banks)

நாணய மாற்று வங்கிகள் தங்கள் தலைமை அலுவலகத்தை வெளிநாட்டில் கொண்டுள்ளது. இந்தியாவில் இவ்வங்கிகள் அயல் நாட்டு வணிகத்தை ஒட்டிய நடவடிக்கைகளையும், அயல் நாட்டுச் செலாவணி வாங்கல், விற்றல் போன்ற செயல் களில் ஈடுபடுகின்றன. சில வங்கியல் நிபுணர்கள் இவ்வங்கிகளை நாணய மாற்று வங்கிகள் என்று குறிப்பிடுவதைவிட அயல் நாட்டு வங்கிகள் என்றே குறிப்பிடல் வேண்டும் என்று கருது கின்றனர். ஏனெனில், அயல் நாட்டு வங்கிகள் பிற வணிக வங்கிகள் போல எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள் வதுடன், உள் நாட்டு வணிகத்திற்கும் நிதி உதவி வழங்கு கின்றன. இதேபோல் இந்திய வணிக வங்கிகளும் அந்நியச் செலாவணி மாற்றித்தரும் தொழிலினைச் செய்கின்றன. 1969ஆம் ஆண்டு ஜூலை மாதம் பெரும் பதினான்கு வணிக வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டபோது அயல் நாட்டு வங்கிகளை அரசு தேசியமயமாக்கவில்லை.

இந்திய உள் நாட்டு, வெளி நாட்டு வியாபாரமும் இதில் கிடைக்கக்கூடிய நல்ல இலாபமும் பல நாட்டு வங்கிகளும் இந்தியாவில் வங்கித் தொழில் செய்ய வெகுகாலத்திற்கு முன்பே இந்தியாவில் தங்கள் கிளைகளைத் திறந்தன.

நாணய மாற்று வங்கிகளை இரண்டாகப் பிரிக்கலாம்.

1. கணிசமான தங்கள் தொழிலை இந்தியாவில் செய்யும் வங்கிகள், இவை தங்களுடைய வைப்புகளில் 25 சதவீதத்திற்கு மேல் இந்தியாவில் பயன்படுத்துபவன.

2. வெளி நாட்டில் தங்கள் தொழிலின் பெரும் பகுதியைச் செய்யும் பெரிய வங்கிகளின் முகவராகத் தொழில் செய்யும் வங்கிகள். இவை தங்கள் வைப்புகளில் 25 சதவீதத்திற்கும் குறைவாக இந்தியாவில் தொழிலில் ஈடுபடுத்துபவன.

இவ் வங்கிகளின் முதல் வகையைச் சேர்ந்த வங்கிகள் சார்ட்டர்ட் வங்கி (Chartered Bank), நேஷனல் கிரிண்ட்லேஸ் வங்கி (National Grindlays Bank), மெர்க்கண்டைல் வங்கி (Mercantile Bank). ஈஸ்டர்ன் வங்கி (Eastern Bank) ஆகும். இரண்டாவது வகையைச் சேர்ந்த வங்கிகள் அமெரிக்கன் எக்ஸ்ப்ரெஸ் கம்பெனி ஆகும்.

1973ஆம் ஆண்டு இறுதியில் 14 அயல்நாட்டு வங்கிகள் 130 கிளைகளைக் கொண்டு இந்தியாவில் செயல்பட்டு வந்தன. இவைகளின் மொத்த வைப்பு ரூ. 771.49 கோடியாகவும், இவைகளின் கடன் மற்றும் உண்டியல் கழிமானம் ரூ. 233.19 கோடியாக இருந்தது.

இந்தியாவில் செயலாற்றி வரும் அயல் நாட்டு வங்கிகளின் பெயர்கள் பின்வருமாறு :—

1. அல்ஜிமின் பாங்க் நெதர்லண்ட், N.V.
2. அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் இண்டர்நேஷனல் பாங்கிங் கழகம்.
3. பாங்க் ஆஃப் அமெரிக்கா நேஷனல் டிரஸ்ட் அண்டு சேவிங்ஸ் அசோசியேஷன்.
4. பாங்க் ஆஃப் டோக்கியோ.
5. பாங்க் நேஷனல் டி பாரிஸ்.
6. பிரிட்டிஷ் பாங்க் ஆஃப் தி மிடில் ஈஸ்ட்.
7. சார்டர்ட் பாங்க்.
8. ஈஸ்ட்டர்ன் பாங்க்.
9. ஃபஸ்ட் நேஷனல் சிட்டி பாங்க்
10. ஹாங்காங் அண்டு ஷாங்காய் பாங்கிங் கழகம்
11. மெர்க்கண்னடல் பாங்க்
12. மிட்சுயி பாங்க்
13. நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்கு.

பாங்க் ஆஃப் சைனு சில ஆண்டுகளுக்குமுன் மூடப்பட்டது. ஹபீப் பாங்க் லிமிடெட், நேஷனல் பாங்க்ஆஃப் பாகிஸ்தான் லிமிடெட் என்ற இரு பாகிஸ்தானிய வங்கிகளும்

எதிரிச் சொத்துக் காப்பாளர் (Customes of enemy Property) கையில் 1965ஆம் ஆண்டுமுதல் இருந்து வருகிறது.

### வங்கியின் செயல்பாடு

இவ்வங்கிகளின் முக்கியப் பணி இந்தியாவில் அயல்நாட்டு வாணிபத்திற்கு நிதிக்கடன் அளிப்பதே. 9135ஆம் ஆண்டுவரை இம்பீரியல் பாங்குஆஃப் இந்தியா வெளிநாட்டு பணத்தில் பெறக் கூடிய உண்டியல்களில் தொழில் செய்ய அனுமதிக்கப் படவில்லை. அங்வங்கி தன் வாடிக்கைக்காரருக்குத் தேவை யான வெளி நாட்டுப் பணத்தினை அனுப்ப மட்டில் உரிமை பெற்றிருந்தது. இந்திய வணிக வங்கிகள் அந்நியச் செலாவணி வியாபாரம் செய்ய சட்டபூர்வமான தடையொன்றும் இல்லை. பல இந்திய வங்கிகள் இத் தொழிலைச் செய்ய முன் வரவில்லை. அலையன்ஸ் பாங்கு ஆஃப் சிம்லா, டாடா தொழில் வங்கி (இவைகள் இப்போது இல்லை) ஆகிய இந்திய வணிக வங்கி களும், சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா ஆகிய வங்கிகள் மட்டில் ஒரளவு நாணய மாற்றுத் தொழிலை செய்தன. சமீப காலமாக பின்பட்டியலில் கண்டுள்ள வணிக வங்கிகள் இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளில் தங்கள் முகவர் வங்கிகள் மூலமும், இலண்டன், ஆப்பிரிக்கா மத்தியக்கிழக்கு தூரக்கிழக்கு நாடுகளிலும் தங்கள் கிளைகளைத் துவக்கி நாணய மாற்றுத் தொழில் செய்து வருகின்றன. இந்தியா சுதந்திரம் பெறும்வரை நாணயமாற்றுத் தொழில் அந்நிய நாட்டு வங்கி களின் சர்வாதீனமாக இருந்துவந்தது. இந்திய வணிக வங்கிகள் அந்நியச் செலாவணித் தொழிலை எடுத்து நடத்தாதற்குச் சில காரணங்கள் இருந்தன.

1. இந்திய வங்கிகள் அந்நிய நாட்டு வங்கிகளின் போட்டியைச் சமாளிக்க முடியவில்லை.

2. இந்திய வங்கிகள் இத்தொழிலில் ஈடுபட போதிய மூலதனம், வைப்பு, காப்பு நிதி ஆகியவைகள் இல்லை.

3. இந்திய வங்கிகளுக்கு வெளி நாடுகளில் கிளைகள் இல்லை.

4. வெளி நாடுகளினின்று பொருள்களை ஏற்றுமதி செய்யும் வணிகர்களும், வியாபார நிறுவனங்களும், இந்தியாவில் இறக்குமதி அல்லது ஏற்றுமதி செய்து வந்த வெளிநாட்டு நிறுவனங்களும், அந்நிய வங்கிகளை ஆதரிப்பதில் விருப்பம் கொண்டிருந்தனவே அன்றி சுதேசி வங்கிகளை விரும்பவில்லை.

இந்திய வங்கிகள் வெளிநாடுகளில் தங்கள் கிளைகளைத் திறக்காமைக்கு கீழ்க்கண்டவைகள் காரணமாகும்:

1. போதிய மூலதனம் இல்லாமை.

2. அனுபவமுள்ள அலுவலர்களும், நிர்வாகிகளும் இல்லாமை.

3. சில ஆண்டுகள் நட்டம் ஏற்பட்டு பிறகு தான் இலாபத்தை எதிர்பார்க்கலாம். இதனை ஏற்க இந்திய வங்கிகள் தயாராக இல்லை.

4. வெளிநாடுகளில் இவ்வங்கிகள் போதிய வைப்பினை திரட்ட இயலாது.

### அயல் நாட்டு வியாபாரமுறை

பொருள்கள் ஒரு நாட்டினின்று வேறொரு நாட்டிற்கு அனுப்ப பல சடங்குகள் உள்ளன. உள் நாட்டு வியாபாரம் போல் எளிதாக அமைவதில்லை. இறக்குமதியாளர் தமக்குத் தேவையான பொருள்கள் எந்த நாட்டில் எந்த நிறுவத்தினிடம் உள்ளது. என்பதினைத் தெரிந்து தன் தேவைப்பட்டியலை அனுப்பவேண்டும் (Indent). விளம்பரம் மூலமாகவும், அரசின் அயல் நாட்டு வாணிபத்துறையின் உதவியைக் கொண்டும் வெளிநாட்டு வியாபாரியைத் தெரிந்து கொள்ளலாம். தேவைப் பட்டியல் ஏற்றவுடன் ஒப்பந்தம் ஏற்படும். அது மாற்றக் குறிய தேவைப்பட்டியலாகவோ (Proforma indent) முடிவான தேவைப் பட்டியலாகவோ (Confirmatory indent) இருக்கலாம். முன் வகை தேவைப் பட்டியலாயிருந்தால் இறக்குமதியாளர் பிறகு தன் தேவைப் பட்டியலில் சிறிய மாறுதல்கள் செய்யலாம். பின்னதாயின் மாற்றம் ஏதும் செய்ய முடியாது. தேவைப் பட்டியலில் திறந்த தேவைப் பட்டியலாகவும் (open indent) மூடிய தேவைப் பட்டியலாகவும் (Closed indent) ஆகவும் இருக்கலாம். முதல் வகையில் இறக்குமதியாளர் தனக்கு எப் பொருள் எத்துணை அளவு தேவை எனக் குறிப்பிடுவாரே அன்றி அதன் தரம், எக் கம்பெனியால் தயாரித்ததாய் இருத்தல் வேண்டும் என்பதனைப் பற்றி கட்டாயம் ஏதும் இல்லை. ஏற்றுமதியாளர் அப்பொருளை எங்கிருந்தேனும் வாங்கி அனுப்பலாம். மூடிய தேவைப்பட்டியலில் தரம், கம்பெனி, மற்றைய சிறப்பு அம்சங்கள் குறிப்பிடப்பட்டு அதுபோன்ற பொருளையே ஏற்றுமதியாளர் அளிக்கவேண்டும்.

பொருளுக்கான தேவைப்பட்டியல் வந்தவுடன் ஏற்றுமதியாளர் பொருள்களைத் தயார் செய்வதுடன் பல முக்கியமான கப்பல் பத்திரங்களைத் தயார் செய்யவேண்டும். இவைகள் கீழ்க்கண்டனவாகும்:

1. வியாபார இடாப்பு (Commercial invoice).
2. கான்சுலர் இடாப்பு Consular invoice).
3. கப்பல் ரசீது (Bill of lading).
4. உற்பத்தி அத்தாட்சிப் பத்திரம் (Certificate of origin).
5. கட்டுமானம் பற்றிய அத்தாட்சி (Certificate of Packing).
6. கப்பல் காப்புப் பத்திரம் (Marine Insurance Policy).
7. மாற்று உண்டியல் (Bill of Exchange).

வியாபார இடாப்பு, கடையில் நாம் ஏதேனும் பொருள் வாங்கினால் விற்பனையாளர் அளிக்கும் ரசீதுபோல் இருக்கும். இதில் விற்பவர் பெயர், வாங்குபவர் பெயர், விற்கும் பொருள், எண்ணிக்கை, விலை, தள்ளுபடி மொத்த விலை ஆகியவைகள் குறிப்பிடப்பட்டிருக்கும்.

கான்சுலர் இடாப்பு, இறக்குமதி செய்யும் நாட்டின் கான்சுலர் ஜெனரல் (இவர் அலுவலகம் ஏற்றுமதியாளர் நாட்டிலிருக்கும்) இப் பொருள்களை தன் நாட்டிற்கு இறக்குமதிசெய்ய தனக்கு ஆட்சேபனை ஏதும் இல்லை என்று தெரிவிக்கும் அத்தாட்சியாகும்.

கப்பல் ரசீது சரக்கை எந்தக் கப்பலில் அனுப்புகிறோமோ, அக்கப்பலின் தலைமை மாலுமியால் கொடுக்கப்படும். பொதுவாக மூன்று படிகள் கொடுக்கப்படும். பொருள் தன் வசம் வந்துள்ளது என்பதினைக் குறிக்கும் அத்தாட்சியாக இது விளங்குகின்றது. ஏற்றுமதியாளர் பெயர், இறக்குமதியாளர் பெயர் கப்பலின் பெயர், இறக்குமதி துறைமுகம், பொருள்பற்றி விவரிப்பு, அதன் மதிப்பு ஆகியவைகள் இந்த ரசீதில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

உற்பத்தி அத்தாட்சிப் பத்திரம் ஏற்றுமதி செய்யும் நாட்டின் அரசினால் இப் பொருள் எந்த நாட்டில் செய்யப்பட்டது என்பதினைக் குறித்து பத்திரம் வழங்கப்படும். இது

இறக்குமதித் துறைமுகத்தில் சுங்க அதிகாரிகளுக்கு இறக்குமதி சுங்கவரி எந்த வீதத்தில் விதிக்கவேண்டும் என்று அறிய தேவைப்படுகின்றது. ஒவ்வொரு நாட்டினின்று பெரும் பொருள்களுக்கு வெவ்வேறு வீதத்தில் சுங்கவரி விதிப்ப துண்டு.

கட்டுமானம் பற்றிய அத்தாட்சி, அனுப்பப்படும் பொருள்கள் நல்ல முறையில் உறையிலிட்டு கட்டுமானம் செய்யப்பட்டுள்ளன. கடல் பிரயாணத்தில் அவை கெட்டு விடாது என அங்கீகரிக்கப்பட்ட நிறுவனம் ஒன்றினல் அளிக்கப்படவேண்டும்.

கப்பல் காப்புப் பத்திரம் ஒரு காப்பீட்டுக் கழகத்தினின்று பெறவேண்டும். கடல் அபாயங்களில் நேரும் நட்டத்தை இக் காப்பீடு ஈடுசெய்யும். பொதுவாக அந்நிய நாட்டிற்கு அனுப்பப்படும் எல்லா பொருள்கள்மீதும் காப்பீடு செய்யப் படுகிறது. C.I.F. (Cost Insurance, Freight—விலை, காப்பீடு, எடுத்துச் செல்லும் செலவு) கொண்ட ஒப்பந்தத்தில் விற்பனை யாளர் கண்டிப்பாக கப்பல் காப்புப் பாத்திரம் எடுக்க வேண்டும்.

இத்துணை பத்திரங்களுடன் தனக்குச் சேரவேண்டிய பணத்திற்காக மாற்று உண்டியலை இறக்குமதியாளர் பேரில் ஏற்றுமதியாளா எழுதுவார். இந்த உண்டியலும் மற்றெல்லா பத்திரங்களும் கச்சாத்து உண்டியல் (Docuementary bill) எனப்படும்.

முன்பணமோ, சரக்கு வந்த உடன், உடனே பணமும் கொடுக்கமுடியாததால் உண்டியல் எழுதப்படுகின்றது. இவை அனைத்தும் ஒரு வங்கியின் வழியாக இறக்குமதியாளர் இருக்கும் இடத்திற்கு அனுப்பப்படும்.

உதாரணமாக ஏற்றுமதியாளர் இலண்டனிலும் இறக்குமதி யாளர் இந்தியாவில் சென்னையிலும் இருந்தால், ஏற்றுமதியாளர் இந்தியாவில் செய்யும் இங்கிலாந்து நாட்டு வங்கியின் மூலம் இவை அனைத்தையும் அனுப்புவார். அவ்வங்கி தன் சென்னைக் கிளைக்கு கச்சாத்து உண்டியலை அனுப்பும். இது கிடைத்தவுடன் சென்னையிலுள்ள நாணய மாற்று வங்கி இறக்குமதியாளருக்குத் தெரிவிக்கும். இவ் உண்டியல் ஏற்பின் பேரில் கொடுக்கப் படும் உண்டியல் (D/A – Documents on Acceptance) அல்லது பணம் கொடுத்தபின் தரப்படும் உண்டியலாகவோ (D/P – Documents on Payment) இருக்கலாம். முதல்வகை உண்டிய

லாயின் இறக்குமதியாளர் உண்டியலை ஏற்ற உடன் கப்பல் ரசீது அனைத்தும் அவரிடம் ஒப்படைக்கப்படும். இறக்குமதியாளர் பொருள்களை துறைமுகத்தினின்றுஎடுத்துக்கொள்ளலாம். ஆனால், இரண்டாவது வகையான (D/P) உண்டியலானல் உண்டியலை ஏற்றாலும், உண்டியலுக்கான பணத்தினை கொடுத்த பின்பே நாணய மாற்று வங்கியிடமிருந்து கப்பல் ரசீதுகளைப் பெறலாம். இது இறக்குமதியாளருக்கு வசதி அளிக்கும் வகையில் அமையாத வழியாகும்.

நாணய மாற்று வங்கிகள் மேலே விவரித்த இருவகைகளைக் கொண்டும் இந்திய வணிகர்களுக்கும், மேலை நாட்டு வணிகர் களுக்கும் பாரபட்சம் காட்டி வந்தனர்.

ஏற்பின்பேரில் கொடுக்கப்படும் உண்டியல் கீழ்க்கண்ட வர்களுக்கு மட்டும் கொடுக்கப்பட்டது:

1. தாங்கள் நாட்டினின்று வந்து இங்கு வியாபாரம் செய்பவர்கள், அவர்களுடைய நிறுனங்கள் ஆகியோருக்கு.

2. லண்டன் மாநகர பணச்சந்தையில் இவர் கடன்நிலை பற்றி தெரிந்திருக்க வேண்டும் (வெள்ளைக்காரர்கள் அல்லது அவரது நிறுவனங்கள்).

3. இந்திய வியாபாரியாயிருந்தால் லண்டன் பணச் சந்தையில் இவர் பற்றி தெரிந்திருக்கவேண்டும் (இவ்வகைப் பட்டவர் மிகச்சிலரே—வெள்ளையர் கம்பெனியின் இந்திய முகவர்கள்).

மற்றைய எல்லா இறக்குமதியாளர்களுக்கும், அதாவது இந்தியர், இந்திய இறக்குமதி கம்பெனிகள்பேரில் பணம் கொடுத்தபின் தரப்படும் உண்டியல் மட்டுமே எழுதப்பட்டது.

மற்றும் இந்த அந்நிய வங்கிகள் பல விதத்தில் இந்தியர் களையும், இந்திய வியாபார நிறுவனங்களையும் புறக்கணித்து வந்தனர்.

1. எல்லா உண்டியல்களையும் பவுண்டு நாணய மதிப்பிலேயே எழுதப்பட்டு வந்தன.

2 இவ் உண்டியல்களை லண்டன் பணச் சந்தையில்தான் கழிவுப்பாடு செய்து வந்தனர்.

3. மிக விசித்திரமாக இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யும் பொருள்களுக்கான உண்டியல்களையும் பவுண்டு நாணயத்தில் எழுதவேண்டும் என்று கட்டாயப் படுத்தி இந்த உண்டியல்கள் இந்திய பணச் சந்தைக்கு கழிமானத்திற்கு வராமல் செய்தனர்.

4. தங்கள் அலுவலர்கள் அனைவரையும் வெளிநாட்டினராகக் கொண்டிருந்தனர். இந்தியர்களை வேலையில் எடுத்துக் கொள்ளவில்லை.

5. இந்திய வியாபார நிறுவனம் பற்றி சரியான தகவல்கள் தராததோடு இவர்கள் பணநிலை பற்றி தவறான செய்திகளையும் கொடுத்து வந்தனர்.

6. இந்தியாவில் அதிக வைப்பினைப் பெற்று, இதனை வெளி நாடுகளில் பயன் படுத்தி வந்தனர்.

7. மிகக் குறைவான ரொக்க இருப்புடன் தொழில் செய்து வந்தனர் (இதுபற்றிய பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது).

8. உள் நாட்டு வியாபார நிதி அளிப்பிலும் இந்திய வங்கி களுடன் பெரும் போட்டி செய்ய ஆரம்பித்தனர்.

9. ரிசர்வு வங்கியின் கட்டுப்பாடு இந்திய வணிக வங்கியின் பேரில் அதிகமாக இருந்ததே தவிர நாணயமாற்று வங்கிகள் கட்டுப்பாடுகளுக்கு அப்பால் இயங்கி வந்தன.

10. நாணயமாற்று வங்கிகள் இந்திய நாட்டுக் கப்பல் கம்பெனி, காப்பீட்டுக் கழகம் ஆகியவைகள் வளர்ச்சிக்குத் தடைபடுத்தும் வகையில் அந்நியக் கம்பெனிகளையே வாடிக் கைக்காரர்கள் பயன்படுத்த வேண்டும் என்று கட்டாயப் படுத்தியது.

11. நடப்பு வைப்புகளின் பேரில் அதிக வட்டியினைக் கொடுத்து வைப்புகளைப் பெற, இந்திய வணிக வங்கிகளுடன் போட்டி போட்டு வந்தன.

மைய வங்கி விசாரணைக் குழு, மாநில வங்கிக் குழுக்கள் ஆகியவைகளின்முன் சாட்சியம் சொன்ன பல வங்கிகள், தொழிலதிபர்கள் நாணய மாற்று வங்கிகள் நடத்தைப் பற்றிய பல குறைகளைக் குறிப்பிட்டனர்.

## அட்டவணை 11.

# மொத்த வைப்பில் ரொக்க இருப்பு

சதவீதம் பற்றிய அட்டவணை*

(நாணய மற்று வங்கிகள்)

| ஆண்டு | இந்தியாவில் கணிசமான தொழில் செய்யும் வங்கி | இந்தியாவில் குறைந்த அளவு தொழில் செய்யும் வங்கி |
|---|---|---|
| 1925 | 13 | 15 |
| 1926 | 14 | 17 |
| 1927 | 11 | 14 |
| 1928 | 11 | 11 |
| 1929 | 14 | 10 |
| 1930 | 13 | 8 |
| 1931 | 15 | 9 |
| 1932 | 12 | 15 |
| 1933 | 12 | 6 |
| 1934 | 10 | 13 |
| 1935 | 15 | 19 |
| 1936 | 15 | 11 |
| 1937 | 19 | 10 |
| 1938 | 13 | 7 |
| 1939 | 9 | 10 |
| 1940 | 16 | 22 |
| 1941 | 10 | 15 |
| 1942 | 11 | 13 |
| 1943 | 12 | 13 |
| 1965-66 | 4.68 | |
| 1969-70 | 4.15 | |
| 1970-71 | 4.42 | |
| 1971-72 | 4.31 | |
| 1972-73 | 4.19 | |

* Report of Central Banking Enquiry Committee, P. 179.

நாணய மாற்று வங்கிகள் பற்றி பல குழுக்கள் செய்த பரிந்துரைகள் கீழ்க்கண்டவைகள் ஆகும் :

1. இந்திய இறக்குமதியாளர்கள் விருப்பப்பட்டால் உண்டியலை ரூபாயில் எழுத உதவி செய்யவேண்டும்.

2. ஏற்றுமதி உண்டியல்கள் ரூபாயிலேயே இருத்தல் வேண்டும்.

3. இந்திய காப்பு நிறுவனங்களின் காப்பு ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்வதுடன் அவைகளுக்குப் போதிய ஊக்கத்தினையும் அளிக்கவேண்டும்.

4. உள்நாட்டுக் கடன் கொள்கையைப் பொறுத்தவரை உள்ளூரில் கடன் பற்றிய அறிவுரைக்குழு ஏற்படுத்தவேண்டும் (Lccal Advisory Board).

5. இந்தியர்களை மேல்நிலை அலுவலர்களாக நியமித்து பயிற்சி அளிக்கவேண்டும்.

6. தங்கள் தொழிலுக்குத் தேவையான நடைமுறை முதலில் 50 சதவீதத்தைத் தங்கள் நாட்டிலிருந்து கொண்டுவர வேண்டும்.

7. இந்த வங்கிகள் துறைமுகப் பட்டிணம் தவிர உள்ளூர்களில் கிளை திறக்க அனுமதிக்கக் கூடாது.

8. இந்திய வங்கிகள் மீது நேரடியாகவோ, மறைமுகமாகவோ கட்டுப்படுத்தும் சுயநோக்கு (Controlling interest) நீக்கப்படவேண்டும்.

9. இவ் வங்கிகளின் இலாப, நட்ட, இருப்புக் குறிப்பு ரிசர்வு வங்கியின் பார்வைக்கு வைக்கப்படல் வேண்டும்.

இவைகளைத் தவிர வணிக வங்கிகள் அந்நிய நாட்டு வாணிப நிதி அளிப்பிலும், நாணய மாற்றுத் தொழிலிலும் பெருமளவில் ஈடுபடவேண்டும். இந்தியா மேற்கொண்டுள்ள பொருளாதாரத் திட்டங்களினால் பெரிய, மத்தியத்துறை தொழில் நிறுவனங்கள் பெருகி, பொறியியல் எந்திரங்கள், இரசாயனப் பொருள்கள், மின்சார சாதனங்கள், துணி வகைகள் மற்றும் பலவகையான பொருள்களும் பெருமளவு உற்பத்தி செய்யப்

பட்டு, பழம்பெரும் ஏற்றுமதியான விவசாய விளை பொருள்கள், தேயிலை, காப்பி, ரப்பர், மிளகு போன்றவைகளின் ஏற்றுமதியும் அதிகரித்துள்ள நிலையில் வணிக வங்கிகள் முந்துமைத் துறையான ஏற்றுமதிக்கு பெருமளவில் உதவிசெய்யலாம். அரசுத்துறை ஏற்றுமதியில் பெருமளவு பங்குகொண்டுள்ளது. இவைகளும் இந்திய வணிக வங்கிகளை பெருமளவில் பயன் படுத்தலாம்.

இந்தியா சுதந்திரம் பெற்றபின் அந்நிய நாட்டு வங்கிகளின் நடவடிக்கைகள் இந்தியாவில் பெருமளவில் கட்டுப்படுத்தப் பட்டுள்ளன. ரிசர்வு வங்கி மற்றெல்லா வங்கிகளேபோல் தன் முழு உரிமையும் அவ் வங்கிகளின்மீது செலுத்தி அவைகளின் நடவடிக்கைகள், வைப்பு, கடன் அளிப்பு, ரொக்க இருப்பு ஆகியவைகளை கண்காணித்து வருவதோடு எந்த ஒரு அந்நிய நாட்டு வங்கியோ நம் நாட்டு வங்கியை அந்த நாட்டில் புறக்கணித்தால் அவ் வங்கியை நம் நாட்டில் புறக்கணிப்ப தோடு அவைகளை மூடிவிடவும் ரிசர்வு வங்கி உரிமை பெற்றுள்ளது.

தனியார்துறை நிதியக்குழு (Committee on Finance for Private Sector) ரிசர்வு வங்கி, நம் நாட்டு வங்கிகளின் அயல் நாட்டுக் கிளைகளுடன் கணக்கு வைத்துக்கொண்டு அவற்றிற்கு தக்க உதவி அளிக்கவேண்டும் என்றும் ஸ்டேட் வங்கி அயல் நாணய மாற்று நடவடிக்கைகளில் பெருமளவுக்கு ஈடுபட வேண்டும் என்றும் இந்திய நாணய மாற்று வங்கி (Indian Exchange Bank) ஒன்றை அரசு நிறுவவேண்டுமென்றும், அரசும், இந்தியக் கூட்டுப் பங்கு வங்கிகளும் சேர்ந்து இதற்கு முதல் வழங்க வேண்டும் என்றும் பரிந்துரை கூறியுள்ளது.

சுதந்திரமடைந்தபின் இந்திய வணிக வங்கிகள் அன்னியச் செலாவணி தொழிலில் பெருமளவில் ஈடுபட ஆரம்பித்தன. ஸ்டேட் வங்கி, மற்றும் இதர வணிக வங்கிகளும் அந்நியச் செலாவணி பிரிவொன்று ஏற்படுத்தி பணியினை விரிவுபடுத்தி வருகின்றன. இந்தியாவில் அந்நியச் செலாவணியில் ரிசர்வு வங்கி நேரடியாகத் தொழில் ஏதும் செய்வதில்லை. அது அந்நிய நாட்டு பணம் வாங்க, விற்க அனுமதிக்கப்பட்ட விற்பனை யாளர்களை (authorised) நியமித்துள்ளது. இப்போது 41 அனும திக்கப்பட்ட விற்பனையாளர்கள் இருக்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் இந்திய வணிக வங்கிகளே. இவர்களைத் தவிர துறைமுகப்பட்டணங்களில் சில அனுமதிக்கப்பட்ட பணமாற்று

வோர்களையும் (money changers) நியமித்துள்ளது. அனுமதிக்கப் பட்ட விற்பனையாளர்களே கடன் கடிதம் (Letter of Credit) ஏற்படுத்தலாம், இறக்குமதிக்கு பணம் மாற்றி அனுப்பலாம்.

ஏற்றுமதிப் பெருக்கத்திற்காக ரிசர்வு வங்கி ஏற்றுமதி மாற்று உண்டியல் கழிவுப்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்து வருகின்றது. இதனைப் பயன்படுத்திக்கொண்டு இந்திய வணிக வங்கிகளும் ஏற்றுமதி மாற்று உண்டியல்களை அதிகமாக வாங்க ஆரம்பித்துள்ளதை கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து அறியலாம்.

அட்டவணை 12.

பின் பட்டியலில் கண்டுள்ள இந்திய வணிக வங்கிகள் வாங்கிய மற்றும் தள்ளுபடி செய்த மாற்று உண்டியல்கள்*

(ரூ. கோடியில்)

| ஆண்டு ஏப்ரல்–மார்ச்சு | வாங்கிய மற்றும் தள்ளுபடி செய்தவை: உள்நாட்டு உண்டியல்கள் | வாங்கிய மற்றும் தள்ளுபடி செய்தவை: வெளி நாட்டு உண்டியல்கள் |
|---|---|---|
| 1954–55 | 73.72 | 12.68 |
| 1955–56 | 94.57 | 20.23 |
| 1956–57 | 103.32 | 28.59 |
| 1957–58 | 88.47 | 20.27 |
| 1958–59 | 95.44 | 21.55 |
| 1959–60 | 108.86 | 25.46 |
| 1960–61 | 134.18 | 29.77 |
| 1961–62 | 151.58 | 27.64 |
| 1962–63 | 183.36 | 35.08 |
| 1963–64 | 200.56 | 46.41 |
| 1964–65 | 241.10 | 56.31 |
| 1965–66 | 252.05 | 60.11 |
| 1966–67 | 329.82 | 95.77 |
| 1967–68 | 382.91 | 99.50 |
| 1968–69 | 420.26 | 111.43 |
| 1969–70 | 463·77 | 135.10 |
| 1970–71 | 728.96 | 150.83 |
| 1971–72 | 781.92 | 160·99 |
| 1972–73 | 779.56 | 181.34 |
| 1973–74 | 933.17 | 276.79 |

*ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா—ந. சட்டைநாதன்.

அயல்நாட்டு (நாணய மாற்று) வங்கிகள் வளர்ச்சி பற்றிய அட்டவணை*

அட்டவணை 13

| ஆண்டு | இந்தியாவில் வைப்புத் தொகை |
|---|---|
| | ரூ. கோடியில் |
| 1870 | .57 |
| 1880 | 3.40 |
| 1890 | 7.54 |
| 1900 | 10.50 |
| 1910 | 24.79 |
| 1920 | 74.81 |
| 1930 | 68.11 |
| 1940 | 85.32 |
| 1950 | 170.39 |
| 1960 | 242.55 |
| 1961 | 267.25 |
| 1963 | 291.61 |
| 1964 | 322.11 |
| 1965 | 347.32 |
| 1966 | 375.68 |
| 1967 | 402.84 |
| 1968 | 435.22 |
| 1969 | 487.22 |

நாணய மாற்று வங்கிகளின் மொத்த வருவாய் 1973ஆம் ஆண்டு ரூ. 66.7 கோடியிலிருந்து ரூ. 75.8 கோடியாக உயர்ந்தது. 1973ஆம் ஆண்டு அதிகரிப்பு 13.6 சதவீதம். ஃபர்ஸ்ட் நேஷனல் சிட்டி பாங்க் ரூ. 1·25 கோடியும், நேஷனல் கிரிண்ட் லேஸ் வங்கி ரூ. 1.23 கோடியும் சம்பாதித்தன. எல்லா நாணய மாற்று வங்கிகளும் 1973ஆம் ஆண்டு தங்கள் தலைமையகத்திற்கு ரூ. 3.21 கோடியை அனுப்பிவைத்தன. 1972ஆம் ஆண்டு ரூ. 3.91 கோடியை அனுப்பி வைத்தன.

* இந்திய வங்கியல்—கு. ஆளுடைப்பிள்ளை–த.பா.நி. ப. 11 (தொகுக்கப்பட்டது.

இந்திய வணிக வங்கிகள் அந்நிய நாட்டு வாணிபம், அந்நியச் செலாவணித் தொழில் ஆகியவைகளை இன்னும் அதிகமாகச் செய்ய வாய்ப்பிருக்கிறது. இத் தொழிலைப் பெருக்கி இந்திய வணிக வங்கிகள் வளர்ச்சியுறும் என்பதில் ஐயமில்லை.

## பாட நூல்கள்

1. கு. ஆளுடையப்பிள்ளை—இந்திய வங்கியல்.
2. ந. சட்டைநாதன்—ரிசர்வ் பாங்க் ஆஃப் இந்தியா.
3. S.G. PANANDIKAR—Banking in India.

# 20. இந்தியப் பணச் சந்தை

## (Indian Money Market)

பணச் சந்தை என்பது குறுகிய கால நிதியைப் பெறவும், கொடுக்கவும் உள்ள சந்தை. குறுகிய கால நிதி நிறுவனங்கள் அனைத்தும் சேர்ந்தே பணச் சந்தை என்று அழைக்கப்படுகின்றன. தற்காலிகமாக அதிகமாக உள்ள பணத்தினை விற்கவும், வாங்கவும் உதவும் நிதி நிலையங்களே பணச்சந்தை ஆகும். சந்தை என்பது ஒரு இடத்தைக் குறிப்பதல்ல. நாட்டில் உள்ள குறுகியகால நிதி நிறுவனங்கள் அனைத்தும், இவைகளில் கடன் பெறுபவர்கள் எல்லோரையும் சேர்த்தே பணச் சந்தை என்று அழைக்கப்படுகின்றது. நீண்டகால நிதி அளிக்கும் நிலையங்களை மூலதனச் சந்தை (Capital Market) என்று அழைக்கின்றனர்.

பணச் சந்தையில் வங்கிகள், குறிப்பாக வணிக வங்கிகள் பெரும் பங்கேற்கின்றனர். ஏனெனில், குறுகிய கால நிதியினை பெருமளவில் கொடுப்பது வணிக வங்கிகளே. மாற்று உண்டியல்கள், குறுகியகால அரசாங்கப் பத்திரங்கள், கடன் கருவிகள் ஆகியவைகள் பணச் சந்தையில் பயன் படுத்தப்படுகின்றன. மைய வங்கி திறம்பட செயலாற்ற நல்ல பணச் சந்தை தேவை. இக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு 'மைய வங்கிகள் வெற்றிடத்தில் (Vaccum) செயலாற்ற முடியாது' என்று கூறுவர். பணச் சந்தை ஒழுங்கான முறையில் இல்லை என்றால் மைய வங்கியின் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் பயன்பட மாட்டா.

### வளர்ச்சியுற்ற பணச் சந்தை

இது போன்ற பணச் சந்தையில் வலுவுள்ள வணிக வங்கிகள் இருத்தல் வேண்டும். மூலதனம், காப்பு நிதி ஆகியவைகள் போதுமானதாக இருப்பதோடு தேவைக்கு அதிகம் இல்லாத ரொக்கக் காப்பைக் கொண்டு அவ் வங்கிகள் தொழில் செய்ய வேண்டும். ஈடுபட்டிருக்கும் எல்லா வணிக வங்கிகளிடையே ஒருங்கிணைப்பு இருப்பதோடு, வட்டி வீதம்

ஒழுங்காக அமைய வேண்டும். மைய வங்கி வீதத்திற்கும், வணிக வங்கிகள் மற்றும் பணச் சந்தையில் இயங்கும் இதர நிறுவனங்களின் வட்டி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். வணிக வங்கிகள் வட்டி வீதம் மைய வங்கி வீதத்தைப் பொருத்தே இருக்க வேண்டும். மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டால் உடனடியாக பணச் சந்தையில் நிலவும் வட்டிவீதம் உயரவேண்டும். இதேபோல் மைய வட்டிவீதம் குறைக்கப்பட்டால் பணச் சந்தையில் நிலவும் வட்டிவீதம் குறைந்து காணப்படவேண்டும். பணச் சந்தைக்கும் மைய வங்கிக்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். பணத் தட்டுப்பாடு நேரிட்டால் பணச்சந்தையின் முக்கிய அங்கமாகிய வணிக வங்கிகள் மைய வங்கியிடம் பணம் கோரி நிற்க வேண்டும். பணச் சந்தை தன்னை அணுகுவதைக்கொண்டும், அணுகாததைக் கொண்டும், மைய வங்கி பணச் சந்தையில் பணப் புழக்கத்தில் தட்டுப்பாடு இருக்கின்றதா அல்லது பணப் புழக்கம் தாராளமாக இருக்கின்றதா என்பதினை உடனடியாகத் தெரிந்து கொள்ளலாம்.

நல்ல, வளர்ச்சியடைந்த பணச்சந்தையில் தகுந்த பத்திரங்கள் கிடைத்தல் இன்றியமையாதது ஆகும். மாற்று உண்டியல்கள், அரசாங்கக் கருவூல உண்டியல்கள் குறுகிய கால அரசாங்கப் பத்திரங்கள் போன்றவை, தொடர்ந்தும், போதுமான அளவும் கிடைத்தல் வேண்டும். இவைகள் உயர்ந்த தரமுடையனவாகவும், அதிகச் செலவில்லாமல் எளிதில் விற்கவோ வாங்கவோ வசதி இருக்கவேண்டும்.

மேலே குறிப்பிட்டுள்ள பத்திரங்களை சந்தையில் விற்கவும், வாங்கவும் போதிய நிறுவனங்கள் இருக்கவேண்டும். இவர்கள் இப் பத்திரங்களில் பெருமளவில் தொழில் செய்தால் சந்தைக்கு ஆதரவு கிடைப்பதுடன் போட்டியும் வளரும். பல நிறுவனங்கள் இருந்தால்தான் பணச்சந்தை சுறு சுறுப்பாக இருக்கும்.

வளர்ச்சி பெற்றுள்ள பணச் சந்தையில் பல துணைச் சந்தைகள் (Sub-markets) இருக்க வேண்டும். இத் துணைச் சந்தைகளாவன :

1. உண்டியல் சந்தை (Bill-market).
2. கருவூலச் சந்தை (Treasury Bill Market).
3. ஏற்பகங்கள் (Acceptence Houses).
4. தள்ளுபடி அகங்கள் (Discount Houses).
5. அழைப்புக்கடன் சந்தை (Call-loan market).

நல்ல உண்டியல் சந்தை இல்லையேல் பணச் சந்தை சிறப்பாக பணி செய்ய முடியாது. இவ்வுண்டியல் சந்தையில் நாள்தோறும் இலட்சக் கணக்கான வியாபார மாற்று உண்டியல்கள் விற்பனைக்கும், கழிவுப் பாட்டிற்கும், ஏற்பிற்கும் வர வேண்டும். உண்டியல்கள் எளிவரல் தன்மை உடையவன. 60 அல்லது 90 நாட்களில் முதிர்வு அடையக் கூடியன. மைய வங்கிவீதம் என்பது மைய வங்கி முதல் தர மாற்று உண்டியல் களைக் மறுகழிவுப்பாடு செய்யும் வீதமாகும். நல்ல உண்டியல் சந்தையும், உண்டியல்களை கழிவுப்பாடு செய்யும் பழக்கமும் வணிக வங்கிகளிடம் நிலவாவிட்டால் மைய வங்கி வீதம் செயல் படுத்த முடியாது. மைய வங்கியின் பழம் பெரும் கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதம் பயனற்று இருக்கும்.

வணிக மாற்று உண்டியலைவிட மிகவும் நம்பகமானதும் பொதுவாக 90 நாட்களில் முதிர்வு அடையக் கூடியதுமான கருவூலச் சீட்டுகளை மைய வங்கி வெளியிடுகின்றது. அரசுக்கு அவ்வப்போது தேவையான குறுகிய காலக் கடனை அளிக்க கருவூலச் சீட்டு வெளியிடப்படுகின்றது. இவற்றின் பெரும் பகுதி வணிக வங்கிகளாலேயே வாங்கிக் கொள்ளப்படுகின்றன. இவைகளைப் பெறுவதில் வணிக வங்கிகள் போட்டி போடு கின்றன. சிறிது காலத்திற்குள் ஓரளவு லாபம் சம்பாதிக்க கருவூலச் சீட்டை விட பத்திரமான முதலீடு வேறெதுவும் கிடையாது.

ஏற்பகங்கள் என்ற சிறப்பு நிறுவனங்கள் சிலநாடுகளில் நிலவிவருகின்றன. பொதுவாக இந் நிறுவனங்கள் அதிக மூலதனம் வாய்ந்த கூட்டுப் பங்குக் கம்பெனியாகவோ, கூட்டு வணிகமாகவோ அமைகின்றன. இந் நிறுவனங்கள் மாற்று உண்டியல்களை தங்கள் வாடிக்கைக்காரர்களுக்காக ஏற்கின் றனர். இவ்விதம் நல்ல நிதி அமைப்பு வாய்ந்த, பெருமை மிக்க ஏற்பகங்களினுல் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்டியல்கள்,முதல் தரமான உண்டியல்களாகக் கருதப்படும். இந்த உண்டியல் களுக்கு சந்தையில் மிகவும் மதிப்பு இருக்கும். இதனை வாங் கவோ, கழிவுப்பாடு செய்யவோ எந்த நிறுவனமும் பணச் சந்தையில் தயாராக இருக்கும்.

தள்ளுபடி அகங்கள் பணச்சந்தையில் மற்றொரு முக்கிய மான துணைச் சந்தையாக அமைகின்றன. ஏற்பகங்களைப் போல இவைகளும் வலுவான நிதியமைப்புடைய பெரிய நிறுவனங்கள். கூட்டுக் கம்பெனியாகவோ கூட்டு வணிக

மாகவோ இவைகள் இயங்குகின்றன. சில தனி நபர்கள், ஓடும் தரகர்கள் (Running Brokers) என்பாரும் இத் தொழிலினைச் செய்வதுண்டு. இவர்கள் மாற்று உண்டியல்களை கழிவுப்பாடு செய்வர். நாள்தோறும் பல லட்சக் கணக்கான மாற்று உண்டியல்கள் கழிவுப் பாட்டிற்காக தள்ளுபடி அகங்களுக்கு வரும். இவ்வித நிறுவனங்கள் இருப்பதாலே மாற்று உண்டியல்கள் சில நாடுகளில் பெருமளவில் வியாபாரத்தில் பயன்படுத்தப்படுகின்றன. இத் தள்ளுபடி அகங்கள் தங்கள் கைவசமுள்ள தள்ளுபடி செய்யப்பட்ட உண்டியல்களை முதிர்வுக்கு சில நாட்களுக்குமுன் வணிக வங்கிகளுக்கு விற்றுவிடுவதுமுண்டு. இதனல் தள்ளுபடி அகங்களுக்கு நடைமுறைக்கான நிதி கிடைக்கின்றது. வணிக வங்கிகளும் எளிவரல் மிக்க இம் மாற்று உண்டியல்களை சில தினங்கள் வைத்திருந்து ஓரளவு வருவாய் பெற வழி ஏற்படுகின்றது.

பணச் சந்தையின் மற்றுமொரு முக்கிய துணைச்சந்தை, அழைப்புக் கடன் சந்தை. இவ்வித சந்தை இருக்குமேயானல் வணிக வங்கிகள் மிகக் குறுகிய காலத்திற்குக் கடன் வழங்க முடியும். இக் கடன்களை சில தினங்களில், ஏன் சில மணி நேரங்களில் கூட திரும்பப் பெற்று விடலாம். தள்ளுபடி அகங்கள் பங்குச் சந்தை, வங்கிகள் தங்களுக்குள்ளும் அழைப்புக்கடன் அளித்துக் கொள்ளும்.

வளர்ச்சி பெற்ற பணச் சந்தை பிற நாடுகளின் நிதியியல் பொருளாதாரம், அரசியல் போன்றவற்றில் ஏற்படும் மாற்றங்களையும் பிரதிபலிக்கும்.

மைய வங்கி ஒரு நாட்டின் பணக்காவலராக அமைந்து, பணத்தின் மதிப்பு சீராக இருந்து விலைவாசிகளில் திடீர் என அதிக உயர்வோ, வீழ்ச்சியோ இல்லாமல் இருக்கச் செய்கின்றது. பணத்தின் அளவைக் கட்டுப்படுத்த சில ஆயுதங்களை அது பெற்றுள்ளது. எந்த ஒரு நாட்டில் நல்ல பணச் சந்தை அமைந்துள்ளதோ அந்த நாட்டில் மைய வங்கியின் பணியும், செயல் திறனும் உயர்ந்து நிற்கின்றது. இதற்குமாருக ஒழுங்கான பணச் சந்தை இல்லாத நாடுகளில் மைய வங்கி செயலற்ற, பெயரளவு நிறுவனமாகக் காட்சி அளிக்கின்றன. பணச் சந்தையின் நாடி கண்டு மைய வங்கி பொருளாதார மற்றும் பண நிலையினை அவ்வப்போது அறிந்து தேவைப்பட்ட மாறுதல்களையும் பணக் கொள்கைகளையும் ஏற்கும்.

வளர்ச்சி அடையாத பணச் சந்தையில் மைய வங்கிக்கு ஏற்படும் இன்னல்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. மைய வங்கி வீதம் வெற்றிகரமாக இயங்க முடியாது. பணத்தினைக் கட்டுப்படுத்துவதில் இன்றும் முக்கியமாக இருக்கும் இக்கொள்கை (மைய வங்கி வீதம்) செயலற்றுப் போகும்.

2. வளர்ச்சியடைந்த பணச் சந்தையில் குறுகிய கால பத்திரங்களும், அரசுப் பத்திரங்களும் பெருமளவில் இருக்கும். வளர்ச்சி அடையாத பணச் சந்தையில் இவைகள் போதிய அளவு இல்லாத காரணத்தினால் மைய வங்கியின் வெளிச் சந்தை நடவடிக்கை வெற்றிகரமாக இருக்காது.

3. போதிய துணைச் சந்தைகளும், குறுகிய காலப் புத்திரங்களும் இல்லாத, வளர்ச்சியடையாத பணச் சந்தையில் வணிக வங்கிகள் தேவைக்கு அதிகமான கையிருப்பு ரொக்கம் வைத்திருக்கும். இதனால், மைய வங்கியின் முக்கிய கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களில் ஒன்றான ரொக்கக் காப்பு மாற்று வீதமும் சரியான பலனைக் கொடுக்க முடியாது.

4. மேலும், அதிக கையிருப்பு ரொக்கத்தைக் கொண்டு வணிக வங்கிகள் தங்கள் இச்சை போல் அதிகமான சுலபக் கடனைக் கொடுத்து பண வீக்கத்திற்கு அடிகோலிகளாக அமையலாம்.

5. மைய வங்கி வீதத்திற்கும் பொதுவட்டி வீதத்திற்கும் யாதொரு ஒற்றுமையுமின்றி, சந்தையில் நிலவும் வட்டி வீதம் மிக அதிகமாக இருக்கலாம். இதனால் குறைந்த வட்டிகொண்ட அரசு கடன் பத்திரங்களை போதிய அளவில் விற்க முடியாமல் மைய வங்கி அரசுக்குத் தேவையான பணத்தினைத் திரட்டுவதில் இன்னல்களை ஏற்க நேரிடும்.

6. வளர்ச்சி பெறாத பணச் சந்தைகளில் மைய வங்கிக்கும் மற்றைய வணிக, இதர நிறுவனங்களுக்கும் போதிய நெருங்கிய தொடர்போ, ஒருங்கிணைப்போ இல்லாததால் மைய வங்கியின் மனந்தொடு வேண்டுகோள், ஆணைகள் ஆகியவைகள் புறக்கணிக்கப்படுவதுடன் மைய வங்கி தன் மதிப்பு மிக்க தானத்தினை நிலை நிறுத்த முடியாமல் போகக் கூடும்.

**இந்தியப் பணச் சந்தை–பிரிவுகள்**

இந்தியப் பணச் சந்தை ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு சந்தையாக இருக்காமல் இரண்டு பெருங்கூருகப் பிரிந்து அமைந்துள்ளன. இவை: 1. மத்தியப் பகுதி அல்லது ஒழுங்குப் பகுதி (Central Part or Organised Part) என்றும் 2. பசார் பகுதி அல்லது ஒழுங்கற்றப் பகுதி (Bazar Part or Unorganised Part) எனவும் அழைக்கப்படுகின்றன. இந்தியப் பணச் சந்தையின் ஒழுங்குப் பகுதியில் ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி (முன்பு இம்பீரியல், வங்கி என்றழைக்கப்பட்டது), பெரிய இந்திய வணிக வங்கிகள் நாணய மாற்று வங்கிகள் ஆகியன அமைகின்றன. ஒழுங்கு அற்றப் பகுதியில் லேவாதேவிக்காரர்கள், நாட்டு வங்கியர், கடனகங்கள், சீட்டுக் கம்பெனிகள், நிதியகங்கள் ஆகியன அமைகின்றன. சிறிய வணிக வங்கிகளும், கூட்டுறவு வங்கிகளும் பணச் சந்தையின் இவ்விரு பகுதிகளுக்கும் நடுவில் அமைகின்றன. கடந்த 20 ஆண்டுகளாக ரிசர்வு வங்கியின் உதவி மற்றும் ஆய்வுகளினுல் மாநில மத்திய கூட்டுறவு வங்கிகளுக்கும் ரிசர்வு வங்கிக்கும் போதிய தொடர்பு ஏற்பட்டு இவைகளும் ஒழுங்குப் பகுதியில் அமைய ஆரம்பித்துள்ளன. இரு பிரிவுகளாகப் பிரிந்திருக்கும் தன்மை இந்திய பணச் சந்தையை ஒரு வளர்ச்சிபெருத, கட்டுப்பாட்டிற்குள் அமையாத சந்தையாக ஆகிவிட்டது. இதனுல் மைய வங்கியின் பல பண சம்மந்தமான முயற்சிகள் வெற்றிபெற இயலவில்லை. 1935ஆம் ஆண்டு ரிசர்வு வங்கி ஏற்படுத்தப்படும்வரை இந்தியாவில் மைய வங்கி இல்லை. இம்பீரியல் வங்கி மைய வங்கிப் பணிகள் சிலவற்றை ஓரளவு செய்துவந்தன. ஆனுல், இம்பீரியல் வங்கியே ஒரு வணிக வங்கி என்ற காரணத்தினுல் மற்றைய வங்கிகள் இதனை மதித்து நடக்காததுடன் இதனைத் தங்கள் எதிரியாகவே பாவித்து நடந்து வந்தன. எனவே, பணச் சந்தையில் எந்த மதிப்போ நல்லெண்ணமோ பெற்றிருத இம்பீரியல் வங்கி பணச் சந்தையை சீராக்க வழி ஏதும் செய்யவில்லை.

ஒழுங்கமைந்த பணச் சந்தை ரிசர்வு வங்கியின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் அமைந்துள்ளது. இவ்வங்கிகள் ரிசர்வு வங்கியிடம் ரொக்கக் காப்பை வைத்திருப்பதோடு தங்களுக்கு ரொக்கத் தேவை ஏற்பட்டால் உண்டியலை மறு கழிவுப்பாடு செய்தோ, அரசு பத்திரங்கள் மீது கடனே ரிசர்வு வங்கியிடமிருந்து பெறுகின்றன. ஒழுங்கமையாத பணச் சந்தையிலுள்ள லேவாதேவிக்காரர்கள், நாட்டு வங்கியர், கடனகங்கள், சீட்டுக்

கம்பெனி ஆகியவைகள் ரிசர்வு வங்கியின் கட்டுப்பாடு ஏதும் இன்றி தன்னிச்சையாக இயங்கி வருகின்றன.

### மத்திய பணச் சந்தை செயல்படும் விதம்

இதன் செயல்பாட்டினை கீழ்வருமாறு பிரிக்கலாம் :

(1) அழைப்புக் கடன் சந்தை (Call money market).

(2) உண்டியல் சந்தை (Bill market).

(3) துணைக் கடன் சந்தை (Collateral loan market).

### அழைப்புக் கடன் சந்தை

மத்திய பணச் சந்தையின் முக்கிய பாகமாக இது அமைகின்றது. இச்சந்தை பெருமளவில் பம்பாய், கல்கத்தாவிலும் ஓரளவு சென்னையிலும் இயங்குகின்றது. நாள்தோறும் இச்சந்தையில் கடன் வாங்குவதும், கடன் கொடுப்பதில் ஏற்றத் தாழ்வும் இருக்கின்றது. எனினும், இச்சந்தையில் அதிகபட்சம் ரூ. 70 கோடிக்கு மிகுவது இல்லை. இது இந்தியப் பணச் சந்தையிலேயே மிகவும் உணர்ச்சிகரமான சந்தையாக இருக்கின்றது. ஸ்டேட் வங்கி இவ்வித அழைப்புக் கடன் அளிப்பதை ரிசர்வு வங்கி நிறுத்திவைக்கச் சொல்லவே, ஸ்டேட் வங்கி இக்கடன்களில் இப்போது பங்குகொள்வதில்லை. பெரிய வியாபார நிறுவனங்களும், நிதியம் வழங்கும் தனி நபர்களும் அழைப்புக் கடனை வங்கிகளுக்கு நேராகவோ, தரகர் மூலமாகவோ அளிக்கின்றனர்.

அழைப்புக் கடனை அளிப்போரும், பெறுவோரும் கீழ்க் கண்டவர்கள் ஆவார்கள்:

(1) வங்கிகள் தங்களுக்குள் கொடுத்துக்கொள்ளும்.

(2) நாணய மாற்று வங்கி மற்றைய பெரிய இந்திய வணிக வங்கிகளினின்று பெறும்.

(3) வணிக வங்கிகள் பங்குச் சந்தைக்கு கடனளிக்கும்.

இவற்றில் முதலில் கூறியுள்ள இரண்டு வகையானக் கடனே மிக அதிமாக நிலவுகின்றது. பங்குச் சந்தைக்கு கடனளிப்பு இந்தியாவில் மிகவும் குறைவாகவே இருக்கின்றது.

வணிக வங்கிகள் தங்களுக்குள் கடன் பெறுவதற்குக் காரணங்கள்

1. சட்ட பூர்வமாக வைப்புகளின் பேரில் தாங்கள் வைத்திருக்க வேண்டிய ரொக்கக் காப்பு என்றேனும் குறைந்த நிலையிலிருந்தால் இதனைச் சரிகட்ட மற்றைய வணிக வங்கிகளினின்று கடன் பெறுவர்.

2. மாதாந்திர அல்லது ஆண்டுமுடிவின்போது தாங்கள் தயாரிக்கும் இருப்புநிலைக் குறிப்பில் கையிலிருக்க வேண்டிய ரொக்கம் அல்லது வைப்புக்கு கடன் பெற்றிருக்க வேண்டிய சதவீதம் போன்றவைகளைக் சரிகட்ட வணிக வங்கிகள் கடன் வாங்கும். இவ்விதம் கடன் வாங்கி இருப்பு நிலைக்குறிப்பை சரி செய்தலுக்கு புறச்சோடனை (Window dressing) என்று கூறுவதுண்டு.

நாணயமாற்று வங்கி வணிக வங்கிகளிடமிருந்து அழைப்புக்கடனை அதிக அளவிலும் பலமுறைகளும் பெறுவதுண்டு. இதற்கு முக்கிய காரணம் அவ்வங்கிகள் போதிய ரொக்க இருப்பை கையில் வைத்திருக்ககாமல் தொழில் செய்வதே காரணமாகும்.

**உண்டியல் சந்தை**

இந்தியப் பணச் சந்தையில் ஒரு பெரும் குறை நல்ல உண்டியல் சந்தை ஏற்படாதது ஆகும். 1935ஆம் ஆண்டே ரிசர்வு வங்கி ஏற்படுத்தப் பட்ட போதும் நல்லதொரு மாற்று உண்டியல் சந்தையை அமைக்க யாதொரு முயற்சியும் எடுக்கவில்லை. 1952ஆம் ஆண்டு பெயரளவில் ஒரு உண்டியல் சந்தையை ரிசர்வு வங்கி ஏற்படுத்தியது. மீண்டும் 1970ஆம் ஆண்டு இச் சந்தையில் சில மாறுதல்கள் செய்து விரிவாக்கியது.

நல்ல உண்டியல் சந்தை ஒன்று இந்தியாவில் உருவாகாததற்குக் காரணம் போதிய உண்மையான வியாபார உண்டியல்கள் இல்லாததே காரணமாகும். இதையும் தவிர கீழே கொடுக்கப்பட்டுள்ள காரணங்கள் உண்டியல் சந்தை ஏற்படாத காரணத்தை விளக்கும்.

1. உண்டியல்களைத் தள்ளுபடி செய்வதைவிட தங்க முனைப் பத்திரங்களில் (gilt edged securities) முதலீடு செய்தால் நல்ல லாபமும் எளிவரல் தன்மையும் இருக்கும் நிலை.

2. ரிசர்வு வங்கி ஏற்படுத்தப்பட்ட பின்னும் வணிக வங்கிகள் ரிசர்வ் வங்கியிடம் உண்டியல்களை மறுதள்ளுபடி செய்வதைவிட, இம்பீரியல் வங்கியிடம் கடன் வாங்குவதை விரும்பின. இதற்குக் காரணங்கள்:

அ. உண்டியல்களை, ரிசர்வு வங்கியிடம் எடுத்துச் சென்று மறுதள்ளுபடி செய்வது ஒரு பெரிய பலவீனமாகப் பணச் சந்தையில் கருதப்பட்டது.

ஆ. இம்பீரியல் வங்கி வணிக வங்கிகளுக்கு என்று யாதொரு சிறப்பினையும் அளிக்காது நாட்டு வங்கியர்களுக்கு தள்ளுபடி செய்த வீதத்திலேயே வங்கிகளுக்கும் தள்ளுபடி செய்தன.

இ. இம்பீரியல் வங்கியை மற்ற வணிக வங்கிகள் போட்டி வங்கியாகக் கருதியதால் தங்களிடம் இருந்த மாற்று உண்டியல் களின் மதிப்பைத் தெரியப்படுத்த விரும்பவில்லை.

3. மாற்று உண்டியலை ஏற்றுள்ளவரின் பணநிலை வணிக வங்கிகளுக்குத் தெரியவில்லை. எனவே, உண்டியல்களைக் கழிவுப்பாடு செய்தல் பெரிய நட்டவச்சத்தை ஏற்படுத்துவதாக வணிக வங்கிகள் கருதின.

4. மாற்று உண்டியல் உண்மையான வியாபார உண்டியலா அல்லது நிதி வசதிக்காக எழுதப்பட்ட உண்டியலா என்பது தெரியவில்லை. மாற்று உண்டியலுடன் பண்டக ரசீதோ, ரயில்வே ரசீதோ இணைக்கப் படுவதில்லை.

5. உண்டியல்கள் மீதான பத்திரக் கட்டணம் அதிகமாக இருந்து வருகிறது.

6. உண்டியல்களுக்கிடையே தர நிர்ணயம் (Standerdisation) இல்லை.

7. வணிகர்கள் அதிகப்பற்று, ரொக்கக் கடன், சுத்தக் கடன் ஆகியவைகளையே விரும்புகின்றனர்.

வணிக மாற்று உண்டியல்களில் பற்றுக் குறை இருப்பினும் நாட்டு மாற்று உண்டியல்கள் (Hundis) ஓரளவு புழக்கத்தில் இருக்கின்றன. உண்மையான வணிக நோக்கத்துடன் கடன்

அளிக்கப்படும் மூல்தானி உண்டியல்கள் (Multani Hundis) முக்கியமானவை. இத்தகைய உண்டியல்களை ஸ்டேட் வங்கியும் மற்ற வங்கிகளும் மறு தள்ளுபடி செய்கின்றன. இவற்றைத் தவிர முதாதி உண்டியல்கள் (Muddati Hundis), ஷிகார்பூர் உண்டியல்கள் (Shikarpur Hundis), ஷாஜாஹ் உண்டியல்கள், (Shahjog Hundis) தனிஜாக் உண்டியல்கள் (Dhanijog Hundis), ஜோக்மி உண்டியல்கள் (Jokhmi Hundis) ஆகிய உண்டியல்களும் புழக்கத்தில் உள்ளன. ஆனால், அதிக முத்திரைக் கட்டணத்தின் காரணமாக இந்த உண்டியல்கள் மறைந்து வருகின்றன. இவைகளைத் தவிர மூல்தானி சராப் புக்கள் (Multani shroffs), நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் குஜராத்திய சராப்புக்கள் (Gujarati shroffs), மார்வாரிகள் (Marwaris) ஆகியோரும் உண்டியல் வியாபாரத்தில் ஈடுபடு கின்றனர். இவர்கள் தங்கள் சொந்த நிதியினின்று கழிவுப்பாடு செய்வதால் வணிக வங்கிகளுக்கோ, பணச்சந்தைக்கோ உண்டியல்கள் வருவதில்லை.

### ரிசர்வு வங்கியின் உண்டியல் சந்தை

ரிசர்வு வங்கி தனது பணக் கொள்கையில் 1951ஆம் ஆண்டு ஒரு புதிய சகாப்தத்தை துவக்கி வைத்தது. 1951ஆம் ஆண்டு நவம்பர் திங்களில், மிகச் சுறுசுறுப்பான பருவத்தில் மையவங்கி வீதத்தை 3 லிருந்து $3\frac{1}{2}$ சதவீதமாக உயர்த்தியது. திடீர் என மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டது. வணிக வங்கிகள் எல்லாவற்றிற்கும் வியப்பினையூட்டியது. இத்துடன் ரிசர்வு வங்கி மிக அவசியம் ஏற்பட்டால் அன்றி, அசாதாரண நிலையில் மட்டும்தான் அரசு பத்திரங்களை வாங்கப் போவதாக அறிவித்தது. பணம் மிகவும் தேவையான சுறுசுறுப்பு பருவத்தில் எப்பொழுதும் தங்களிடமுள்ள அரசுப்பத்திரங்களை விற்றோ, ஈடாகக் கொடுத்தோ ரிசர்வு வங்கியிடமிருந்து வணிக வங்கிகள் பெற்றுக்கொள்ளும். கடன் மறுக்கப்படவே வணிக வங்கிகள் ரிசர்வு வங்கியின் இரக்கத்திற்காக காத்து நின்று கொண்டிருந்தன. 1952 ஜனவரி மாதம் ரிசர்வு வங்கி தன் மாற்று உண்டியல் சந்தையை வெளியிட்டது. இத் திட்டத்தின் படி ரிசர்வு வங்கிச் சட்டம் பிரிவு 17 (4) (c) யின்படி ரூ. 10கோடியோ அல்லது அதற்கும் அதிகமாகவோ வைப்பு களைப் பெற்றிருக்கும் வங்கிகளுக்கு தவணைப் புரோ நோட்டுகள் (Usance Promissory note) மீது, ரிசர்வு வங்கி கடன் அளிக்க ஒப்புக் கொண்டது. இரு நல்ல கையொப்பங்களைக் கொண்ட (அவற்றில் ஒரு கையொப்பம் பின் பட்டியலில் கண்டுள்ள வங்கியினுடையதாக இருக்க வேண்டும்) உண்மையான வணிக

அல்லது வியாபார நடவடிக்கையால் எழும் மாற்று உண்டியல்களை ரிசர்வு வங்கி மறு தள்ளுபடி செய்ய இசைந்தது. இத்தகைய மாற்று உண்டியல்களை மைய வங்கி வீதத்திற்கு ½ சதவீதம் குறைவாக மறு தள்ளுபடி செய்யும். ஒவ்வொரு கடனும் குறைந்தது ரூ. 25 லட்சமாகவும், ஒவ்வொரு உண்டியலும் ரூ. 1 லட்சத்திற்குக் குறையாமல் இருக்கவேண்டும். மேலும், பிராமிசரி நோட்டுக்களை தவணை உண்டியலாக (usance bill) மாற்றுவதல் ஏற்படும் பத்திரச் செலவில் பாதியை ரிசர்வு வங்கி ஏற்க இசைந்தது. 1953ஆம்ஆண்டு ஜூன் மாதம் மாற்று உண்டியல் சந்தைத் திட்டத்தை விரிவாக்கி ரூ. 5 கோடி அல்லது அதற்கும் மேலான வைப்புகள் உடைய வங்கிகள் மேற்கூறப்பட்ட வசதிகளை ரிசர்வு வங்கியிடமிருந்து இத் திட்டத்தின் கீழ் மறுதள்ளுபடி பெற தகுதி பெற்றன. 1954ஆம் ஆண்டு இத் திட்டத்தில் மேலும் மாற்றம் செய்யப்பட்டு உரிமம் பெற்ற எல்லா வங்கிகளும் உண்டியல் மறு தள்ளுபடி வசதி பெறச் செய்தது. குறைந்தபட்சக் கடன் ரூ. 10 லட்சமாகவும், ஒரு உணடியலின் மறப்பு ரூ. 50,000 இருந்தால் போதும் எனச் செய்யப்பட்டது. இத்திட்டம் எதிர்பார்த்த அளவு பெரிய வெற்றியாக அமையாவிட்டாலும் ஓரளவு சந்தையை ஆரம்பித்து வைத்துது.

மாற்று உண்டியல்கள் பயன்படுத்தப்படுவதை அதிகமாக்க, ஏற்றுமதி உண்டியல்களுக்கு மாற்று உண்டியல் சந்தை திட்டத்தின்கீழ் 1958 அக்டோபர் 1ஆம் தேதி முதல்ஓராண்டிற்கு மறு தள்ளுபடி வசதிபெறத் தகுதி பெற்றவை என்று ரிசர்வு வங்கி அறிவித்தது. பின் அட்டவணையில் கண்டுள்ள வங்கிகளும் ரிசர்வு வங்கியினல் அந்நியச் செலாவணியில் ஈடுபட அனுமதிக்கப்பட்ட விற்பனையாளர்களும் (authorised dealers) இத்திட்டத்தின்படி மறு தள்ளுபடி வசதியை ரிசர்வு வங்கியிடமிருந்து பெறலாம். சிறு ஏற்றுமதியாளர்களுக்குப் பயனளிக்கும் வகையில் மறு தள்ளுபடி செய்யக்கூடிய தனி ஒரு உண்டியலின் மதிப்பு ரூ.20,000 ஆகவும், எந்த ஒரு சமயத்திலும் மறுதள்ளுபடி செய்யக்கூடிய உண்டியலின் மதிப்பு ரூ. 2 லட்சமாகவும் நிருணயிக்கப்பட்டது (பிறவகைக்கு, இந்த அளவுகள் முறையே ரூ. 50,000-ம், ரு. 5 லட்சமும் ஆகும்). பிற உண்டியல்களுக்கு உள்ளதுபோலவே இந்த ஏற்றுமதி உண்டியல்களுக்கும் 4% வட்டி நிருணயிக்கப்பட்டது. புரோநோட்டுகளை தவணை உண்டியலாக மாற்றத் தேவையான பத்திர செலவில் பாதியை ரிசர்வு வங்கி ஏற்கும். இத்திட்டத்தின்படி ஏற்றுமதி உண்டியல்களை மறு தள்ளுபடி செய்வது 1961ஆம் ஆண்டு

செப்டம்பர் 30 வரை நீடிக்கப்பட்டது. 1961 சனவரி 12ஆம் தேதி மறு தள்ளுபடி செய்யக்கூடிய தனி ஒரு தவணைப் புரோ நோட்டின் மதிப்பு ரூ. 5,000ஆக குறைக்கப்பட்டது. ஆனால், வங்கிகள் மறு தள்ளுபடி வசதிபெற எந்த ஒரே சமயத்தில் குறைந்தது ரூ. 1 லட்சம் மதிப்புள்ள மாற்று உண்டியல்களை ரிசர்வு வங்கியிடம் கொடுக்கவேண்டும். 1959 சனவரி 17ஆம் நாளிலிருந்து, முத்திரைக் கட்டணத்தின் முழுச் செலவையும் ரிசர்வு வங்கி ஏற்றுக்கொண்டது.

ரிசர்வு வங்கி கொண்டுவந்த உண்டியல் சந்தைத் திட்டம் பல குறைபாடுகளைக் கொண்டிருந்தது.

1. செயற்கை உண்டியல்களின் அடிப்படையில் இத் திட்டம் செயல்படாததால் வெற்றியடையவில்லை.

2. கேட்பு உண்டியல்களை (demand bills) தவணை உண்டியல்களாக (Usance bills) மாற்றும் திட்டம் தவறானது.

3. எளிதில் புரிந்துகொள்ள முடியாத அளவு சிக்கல்கள் இத் திட்டத்தில் நிறைந்துள்ளது.

4. 90 நாட்களுக்கு உட்பட்ட உண்டியல்களை மட்டும் இத் திட்டத்தின் கீழ் மறு தள்ளுபடி செய்யலாமாதலால் இதற்கு மேற்பட்ட கால அளவுள்ள உண்டியல்களை வங்கிகள் தள்ளுபடி செய்ய முடியாமல் போயிற்று.

5. நாணய மாற்று வங்கிகள், பெரிய வணிக வங்கிகள் ஆகியவை போன்றனவே இத் திட்டத்தை பயன்படுத்திக் கொள்ள முடிந்தனவே தவிர சிறிய வங்கிகளும் இத்திட்டத்தினை பயன் செய்துகொள்ள முடியவில்லை.

### ரிசர்வு வங்கியின் புதிய உண்டியல் மறுதள்ளுபடித் திட்டம்

புதிய உண்டியல் சந்தை ஏற்படுத்துவதுபற்றி ஆய்வு செய்ய ரிசர்வு வங்கி ஒரு குழுவினை நியமித்தது. இக்குழு 1970ஆம் ஆண்டு சூன் மாதம் தன் அறிக்கையை வெளியிட்டது. இக்குழு, ரிசர்வு வங்கி ஆரம்பிக்கப்படும்போது மாற்று உண்டியல்களை வாங்குவது/மறுதள்ளுபடி செய்வது மூலம் பின் பட்டியலிலுள்ள வங்கிகளுக்கு மறுநிதி வசதி அளிக்கும் நோக்கத்துடன் ரிசர்வு வங்கிச் சட்டம் பிரிவு 17 ஏற்படுத்தப்பட்டது. ஆனால், இவை இதுவரை செயலற்று உள்ளன. ரிசர்வு வங்கியின் முதல் திட்டத்தைப் பொறுத்தவரை (உண்டியல் சந்தையைப்

பற்றி), கடன்களை தவணைப் புரோ நோட்டுகளாக (Usance bills) மாற்றி மறுநிதி வசதி அளிப்பது உண்டியல் முறையும் இல்லை. இதனால் உண்டியல் சந்தை ஏற்படவும் மாட்டா என்பதோடு சில பரிந்துரைகளும் செய்தது. இதனை ஏற்று ரிசர்வு வங்கிச் சட்டத்தின் பிரிவு 17(21) (a)யின் கீழ் ஒரு புதிய மாற்று உண்டியல் மறு தள்ளுபடி திட்டத்தை ரிசர்வு வங்கி ஏற்படுத்தியது. இத் திட்டத்தின் முக்கிய அம்சங்கள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன.

1. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் உள்பட, பின்பட்டியலில் காணப்பட்டுள்ள எல்லா வணிக வங்கிகளும் ரிசர்வு வங்கியிடம் இத்திட்டத்தின்கீழ் மாற்று உண்டியலை மறு தள்ளுபடி செய்துகொள்ளலாம்.

2. சரக்கு விற்பனையின் காரணமாக எழுந்துள்ள உண்மையான வியாபார மாற்று உண்டியல் மட்டுமே இத்திட்டத்தின்கீழ் வரும்.

3. மாற்று உண்டியல் கீழ்க்கண்ட வகையில் இருக்க வேண்டும்:

(அ) சரக்கு வாங்குபவருடைய வங்கிமீது வரையப்பட்டு (drawn) அவ்வங்கியால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

(ஆ) சரக்கு வாங்குபவருடைய வங்கி பின்பட்டியலில் காணப்படாத வங்கியாயிருந்தால் கூடுதலாக உரிமம் பெற்ற பின்பட்டியலில் காணப்பட்டுள்ள மற்றொரு வங்கியின் கையொப்பம் தேவை.

(இ) உண்டியல் சரக்கு வாங்குபவர் பேரிலும் அவரது வங்கியின் பேரிலும் கூட்டாக எழுதப்பட்டு அவ்விருவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம்.

(ஈ) சரக்கு பெற்றவராலேயே உண்டியல் ஏற்றுக்கொள்ளப்பட்டால், சரக்கு வாங்குபவர் வங்கி தவிர்க்கக்கூடாத கடன் கடிதமும் (Irrevocable letter of credit) இதுபற்றி வங்கியின் அத்தாட்சியும் தேவை.

(உ) சரக்கு வாங்கியவரால் உண்டியல் ஏற்கப்பட்டு, விற்பவரால் மேலெழுத்து (endorsement) செய்யப்பட்டு, ஒரு

உரிமம் பெற்ற பின்பட்டியலில் கண்டுள்ள வங்கி முதிர்வில் பணம் தர உத்திரவாதமும் மேலெழுத்தும் செய்திருத்தல்.

(4) பொதுவாக உண்டியலின் முதிர்வு 90 நாட்களுக்கு மிகையாகக்கூடாது. சில தவிர்ப்பு நேரங்களில் 120 நாட்கள் வரை இருக்கலாம்.

(5) ரிசர்வு வங்கியினால் அவ்வப்போது அறிவிக்கப்பட்ட குறிப்பிட்ட சில சரக்குகள் சம்மந்தமான உண்டியல்களே இத் திட்டத்தின்கீழ் வரும்.

(6) தனியொரு உண்டியலின் மதிப்பு ரூ 5,000க்கு குறையாமலும், எந்த ஒரு சமயத்திலும் மறு தள்ளுபடி செய்ய ரூ. 5,000க்கு குறைவில்லாத உண்டியல்களையே ரிசர்வு வங்கியிடம் கொண்டுவர வேண்டும்.

இத் திட்டம் 1970ஆம் ஆண்டு நவம்பர் 1ஆம் தேதி முதல் அமுலுக்கு வந்தது.

ரிசர்வு வங்கி இப்புதிய உண்டியல் சந்தை திட்டத்தின்படி உண்டியல்களை பிரபலியப்படுத்த வங்கிகளை இது பற்றிய செய்திகளை அச்சிட்டும், விளம்பரப்படுத்தியும் தங்களுடைய வணிக வாடிக்கைக்காரர்களுக்குத் தெரியப்படுத்தச் சொல்லியது.

1971 ஜுலை 30ஆம் தேதியிலிருந்து வேறு சில வகை மாற்று உண்டியல்களும் இத்திட்டத்தின்கீழ் மறுதள்ளுபடி வசதிபெற தகுதி பெற்றன. அரசாங்கத்துறைகள், பிற அங்கீகரிக்கப்பட்ட அரசாங்க நிறுவனங்கள், சட்ட முறைக் கழகங்கள், அரசாங்கக் கம்பெனிகள் ஆகிய நிறுவனங்களுக்குச் சரக்கு விற்றதால் எழுந்த மாற்று உண்டியல்கள், இத்திட்டத்தின் விதிகளை நிறைவு செய்யும் என ரிசர்வு வங்கி அறிவித்தது.

1973-74ஆம் ஆண்டு, சுறுசுறுப்பான பருவத்தில் கடன் அளிப்பில் ரிசர்வு வங்கியிடம் உண்டியல்கள் மறு தள்ளுபடி ரூ. 244 கோடியாக இருந்தது. இதே பருவத்தில் 1972-73ஆம் ஆண்டு உண்டியல் மறு தள்ளுபடி ரூ. 19 கோடிதான் இருந்தது. உண்டியல் மறு தள்ளுபடியை இவ்வளவு அளவில் இருக்கும் என ரிசர்வு வங்கியே எதிர்பார்க்கவில்லை.*

---

*Reserve Bank of India - Annual Report, 1973-74. P. 27.

பின்பட்டியலில் கண்டுள்ள இந்திய வணிக வங்கிகள் கொடுத்த கடன் பற்றிய அட்டவணை.**

அட்டவணை-14 .

| ஆண்டு (ஏப்ரல்-மார்ச்சு) | கடன் ரொக்கக்கடன் மேல்வரைப்பற்று ரூ. கோடியில் | வாங்கிய மற்றும் தள்ளுபடி செய்த மாற்று உண்டியல்கள் |
|---|---|---|
| 1950—51 | 408.78 | 12.09 |
| 1951—52 | 347.77 | 47-65 |
| 1952—53 | 348.12 | 51.05 |
| 1953—54 | 349.77 | 64.04 |
| 1954—55 | 377.88 | 86.40 |
| 1955—56 | 457.30 | 114.80 |
| 1956—57 | 557.82 | 131.91 |
| 1957—58 | 654.56 | 108.74 |
| 1958—59 | 718.61 | 126.99 |
| 1959—60 | 796.20 | 134.22 |
| 1960—61 | 921.64 | 163.95 |
| 1961—62 | 978.94 | 179.22 |
| 1962—63 | 1086.60 | 218.44 |
| 1963—64 | 1275.01 | 246.97 |
| 1964—65 | 1456.32 | 297.41 |
| 1965—66 | 1694.44 | 312.16 |
| 1966—67 | 1942.21 | 425.59 |
| 1967—68 | 2200.09 | 482.41 |
| 1968—69 | 2470.68 | 537.69 |
| 1969—70 | 2961.83 | 598.87 |
| 1970—71 | 3340.36 | 879.73 |
| 1971—72 | 3822.98 | 942.91 |
| 1972—73 | 4643.37 | 960.90 |
| 1973—74 | 5494.78 | 1269.96 |

**ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா - ந. சட்டைநாதன் (த.பா. நி.) - ப. 56.

கொடுக்கப்பட்டிருக்கும் அட்டவணையினின்று ரிசர்வு வங்கி உண்டியல் தள்ளுபடி செய்த மாற்று உண்டியல்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டிருப்பதைக் காணலாம். காலக் கிரமத்தில் இது பல மடங்கு உயர்ந்ததால் நல்ல மாற்று உண்டியல் சந்தை ஏற்படுவதோடு இந்திய பணச்சந்தையும் மேம்பாடு அடையும்.

உண்டியல் சந்தையோடு இணைந்து மற்றுமொரு முக்கிய துணை அங்கமாக பணச்சந்தையில் அமைந்திருப்பது கருவூலச் சீட்டு (Treasury bill) சந்தையாகும். இந்தியாவில் மத்திய அரசும், மாகாண அரசுகளும், முதல் உலகப் போரின் போது முதன் முதலாக கருவூலச் சீட்டுகளை வெளியிட்டன. இப்போது மத்திய அரசு மட்டும் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. வணிக வங்கிகளும், பொதுமக்களும் இதனைப் பெரிதும் விரும்பி வாங்குகின்றனர். இது பற்றிய விவரங்கள் அட்டவணை 15-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

அட்டவணை-15.

இந்திய அரசாங்கக் கருவூச் சீட்டுகள்
(நிலுவை - ஆண்டு இறுதியில்)
ரூ. கோடியில்

| ஆண்டு (ஏப்ரல்-மார்ச்சு) | மொத்தம் | பொதுமக்கள் | ரிசர்வு வங்கி | மாநில அரசுகளும் பிறநிறுவனங்களும் |
|---|---|---|---|---|
| 1950—51 | 358.02 | —— | 274.52 | 83.51 |
| 1960—61 | 1106.30 | 29.13 | 886.41 | 190.75 |
| 1970—71 | 2517.92 | 88.43 | 2218.41 | 211.08 |
| 1971—72 | 2765.62 | 157.47 | 2449.41 | 158.73 |
| 1972—73 | 4044.26 | 240.78 | 3385.41 | 428.06 |
| 1973—74 | 4384.30 | 487.68 | 3741.41 | 155.21 |

**துணைக் கடன் சந்தை (Collateral loan market)**

ஒழுங்கு பெற்ற பணச் சந்தையின் முக்கிய அங்கமாக துணைக்கடன் சந்தை அமைந்துள்ளது. பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகளின் சொத்துக்களில் பாதிக்குமேல் துணைக் கடனாக இருக்கின்றது. துணைக்கடன் பின்கண்ட எவையேனும் ஒன்றாக இருக்கலாம்.

1. கடன் (Loans);
2. அதிகப்பற்று (Over draft);
3. ரொக்கப்பற்று (Cash Credit).

பின் இரண்டு வகையானக் கடன்களைப் பெற வங்கியிடம் நடப்புக் கணக்கு வைத்திருக்க வேண்டும். முதல் வகைக்கடன் அரசுப் பத்திரங்கள், முதல்தரக் கம்பெனிகளின் பங்குகள், விவசாய அல்லது உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவைகளின் ஈட்டின் பேரில் கொடுக்கப் படுகின்றது. பொதுவாக வங்கிகள் அரசு பத்திரங்களின் பேரில் 10இல்இருந்து 20 சதவீத இடைவெளியும் முதல் தரக் கம்பெனி பங்குகள் பேரில் 30-லிருந்து 40 சதவீத இடைவெளியும் பொருள்கள் மீது 30-லிருந்து 50 சதவீத இடைவெளியும் வைத்துக் கடனை அளிக்கின்றது. தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு மூலம் மைய அரசு ஆணையினையும் மனதில் கொண்டு வணிக வங்கிகள் இதனை நிருணயிக்கும்.

இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற வளர்ந்த பணச் சந்தையினை கொண்டுள்ள நாட்டில் நீண்ட கால வட்டி வீதம் குறுகிய கால வட்டி வீதத்தைவிட அதிகமாகவே இருக்கின்றது. ஆனால், இந்தியாவில் மிகவும் விசித்திரமாக குறுகிய காலக் கடன் வீதம் நீண்ட காலக் கடன் வீதத்தைவிட அதிகமாக உள்ளது. இந்திய வணிக வங்கிகளிடம் ஓராண்டிற்கு மேல் ஆனால் 2 ஆண்டிற்குள் தவணை வைப்பில் முதலீடு செய்தால் 6 சதவீதம் வட்டி கிடைக்கும், 5 ஆண்டுக்கு மேல் தவணை வைப்பின் மீது 10 சதவீதம் கிடைக்கும். ஆனால், நீண்ட கால அரசாங்கப் பத்திரங்கள் முதலீட்டில் $4\frac{3}{4}$ சதவீதம் வட்டிதான் கிடைக்கின்றது.

குறுகிய காலவட்டி வீதம் நீண்ட கால வட்டி வீதத்தைவிட அதிகமாக இருப்பதற்குக் காரணம் குறுகியகால விவசாயக் கடன் தேவை இந்தியாவில் அதிகமாக இருப்பதே, நட்டவச்சத்தின் காரணமாக விவசாயக் கடனுக்கு அதிக வட்டி விதிக்க நேர்ந்தது. இது கிராமப்புறத்தில் வட்டி வீதத்தை உயர்த்தி, முடிவில் நாடு முழுமைக்கும் குறுகிய காலக் கடன் வட்டி வீதத்தை உயர்த்தியுள்ளது.

இங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளில் வைப்புகளின் மீதான வட்டி வீதம், மைய வங்கி வீதத்திற்கு 2 சதவீதம் குறைந்தே இருக்கும். அந்நாடுகளில் வங்கிகள் நடப்புக் கணக்குகள்

மீது வட்டி ஏதும் கொடுப்பதில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

1. வட்டி கொடுப்பதால் வட்டி பெறவேண்டும் என்ற நோக்கோடு அப் பணத்தினை வணிக வங்கிகள் முதலீடு செய்ய ஆரம்பித்துவிடும். (நடப்புக் கணக்குப் பணம் தேவைப்படும் போது உடனடியாக கொடுக்க வேண்டிய பணம்).

2. வட்டி கொடுப்பதாலேயே இவ்வகையான வைப்பின் அளவு அதிகரிக்கப் போவதில்லை. ஏனெனில், இக் கணக்கினை வாடிக்கைக்காரர்கள் சௌகரியத்தை உத்தேசித்தே வைத்துள்ளனர்.

இந்திய வணிக வங்கிகள் உலகப் பெருமந்தம் (World depression) 1930-ஆம் ஆண்டு ஏற்படும்வரை நடப்புக் கணக்கின்பேரில் சுறுசுறுப்புப் பருவத்தில் $2\frac{1}{2}$ சதவீதமும் மற்றைய பருவத்திலும் கொடுத்துவந்தது. இவ்வட்டி வீதம் காலக்கிரமங்களில் குறைந்துகொண்டேவந்து 1969ஆம் ஆண்டு செப்டம்பர் 1ஆம் நாள் நடப்பு கணக்குகளுக்கும், 14 நாட்களுக்கு உட்பட்ட வைப்புகளுக்கும் வட்டி கொடுக்கக்கூடாது என்ற ரிசர்வு வங்கியின் உத்திரவின்பேரில் இப்போது நடப்புக் கணக்கின் பேரில் வட்டி கொடுப்பதில்லை.

இந்தியாவில் தவணை வைப்பின்மீது அளிக்கப்படும் வட்டி வீதத்தை நிருணயிக்குமுன் கீழ்க்கண்ட கருத்துக்களை கணக்கில் கொள்கிறார்கள்.

1. மற்றைய முதலீடுகளுக்கான வட்டி, குறிப்பாக அரசுப் பத்திரங்கள் மீதான வட்டி வீதம்.
2. குறுகிய காலச் சந்தை வட்டி வீதம்.
3. சேமிப்பு வைப்புகளின் மேல் அளிக்கப்படும் வட்டி வீதம்.

இந்திய வங்கிகளிடையே வெகுகாலம் வரை வைப்புகள் மீது அளிக்கும் வட்டி பற்றிய ஒற்றுமை இல்லை. போட்டி மனப்பான்மை மிகுந்து வெவ்வேறு இடங்களுக்கும், வெவ்வேறு கிளைகளுக்கும் வெவ்வேறு வட்டி வீதம் நிருணயம் செய்தனர். இப்போது ரிசர்வு வங்கி குறுக்கீடு செய்து வணிக வங்கிகள் அதிகபட்சமாக பல்வேறுபட்ட வைப்புகளுக்கும் தரவேண்டிய வட்டி வீதம் பற்றி வணிக வங்கிகளிடையே ஒற்றுமை ஏற்பட்டுள்ளது. இது பற்றிய விவரங்கள் அட்டவணை 16-இல் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அட்டவணையிலிருந்து பலவகைப்பட்ட வைப்புகள் மீது 1973, 1974ஆம் ஆண்டுகளில் அளிக்கப்படும் அதிகபட்ச வட்டி வீதங்களை அறியலாம்.

**அட்டவணை 16.**

வட்டி வீதங்களில் மாற்றம் பற்றிய அட்டவணை*

| வைப்பின் வகை | வட்டிவீதம் 1-4-1973 % | 1-4-1976 % | 23-7-1974 % |
|---|---|---|---|
| 1. நடப்பு வைப்பு, 14 நாட்கள் வரை வைப்புகள், 14 நாட்களில் அறிக்கை விடுத்து திரும்பப் பணம் பெறக்கூடிய வைப்புகள் | இவைகளுக்கு ரிசர்வு வங்கியின் முன் அனுமதி பெருமல் வட்டி ஏதும் கொடுக்கக்கூடாது. | | |
| 2. சேமிப்பு வைப்புகள் | 4.0 | 5.0 | 5.0 |
| 3. தவணை வைப்பு | | | |
| 1. 15 நாட்களிலிருந்து 45 நாட்கள் வரை | 2.75 | 3.0 | 3.0 |
| 2. 46 ,, 90 ,, ,, | 3.25 | 3.5 | 3.5 |
| 3. 91 ,, 6 மாதங்கள் வரை | 4.75 | 5.5 | 6.0 |
| 4. 6 மாதங்களிலிருந்து 9 ,, ,, | 5.25 | 6·25 | 7.0 |
| 5. 9 ,, 1 ஆண்டுக்குக் குறைவாக | 5.25 | 6.75 } | 8.0 (1 ஆண்டுக்குமேல் 3 ஆண்டுகளுக்கு குறைவாக) |
| 6. 1 ஆண்டிலிருந்து 2 ஆண்டுகளுக்குக் குறைவாக | 6.00 | 7.50 } | |
| 7. 2 ,, 3 ஆண்டுகள் உட்பட | 7.00 | 7.75 | 9·0(3 ஆண்டுகளுக்கும் அதற்குமேலும் 5 ஆண்டுகள் வரை உள்படும்) |
| 8. 3 ஆண்டுகளுக்கு மேல் 5 ஆண்டுகள் உட்பட | 7.25 | 8.0 | 1.00 |

* R.B.I. Annual Report, P. 45.

**பசார் சந்தை**

இச் சந்தையில் முக்கியமாக செயல்படும் நாட்டு வங்கியர்கள், லேவாதேவிக்காரர்கள், சீட்டுக் கம்பெனிகள், கடனகம் ஆகியவைகள் இன்றும் கணிசமானக் கடன் அளித்து வருகின்றனர். இவர்கள் வட்டி வீதத்திற்கும், மைய வங்கி வீதத்திற்கும் எந்த விதமான தொடர்பும் இருப்பதில்லை· இவர்கள் ரிசர்வு வங்கியின் கட்டுப்பாட்டிற்கு வெளியே இருக்கின்றனர். இவர்கள் ஒழுங்கமையாச் சந்தையில் தங்கள் இச்சம் போல் தொழில் செய்யும் முறை மைய வங்கியின் பணவாக்கக் கைக்கோள் (Monetary policy) வெற்றியடையாமல் போகின்றது. இவர்கள் தங்கள் மூலதனத்தைத் தவிர வணிக வங்கிகள், ஸ்டேட் வங்கி ஆகியவைகளின்று நகைகள் ஈட்டின் பேரிலும், சிலவகை உண்டியல்களைத் தள்ளுபடி செய்து பெற்றும் தங்களை ஒழுங்கமைந்த பகுதியுனுள் அமைத்துக் கொள்ள விரும்புவதில்லை. இதற்கு இவர்கள் பெறும் அதிக வட்டியும், வங்கித் தொழிலுடன் வணிகத் தொழிலினையும் சேர்த்து செய்வதே காரணமாகும்.

இரு கூருகப் பிரிந்து அமைந்துள்ள பணச் சந்தையை இணைக்கவும், பசார் சந்தையை தன் கட்டுப் பாட்டிற்குள் கொண்டு வரவும், ரிசர்வு வங்கி அவ்வப்போது முயற்சி எடுத்தும் இன்னும் அதனைப் பெறமுடியவில்லை. 1937ஆம் ஆண்டு மே மாதம் ரிசர்வு வங்கி பின் பட்டியலில் கண்டுள்ள வங்கிகளுக்கும், சராப்பு சங்கங்களுக்கும், நாட்டுவங்கியர்களை ரிசர்வு வங்கியின் கட்டுப்பாட்டில் கொண்டுவருவதுபற்றி அவர்களின் கருத்தைக் கோரி ஒரு சுற்றறிக்கை விடுத்தது. நாட்டு வங்கியர்களின் பலதரப்பட்ட வியாபாரம் காரணமாக நாட்டு வங்கியர்களுடன் நேரடி தொடர்பு கொள்ள முடியாத நிலைமையினை ரிசர்வுவங்கி அச் சுற்றறிக்கையில் ரிசர்வு வங்கி தெரியப் படுத்தி இருந்தது. இவர்களுடைய கருத்துக்களை உணர்ந்து ரிசர்வு வங்கி ஒரு திட்டம் வகுத்தது. இத்திட்டத்தின்படி நாட்டு வங்கியர்களுக்கு ரிசர்வு வங்கி நேரடி உண்டியல் மறுதள்ளுபடி வசதி, அரசாங்கப் பத்திரங்கள் மீது கடன், பணத்தினை ஓரிடத்தின்று மற்ற இடங்களுக்கு அனுப்பும் வசதி, மற்றும் வணிக வங்கிகளுக்குத் தரும் எல்லா சலுகைகளையும் தர இசைந்தது. ஆனல் நாட்டு வங்கியர்கள் கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டும்.

**1. வங்கித் தொழில் தவிர வேறெந்தத் தொழிலையும் செய்யக் கூடாது. தற்போது வணிகத்தினை செய்து வந்தால் அதனைக் கைவிட வேண்டும்.**

2. ஒழுங்கான கணக்குப் புத்தகங்களை வைத்திருப்தோடு, அவைகளை ரிசர்வு வங்கியின் ஆய்வுக்கு கொண்டு வரவேண்டும்.

3. மற்றைய பின் பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் அனுப்பவேண்டிய அத்துணை நமூனுக்கள், தகவலறிக்கைகளை ரிசர்வு வங்கிக்கு அனுப்ப வேண்டும்.

ரிசர்வு வங்கியின் இத்திட்டம் மைய வங்கி விசாரணைக் குழு 1931(Central Banking Enquiry Committce, 1931.) கூறிய பரிந்துரைக்கு ஒப்பவே அமைந்திருந்தது. இத்திட்டத்தினை நாட்டு வங்கியர்கள், அவர்கள் சங்கங்களுக்கு அனுப்பியும் யாதொரு வரவேற்பும் இல்லாமல் இத்திட்டம் நிறைவேற்றப்படாத திட்டமாகியது. பிறகு இத்திட்டத்தில் சிறு மாறுதல்கள் செய்து 1941ஆம்ஆண்டு ரிசர்வு வங்கிஎடுத்த மறுமுயற்சியும் பயனற்றுப் போனது. இதற்குப்பின் வேறெந்த முயற்சியும் எடுக்கவில்லை. நாட்டு வங்கியர்கள் நடவடிக்கையில் ஓரளவு கட்டுப்பாடு ஏதேனும் இருந்தால் அது மாநில அரசுகள் இவர்கள் நடத்தை பற்றிய சட்டப்படி பெறவேண்டிய உரிமம், அதிகபட்ச வட்டி வீதம் பற்றிய அரசு ஒழுங்குமுறை ஆகியவைகளே யாகும்.

வங்கிக்குழு 1972, நாட்டு வங்கியர்கள் பற்றிய பரிந்துரைகள் அந்த அத்தியாயத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. ரிசர்வு வங்கி எவ்விதமேனும் மைய வங்கிகளைத் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தாலன்றி இந்திய பணச் சந்தை மேம்பாடு அடைய முடியாது.

இந்திய பணச் சந்தையின் மற்றைய குறைபாடுகள் :

1. விவசாய நாட்டில் பருவகாலக்கடன் தேவை அதிகப்பட்டு சுறுசுறுப்பு பருவங்களில் குறுகிய காலக்கடன் தேவை அதிகரிக்கின்றது. இதனுல் நாட்டில் பணப்புழக்கம் சீராக அமையாமல் ஆண்டின் பல மாதங்களில் ஏற்றத் தாழ்வுகள் விளைகின்றன. 1971–72 சுறுசுறுப்பு பருவத்தில் 1970-71ல் இதே பருவத்தில் அளித்த கடனைவிட ரூ. 355கோடி அதிகமாகவும், 1972–73ல் இதே பருவத்தில் 1971–72ல் இக் காலத்தில் அளித்த கடனைவிட ரூ.878 கோடி அதிகமாகவும் கடன்பெறப்பட்டது. இதே போல் 1970 மந்தப் பருவத்தில் கொடுத்தகடனைவிட 1971 இதே பருவத்தில் ரூ. 163கோடி கடன் மேலாகவும், 1971 இதே பருவத்தில் முந்திய பருவத்தில் அளித்ததைவிட ரூ. 67கோடி அதிகமாகவும் கடன் பெறப்பட்டது.

2. வட்டிவீதம் நிலைபேறு அடையாமல் அவ்வப்போது ஏற்றத்தாழ்வு அடைவது இந்திய பணச்சந்தையின் ஒரு குறைதிசயமாக அமைகின்றது. ஓராண்டிலேயே பலவிதக் கடன் களுக்கு பலவித வட்டிவீதம் பெறும் நிறுவனங்களைப் பொருத்து மாறி இருக்கின்றது.

3. பணச்சந்தை நிரந்தரமான நிலையாகவும், நெகிழ்ச்சி உடையதாகவும் இல்லாமல் இருக்கின்றது. பணச் சந்தை தேவையைப் பூர்த்தி செய்ய விரிவடைவும் தேவை குறைவின் போது குறைந்துபோகவும் உள்ள நிலையில் இருத்தல் வேண்டும்.

இந்தியப் பணச்சந்தையில் வியாபார வங்கிகள் (Merchant Banking) அமைப்பது பயனுள்ளதாக இருக்கும் என வங்கிக் குழு 1972இல் பரிந்துரை செய்துள்ளது. பணச்சந்தையில் இவ் வங்கி சீரிய பணியினைச் செய்யமுடியும் என குழு கூறியுள்ளது. மேலைநாடுகளில் இது போன்ற வங்கிகள் தரகர் போலிருந்து தொழில் வளர்ச்சிக்குத் தேவையான கடனளிப்பதுடன் ஒரு தொழில் திட்டம் தோற்றுவித்தலிலும் அதனை ஆரம்பித்தலிலும் உள்ள பல காரியங்களைச் செய்து தொழில் முன்னேற்றத்திற்கு வழி வகுக்கின்றன. இங்கிலாந்தில் இது போன்ற வங்கிகள் உண்டியல்களையும் ஏற்றுக் கொள்ளுகின்றன. இதனால் இவ் வங்கியின் வாடிக்கைக்காரர்கள் பணச்சந்தையில் குறைந்த வட்டி வீதத்தில் உண்டியல்களைத் தள்ளுபடி செய்து கொள்ள முடிகின்றது. இவ்வித வங்கிகள் பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி போன்ற பெரியநகரங்களில் வணிக வங்கிகள் மற்றும் சிறப்பு நிதிக்கழகம் இணைந்து மேற்கொள்ளலாம் என்றும் இவை கீழ்க்கண்ட பணிகளை ஏற்கலாம் என சிபாரிசு செய்துள்ளது.

1. இந்தியத் தொழில் திட்டங்கள் தோற்றுவித்தல், நிதி அளித்தல்.

2. சிறிய, மத்திய தர சேமிப்பாளர்கள், பிராவிடண்ட் நிதி, உதவிச் சம்பள நிதி போன்றவைகளில் முதலீடு செய்ய அறிவுரை வழங்குதல்.

**ஒழுங்கமைதி பெருத பணச் சந்தையில் அங்கம் வகிக்கும் சீட்டுக் கம்பெனிகள் பற்றி வங்கிக் குழுவின் சிபாரிசுகள்.**

1. சீட்டுக்கம்பெனி நடத்தை பற்றிய சட்டம் ஒவ்வொரு மாநில அரசும் கொண்டுவரவேண்டும்.

2. இச் சட்டம் ஒவ்வொரு மாநிலத்திலும் கொண்டுவரப் படும் வரை, எந்தமாநிலங்களில் இச்சட்டம் அமுலில் இருக்கின்றதோ அச்சீட்டுக் கம்பெனி இச்சட்டம் இல்லாத மாநிலத்தில் கிளைகள் பெற்றிருந்தால் அவைகளுக்கும் இச் சட்டம் உட்பட்டதே என சட்டத் திருத்தம் கொண்டுவர வேண்டும்.

3. போலி சீட்டுக்கம்பெனியில் ஏமாறும் மக்களை பாது காக்கும் வண்ணம் வணிக வங்கிகளே சீட்டு நடத்தலாம். இதைப்பற்றி ரிசர்வு வங்கி திட்டத்தைக் கொடுக்கலாம்.

4. உரிமம் பெருமல் எந்த ஒரு சீட்டுக் கம்பெனியும் நடத்தப்படக்கூடாது.

5. இவைகள் தங்கள் பெயரோடு கழகம் என்ற வார்த் தையைச் சேர்த்து ஒரு கூட்டுப் பங்கு கம்பெனியோ என்ற ஐயத்தை ஏற்படுத்துவதால் 'கழகம்' என்ற வார்த்தையை அவர்கள் பயன்படுத்தக்கூடாது.

6. அவைகள் கடன் அளித்தால் அதிகபட்ச வட்டி எத்துணை வசூலிக்கலாம் என்று நிருணயிக்க வேண்டும்.

7. அவர்கள் பொறுப்புக்கும், சொந்த நிதிக்கும் இருக்க வேண்டிய மடங்கும், அவர்கள் எளிவரல் தன்மை சொத்துக்கள் (Liquid assets) வைத்திருக்க வேண்டியவைகள் பற்றியும் சட்ட நிர்ணயம் தேவை.

8. இவைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரி ஆய்வு நடத்த வேண்டும்.

நிதியகங்களைப் பொருத்தமட்டில் கீழ்க்கண்ட சிபாரிசினை வங்கிக் குழு 1972இல் செய்தது.

1. ரிசர்வு வங்கியோ அல்லது இதற்காக ஏற்படுத்தப்பட் டுள்ள ஒழுங்குபடுத்தும் அதிகாரியோ உரிமம் அளிக்க வேண்டும்.

2. குறைந்தபட்ச எளிவரல் தன்மை மடங்கு (liquidity ratio) குறிப்பிடப் படவேண்டும்.

3. குறைந்தபட்ச செலுத்தப்பட்ட மூலதனம், காப்புநிதி ஆகியவைகள் குறிப்பிடப்படுவதோடு, லாபத்திலிருந்து ஆண்டு தோறும் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை காப்பு நிதிக்கு ஒதுக்கீடு செய்ய வேண்டும்.

4. ஒழுங்குபடுத்தும் அதிகாரி இந்த நிதியகங்களை ஆய்வு செய்ய வேண்டும்.

இதேபோல் தவணைக் கொள்முதல் கழகங்களுக்கும் உரிமம் வழங்கப்பட்டு அவைகள் வட்டி வீதம் பற்றியும், அவைகளின் நடவடிக்கைகளையும் ஆய்வு செய்யவேண்டும்.

**தீர்வகங்கள் (Clearing Houeses)**

பணச் சந்தையின் முக்கிய அங்கமாகத் திகழ்வது வணிக வங்கிகள். வங்கிகளில் கணக்கு வைத்திருப்பவர்கள் தங்களுக்கு தேவையானபோதோ, அல்லது மற்றவர்களுக்குத் தேவையான போதோ, அல்லது மற்றவர்களுக்குப் பணம் கொடுக்க வேண்டுமேயானால் காசோலை விடுப்பர். காசோலை ஒரு மாற்றக் கூடிய கருவி (Negotiable Instrument) காசோலை சில சிறப்பு இயல்புகளைக் கொண்டுள்ளன.

1. இதனைப் பெற்றிருப்பவர், ஆணை (order) காசோலையாய் இருந்தால் மேலெழுத்திட்டு (endorsement) கொடுப்பதின் மூலமும், பெருபவருடைய (bearer) காசோலையானல் மேலெழுத்து கூட இல்லாமல் கொடுத்தாலேயே மற்றவருக்கு மாற்றலாம்.

2. காசோலைகளை மாற்றுபவர்களைவிட மாற்றப்படுபவர் களே நல்ல உரிமை பெறுவர்.

3. இக் காசோலையை முறைப்படி பெற்றவர் (holder in due course) மிக நல்ல உரிமை பெறுவதுடன் அவரிடம் சென்ற உடன் இதற்குமுன் ஏதேனும் குறையிருந்தாலும் அது நீங்கிவிடும். (நல்ல கைம்மாறுக்கு, நல்ல எண்ணத்துடன், காசோலையில் தவறு ஏதும் இல்லை என்று உணர்ந்து வாங்கு பவர், முறைப்படி பெற்றவராவர்).

4. காசோலை பெற்றவர் ஒவ்வொருவரும் முறைப்படி பெற்றவர் என்றே எண்ணங்கொள்ள வேண்டும் (Presumption)

5. ஒவ்வொரு காசோலையும் கைம்மாறுக்காக (Consideration) அளிக்கப்பட்டது என்றும் கொள்ளவேண்டும்.

வசதிக்காவும், பத்திரத்திற்காகவும், கொடுத்த பணத்திற்கு பதிவு (entry) வேண்டும் என்ற நோக்கத்துடன் காசோலைகள் விடுக்கப்படுகின்றன. காசோலையைப் பெற்றவர், அக் காசோலைக்கு பணம் தர வேண்டிய வங்கி இருக்கும் அதே ஊரில் இருந்தால் அக் காசோலையை நேரே அந்த வங்கியின் அலுவலகத்தில் கொடுத்து பணம் பெறலாம். ஆனால், அக் காசோலை பொதுக்கீறல் செய்யப் பட்டிருந்தால் (General crossing) ஒரு வங்கியின் மூலம் தான் வசூல் செய்யமுடியும். அதுவே சிறப்பு கீறல் (Special crossing) செய்யப் பட்டிருந் தால் கீறலில் குறிப்பிட்டிருக்கும் வங்கியின் மூலமாகத்தான் அக் காசோலையை வசூல் செய்யமுடியும். நடைமுறையில் பல நிறுவனங்களும், தனி நபர்களும், அரசும், அரசுத்துறை தனியார் துறை நிறுவனங்கள், பல்வேறு வணிகர்கள் அகியோர்கள் நாள்தோறும் நாட்டின் பல்வேறு பாகத்திலிருப் போர்களுக்கு காசோலை விடுக்கின்றனர். பலரிடமிருந்து காசோலைகளைப் பெற்றுக் கொள்ளவும் செய்கின்றனர். ஒவ்வொரு வங்கியும் அன்றாடம் ஆயிரக்கணக்கான காசோலை களைத்தன் வாடிக்கைக்காரர்களுக்காக வசூல் செய்ய எடுத்துக் கொள்ளுகின்றன. அதேபோல் இவ் வங்கி பணம் தரவேண்டிய காசோலைகளை மற்ற வங்கிகள் வசூலுக்கு எடுத்துக் கொண் டிருக்கலாம். இதனை வசூல் செய்ய ஒவ்வொரு வங்கியின் கிளைக்கும் சென்று பெற்றுக் கொள்வது சாத்தியமானதல்ல. மேலும்; இது புத்திசாலித்தனமுமில்லை. எனவே, எல்லா வங்கி களும் வசூலிக்க வேண்டிய காசோலைகளைத் தீர்வகங்களுக்குக் கொண்டு வருகின்றன. தீர்வகப்பணி மைய வங்கியின் முக்கியப் பணிகளில் ஒன்றாக இருக்கின்றது.

வங்கிகள் அதிகரிக்க, அதிகரிக்க, மக்கள் காசோலைகள் பயன்படுத்துவது அதிகரிக்க, அதிகரிக்க, தீர்வகங்களின் தேவையும் அதிகரிக்கின்றது. பல வங்கிக் கிளைகளை கொண்ட பெரும் நகரங்களில் தீர்வகம் ஏற்படுத்தப்படுகின்றன. அதிகத் தீர்வகங்கள் இருந்து காசோலைகள் கணக்கை சீக்கிரம் சரி செய்து கொடுத்தால்தான் வங்கிகள் வசூலித்தக் காசோலைகளுக் கான பணத்தினை வாடிக்கைக்காரர்களின் கணக்கில் வரவு வைக்க வேண்டும். இதில் காலதாமதமானல் வாடிக்கைக் காரருக்கு ஏற்படும் இன்னலைத் தவிர, வசூலிக்கும் வங்கி திறமையற்றது என வாடிக்கைக்காரர்களின் மனதில் தோன்றச் செய்யும்.

தீர்வகத்தில், ஒவ்வொருநாளும் குறிப்பிட்ட நேரத்தில் வங்கிகளின் பிரதிநிதிகள் தீர்வகத்திற்கு வருவார்கள். பதிவேடு ஒன்று தீர்வகத்தில் வைத்திருக்கப்படும். இதில் ஒவ்வொரு வங்கியும் கொடுக்கின்ற, பெற்றுக் கொள்ளுகின்ற காசோலைகள் எல்லாவற்றையும் பதிவு செய்வார்கள். ஒவ்வொரு வங்கியின் பிரதிநிதியும் பிற வங்கிகளுக்குத்தன் வங்கி கொடுக்கவேண்டிய காசோலை பற்றிய விரிவான பட்டியலொன்றும் தயாரிப்பார். அப்பட்டியலில் காசோலையின் தொகை, காசோலையின் எண்ணிக்கை, மொத்தத் தொகை ஆகியவை பற்றிய விவரங்கள் இருக்கும். இப்பட்டியலுக்கு அளிப்புக் குறிப்பு (Delivery slip) என்று பெயர். தீர்வக அதிகாரி ஒருவர் ஒவ்வொரு வங்கிக்கும் கொடுக்க வேண்டிய காசோலைகள், அவற்றின் தொகை ஆகியவைகளை குறித்துக் கொண்டு அளிப்புக் குறிப்பை மாற்றிக் கொள்வர். இறுதியில் எந்தெந்த வங்கி எவ்வெவ் வங்கிகளுக்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று கணக்குப் பார்ப்பர். உதாரணமாக ஒரு நாள் தீர்வகக் கணக்கு முடிக்கும்போது இந்தியன் வங்கி ஸ்டேட் வங்கிக்கு காசோலைகளுக்கு ரூ. 3 லட்சம் தரவேண்டும், ஸ்டேட் வங்கி இந்தியன் வங்கிக்கு ரூ. 2 லட்சம் தரவேண்டுமென்றால், இந்தியன் வங்கி தான் அதிகப்படியாகத் தர வேண்டிய ரூ. 1 லட்சத்தை ஸ்டேட் வங்கிக்குக் கொடுத்தால் போதும். இதனையும் ரொக்கமாகத் தரவேண்டியதில்லை. தீர்வகம் எல்லா வங்கிகளின் கணக்கையும் வைத்திருக்கும். மேலே சொல்லப் பட்ட நடவடிக்கைக்கு தீர்வகம் இந்தியன் வங்கிக் கணக்கில் ரூ. 1 லட்சம் பற்று செய்து ஸ்டேட் வங்கிக் கணக்கில் ரூ. 1 லட்சம் வரவு வைக்கும்.

இந்தியாவின் முக்கிய நகரங்களில் தீர்வகங்கள் உள்ளன. ரிசர்வு வங்கிகள் உள்ள இடத்தில் ரிசர்வு வங்கி தன் அலுவலகக் கட்டிடத்திலேயே தீர்வகத்தை நடத்துகின்றது. ரிசர்வு வங்கி அலுவலகம் இல்லாத இடங்களில் ஸ்டேட் வங்கியோ, அதன் துணை வங்கிகளோ தீர்வகங்களை நடத்து கின்றன. சூன் 1961ஆம் ஆண்டு 81 தீர்வகங்கள் இந்தியாவில் இருந்தன. இவற்றில் 7 ரிசர்வு வங்கியினாலும் 60 ஸ்டேட் வங்கிகளினாலும் 13 ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகளினாலும், 1 ஒரு வணிக வங்கியினாலும் நடத்தப்பட்டு வந்தன. இதன் எண்ணிக்கை 1970ஆம் ஆண்டு சூன் 30ஆம் தேதி 105 ஆக உயர்ந்திருந்தது. 50,000க்கு மேல் மக்கள் தொகையுள்ள, நூற்றுக்கு மேற்பட்ட, வங்கிகள் உள்ள இடங்களில் தீர்வகம் ஏதேனும் இல்லாமல் இருக்கின்றது. காசோலை அதிகரிப்பு

எண்ணிக்கை ஆண்டுதோறும் 7·4 சதவீதம் உயர்ந்து கொண்டே போகின்றது. எனவே, மேலும் தீர்வகங்கள் ஏற்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. இந்தியாவில் தீர்வகங்கள் இல்லாத சில இடங்களில் காசோலைக் கணக்கு சரிப்படுத்த ஸ்டேட் வங்கிமீது காசோலை விடுத்து வங்கிகள் சரிகட்டும் முறையும் உள்ளது.

ஒரு வங்கி தீர்வகத்தில் அங்கத்தினராக வேண்டுமானால் அதற்கு மற்றைய அங்கத்தினர்கள் இசைவு தரவேண்டும். சிறிய அல்லது வலுவற்ற வங்கியாக இருந்தால் தீர்வகத்தில் சேர அங்கத்தினர்கள் மறுக்கலாம். ரிசர்வு வங்கி தீர்வகங்களை மேற்பார்வையிடும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டுள்ளது. ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி தவிர தனி மன்றங்களும் தீர்வகங்களை அமைப்பதுண்டு. கல்கத்தாவில் இரண்டு தீர்வகங்கள் செயல்பட்டு வருகின்றன. ஒன்றை கல்கத்தா தீர்வக வங்கி வங்கிகள் மன்றமும் (Culcutta Clearing Banks Association) மற்றொன்றை பெருநகர வங்கியல் தீர்வக மன்றமும் (Metropolitan Banking Association) நிறுவி நடத்தி வருகின்றன.

வங்கியல் பெரும் வளர்ச்சி பெற்று சிறப்புடன் நடைபெறும் இங்கிலாந்தில் தீர்வகம் திறப்பாக இயங்கி வருகின்றது இலண்டன் தீர்வகம் (The London Clearing House) மூன்று பெரும் பிரிவுகளாகப் பணிபுரிகின்றது. அவையாவன :

1. நகரத் தீர்வகங்கள் (Town Clearing).

2. பெரும் நகரத் தீர்வகங்கள் (Metropolitan Clearing).

3. கிராமியத் தீர்வகங்கள் (Country Clearing).

மேலே கூறியவைகளில் முதல் வகையான தீர்வகங்களில் இலண்டன் மாநகரின் அருகாமையில் நடக்கும் தூரத்தில் அமைந்திருக்கின்ற வங்கிகளின்மீது வரையப்பட்டிருக்கின்ற காசோலைகள் தீர்க்கப்பட வரும்.

இரண்டாம் வகைத் தீர்வகங்களில், நகரத்தீர்வக எல்லைக்கு வெளியில், இலண்டன் அஞ்சல் மாவட்ட எல்லைக்குள் அமைந்திருக்கின்ற வங்கிகள் மீது வரையப் பெற்று இருக்கும் காசோலைகள் தீர்க்கப்பட வரும்.

மூன்ருவது வகையான கிராமியத் தீர்வகங்களில் நகர் தீர்வக, பெருநகர் தீர்வக எல்லைக்கு வெளியிலுள்ள எல்லா வங்கிகள் மீதும் எழுதப்பெற்ற காசோலைகள் தீர்க்கப்படவரும்.

இலண்டன் தீர்வகத்திற்குக் காசோலைகள் வந்தவுடன் அவற்றை, அவை செல்ல வேண்டிய பகுதியை ஒட்டி மூன்று பிரிவாகப் பிரிப்பார்கள். பின்னர் நகரத் தீர்வகங்களுக்குச் செல்ல வேண்டியவைகளை 'T' (Town Clearing) என்றும் பெரு நகரத் தீர்வகங்களுக்குச் செல்ல வேண்டியவைகளை 'M' (Metropolitan Clearing) என்றும் கிராமியத் தீர்வகங்களுக்குச் செல்ல வேண்டியவைகளை 'C' (Country Clearing) என்றும் குறியிட்டு அந்தந்தப் பகுதிகளுக்கு அனுப்பி வைப்பர்.

தீர்வக வசதிகள் பற்றி வங்கிக்குழு கீழ்க்கண்டுள்ள பரிந்துரைகளைச் செய்துள்ளன.

1. மக்கள் தொகை 50,000-க்கு மேலும், 3 அல்லது 4 வங்கிகள் இருக்கும் இடங்களில் தீர்வகங்கள் திறக்க ஆயத்தங்கள் செய்ய வேண்டும். இதைப் பொருத்தவரை ஸ்டேட் வங்கி முக்கிய பங்கை ஏற்று தீர்வகம் ஏற்பட முயற்சிக்கவேண்டும். இவ்வித இடங்களில் ஸ்டேட் வங்கி கிளை ஏதும் இல்லை என்ருல், இங்குள்ள வணிக வங்கிகள் ஒன்றுகூடி ஏற்படுத்த முயற்சிக்க வேண்டும். முதன்மை வங்கி (Lead Bank) முன்னிருந்து நிறுவ முயற்சிக்கலாம்.

2. பெரு நகரங்களில் மேலும் அதிகப்படியான தீர்வகங்கள் ஏற்படுத்த வேண்டும். பின்பட்டியலில் இல்லாத வங்கிகளும் தீர்வக அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும். இதுபற்றி ரிசர்வு வங்கியும், ஸ்டேட் வங்கியும் கலந்து ஆலோசனை செய்யவேண்டும்.

1969ஆம் ஆண்டு பம்பாய், கல்கத்தா ஆகிய இரு இடங்களில் மட்டும் தீர்வகங்களுக்கு வந்த காசோலைகளின் எண்ணிக்கை முந்திய ஆண்டிலிருந்த எண்ணிக்கையான 104.61 லட்சம் 130.83 லட்சத்திலிருந்து முறையே 199.39 லட்சம் 336.90 லட்சமுமாகவும் உயர்ந்துள்ளது. வரும் ஆண்டுகளில் காசோலை புழக்கம் அதிகமாகி தீர்வகங்களின் அவசியம் மேலும் ஏற்படும். தீர்வகங்கள் விரிவுபடுத்தப்படுவதோடு, திறமை பயன் படுத்தப்பட்டால் பணச்சந்தை சிறப்பாக இயங்கப் பயன்படும்.

## மலிவுப் பணக்கொள்கையும் அருமைப் பணக் கொள்கையும் (Cheap money Policy and Dear money Policy)

மலிவுபணக்கொள்கை என்பது பணச்சந்தையில் குறைந்த வட்டிவீதத்தில் பணம் கடன் கொடுக்கப்படுவதுடன், எளிதாக வங்கிகளிடமிருந்து கடனையும் பெற்றுக் கொள்ளும் நிலையைக் குறிக்கும். கடன் கொடுப்பதில் மலிவு பணக்கொள்கை அனுசரிக்கப்பட்டால் வங்கிகள் தாராளப் போக்கைக்கொள்ளும். இதற்கு மாறாக அருமைப் பணக்கொள்கை கடைபிடிக்கப் பட்டால் பணம் அதிக வட்டி வீதத்தில் கொடுக்கப்படுபதைத் தவிர கிடைக்கும் பணம் கட்டுப்படுத்தப்பட்டு எளிதில் கிடைக்காத நிலை ஏற்படும். வங்கிகள் கண்டிப்பான போக்கை அனுசரித்து கடன் கொடுப்பதில் சிக்கனத்தன்மையை ஏற்படுத்தும். கீன்சு பெருமகனார் மலிவுப் பணக் கொள்கை பொருளாதார மந்த நிலமையில் பயன்படுத்தப்பட்டால், தொழில் மற்றும் வியாபார வட்டாரங்களில் நம்பிக்கை ஏற்பட்டு முதலீடு செய்ய ஆரம்பிப்பார்கள். தொழில் முதலீட்டினால் பலர் வேலைவாய்ப்பு பெறுவதோடு அவர்களின் வருவாயும் உயரவே அவர்கள் தேவை அதிகரிக்கும். அவர்கள் தேவை அதிகரிக் கவே மேலும் புதிய தொழிலமைப்புகள் தோன்றி மலிவுப் பண நிலையைப் பயன்படுத்தி மேலும் மேலும் முதலீடு செய்வர். இதுவே மந்த நிலையைப் போக்கி பொருளாதார முன்னேற்றத் திற்கு வழிசெய்ய உதவும் எனக் கூறினர். இதேபோல் போர்க் காலங்களிலும், அரசு கடன்களை திருப்பித் தரவேண்டிய காலங் களிலும் மலிவுப் பணக்கொள்கையைப் பின்பற்றினால் அரசுக்கு இலாபகரமாக இருக்கும். இரண்டாவது உலகப்போரின்போது உலகிலுள்ள அரசுகள் அனைத்தும் குறைந்த வட்டிவீதக் கொள்கையினையே பின்பற்றின.

மலிவுப் பணக்கொள்கை வெற்றியடைய வேண்டுமானால் கட்டுப்பாடான பொருளாதாரம் (Controlled economy) தேவைப் படும். ஆனால், மலிவுப் பணக்கொள்கை தொடர்ந்து பயன் படுத்தப்பட்டு வந்தால் நாட்டில் புழக்கத்திலிருக்கும் பணம் அதிகரித்து பணவீக்கம் ஏற்படுத்தக்கூடும். பணவீக்கம் ஏற்பட்டால் பொருள் விலைகள் உயர்ந்து கொண்டேபோகும். ஆரம்பத்தில் ஓரளவு உயர்ந்துபோகும் பணவீக்கம் சில ஆண்டுகளில் கட்டுப்படுத்த முடியாத பணவீக்கமாக மாறுவதும் உண்டு. 1951 க்குப் பின் உலகிலுள்ள எல்லா மைய வங்கிகளும் அருமை பணக்கொள்கையையே மேற் கொண்டு வருகின்றன. கொரியப் போரினால் உலகெங்கும் வீசி

எறியப்பட்ட பணவீக்க அலையினின்று மீண்டுவர வழி இல்லாமல் பாங்க் ஆஃப் இங்கிலாந்து இக்கொள்கையைப் பயன்படுத்த ஆரம்பித்தது. இதைத் தொடர்ந்து உலகிலுள்ள மைய வங்கிகள் அனைத்தும் மைய வங்கி வீதத்தை உயர்த்தின. இந்தியாவில் 1957ஆம் ஆண்டு முதல் அருமைப் பணக் கொள்கை தீவிரமாக அமுல் செய்யப்பட்டு வருகின்றது. மைய வங்கி வீதம் அவ்வப்போது உயர்த்தப்படுவதோடு மற்றைய கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைப் பயன்படுத்தி பணப் புழக்கத்தையும் கட்டுப்படுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஐந்தாண்டு திட்டங்கள் வாயிலாக பல்வேறு துறைகளிலும் தொடர்ந்து பெரும் முதலீடுகள் செய்யப்பட்டு வந்தன. இம் முதலீடு அனைத்தும் உற்பத்தியைப் பெருக்குபவையோ அல்லது உடனடி பயனை அளிக்கக்கூடியனவோ அல்ல. கல்வி, சுகாதாரம், மராமத்து, கட்டடம், சாலை, ரயில் போக்குவரத்து, செய்தித்துறை ஆகியவைகளையும் தவிர பெரிய பலநோக்கு நீர்த் தேக்கத் திட்டங்கள் ஆகியவை உற்பத்தியை உடனடியாகப் பெருக்குவன அல்ல. ஆனால், இவற்றில் செலவிட்ட தொகை பணப்புழக்கத்தை அதிகரித்து பணவீக்கத்தை ஏற்படுத்தியது. இதனைக் கட்டுப்படுத்த மைய வங்கி வீதம் தொடர்ந்து உயர்த்தப்பட்டு வந்துள்ளது அட்டவணை 17லிருந்து காணலாம்.

அட்டவணை-17.

| ஆண்டு | ரிசர்வு வங்கியின் மையவங்கி வீதம் | | |
|---|---|---|---|
| | மைய வங்கிவீதம் | | |
| 1951 நவம்பர் | 3 | லிருந்து | 3½% |
| 1957 மே | 3½ | ,, | 4% |
| 1963 ஜனவரி | 4 | ,, | 4½% |
| 1964 செப்டம்பர் | 4½ | ,, | 5% |
| 1965 பிப்ரவரி | 5 | ,, | 6% |
| 1968 மார்ச்சு | 6 | ,, | 5% |
| 1971 ஜனவரி | 5 | ,, | 6% |
| 1973 மே | 6 | ,, | 7% |
| 1974 જூலை | 7 | ,, | 9% |

தொடர்ந்து மைய வங்கிவீதம் உயர்த்தப்பட்டுவந்துள்ளதை அட்டவணையிலிருந்து அறியலாம். 1968 மார்ச் மாதம் மட்டில் மைய வங்கி வீதம் 6 சதவீதத்திலிருந்து 5 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. முந்துமைத்துறை வளர்ச்சிக்கு மலிவு பணக் கொள்கை தேவை. இது இந்தியாவில் செயல்படுத்தப் படவில்லை என சில பொருளாதார வல்லுநர்கள் கருதவே ரிசர்வு வங்கி மைய வங்கி வீதத்தைக் குறைத்தது. இதன் விளைவால் பொருளாதார வளர்ச்சி (economic recovery) ஏதும் ஏற்படவில்லை. இதற்கு மாறாக இக் கொள்கை விலைவாசிகளை இதற்கு முந்திய ஆண்டுகளைவிட மிக அதிகம் உயர்த்தி பண வீக்கத்தினை அதிகப்படுத்தவே, ரிசர்வு வங்கி மீண்டும் 1971ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மைய வங்கி வீதத்தை 5 இலிருந்து 6 சதவீதமாக உயர்த்தியது. பிறகு இது மேலும் உயர்ந்து எப்போதும் இருந்திராத அதிக வட்டி வீதமான 9 சதவீதத்தை தூலை 1974இல் எட்டிப்பிடித்தது. இந்த உயர்வு கூட பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தல் போதாது என வாதிடு பவரும் உண்டு. இந்தியாவில் மட்டும் இன்றி உலகெங்கும் அருமைப் பணக் கொள்கையே இப்போது கையாளப்படு கின்றது. மைய வட்டி வீதம் அவ்வப்போது உயர்ந்ததேயன்றி இதனுடைய சக்தி மற்றைய வட்டி வீதங்களில் இதேபோல் உடனடியாக மாற்றம் ஏற்பட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். மைய வங்கி வீதத்திற்கும் ஒழுங்கமையாத பணச் சந்தையின் வட்டி வீதத்திற்கும் யாதொரு ஒற்றுமையும் நிலவி வரவில்லை.

### ஏற்பகங்கள்

ஒரு பணச்சந்தையில் இருக்கவேண்டிய துணைச் சந்தை களில் முக்கியமானதொன்று ஏற்பகமாகும். இவ்வித அமைப் பிலிருந்து உண்டியல்களை ஏற்குமேயானால் நல்ல உண்டியல் சந்தை ஏற்பட வாய்ப்பிருக்கும். ரிசர்வு வங்கியின் உண்டியல் சந்தைகளைப் பற்றி மேலே விவரித்தோம். ஆனல், இச்சந்தை பெரும் வெற்றியடைய வேண்டுமானல் ஏற்பகங்கள் இந் தியாவில் ஏற்படுத்தவேண்டும். இவை இல்லை என்றல் உண்டியல் சந்தை விரிவுபடாது எனக்கருதுபவர்களும் உண்டு. வியாபார வங்கிகள் (Merchant Banks) ஏற்படுத்தப்பட்டால் அவை ஏற்பகமாகச் செயல்படலாம் அல்லது தனி ஏற்பகங்கள் நிறுவ வேண்டும் என்று வங்கிக் குழு செய்த பரிந்துரையை ரிசர்வு வங்கி நிராகரித்துள்ளது. இப்போதுள்ள நிலைகள் இவை களை ஏற்படுத்தத் தேவையில்லை எனக் கருத்து கொண்டிருக் கிறது. இப்போதில்லையாயினும் காலக் கிரமத்திலேனும்

ஏற்பகங்கள் ஏற்படாவிட்டால் இந்திய பணச்சந்தை மேம்பாடு அடைய முடியாது.

## அகில இந்திய வங்கிகள் கூட்டு (All India Bankers' Association)

மத்திய வங்கிக் குழு 1931, இதுபோன்ற ஒரு கூட்டு நிறுவப் படவேண்டும் எனக் கூறியது. இதில் ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, வணிக வங்கிகளுடன்கூட நாட்டு வங்கியரும் அங்கத் தினராக்கப்படவேண்டும் எனவும் அக்குழு கூறியது.

இவ்வித அமைப்பு ஏற்படுத்தப்பட்டால் வங்கிகளிடையே ஒழுங்கமைப்பு ஏற்படும். நாட்டு வங்கியர்களும் இக் கூட்டில் அங்கத்தினராக இருந்தால் அவர்களிடம் நிலவி வரும் தப்பெண்ணங்களை நாளடைவில் நீக்கி ஓரளவு வணிக வங்கி களுடன் இணைப்பினை ஏற்படுத்தலாம்.

இந்தியப் பணச்சந்தை மேம்பாடடைய கீழ்க்கண்ட தேவைகளைப் பூர்த்தி செய்யவேண்டும்.

1. உண்டியல் சந்தையை விரிவுபடுத்துவதோடு வணிகர் களும், அரசுத்துறை வணிக நிறுவனங்களும் மாற்று உண்டியல் களை அதிக அளவில் பயன்படுத்த ஊக்கப்படுத்தவேண்டும்.

2. ஏற்பகங்கள் ஏற்படுத்தவேண்டும்.

3. வணிக வங்கிகள் உண்டியலைக் கழிவுப்பாடு செய்யும் பழக்கத்தை அதிகரித்து கடன், அதிகப்பற்று ஆகியவைகளை குறைத்துக் கொள்ளவேண்டும்.

4. இரு கூருகப் பிரிந்துள்ள பணச்சந்தையினை ஒருங் கிணைக்க ரிசர்வு வங்கி புது முயற்சி எடுக்க வேண்டும்.

5. தன் இச்சைபோல் இயங்கும் நாட்டு வங்கியர்கள், சீட்டுக் கம்பெனிகள், நிதியகம் ஆகியவைகள் ரிசர்வு வங்கி யாலேயோ அல்லது இதற்கு எனக் கட்டுப்படுத்த சிறப்பு அதிகாரிகளையோ நியமிக்கவேண்டும்.

6. இதனைச் செய்ய ரிசர்வு வங்கிச் சட்டம் மாற்றப் படலாம்.

7. வட்டி வீதங்கள் பற்றிய கட்டுமானம் தேவை.

8. மைய வங்கி வீதத்திற்கும் பொது வட்டி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளதாக மாற்றவேண்டும்.

9. தீர்வகங்கள் பணியினை திறமையுடன் செய்வதுடன் மேலும் தீர்வகங்கள் முக்கிய நகரங்களில் ஏற்படுத்தவேண்டும்.

10. அகில இந்திய வங்கியர்கள் கூட்டு ஒன்றினை ஏற்படுத்த வேண்டும்.

11. பணச் சந்தையினை நிலையானதாகவும், நெகிழுள்ள தாகவும் ஆக்க வேண்டும்.

மேற்கூறிய தேவைகளைப் பூர்த்தி செய்வதில் முக்கிய பங்கினை ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் ஆகியவைகள் ஒன்று இயங்கிச் செய்ய முயற்சித்தால் இந்திய பணச் சந்தையில் காணும் பல குறைகளை நீக்கலாம்.

### வங்கிகளின் முறிவுகள் (Bank Failures)

நல்ல பணச்சந்தையில் வங்கிகள் நிலையூன்றி நிற்கும். வங்கிகள் முறிவு ஏற்பட்டால் பணச்சந்தை ஆட்டம் காணும். இந்திய வங்கிச் சரித்திரத்தை நோக்கினுல் வங்கி முறிவுகள் எத்துணை ஏற்பட்டுள்ளன, எக்காரணங்களால் நேர்ந்தன என்பவை விளங்கும். முன் அத்தியாயங்களில் வங்கி ஒழுங்கு முறைச் சட்டத்தில் வங்கிகள் நல்ல முறையில் ஒழுங்காக இயங்க என்ன மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்பதினையும் வைப்புதாரர்களின் வைப்புகளைக் காப்புறுதி செய்ய வைப்புக் காப்பு கழகம் பற்றியும் கூறியுள்ளோம். வங்கி முறிவு களுக்கும் பணச்சந்தையின் நிலைத்த தன்மைக்கும் நெருங்கிய தொடர்புள்ளமையால் வங்கிகள் முறிவினை இந்த அத்தியாயத் தில் விவரித்துள்ளோம்.

1913-14ஆம் ஆண்டில் இந்திய வணிக வங்கிகள் பல ஒன்றன்பின் ஒன்ருய் மூழ்கின. மேலும், தொடர்ந்து 1936ஆம் ஆண்டுவரை பல வங்கி முறிவுகள் ஏற்பட்டன. இவ்வங்கிகள் வீழ்ச்சி பற்றி பேராசிரியர் S. K. முரஞ்சன் அவர்கள் ஒரு சீரிய ஆராய்ச்சி செய்து வங்கிகள் முறிவு பற்றிய காரணங்களை வகைப்படுத்தியுள்ளார்கள்.

### வயதுக்கேற்ப வீழ்ச்சி (Failures according to age)

வங்கிகள் முறிவுக்கும் அவற்றின் வயதிற்கும் சில ஒற்றுமைகள் இருக்கின்றன. வெகு ஆண்டுகளாக இயங்கிவரும் வங்கிகளைக் காட்டிலும், சிறிது காலமாக இயங்கும் வங்கிகளே

அதிகம் முறிவு பெறுகின்றன. 1913-14லிருந்து 1931-36ஆம் ஆண்டுவரை முறிவடைந்த வங்கிகளில் 2/3 வங்கிகளின் வயது 11 ஆண்டுகளுக்கு கீழாகவே இருந்தன. இதுபற்றிய அட்டவணைகள் 18, 19இல் தரப்பட்டுள்ளன.

அட்டவணை—18.

## வங்கி முறிவு—வயதிற்கேற்ப

| ஆண்டு | 1 ஆண்டிற்குக் கீழ் | 1 ஆண்டிற்கு மேல் 3 ஆண்டு 11 மாதங்களுக்கு கீழ் | 3 ஆண்டுகள் 11 மாதம் மேல் 7 ஆண்டுகள் 11 மாதங்கள் கீழ் | 7 ஆண்டுகள் 11 மாதங்களுக்கு மேல் 10 ஆண்டுகள் 11 மதங்களுக்குக் கீழ் |
|---|---|---|---|---|
| 1913-14 | 5 | 26 | 11 | 2 |
| 1915-20 | 1 | 7 | 13 | 6 |
| 1921-30 | 11 | 54 | 22 | 11 |
| 1931-36 | 10 | 72 | 77 | 19 |

அட்டவணை—18.

## வங்கி முறிவு—வயதிற்கேற்ப (தொடர்ச்சி)

| ஆண்டு | 10 ஆண்டுகள் 11 மாதத்திற்கு மேல் 13 ஆண்டுகள் 11 மாதங்கள் கீழ் | 13 ஆண்டுகள் 11 மாதங்கள் மேல் 16 ஆண்டுகள் 11 மாதங்கள் கீழ் | 16 ஆண்டுகள் 11 மாதங்கள் மேல் 19 ஆண்டுகள் 11 மாதங்கள் கீழ் | 19 ஆண்டுகள் 11 மாதங்களுக்கு மேல் |
|---|---|---|---|---|
| 1913-14 | 1 | 3 | — | 2 |
| 1915-20 | 2 | 3 | — | 11 |
| 1921-30 | 13 | 5 | 8 | 19 |
| 1931-36 | 18 | 23 | 1 | 18 |

அட்டவணை - 19.

## வங்கி முறிவு-வயதிற்கேற்ப மொத்த முறிவில்-சதவீதம்

| ஆண்டு | 10 ஆண்டு 11 மாதங்கள் வரை | 10 ஆண்டுகள் 11 மாதங்களுக்குமேல் 19 ஆண்டுகள் 11 மாதங்கள் கீழ் | 19 ஆண்டு 11 மாதங்களுக்கு மேல் |
|---|---|---|---|
| 1913—14 | 88 | 8 | 4 |
| 1915—20 | 62 | 11.6 | 25 |
| 1921—30 | 68 | 18.1 | 13.2 |
| 1931—36 | 74.7 | 17.6 | 7.5 |

**வங்கி முறிவும்—செலுத்தப்பட்ட மூலதனமும்**

அதிகமான செலுத்தப்பட்ட மூலதனமுடைய வங்கிகள் வலுவான நிதி நிலைமை உடையவை. குறைந்த செலுத்தப் பட்ட மூலதனமுடைய வங்கிகள் நிதி வலுவின்மையால் எளிதில் முறிவு அடைகின்றன. 1913-14ஆம் ஆண்டில் முறிவு அடைந்த வங்கிகளில் 75 சதவீதத்திற்குமேல் ரூ.1 லட்சத்திற்குக் கீழ் இருந்தன. இதுபற்றிய விவரங்கள் அட்டவணை 20இல் கொடுக்கப்பட்டுள்ளன :—

அட்டவணை - 20.

## செலுத்திய மூலதனமும் - முறிவும்

| ஆண்டு | ரூ.1 லட்சத்திற்கு கீழ் | ரூ. 1 லட்சத்திற்குமேல் 5 லட்சத்திற்குக் கீழ் | ரூ. லட்சத்திற்கு மேல் |
|---|---|---|---|
| 1913—14 | 33 | 7 | 7 |
| 1915—20 | 31 | 8 | 3 |
| 1921—30 | 81 | 11 | 12 |
| 1931—26 | 157 | 7 | 2 |

**சட்டத்திலுள்ள ஓட்டைகள், பொதுமக்கள் அறியாமை அவநம்பிக்கை மிகுந்த நிருவாகம்**

மேற்கூறிய காரணங்களினால் பல வங்கிகள் மூழ்கிப் போயின. இவற்றில் முக்கியமாக அமைவது பொய் நிறைந்த, ஏமாற்று வகையில் அமைந்த விளம்பரங்கள் ஆகும்.

### பூனு வங்கி, பூனு

இவ்வங்கி 1889ஆம் ஆண்டு சூன் திங்கள் துவக்கப்பட்டு ஆகஸ்டு திங்கள் 1924ஆம் ஆண்டு கலைக்கப்பட்டது. இத்துணை ஆண்டுகள் இருந்திருக்க இதன் இருப்பு நிலைக் குறிப்பிலிருந்து யாதொரு விசேஷ காரணமும் தெரியவில்லை. 1913ஆம் ஆண்டுக்குமுன் இருந்த வங்கிப் பழக்க பெருக்கத்தைக் கொண்டு தன்னுடைய செலுத்தப்பட்ட மூலதனத்தைப் போல் 9 லிருந்து 10 மடங்கு அளவு வைப்புகளைப் பெற்றிருந்தது. தன்னுடைய செலுத்திய மூலதனம் ரூ. 3 லட்சத்திற்குமேல் இருக்கும்போது இவ்வங்கி முக்கிய ஆங்கில தினசரி ஏடுகளில் பொதுமக்களை ஏமாற்றுமாறு அளித்த விளம்பாம், அனுமதிக்கப்பட்ட மூலதனம் (authorised Capital) ரூ. 10 கோடி, வெளியிட்ட முதல் (issued Capital) ரூ. 50 லட்சம், செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 3 லட்சம். இதனைக் கண்ணுற்றோர்கள் எல்லாம் இது ஒரு நல்ல வங்கி இதன் மூலதனம் ரூ. 10 கோடி எனத் தப்பாக எண்ணும் வகையில் விளம்பரம் அமைந்துள்ளது. உண்மையில் மூலதனம் செலுத்தப்பட்ட மூலதனமான ரூ. 3 லட்சமேயாகும்.

### அமிர்தசர் நேஷனல் வங்கி (Amritsar National Bank)

மிகக் குறைந்த ஆனால் மிக ஒளிமயமான வாழ்க்கையுடன் வாழ்ந்த இவ்வங்கி ஜனவரித் திங்கள் 1922இல் ஆரம்பித்து மே திங்கள் 1923இல் முறிவுற்றது. இக்குறுகிய காலத்தில் தான் செலுத்திய மூலதனத்தைப் போல 12 மடங்கு வைப்புகளைப் பெற்ற இவ்வங்கி செய்த போலி விளம்பரத்தில் மூலதனம் பற்றிய அறிவுப்பு, அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 50 லட்சம், வெளியிட்ட மூலதனம் ரூ. 10 லட்சம், செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 160 ஆயிரங்கள் (இதனை மட்டும் ஆயிரத்தில் குறிப்பிட்டுள்ளதை நோக்கவும்).

### பயனீர் வங்கி (The Pioneer Bank)

முறிவடைந்த இவ்வங்கியின் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 2·5 லட்சம், வைப்புகள் ரூ. 3 லட்சம். செய்தித்தாள்களில் இவ்வங்கி கொடுத்த விளம்பரம் "இலண்டன், பாரிஸ், நியூயார்க் மற்றும் இந்தியாவில் 31 கிளைகள் விரைவில் வருகின்றன".

### இந்துஸ்தான் வங்கி, மூல்தான் (The Hindustan Bank, Multan)

**சூலை 1906–ஆம் ஆண்டு துவக்கப்பட்டு சனவரி 1914–ஆம் ஆண்டில் முழுகிய இவ்வங்கி தன் அனுமதிக்கப்பட்ட மூலதனத்தை ரூ. 2.5 லட்சத்திலிருந்து உயர்த்தி ரூ. 10 லட்ச**

மாக்கியதற்கு பெரிய விளம்பரங்கள் செய்தாலும் இதன் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 120 ஆயிரத்தினின்று உயர்த்தப் படவேஇல்லை. இவ்வங்கி ஆறு ஆண்டு காலத்தில் 36 கிளைகளைத் திறந்து ரூ. 10 லட்சம் வைப்பைப் பெற்றது.

**கத்தியவார் மற்றும் அஹமதாபாது கழகம்**

சூன் 1910இல் ஆரம்பிக்கப்பட்டு டிசம்பர் 1913இல் மூழ்கிய இவ்வங்கியின் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 50 லட்சம், செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 7 லட்சம்! இது செயல் பட்ட மூன்று ஆண்டிற்குள் இந்தியாவில் 12 கிளைகளையும், நைரோபியில் ஒரு கிளையையும் இவ்வங்கி திறந்தது!

**பிரிட்டிஷ் இந்தியா வங்கி (British India Bank)**

ஏப்ரல் 1911இல் ஆரம்பிக்கப்பட்டு செப்டம்பர் 1913இல் முறிவுற்ற இவ்வங்கியின் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 250 ஆயிரம். இதன் வெளியிட்ட மற்றும் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 6 ஆயிரம். இரண்டாண்டுக்குள் 3 கிளைகளையும் 17 முகவர் அலுவலகங்களையும் (agencies) திறந்த இவ்வங்கியின் விளம்பரம் "எல்லா நகரங்கள், பெரும் நகரங்கள், பிரிட்டிஷ் இந்தியாவின் முக்கிய வியாபார இடங்கள் எங்கும் கிளைகளை உடைய வங்கி".

**சிவராமய்யர் வங்கி, சென்னை (Sivarama Iyer Bank, Madras)**

மதுரை, திருச்சிராப்பள்ளி மற்றும் தமிழ்நாட்டின் பல இடங்களில் கிளைகளைக் கொண்ட இவ் வங்கி 1932 ஆம் ஆண்டு மூழ்கியது. இவ்வங்கியில் அப்போதிருந்த காலணாவைக்கூட வைப்பாகக் கொடுக்கலாம். இவ் வங்கியின் மதிப்பு மிக்க வாடிக்கைக்காரர்களில் பலர் பிச்சைக்காரர்கள். இவ்வங்கிக்குப் பிச்சைக்காரர்கள் வங்கி (Beggers Bank) என்றும் பெயர் உண்டு. இவ் வங்கி கொடுத்த விளம்பரம் "செம்பைப் பொன் னுக்கும் சிவராமய்யர் வங்கி". பல வங்கிகள் மூழ்கிய நேரத்தில் இவ் வங்கியும் மூழ்கியது. புத்திசாலித்தனமாக சிவராமய்யர் தன் வங்கி முறிவுக்குக் கூறிய காரணம் 'அதிக அலுவலகச் செலவும், உலகப் பொருளாதார மந்தமும்'!

**பம்பாய் வங்கிக் கழகம் (Bombay Banking Corporation)**

நவம்பர் 1898ஆம் ஆண்டு துவக்கப்பட்ட இவ்வங்கி 1913-14ஆம் ஆண்டு நடந்த வங்கி முறிவுகளில் இதுவும் முறிவுற்றது.

மிகச் சிறந்த பம்பாயிலிருந்த மருத்துவர்கள் இதன் இயக்குநர்கள் என்ற பெருமையோடு இயங்கி வந்த இந்த வங்கியின் நடவடிக்கைகளை இயக்குநர்கள் சில முகவர்களிடம் ஒப்பித்திருந்தனர். இம் முகவர்கள் எவ்விதம் நடத்துகிறார்கள் என்பதைப்பற்றி இயக்குநர்களோ, பங்குதாரர்களோ கவலையே படவில்லை. 12 சதவீத லாப ஈட்டுத் தொகையைப் பெற்ற பங்கு தாரர்கள் எப்படி இந்த லாபம் கிடைத்தது என்பதையே பார்க்க வில்லை. சில முகவர்கள் அக்டோபர் 1912இல் அமெரிக்கப் பயணம் செய்ய வங்கியினின்று பணம் எடுத்துச் செல்லு கின்றனர் என்பது தெரிந்ததும் அச்சப்பட்டு வைப்புதாரர்கள் ரூ. 5 லட்சத்திற்குமேல் திரும்பப்பெற்றனர். பிறகு ஆட்டம் கண்டு மூழ்கிய இவ்வங்கியின் கலைப்பாளரின் அறிக்கையில் (Liquidators Report) கண்டுள்ளது 'இவ்வங்கி ஒரு நாளேடு (Day book) ஒரு பேரேடு (Ledger) தவிர வேறெந்தப் புத்தகமும் வைத்திருக்கவில்லை'.

### தொழில் கடனால் ஏற்பட்ட முறிவுகள்

வணிக வங்கிகள் தொழில் கடன் கொடுத்ததினால் கீழ்க் கண்ட வங்கிகள் மூழ்கின.

1. பீபிள்ஸ் வங்கி, லாகூர் (The Peoples Bank of Lahore),
2. அமிர்தஸர் வங்கி, லாகூர்.
3. டாடா தொழில் வங்கி.
4. தி பாங்க் ஆஃப் பர்மா.

மேலே குறிப்பிட்ட வங்கிகள் நல்லெண்ணத்துடன் தொழில் கடன் அளித்தன. ஆனால், தொழில் மந்தத்தின் காரணமாகவும், பெற்ற பிணையங்களின் மதிப்பு வீழ்ந்ததாலும் கொடுத்த கடனைத் திரும்பப்பெற முடியாமல் இவை முறிந்தன.

### ஊக வணிகமும் (Speculation) வங்கி முறிவும்
### இந்தியன் ஸ்பீஷி வங்கி (The Indian Specie Bank, 1914)

இவ் வங்கியின் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 2 கோடி வெளியிடப்பட்ட மூலதனம் ரூ. 1·5 கோடி, செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 75·5 லட்சம். பெரும் இலாப நோக்குகொண்டு வெள்ளியில் ஊக வணிகத்தைப் பெரிய அளவில் செய்ய முயன்றது. இதனால் வைப்புதாரர்கள் இவ்வங்கி மீது நம்பிக்கை இழக்க ஆரம்பித்தனர். ஆனால், இவ் வங்கியின் பெருந் தலைவர் ஆண்டறிக்கையில் 'இவ் வங்கி ஒரு அவுன்சுகூட வெள்ளி

வங்கவோ, விற்கவோ இல்லை' என்று கூறியபோதிலும், வெள்ளி வாங்கி தனிக் கம்பெனிகளுக்கு விற்பதைத் தவிற செல்வாக்கைப் பயன்படுத்தி அரசையும் அவ்வப்போது வெள்ளி விலையை உயர்த்தவும் தாழ்த்தவும் செய்தது. ஊக வணிகத்தினல் மட்டும் நேர்ந்த நட்டம்.

| | ரூ. லட்சம் |
|---|---|
| வெள்ளி ஊக வணிக நட்டம் | 111 |
| வைர, மாணிக்க கற்கள் மீது கடனல் ஏற்பட்ட நட்டம் | 36 |
| பங்குச் சந்தை ஊக நட்டம் | 14 |
| புத்தியற்ற கடனளிப்பால் நட்டம் | 4 |
| | 165 |

இந்நட்டத்தின் காரணமாகவும், வைப்புதாரர்கள் நம்பிக்கையை இழந்த காரணத்தினலும் இவ்வங்கி முறிவுற்றது.

### துரதிருஷ்டவசமாக மூழ்கிய வங்கிகள் (Victims of misfortune)

சில வங்கிகள் நல்ல முறையில் இயங்கி வந்தாலும் துரதிருஷ்டவசமாக முறிந்துபோன வங்கிகளும் உண்டு. இவைகள் சூழ்நிலை, சந்தர்ப்பவச நிலை காரணமாகவே தோல்வி அடைந்துள்ளன. இவ் வங்கிகளின் முறிவுக்குக் காரணம் இவைகள் அல்ல, இவைகளுக்கு அப்பாற்பட்டசில காரியங்களினல் இவ்வங்கிகள் முறிந்தன.

### தி பாங்கு ஆஃப் அப்பர் இந்தியா, மீரட் (The Bank of Upper India, Meerat)

இவ் வங்கி சூன் 27, 1863ஆம் ஆண்டு வெகு எளிமையாகத் தொடக்கப் பட்டாலும் (செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 15,000 மட்டுமே) மெதுவாக வளர்ச்சியடைந்து செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 10 லட்சமாகவும் காப்பு நிதி ரூ. 7 லட்சமாகவும் வைப்புப் பொறுப்புகள் ரூ.2 கோடியாகவும் இருந்தது. பஞ்சாப் உத்திரபிரதேசம் ஆகிய இருமாநிலங்களில் மட்டும் 17 கிளைகளுடன் இவ் வங்கி இயங்கி வந்தது.

**1913-14** ஏற்ற பலவங்கிகளின் தோல்வி இவ்வங்கியை மிகவும் அழுத்தியது. பீபிள்ஸ் பாங்கு, லாகூர் முறிவடைந்

த்தைத் தொடர்ந்து, மக்கள் பீதி அடைந்து அடுத்த 9 மாதங்களில் மட்டும் வைப்புகள் ரூ. 78 லட்சத்திற்கு ரொக்கமாக வாடிக்கைக் காரர்களுக்குக் கொடுக்க வேண்டியிருந்தது. எப்படியோ இதனையும் சமாளித்த இவ் வங்கிக்கு உலக மகா யுத்தம் பேரிடியாக விழுந்தது. இது வைத்திருத்த பத்திரங்களின் மதிப்பு பெரு வீழ்ச்சி அடைந்து, கடைசியில் வேறு வழியின்றி தன் தொழிலை 1914-இல் முடித்துக் கொண்டது. அலகாபாது உயர் நீதி மன்றம் "இவ்வங்கியின் முறிவுக்கு நிருவாகத் திறமையின்மையோ, இயக்குநர்களோ காரணமில்லை. பணச் சந்தையும். பொருளாதார நிலைமையுமே காரணம்" எனக் கூறியது.

**திருவிதாங்கூர் நேஷனல் மற்றும் கொயிலான் வங்கி (Travancore National and Quilon Bank)**

இவ் வங்கி திருவிதாங்கூர் நேஷனல் வங்கியயையும் கொயிலான் வங்கியையும் இணைத்து ரிசர்வு வங்கியின் ஆசீர்வாதத்துடன் ஒரு வங்கியாக இயங்க ஆரம்பித்தது. ரிசர்வு வங்கி இவ் விணைப்பு செய்ய போதிய கடன் வசதியையும் அளித்தது. இவ் விணைப்பு நடந்து இரண்டு ஆண்டுகளுக்குள் சூன் 20ஆம் தேதி 1938ஆம் ஆண்டு இவ் வங்கி தன் தொழிலை முடித்துக்கொள்ள வேண்டிய துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது. இவ்வங்கி வலுவாக நல்ல முறையில் நடந்து வந்தது. ஒரே ஒரு குறை போதுமான எளிவரல் சொத்துக்கள் இல்லாமல் தொழில் நடத்தின என்று மட்டும் கூறலாம். ஏப்ரல் 1938 முதல் சூன் 20, 1938 வரை இவ் வங்கியது ஒரே ஓட்டமாக (run) இருந்தது. இவ் ஓட்டத்திற்குக் காரணம் இவ் வங்கி முழுகப்போகின்றது என்பதேயாகும். இந்தக் காலத்தில் மட்டும் ரூ. 1 கோடியே பத்து லட்சம் ரொக்கமாகவைப்புகளைத் திருப்பித்தந்த இவ்வங்கி இதற்குமேலும் தாங்காமல் தளர்ந்து முறிவுற்றது. திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் இருந்த பெரிய அதிகாரிகள் இவ் வதந்திக்கும், ஓட்டம் ஏற்படுத்தவும் காரணம் என்றும் பின்பு வழக்கு நடக்கும்போது தெரிய வந்தது. சென்னை உயர்நீதி மன்றம் "கலைப்புக்குப்பின்னும் 1 ரூபாய்க்கு (16 அணு) 12அணுக்கள் திருப்பித்தரும் அளவுள்ள இந்த வங்கி மூழ்கியது துரதிருஷ்ட வசமே, இப் பெரு ஓட்டம் ஏற்படவில்லை என்றல் கண்டிப்பாக மூழ்கி இருக்காது" எனக் கூறியுள்ளது.

மேலே விவரிக்கப்பட்டதிலிருந்து வங்கிகள் மூழ்கிய நிலையினையும் வரலாற்றினை மட்டும் உணராமல் மேலும் சில முக்கியமான கருத்துக்களைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

1. வங்கிகள் முறிவுக்குப் பல காரணங்கள் உண்டு.

2. வங்கிகள் முறிவு தொற்றுநோய்போல் பரவி பல வங்கிகளை வீழ்விக்கும்.

3. வங்கிகள் நடத்தையை வெகு அக்கரையுடன் கண்காணிக்க வேண்டும்:

வங்கித் தோல்விகள் ஆண்டு வாரியாகக் கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

இந்தியாவில் தோல்வி அடைந்த வங்கிகள்

| ஆண்டு | தோல்வியுற்ற வங்கிகளின் எண்ணிக்கை |
|---|---|
| 1935 | 51 |
| 1936 | 88 |
| 1937 | 65 |
| 1938 | 73 |
| 1939 | 117 |
| 1940 | 107 |
| 1941 | 94 |
| 1942 | 50 |
| 1943 | 59 |
| 1944 | 28 |
| 1945 | 27 |
| 1946 | 27 |
| 1947 | 37 |
| 1948 | 45 |
| 1949 | 53 |

இத்துணை வங்கிகள் தோல்வியுற்றுல் பணச்சந்தை மேம்பாடு அடைய முடியுமா, மக்களுக்குத்தான் வங்கிகள்மீது நம்பிக்கை ஏற்படுமா?

1949ஆம் ஆண்டிற்கு முன் ஏற்பட்ட வங்கி முறிவுகளுக்குக் காரணம் பொருளாதாரநிலே, வங்கிகள் மீது போதிய கட்டுப்பாடு இல்லே, வங்கிக் கம்பெனிச் சட்டம் 1949 வந்த பிறகு இனி இது போன்ற வங்கி முறிவுகளே இருக்காது என்று எண்ணிக்கொண்டிருந்தபோது ஆகஸ்ட் திங்கள் 9ஆம் நாள், 1960ஆம் ஆண்டு பலாய் சென்ட்ரல் வங்கி (Palai Central

Bank) ஜூன் திங்கள் 18ஆம் நாள், 1960ஆம் ஆண்டு லக்ஷ்மி பாங்கு அகோலா (Lakshmi Bank of Akola), ஆகிய இரு வங்கிகளும் மூழ்கிய நிலை பேரதிர்ச்சியாகவும், பெரு வியப்பாகவும் அமைந்தது. ரிசர்வு வங்கி பற்றி கடுமையான எதிர்ப்புகள் பொதுமக்களால் தொடுக்கப்பட்டது. வங்கிகளை கட்டாயமாக இணைப்பது, கட்டாயமாக கலைப்பது, வங்கி நடவடிக்கையை நிறுத்துவது அல்லது ஒத்திவைப்பது (Suspension or Moratoria) போன்ற உரிமைகளை ரிசர்வு வங்கிச் சட்டத்தில் திருத்தம் செய்ததோடு, காப்பு வைப்புக் கழகம் தொடங்கப்பட்டது. ரிசர்வு வங்கியின் இந்த உரிமைகளைப் பற்றி ரிசர்வு வங்கி என்னும் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

இந்தியா விடுதலை அடைந்தபின் வங்கிக் கலைப்புகளைப் பற்றிய விவரம் அட்டவணை 21இல் கொடுக்கப்பட்டுள்ளது:

அட்டவணை-21.

**வங்கிக் கலைப்புகள்**

| ஆண்டு | தன் விருப்பக் கலைப்பு | கட்டாயக் கலைப்பு | பணிபுரிவதை நிறுத்திக் கொண்ட வங்கிகள் |
|---|---|---|---|
| 1950 | 13 | 19 | 11 |
| 1951 | 13 | 10 | 85 |
| 1952 | 13 | 8 | 46 |
| 1953 | 10 | 18 | 6 |
| 1954 | 14 | 6 | 17 |
| 1955 | 11 | 6 | 11 |
| 1956 | 16 | 6 | 6 |
| 1957 | 16 | 3 | 11 |
| 1958 | 9 | 5 | 14 |
| 1959 | 7 | 7 | 24 |
| 1960 | 4 | 5 | 17 |
| 1961 | 5 | 3 | 39 |

இனி வங்கி முறிவுகள் ஏதும் இந்தியப் பணச் சந்தையில் நேராது என்று கூறும் அளவுக்கு இந்தியப் பணச்சந்தை இப்போது முன்னேறியுள்ளது. எனினும், தொடர்ந்து வங்கி களின் நல் வளர்ச்சியை மைய வங்கியும், அரசும் நோக்கி வரவேண்டும்.

## பாட நூல்கள்


1. கு. ஆளுடையப்பிள்ளை — இந்திய வங்கியல்.
2. ந. சட்டைநாதன் — ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா.
3. Report of the Banking Commission, 1972.
4. S. G. PANANDIKAR — Banking in India.
5. S. K. MURANJAN—Modern Banking in India.

# 21. ஸ்டேட் வங்கி

## (State Bank of India)

ஸ்டேட் வங்கி 1955ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 1ஆம் நாள், ஸ்டேட் வங்கி ஆஃப் இந்தியா, 1955 சட்டத்தின்கீழ் ஏற்படுத்தப்பட்டது. இதற்கு முன்னிருந்த இம்பீரியல் வங்கி தேசியமயமாக்கப்பட்டு ஸ்டேட் வங்கியாக மாற்றப்பட்டது. இந்திய வங்கிகள் வரலாற்றில் சில முக்கியமான கால கட்டங்கள் உண்டு. அவையாவன :

1. 1921ஆம் ஆண்டு, இம்பீரியல் பாங்கு ஆஃப் இந்தியா சட்டம் 1920இன் படி, இம்பீரியல் வங்கி அமைக்கப்பட்டது.

2. 1935ஆம் ஆண்டு ரிசர்வு பாங்கு ஆஃப் இந்தியா சட்டம் 1934இன் படி, ரிசர்வு வங்கி இந்தியாவின் மைய வங்கியாக அமைக்கப்பட்டது.

3. 1949 ஜனவரி 1ஆம் நாள், ரிசர்வு வங்கி (பொது உடமை மாற்றுச்) சட்டம் 1948, Reserve Bank (Transfer to Public ownership) Act 1948 படி தேசியமாக்கப்பட்டது.

4. 1955ஆம் ஆண்டு சூலை 1ஆம் நாள் ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தியா, 1955 சட்டப்படி இம்பீரியல் பாங்கு ஸ்டேட் வங்கியாக தேசியமயமாக்கப்பட்டது.

5. 14 பெரிய வங்கிகள், ரூ. 50 கோடிக்கு மேல் வைப்புகள் கொண்டவை குடியரசுத் தலைவரின் பிரகடனத்தின்படி சூலை திங்கள் 19ஆம் நாள் 1969ஆம் ஆண்டு தேசியமயமாக்கப் பட்டது. பின்பு இதனைச் சட்டமாக்கியது.

இந்திய வங்கிச் சரித்திரதிதில் இம்பீரியல் வங்கிக்கு ஒரு தனி பாரம்பரியம் உண்டு. இந்தியாவின் மிகப் பெரிய வணிக வங்கி என்பதோடு, ரிசர்வு வங்கி தோற்றுவிக்கப்படுமுன் மைய வங்கிப் பணியினைச் செய்யும் வணிக வங்கி என கொடிகட்டிப் பறந்த வங்கி இவ்வங்கி. இவ்வங்கியின் வழித் தோன்றலே ஸ்டேட் வங்கி. எனவே, இம்பீரியல் வங்கியைப்பற்றி முதலில் விவரிக்கப்படுகின்றது.

பம்பாய், வங்காளம், சென்னை ஆகிய மூன்று மாநிலங்களில் இயங்கிவந்த ராஜதானி வங்கிகளை (Presidency Banks) இணைத்து இம்பீரியல் வங்கிச் சட்டம் 1920இன் கீழ் இம்பீரியல் வங்கி நிறுவப்பட்டது. இவ் வங்கியின் நடத்தை இம்பீரியல் வங்கித் திருத்தச் சட்டம் 1934-ல் (Imperial Bank Amendment Act of 1934) சிறிது மாற்றப்பட்டது. இம் மூன்று இராஜதானி வங்கிகள் இணையும்போது 68 கிளைகள் உடையனவாக இருந்தன. இம் மூன்று வங்கிகளும் தங்களுக்குள் கருத்தொப்பம் தெரிவித்து தாங்களே இணைய முன்வந்தன. இவ்விதம் இணைப்பிற்கு இவ் வங்கிகள் இசைய சில காரணங்கள் உண்டு.

1. முதல் உலகப் போருக்குப்பின் பல வங்கிகள் முறிவடைந்து, வங்கியல் மற்றும் பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட மந்த நிலைமை.

2. பொதுமக்களின் எண்ணம் இணைப்புக்கு ஆதரவாக இருந்தது.

3. நாணய மாற்று வங்கிகளின் போட்டியும், இலண்டன் பணச்சந்தை இந்திய வங்கியியல் துறையையும் ஆக்கிரமிக்கக் கூடும் என்ற பயம்.

4. இவ் வங்கிகள் 1862ஆம் ஆண்டுக்கு முன் அரசு கட்டு மானத்தில் ஓரளவு இருந்து வந்தன. இதற்குப் பரிகாரமாக அரசு பணத்தினை அச்சடித்து வெளியிடும் உரிமையினை இவ் வங்கிகளுக்குத் தந்திருந்தனர். 1862ஆம் ஆண்டு அரசு பணம் வெளியிடும் உரிமையைத் தானே மேற்கொண்டது, எனினும், வெளியீட்டை முகவர் என்ற முறையில் நிருவகிக்குமாறு இவ் வங்கிகளை அரசு கேட்டுக் கொண்டது. பிறகு 1866ஆம் ஆண்டு பணம் அச்சிடுவது, வெளியிடுவது முழுமையும் தாமே ஏற்றுக் கொண்டு இவ் வங்கிகளை இத் தொழிலினின்று நீக்குவதோடு அரசு வைத்திருந்த கட்டுமானத்தையும் நீக்கியது. இப்படி படிப்படியாக அரசு தங்களை விடுவித்துக் கொண்டிருப்பதை மனதில் கொண்டு இவ் வங்கிகள் இணைய ஒப்புக்கொண்டன.

இம்பீரியல் வங்கியின் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 11.25 கோடியாகவும், செலுத்தப்பட்ட மூலதனம் இதில் பாதி யாகவும் இருந்தது. செலுத்தப்பட்ட மூலதனத்தில் ரூ. 3.75 கோடி, முழுவதும் செலுத்தப்பட்ட ரூ. 500 மதிப்புள்ள பங்கு களின் பங்கு மூலதனமாகவும், மீதி ரூ. 500 மதிப்புள்ள பங்குகளின் ¼ பங்கு செலுத்தப்பட்ட பங்கு மூலதனமாகவும் இருந்தது. இவ் வங்கியின் காப்பு நிதி ரூ. 6.07 கோடியாக

இருந்தது. இவ் வங்கி துவக்கப்பட்டது முதல் 1931ஆம் ஆண்டு வரை இலாப ஈவுத் தொகை (dividend) 16 சதவீத மாகவும், பின்பு 1945ஆம் ஆண்டுவரை 12 சதவீதமாகவும் பின்பு 1946ஆம் ஆண்டு 14 சதவீதமாகவும், இதற்குப் பின் 16 சதவீதமாகவும் இருந்தது. இதனுல், இவ் வங்கியின் பங்கு, பங்கு மார்கெட்டில் மிக அதிக விலையில் விற்கப்பட்டு வந்தது.

இம் மூன்று வங்கிகளின் மாநில நன்மைகளைக் கருதியும், ஆங்காங்கே உள்ள பங்குதாரர்களின் நலன் கருதியும், அதிக வங்கியல் சுதந்திர நோக்கும் கொண்டு மூன்று அக தலைமையகங்களை (Local Boards) பம்பாய், கல்கத்தா, சென்னை ஆகிய மூன்று இடங்களிலும் நிறுவியது. அந்தந்த மாநிலங் களில் உள்ள பங்குதாரர்களின் பெயரும் அந்தந்த அக தலைமையகப் புத்தகத்தில் குறிக்கப்பட்டு மூன்று மாநிலங் களுக்கும் அகக் குழு (Local Boards) ஏற்படுத்தப்பட்டன. மூன்று மாநிலத்திலும் தனித் தனியே காரியதரிசி—கருவூலர் (Secretary & Treasurer) முக்கிய நிருவாக அதிகாரியாக நிருவகித்து வந்தார். இம் மூன்று அக இயக்குநர் குழுக் களும் மத்திய இயக்குநர் குழுவினுல் கட்டுமானம் செய்யப் பட்டு வந்தது. மத்திய இயக்குநர் குழுவே வங்கியின் கொள்கை, மாகாண வங்கிக்குள் பணமாற்றங்கள், ஆண்டு இறுதிக் கணக்கு வெளியீடு ஆகியவைகளை கவனிக்கும். மாநில அகக் குழு வங்கியின் நடைமுறையைக் கவனிக்கும், மத்திய இயக்குநர் குழு அன்ருட செயல்களைக் கவனிக்க ஒரு மானேஜிங் டைரக்டர், ஒரு துணை மானேஜிங் டைரக்டரை 5 ஆண்டுகளுக்கு நியமித்து வந்தது. தேவையானுல் இவர்கள் காலத்தை நீட்டுவிக்க மத்திய இயக்குநர் குழுவுக்கு உரிமை உண்டு.

மத்திய இயக்குநர் குழுவின் அங்கத்தினர்கள் கீழ்க் கண்டவர்கள் ஆவர்:

1. அக இயக்குநர் குழுக்களின் தலைவர்கள் துணைத் தலைவர்கள் (Presidents and Vice Presidents)

2. ஒவ்வொரு அகக் குழுவும் தேர்ந்தெடுத்து அனுப்பும் ஒரு நபர்.

3. மேனேஜிங் டைரக்டர்.

4. கவர்னர்—ஜெனரலால் நியமிக்கப்படுபவர் இருவருக்கு மேல் இல்லாமல் (இவர்கள் ஓராண்டு காலமே வகிக்கலாம். மீண்டும் நியமிக்கப்படலாம்).

5. துணை மேனேஜிங் டைரக்டர்.

6. அகக் குழுக்களின் காரியதரிசிக் கருவூலர்கள் (Secratary & Treasurer).

7. ஒரு அரசு அதிகாரி—கவர்னர் ஜெனரல் தேர்ந்தெடுப்பு.

மேலே கண்டுள்ளவர்களில் 5, 6, 7 நபர்கள் கூட்டத்தில் ஓட்டுப் போடக் கூடாது. ஆனால், மேனேஜிங் டைரக்டர் இல்லாத கூட்டங்களில் அவருக்குப் பதிலாகத் துணை மானேஜிங் டைரக்டர் ஓட்டுப் போடலாம்.

இம்பீரியல் வங்கி செய்த பணிகள்

1. 1935ஆம் ஆண்டு ரிசர்வு வங்கி ஏற்படுத்தப்படும்வரை அரசாங்கத்தின் வங்கியாக பணி புரிந்தது.

2. அரசுப் பணத்தின் பாதுகாவலராக இருந்து கருவூலப் பணியினை அரசுக்காக கைம்மாறு ஏதும் பெறுமல் செய்து வந்தது.

3. அரசுக்கு வரவேண்டிய வரி, வருவாயை அரசு சார்பில் பெற்றது. அரசு அளிக்க வேண்டிய பணத்தினை அரசின் முகவராகத் தானே கொடுத்தது.

4. அரசு கடன் பத்திரங்களை விற்று, பொதுக்கடன் நிருவாகம் செய்தது.

5. வங்கியர்களின் வங்கியாக அமைந்து வங்கிகளின் வைப்பில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை ரொக்கக் காப்பாக பெற்றது.

6. தீர்வகங்கள் பதினென்றை முக்கிய நகரங்களில் நடத்தி தீர்வகப் பணியினை வங்கிகளுக்கு அளித்தது.

7. வணிக வங்கிகளுக்கு பணம் அனுப்பும் பணியினை (Reimittance facility) மிகக் குறைந்த $\frac{1}{4}$%, $\frac{1}{32}$%க்கு செய்து வந்தது.

8. ஆரம்பிக்கப்பட்ட 1921ஆம் ஆண்டிலிருந்து 5 ஆண்டிற்குள் 100 கிளைகளைத் திறக்க முற்பட்டு இதனைச் செய்து முடித்தது. இவற்றில் 50 கிளைகளுக்குமேல் இதுவரை வங்கி அலுவலகமே இல்லாத இடங்களில் திறந்தது.

இம்பீரியல் சட்டம் 1920ன் படி இவ்வங்கி செய்ய அனுமதிக்கப்பட்ட பணிகள்.

1. கீழ்க்கண்டவைகளை ஈடாக எடுத்துக் கடனே, அதிகப் பற்றே, ரொக்கப் பற்றே அளிக்கலாம்.

அ. அறப்பாதுகாவலர் பத்திரங்கள் (Trustee securities).

ஆ. இரயில்வே வெளியிடும் கடன் பத்திரங்கள்.

இ. அரசு ஏற்படுத்தும் கழகம் வெளியிடும் கடன் பத்திரங்கள்.

ஈ. சரக்கு, சரக்குப் பத்திரங்கள்.

உ. உண்டியல்கள்.

2. உண்டியல்களை ஏற்கலாம், வாங்கலாம், கழிமானம் செய்யலாம்.

3. அரசுப் பத்திரங்கள்மீது முதலீடு.
4. தங்கம், வெள்ளி வாங்குதல், விற்றல்.
5. நிலையான, நிலையில்லாத சொத்துக்களை வாங்குதல், விற்றல்.
6. முகவர் தொழில்.
7. உயில் காப்போன் தொழில் (Executor of Will).
8. வங்கித் தொழிலுக்காக, இந்தியாவிலும், இங்கிலாந்திலும் கடன் எழுப்பலாம்.
9. வங்கியுடன் இணைந்த மற்றெல்லா தொழில்களும்.

இம்பீரியல் வங்கியிடமிருந்து எதிர்பார்த்தவைகள்

1. வங்கிக் கிளைகள் அதிகமாகத்திறந்து,மக்களுக்கு வங்கிப் பழக்கத்தினை அதிகரிப்பதுடன் அரசின் கருவூல மற்றும் பொதுக்கடன் பணிகளைப் பெருமளவில் செய்யும்.
2. அதிகக் கிளைகளையும், அரசு ரொக்கத்தைத் தன்னிடம் வைத்துக்கொண்டிருக்கும் இவ் வங்கி உள்நாட்டு வாணிபத்திற்குப் பெருமளவில் கடன் தருவதுடன் உண்டியல் கழிவுப்பாட்டினைப் பெருமளவில் செய்யும்.

3. இந்திய வணிக வங்கிகளிடையே ஒற்றுமை உணர்வை ஏற்படுத்தி, போட்டி மனப்பான்மையைக் குறைப்ப துடன் அவ் வங்கிகளின் தலைவராகத் திகழும்.

4. இந்திய வணிக வங்கிகளை நாணயமாற்று வங்கிகளின் போட்டியினின்று காக்கும்.

5. அரசு சார்பாகப் பண வெளியீடு, நிருவாகத்தினை நாளடைவில் முழுவதும் தானே எடுத்து நிருவகிக்கும்.

6. நாட்டு வங்கியரின் அதிக வட்டி வீதத்தைக் கட்டுப் படுத்தி, பெருவாரியாக கிராமக்கடனை கொடுப்பதோடு கிராமங்களில் கிளைகளைத் திறக்கும்.

7. இந்தியப் பணச்சந்தையின் குறைகளை நீக்கும்.

ஓரளவுக்கு இம்பீரியல் வங்கி தன் எதிர்பார்த்தப் பணிகளைச் செய்து முடித்தது உண்மையே. இவையாவன:

1. அதிகக் கிளைகளை மும்முரமாகத் திறந்தது. 1921ஆம் ஆண்டு 68 கிளைகளைப் பெற்ற இம்பீரியல் வங்கி 1928இல் 202 கிளைகளையும், 1934ஆம் ஆண்டிலிருந்து 1945ஆம் ஆண்டு தன் கிளைகளை 202 லிருந்து 433ஆக உயர்த்தியது. பல கிளைகள் வங்கி ஏதும் இல்லாத இடங்களில் திறக்கப்பட்டன.

2. தன் சொத்துக்களை அதிக எளிவரல் தன்மையுடன் வைத்திருந்தது.

3. உள்நாட்டு விவசாய விளைபொருள்கள்மீது கடனும் அதிகப்பற்றும் அதிக அளவில் கொடுத்து வந்தது.

4. நாட்டு வங்கியர்களின் உண்டியல்களைக் கழிவுசெய்து அவர்களுடன் தொடர்பு ஏற்படுத்தியது.

5. இம்பீரியல் வங்கி உண்டியல் கழிவுப்பாடு வீதத்திற்கும், பசார் உண்டியல் கழிவுப்பாடு வீதத்திற்கும் உள்ள இடை வெளி குறைந்து கொண்டே வந்தது.

6. வங்கியர்களின் வங்கி என்னும் முறையில் மைய வங்கி வீதத்தில் அரசுப் பத்திரங்கள்பேரில் சமயத்தில் வணிக வங்கி களுக்குக் கடன் அளித்து வந்தது.

7. சுறுசுறுப்புப் பருவத்தில் அரசிடமிருந்து கடன்பெற்று குறுகியகால விவசாயக் கடனை அதிகரித்தது.

**இம்பீரியல் வங்கியின் குறைகள்**

1. கிளைப் பெருக்கம் போதிய அளவிற்கு இல்லை.

2. வணிக வங்கிப்பணி, மைய வங்கிப் பணி ஆகிய இரு பணிகளையும் செய்ததால் எந்த ஒரு பணியிலும் சிறப்பாக இயங்க முடியாமல் போய்விட்டது.

3. இதன் மைய வங்கி வீதக் கொள்கையும், வெளிச்சந்தை நடவடிக்கைகளும் யாதொரு வெற்றியும் அடையவில்லை.

4. வணிக வங்கிகளுக்குத் தலைவராக தன்னை ஆக்கிக் கொள்ளும் என்ற ஆசை, நிராசை ஆயிற்று. வணிக வங்கிகள் இவ் வங்கியை சந்தேகப் பார்வையுடனும், வெறுப்புடனுமே நோக்கின.

5. வணிக வங்கிகள் இம்பீரியல் வங்கியை நாடி பண உதவி பெறுவது தங்களுக்கு இழுக்கு என்று எண்ணின.

6. நாணய மாற்று வங்கிகளின் போட்டியை எவ்விதமும் குறைக்காததோடு தானும் அந்நியச் செலாவணிப் பணியினை செய்ய முற்படவில்லை.

7. நாட்டு வங்கியர்களின் ஓங்கிய கையை இவ்வங்கி குறைக்க முடியவில்லை.

8. உண்டியல் பழக்கத்தை பெரிதளவு உயர்த்த முடியவில்லை.

9. இதன் மூன்று இயக்குநர் குழுக்களால் வங்கியின் செலவு அதிகமாக இருந்தது.

10. இவ்வங்கியின் முக்கிய அதிகாரிகள் வெகுகாலம் வரை வெள்ளையர்களாகளாகவே இருந்தனர்.

இம்பீரியல் வங்கி சூலை 1ஆம் நாள் 1955-ல் தேசியமயமாக்கப்படுமுன் (சூன் 24, 1955ஆம் ஆண்டு) அதன் இருப்பு நிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

இருப்பு நிலைக்குறிப்பு (24-6-1955)
ரூ. கோடியில்

| பொறுப்பு | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| வெளியிடப்பட்ட மூலதனம் | 11.25 | அரசாங்க மற்றும், பாதுகாவல் பத்திரங்கள் | 89.57 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | 5.62 | மற்றைய அனுமதிக்கப் பட்ட முதலீடுகள் | 11.07 |
| காப்பு நிதி, மற்றைய காப்புகள் | 6.35 | கடன், ரொக்கப்பற்று, அதிகப்பற்று | 84.65 |
| வைப்புகள் | 208.10 | உண்டியல் கழிமானம், வாங்கியது | 30.95 |
| மற்றைய வங்கிகளிடமிருந்து கடன் | 8.00 | | |
| செலுத்தர்க்குரிய உண்டியல்கள் | 9.10 | வசூலிக்கவேண்டிய உண்டியல்கள் | 0.51 |
| வசூலிக்கவேண்டிய உண்டியல்கள் | 0.51 | கட்டடம், தேய்மானம் நீங்கலாக | 1.29 |
| மற்றைய பொறுப்புக்கள் | 3.68 | மனைத் துணைப்பொருள் தேய்மானம் நீங்கலாக | 0.45 |
| | | அழைப்பு, குறுகிய காலக் கடன் | 1.13 |
| | | மற்றைய சொத்துக்கள் | 5.37 |
| | | மற்றைய வங்கிகளிடம் ரொக்கம் | 3.39 |
| | | ரொக்கக் கையிருப்பு மற்றும் ரிசர்வு வங்கியிடம் வைப்பு | 12.98 |
| | 241.36 | | 241.36 |

இருப்புநிலைக் குறிப்பினின்று இம்பீரியல் வங்கி வலுவான நிதியமைப்பைக் கொண்டிருந்தது என்பதை அறியலாம். இதன் செலுத்திய மூலதனம் ரூ. 5·62 கோடியாகவும், காப்பு நிதியும் மற்றைய காப்புகளும் ரூ. 6·35 கோடியாக இருந்தது. இதன் வைப்புகள் ரூ. 208·10 கோடியாக இருந்தது. தன் மொத்த சொத்துக்களாகிய ரூ. 241·36 கோடியில் அரசாங்க மற்றும் பாதுகாவல் பத்திரங்கள், அனுமதிக்கப்பட்ட

முதலீடுகள் ஆகியவைகளில் மட்டும் (89·57+11·07) ரூ. 100.64 கோடி முதலீடு செய்திருந்தது. நாட்டு வங்கியர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் உண்மையான உண்டியல்களை கழிமானம் செய்தது. வாங்கியது, வசூலிக்க வேண்டியவை ஆகியவைகள் (30·95+·51) ரூ.31·46 கோடிக்கு அமைந்திருந்தது. மிகவும் பத்திரமாகவும், ஜாக்கிரதையாகவும் தொழில் செய்து வந்த நிலையினை வங்கியின் இருப்புநிலைக் குறிப்பை மேலும் உற்று நோக்கினுல் அறிந்துகொள்ளலாம்.

இதன் வைப்புகள் பொதுமக்கள் தவிர, அரசு, அரசு அலுவலகங்கள், நிறுவனங்கள், கம்பெனிகள், கூட்டு வணிகங்கள் ஆகியவைகளிடமிருந்தும் வந்தன. நடப்புக் கணக்குக்கு மேல் வட்டி ஏதும் கொடுக்கவில்லை. தவணை வைப்பின் பேரில் ரூ. 500க்கு 6 மாதத்திற்கு மேலும் 12 மாதங்களுக்குக் கீழும் 3 லிருந்து 3½ சதவீதம்வரை அளித்தது. சேமிப்புக் கணக்கின்பேரில், ஒரு வாரத்து அறிக்கையில் பெற்றுக்கொள்ளக் கூடியவைகளுக்கு 3 சதவீதமும் சேமிப்புக் கணக்கில் ரூ. 10,000க்குமேல் 3½ சதவீதமும் அளித்துவந்தது.

இம்பீரியல் வங்கி ஆரம்பிக்கப்பட்டு 5 அல்லது 6 ஆண்டுகளுக்குள் பணச் சந்தையில் ஒரு முக்கிய வங்கியாகத் தலை எடுத்தது. அப்போது எல்லா வங்கிகளும் பெற்றிருந்த வைப்புகளில் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் இம்பீரியல் வங்கி பெற்று இருந்தது. இதேபோல் மற்றெல்லா வங்கிகளும் பெற்றிருந்த கிளைகளில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கை இம்பீரியல் வங்கி பெற்றிருந்ததுடன், நாணய மாற்று வங்கிகள் அனைத்தும் பெற்றிருந்த கிளைகளில் 2 மடங்கிற்கு மேல் இவ்வங்கி பெற்று இருந்தது. இம் முக்கியத்திற்கு இம்பீரியல் வங்கியின் அமைப்பும், அரசினுடைய வங்கி என்ற நிலையும், அரசு தன் ரொக்கத்தை இம்பீரியல் வங்கியிடம் வைத்து தன் கருவூல நடவடிக்கைகளை அதன்மூலம் செய்ததும் காரணங்களாகும்.

இம்பீரியல் வங்கி வணிக வங்கியாகவும் ஓரளவு மைய வங்கியாகவும் இயங்கிவந்தது என்று முன்பே குறிப்பிட்டோம். இந்நிலையே இவ்வங்கிக்கு தர்மசங்கடமான நிலையினை ஏற்படுத்திவந்தது. வணிக வங்கிகள் என்ற முறையில் அதிக வட்டி கொடுத்து வைப்புகளை ஈர்க்கவேண்டிய நிலையிலிருந்தது. அதுவும் பணத்தினை வைப்பாக வங்கிகளிடம் வைக்க மக்கள் ஓரளவு அச்சப்பட்டுக்கொண்டிருந்த அக் காலை, வங்கிப் பழக்கத்தினை அதிகரிக்கும் நோக்கினை ஒரு முக்கிய

குறிக்கோளாகக் கொண்டிருந்த இந்த வங்கி இதனைச் செய்ய வேண்டியிருந்தது. ஆனால், இதே நேரம் மைய வங்கி என்னும் நிலையில் வட்டி வீதத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய நிலையிலும் இருந்தது. வணிக வங்கி என்ற முறையில் மற்றைய வணிக வங்கிகளுடன் நெருங்கிய ஒருங்கிணைப்பு, நல் எண்ணம் ஆகிய நோக்குகளுடன் செயல்பட வேண்டி இருந்தது. மைய வங்கி என்னும் முறையிலும் இவை தேவைப் பட்டாலும், மைய வங்கி கண்டிப்பு, கட்டுப்பாடு இக்குறிக் கோள்களுடன் வணிக வங்கிகளை அணுக வேண்டும். இதுவே, மற்றைய வங்கிகளுக்கு இம்பீரியல் வங்கியின் மீது கசப்பு எண்ணமும், வெறுப்பு உணர்ச்சியையும் ஏற்படுத்தியது. மேற் கூறிய காரணங்களால் இம்பீரியல் வங்கி தன்னை வணிக வங்கி என்று அறுதி இட்டுக் கூறிக்கொள்ளவும் முடியவில்லை அல்லது மைய வங்கி என அறிவித்துக்கொள்ளவும் முடியாமல் பணச் சந்தையில் திரிசங்கு சொர்க்கம் போல் நின்றே தன் பணியினைச் செய்ய வேண்டியிருந்தது.

மைய வங்கிப் பணியினை ஓரளவு சிறப்பாக இம்பீரியல் வங்கி செய்துவந்தது என்பதற்கு எடுத்துக்காட்டுகள் உள்ளன. அலையன்ஸ் பாங்க் ஆஃப் சிம்லா (Alliance Bank of Simla) மூழ்கியபோது, நாட்டிலும், வங்கிகள் வட்டாரத்திலும் பெரும் பரபரப்பு ஏற்படாத வண்ணம் இம்பீரியல் வங்கி உடனடியாக அவ் வங்கியின் வைப்புதாரர்கள், கடனீந்தோர்களுக்கு 50 சத வீதத்திற்கு மேல் உடனடியாகக் கொடுத்து வேகத்தினை தணித்தது. மேலும், டாடா-தொழில் வங்கி, வங்காள நேஷனல் வங்கி, சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியா ஆகிய வங்கிகள் மீது ஓட்டம் ஏற்பட்டபோது, தக்க தருணத்தில் பண உதவிசெய்து அவ் வங்கிகளை காப்பாற்றியது.

### இம்பீரியல் வங்கி—மைய வங்கியாக மாற்றலாமா?

1930ஆம் ஆண்டிற்குப் பின் எல்லா நாடுகளும் மைய வங்கியினை அமைக்கத் தொடங்கின. இதே காலத்தில் இந்தியா விலும் மைய வங்கி அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்து வங்கியியல், பொருளாதார மற்றும் அரசு வட்டாரங்களில் நிலவி வந்தது. வங்கிகள் பற்றி அப்போது அமைக்கப்பட்ட குழுக்கள் எல்லாம் இந்தியாவிற்கு ஒரு மைய வங்கி வேண்டும் என்ற கருத்தினை வலியுறுத்தின. மைய வங்கி ஏற்படுத்தினால் அன்றி இந்தியப் பணச் சந்தையினை மேம்பாடு செய்யவோ, வணிக வங்கிகளின் செயல்பாட்டைக் கட்டுப்படுத்தவோ

முடியாது என்று எண்ணப்பட்டது. இதுகாறும் ஓரளவு மைய வங்கிப் பணியினைச் செய்துவந்த இம்பீரியல் வங்கி மைய வங்கி யாக மாற்றப்பட வேண்டுமா அல்லது புதியதாக ஒரு மைய வங்கி ஏற்படுத்தப்பட வேண்டுமா என்ற கேள்வி எழுந்தது? இம்பீரியல் வங்கியை மைய வங்கியாக மாற்றத் தேவையில்லை என்று கருதப்பட்டது. இதற்கான காரணங்களாவன :

1. இம்பீரியல் வங்கி இந்தியாவில் மிகப் பெரிய வணிக வங்கியாக அதிகக் கிளைகளுடன் இயங்கிவந்தது. இதனை மைய வங்கியாக மாற்றினால் ஒரு பெரிய வணிக வங்கியை இந்தியப் பணச் சந்தை இழக்க நேரிடும்.

2. மைய வங்கியாக மாற்றி, வணிக வங்கித் தொழிலையும் செய்ய அனுமதிக்கலாமா என்ற யோசனையும் சரியாகத் தோன்றவில்லை. அவ்விதம் செய்தால் வணிக வங்கித் தொழி லுக்கும், மைய வங்கிப் பணிகளுக்கும் எதிரான பயன்பாடுகள் ஏற்படலாம்.

3. இம்பீரியல் வங்கி மற்ற வணிக வங்கிகளின் நம்பிக் கைக்குப் பாத்திரமாக இல்லை. எனவே, இதனை மைய வங்கி யாக்கினால் வணிக வங்கியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இம் மைய வங்கி இருக்க முடியாது.

4. பல நாடுகளில் இதற்குமுன் தோற்றுவிக்கப்பட்ட மைய வங்கிகள் பல சீரிய பணிகளைச் செய்ய ஆரம்பித்தன. இதே பணிகளைச் செய்ய இந்தியாவில் ஒரு புதிய நிறுவனமே தேவை என்றும் கருதப்பட்டது.

இம்பீரியல் வங்கியை மைய வங்கியாக மாற்றும் எண்ணத் தைக் கைவிட்டு ரிசர்வு வங்கியை இந்தியாவின் மைய வங்கி யாக, ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா சட்டம் 1934இன் கீழ் ரிசர்வு வங்கியை நிறுவி, 1935ஆம் ஆண்டிலிருந்து இந்தியாவின் மைய வங்கியாக ரிசர்வு வங்கி பணியாற்றி வருகின்றது.

**ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா**

இம்பீரியல் வங்கி தேசியமயமாக்கப்பட்டு ஜூலை, 1ஆம் நாள் 1955 ஆண்டிலிருந்து ஸ்டேட் வங்கியாக இயங்கி வருகின்றது.

கிராமிய வங்கி விசாரணைக்குழு 1949 (Rural Banking Enquiry Committee, 1949), இம்பீரியல் வங்கி அடுத்த 5 ஆண்டு

களில் 270 கிளைகள் அல்லது கொடுக்கும் அலுவலகங்களை (pay offices), அரசு கருவூலம் செயல்பட்டு வரும் எல்லா இடங்களில் திறக்கவேண்டும் என்றும் ரிசர்வு வங்கியின் அலுவலகம் இல்லாத இடங்களில் அரசுக் கருவூலம் இம்பீரியல் வங்கியினால் நடத்தப்படவேண்டும் என்றும் பரிந்துரை செய்தது. இக்குழு இம்பீரியல் வங்கிக்கும் அரசுக்கும் உள்ள நெருங்கிய தொடர்புகளின் காரணமாக அரசு சம்மந்தப்பட்ட சில விவகாரங்களைக் குறித்து இம்பீரியல் வங்கிச் சட்டத்தை திருத்த வேண்டும் என்று கூறியது. மேலும் இக்குழு, இம்பீரியல் வங்கி தொடர்ந்து அதிக உதவியும் ஆதரவும் நாணய மாற்று வங்கிகளுக்கு கொடுத்து வருவதாலும், இவ்வங்கியின் பெரிய அதிகாரிகள் பலர் இந்தியர் அல்லாதாரர்களாகவே இருப்ப தாலும் இந்தியாவில் பொது மக்களிடையே இவ்வங்கி பற்றிய அதிருப்தியே பரவலாக நிலவி இருக்கின்றது என்றும் குறிப்பிட்டது.

இதற்குப் பின் அமைக்கப்பட்ட அகில இந்திய கிராமிய விசாரணைக்குழி (All India Rural Credit Survey Committee) தான் 1954-ல் வெளியிட்ட குழு அறிக்கையில் கிராமிய வங்கி விசாரணைக்குழு 1949, ஐந்தாண்டுகளில் 270 கிளைகள் திறக்கவேண்டும் என்ற பரிந்துரைக் குறியீட்டில் பாதியைக் கூட எட்டிப்பிடிக்க இம்பீரியல் வங்கியினால் முடியவில்லை என்றும், 114 கிளைகளையே திறந்துள்ளது என்றும் இதற்கு முக்கியக் காரணம் இம்பீரியல் வங்கி பங்குதாரர்கள் வங்கியாக இருப்பதால் இலாப நோக்குடையதாகவே இருக்கின்றது எனவும், கிராமப் புறங்களில் கிளைகளைத் திறந்தால் இலாபம் குறைந்து இலாப ஈவுத்தொகை வீழ்ந்து விடுமோ என மிகவும் அஞ்சுகின்றது எனவும் கூறியது. மேலும் இக்குழு, ஒரு வலுவான அரசு பங்கேற்றுள்ள வணிக வங்கி இந்தியாவுக்குத் தேவை என்றும், இவ்வித வங்கி இருந்தால் அன்றி இக்குழு கூட்டுறவு வங்கிகள் பற்றி அளித்துள்ள கீழ்க் கண்டுள்ள பரிந்துரைகளைச் செயல் படுத்த முடியாது எனக் கூறியது.

1. கூட்டுறவு வங்கிகளுக்கும், வணிக வங்கிகளுக்கும் ஒருங்கிணைப்பு ஏற்படுத்துவது.

2. பணம் அனுப்பும் (Remittance) வசதியினை கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளித்தல்.

3. விவசாயக் கடனையும், விற்பனையையும் (Marketing) ஒருங்கிணைத்தல்.

மேற்கூறியவைகளைச் செய்ய அதிகக் கிளைகளையும், அரசுடன் நெருங்கியுள்ள இம்பீரியல் வங்கியை ஸ்டேட் வங்கியாக தேசியமயமாக்கலாம் என இக் குழு சிபாரிசு செய்தது.

பிப்ரவரித் திங்கள் 1948ஆம் ஆண்டு மத்திய நிதி அமைச்சர் பாராளுமன்றத்தில் ரிசர்வு வங்கி, இம்பீரியல் வங்கி ஆகிய இரு வங்கிகளையும் தேசியமயமாக்குவது பற்றி அரசு கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டுள்ளது என்றும், எனினும் இம்பீரியல் வங்கியை உடனடியாக தேசியமயமாக்குவதில் சில சிக்கல்கள் உள்ளன என்றும், இம்பீரியல் வங்கி பாகிஸ்தான், பர்மா, இலங்கை ஆகிய நாடுகளில் கிளைகளைக் கொண்டுள்ளதால் தேசியமயமாக்குமுன் இது சம்பந்தமான பல பிரச்சனைகளைத் தீவிரமாக ஆலோசிக்கத் தேவை இருக்கின்றது என்றும், ரிசர்வு வங்கியை தேசியமயமாக்குவது உடனடியாக எடுத்துக் கொள்ளப்படும் என்றும் இம்பீரியல் வங்கியைத் தேசியமயமாக்குவது சற்று தள்ளிப் போடப்படும் என்றும் கூறினர்.

இது போழ்து இம்பீரியல் வங்கியின் மத்திய இயக்குநர் குழு அரசுக்கு கோரிக்கை ஒன்றை சமர்ப்பித்தது. இதில் அரசு இம்பீரியல் வங்கியை தேசிய மயமாக்க எண்ணும் திட்டத்தை வலுவாகக் கண்டித்து, குறைகூறி, இத் திட்டத்தைக் கைவிடுமாறு கேட்டு கீழ்க்கண்ட வாதங்களை தங்கள் சார்பில் தெரிவித்தது.

1. இம்பீரியல் வங்கிக்காகத் தனிச்சட்டம் 1920இல் ஏற்படுத்தி இவ் வங்கியைத் தோற்றுவிக்கக் காரணம், இவ் வங்கி தனித் தன்மையுடன் இயங்க வேண்டும் என்ற நோக்கமாகும். இவ்வித நோக்குடன் இயங்கு வரும் ஒரு வங்கியை தேசியமயமாக்குவது பொருந்தாதது ஒன்றாகும்.

2. ஆரம்பகாலங்களில் அரசு வங்கியாக அரசுப் பணத்தினை வைப்பாகக் கொண்டு அரசு நிதி விவகாரங்கள் செய்ததில் இம்பீரியல் வங்கிக்கு கணிசமான இலாபம் கிடைத்தது என்பது உண்மையேயானாலும் பிறகு போகப் போக அரசுக்காக பல இடங்களில் கிளைகளைத் திறந்து அரசு நிதித் தொழிலைச் செய்ததில் இம்பீரியல் வங்கிக்கு நட்டமே ஏற்பட்டது என்றும், அரசு நிதிப்பணி செய்வதே தேசியமயமாக்கப்பட வேண்டிய வாதம் என்று கருதினால் இப்பீரியல் வங்கி அரசு நிதி சம்பந்தமாக யாதொரு பணியும் செய்யாமல் விட்டு விடத் தயாராக இருக்கின்றது.

3. இம்பீரியல் வங்கி பாகிஸ்தானில் 28 கிளைகளும், 55 துணை அலுவலகங்களும் (sub offices), பர்மாவில் 6 கிளைகளும் 1 துணை அலுவலகமும், இலங்கையில் 1 கிளையும் இருக்கின்றது என்றும் அங்கு மற்ற இந்திய வணிக வங்கிகள் மூடப்பட்டுவிட்டன என்றும், இந்திய வெளிநாட்டு வியாபாரம் கருதி இம்பீரியல் வங்கி இவ்விடங்களில் தொழில் செய்ய வேண்டும் என்றும், தேசியமயமாக்கப் பட்டால் பல நாடுகள் பொருத்த ஒரு விஷயத்தில் சில சிக்கல்கள் ஏற்படும் என்றும் கூறியது.

4. இம்பீரியல் வங்கியில் பெரிய அதிகாரிகள் அனைவரும் இந்தியர்களே. வெள்ளைக்கார மேல் அதிகாரிகள் 72 பேரே. இவர்களும் 1950 லிருந்து 1955க்குள் ஓய்வு பெற்று விடுவர்.

5. திறமை ஒன்றைக் கருதியே இம்பீரியல் வங்கி தேசியமயமாக்கப்படக் கூடாது என்றும், சிக்கனக் கொள்கைகளைக் கடை பிடிப்பதில் இம்பீரியல் வங்கியை எவ்வித வங்கியும் மிஞ்சிவிட முடியாது.

மேலும் இம்பீரியல் வங்கியின் பங்குதாரர்கள் அவ்வங்கியை தேசியமயமாக்குவதைத் தீவிரமாக எதிர்த்ததோடு அரசு சம்பந்தப்பட்ட நிதி அலுவலைக் கைவிடவும் வேண்டும் என்றும் தீர்மானம் செய்தனர்.

### ஸ்டேட் வங்கியின் அமைப்பு

ஸ்டேட் வங்கி, இம்பீரியல் வங்கியைத் தேசியமயமாக்கி, ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தியா 1955ஆம் ஆண்டுச் சட்டத்தின் படி ஜூலை 1ம் நாள் 1955ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இம்பீரியல் வங்கியின் பங்குகள் ரிசர்வு வங்கிக்கு மாற்றப்பட்டது. ஒவ்வொரு முழுமையும் செலுத்தப்பட்ட ரூ. 500 மதிப்புள்ள பங்கிற்கு பங்கு தாரர்களுக்கு ஈட்டுத் தொகையாக (Compensation) ரூ. 1765-10 கொடுக்கப்பட்டது. ரூ. 500 மதிப்புள்ள பங்கில் $\frac{1}{4}$ பங்கே செலுத்தப்பட்ட பங்குகளுக்கு இவ் ஈட்டுத்தொகையில் $\frac{1}{4}$ பங்கு அளிக்க சட்டம் வகை செய்தது. இவ் ஈட்டுத்தொகையில் ரூ. 10,000 வரை ரொக்கமாகவும், மீதியை 1965 இல் முதிர்வடையும் 3.5 சதவீத வட்டியைக் கொண்ட 10 ஆண்டு அரசுப் பத்திரங்களாகத் தரப்படும். ரொக்கமாக ஈட்டுத் தொகையினைப் பெற விரும்பாத இம்பீரியல் வங்கி பங்குதாரர்களால் ஸ்டேட் வங்கியில் ரூ. 100 செலுத்தப்பட்ட பங்கை ரூ. 350 என்ற கணக்கில் பெற்றுக்கொள்ளலாம். எப்போதும் ரிசர்வு வங்கி மொத்த பங்குகளில் 55 சதவீதத்

திற்குக் குறையாமல் தன்னிடம் வைத்திருக்கவேண்டும். எந்த ஒரு தனிநபரும் 200ஸ்டேட் வங்கிபங்குகளுக்குமேல் கொள்ளக் கூடாது. ஆனல், இச் சட்டத்திற்கு ரிசர்வு வங்கி, அரசாங்க கழகங்கள், காப்பீட்டகங்கள், சுயாட்சி நிறுவனங்கள், அறக் காப்பாளர்கள், அற நிலையப் பாதுகாப்புக்கள் ஆகியவைகள் விதிவிலக்கு.

ஸ்டேட் வங்கியின் மத்திய அலுவலகம் பம்பாயிலும் அதன் அகத் தலைமையகங்கள் பம்பாய், கல்கத்தா, சென்னை, கான்பூர், அகமதாபாது, ஹைதராபாது ஆகிய இடங் களில் இருக்கும். மற்றும் எங்கெங்கு தேவையோ அங்கெல்லாம் மத்திய அரசுடன் கலந்து மத்திய இயக்குநர்க் குழு (Central Board) அகத் தலைமையகங்களை (Local Boards) அமைக்க உரிமை பெற்றிருக்கிறது. ஸ்டேட் வங்கி இம்பீரியல் வங்கியின் கிளைகள் அனைத்தையும் எடுத்துத் தன் பெயரில் நடத்துவதோடு, 5 ஆண்டிற்குள் 400 கிளைகளை அரசு ரிசர்வு வங்கியுடன் ஆலோ சித்துத் தரும் திட்டத்திற்கேற்ப திறக்கவேண்டும். இவ்விதம் திறந்த கிளைகள் எதனையும் ரிசர்வு வங்கியின் உத்திரவின்றி மூடக்கூடாது. தன்னுடைய கிளைகளையும், முகமைகளையும் (agencies) வெளிநாடுகளில் ஆரம்பிக்க ஸ்டேட் வங்கிக்கு உரிமை உண்டு.

வங்கியின் நடத்தை பற்றிய எல்லா கொள்கைகளையும் முடிவெடுத்து செயல்படுத்த ஒரு மத்திய இயக்குநர் குழு உண்டு. இக் குழுவில் கீழ்க்கண்டுள்ளவர்கள் இடம் பெருவர்.

1. மத்திய அரசு, ரிசர்வு வங்கியுடன் கலந்து ஆலோசித்து (முதன்முறை தவிர) ஒரு பெருந்தலைவரும் (Chairman), ஒரு துணைப் பெருந்தலைவரும் நியமிக்கும்.

2. மத்திய இயக்குநர் குழுவினல், மத்திய அரசின் ஒப்புத லுக்குப்பின் இரண்டு நிருவாக டைரக்டர்கள் (Managing Directors) நியமிக்கப்படுவர்.

3. ரிசர்வு வங்கி தவிர மற்ற பங்குதாரர்களால் தேர்ந் தெடுக்கப்படும் 6 இயக்குநர்கள்.

4. எட்டு இயக்குநர்கள், மத்திய அரசாங்கம் ரிசர்வு வங்கியைக் கலந்து ஆலோசித்து நியமனம் செய்யும். பல மாநிலத்தவருக்கும் வாய்ப்பு அளிக்கும் வண்ணம் இரண்டு பேர் கூட்டுறவுச் சங்கங்கள் நடத்தை அறிந்த மேதாவிகள்

ஆகவும் மற்றவர்கள் வணிகம், தொழில், வங்கியியல் நிதி ஆகிய துறைகளில் அனுபவமிக்கவர்களாயும் இருக்கவேண்டும்.

5. மத்திய அரசு ஒரு இயக்குநரை நியமிக்கும்.

6. ரிசர்வு வங்கி ஒரு இயக்குநரை நியமிக்கும்.

முதன் முறையாக மத்திய இயக்குநர் குழு அமைக்கப்பட்ட போது எல்லா இயக்குநர்களேயும் மத்திய அரசு நியமித்தது. இவர்களில் பெருந்தலைவர், துணைப் பெருந்தலைவர், நிருவாக இயக்குநர் தவிர அனைவரும் இரண்டு ஆண்டுகளுக்குப்பின் ஓய்வு பெறவேண்டும்.

பெருந்தலைவர், துணைப்பெருந்தலைவர், நிருவாக டைரக்டர் ஆகியோர்கள் 5 ஆண்டுகளுக்கு மிகாமல் நியமிக்கப்படலாம். அவர்கள் மறு நியமனத்திற்குத் தகுதி வாய்ந்தவர்கள். பங்கு தாரர்கள் தேர்வு செய்யப்படும் இயக்குநர்களும், மத்திய அரசாங்கத்தால் மாநில நன்மை கருதியும், கூட்டுறவு, வணிகம் மற்ற பொருளாதார அனுபவம் பெற்றவர்கள் நியமிக்கப்படுவது 4 ஆண்டுகளுக்கு. இவர்களும் மறு நியமனத்திற்குத் தகுதி வாய்ந்தவர்கள். மற்ற இயக்குநர்கள் இவர்களை சிபாரிசுசெய்து நியமனம் செய்துள்ள அதிகாரம் எத்துணை காலம் வரை விரும்பு கின்றதோ, அதுவரை இருக்கலாம்.

இதைத்தவிர அகத் தலைமையகங்களில் அகக் குழுக்கள் (Local Boards) நியமிக்கப்பட்டுள்ளன. இக்குழு மத்திய இயக்குநர்குழு எத்துணை அளவு உரிமை அளித்துள் ளதோ அத்துணை அளவு பயன்படுத்தலாம்.

ஸ்டேட் பாங்கு கீழ்க்கண்டுள்ள தொழில்களைச் செய்ய அனுமதிக்கப்பட்டுள்ளது:

1. ரிசர்வு வங்கிக்கு எந்தெந்த இடத்தில் கிளைகள் ஏதும் இல்லையோ அவ்விடங்களிலெல்லாம் ரிசர்வு வங்கியின் முகவரா கவும், எங்கு ரிசர்வு வங்கியின் வங்கியல் துறை பணி புரிய வில்லையோ அங்கெல்லாம் முகவராக அரசு சார்பில் பணம் கொடுப்பது, பெறுவது, பணம் வசூலித்து அனுப்புவது, தங்கம், அரசுப் பத்திரங்களில் ஈடுபடுத்திக்கொள்வது ஆகிய அனைத் தையும் செய்யலாம்.

2. கடன் மற்றும் அதிகப்பற்றினை கீழ்க்கண்டவைகள் ஈட்டின்பேரில் கொடுக்கலாம்.

(அ) சரக்குகள், அறக்காப்பாளர் முதலீடு செய்ய அனும திக்கப்பட்டுள்ள எல்லா பத்திரங்களும்,

(ஆ) கடன் பத்திரங்கள், மற்றைய பத்திரங்கள். மாவட்டக் குழு, நகராட்சி, மற்றவைகளால் சட்டபூர்வமாக வெளியிடப் பட்டிருந்தால்,

(இ) வரையறுக்கப்பட்ட கம்பெனிகளின் கடன் பத்தி ரத்தின் பேரில் (அவ்வப்போது மத்திய இயக்குநர் குழுவினுல் கொடுக்கப்படும் ஆணை கட்டுப்படுத்தும்),

(ஈ) பங்குகள், கழகத்தின் கடன் பத்திரங்கள் சட்டபூர்வமாக வெளியிடப்பட்டவையாயின் (அவ்வப்போது மத்திய இயக்குநர் குழுவினுல் கொடுக்கப்படும் ஆணை கட்டுப்படுத்தும்),

(உ) சரக்குகள், சரக்குப்பத்திரங்கள் மாற்றத்தின்பேரில்,

(ஊ) சரக்குகள், துணைப் பணயமாக ஈடுசெய்யப்பட்டால்

(எ) உண்டியல்கள்,

(ஏ) முழுதும் செலுத்தப்பட்ட கம்பெனிப் பங்குகள் பேரிலும்.

3. தான் கொடுத்தக் கடன், ரொக்கப்பற்று, அதிகப்பற்று ஆகியவைகளுக்கு ஈடாகப்பெற்ற பிராமிசரி கடன்பத்திரம், கடன் பத்திரம், சரக்குப்பத்திரம், பாண்டுகள், பங்குகள், சரக்கு, சரக்குரிமை பத்திரங்கள் ஆகியவைகள் ஈடாகவோ, அடமான மாகவோ, பற்றுரிமையாகவோ, மற்றெவ்வாரோ கொடுக்கப்பட் டிருந்து, இதற்கான கடன் பணம் வராவிடில் அவைகளை விற்று பணம் பெரும் உரிமை

4. உண்டியல், மற்றச் செலாவணிப் பத்திரங்களை வரைதல், ஏற்றல், கழிமானம் செய்தல், வாங்குதல், மற்றும் விற்றல்,

5. பணத்தினை சட்டப்படியும், இயக்குநர்குழு அனுமதித் துள்ள வரையிலும் முதலீடு செய்தல்,

6 பணவிடை, தந்தி மாற்றம், மற்றும் பணம் அனுப்பும் பணி, பணவிடை, காசோலை, தந்தி மாற்றம் ஆகிய வைகளை வாங்கும் உரிமை,

7. தங்கம், வெள்ளியினை வாங்குவதும் விற்பதும்,

8. வைப்புகளைப் பெற்று கணக்கு வைத்திருப்பது,

9. பாதுகாப்பு பெட்டக வசதி அளித்தல்,

10. நிலையுள்ள, நிலையில்லா, எப்பொருள்களும், தொழில் சம்பந்தமாக வாங்கல், விற்கல்,

11. கூட்டுறவு வங்கியின் முகவராகப் பணியாற்றல்,

12. பங்கு விற்றலில் ஒப்புறுதியளித்தல் (Underwriting),

13. பணசம்பந்தமான எத்தொழிலையும் கமிஷன் பெற்றுச் செய்தல்,

14. உயில் காப்போன், பாதுகாவலர் ஆகிய பணிகளைத் தனியாகவோ மற்றவர்களுடன் கூட்டாகவோ செய்தல்,

15. கடன் கடிதம் (Letter on Credit) ஏற்படுத்துதல் மற்றும் வெளிநாட்டு உண்டியலை வரைதல்,

16. 15 மாதங்களுக்கு மிகைப்படாத வெளிநாட்டு உண்டியல்களையும், பருவகால விவசாயக் கடன் சம்பந்தப்பட்ட உண்டியல் 6 மாதங்களுக்கு மிகைப் படாமல் இருந்தால் அவைகளை வாங்குவது,

17. தன் தொழிலுக்குத் தேவையாயின் கடன் பெற்று, ஈட்டினை அளித்தல்,

18. கலைப்பைத் (Winding up) தவிர்க்க கூட்டுறவு மற்றும் கம்பெனி ரூபாய் நிறுவனங்களுக்குக் கடன் அளித்தல்,

19. ரிசர்வு வங்கியின் அனுமதி பெற்று எந்த ஒரு வங்கிக் கம்பெனியின் பங்கை வாங்குதல், பெறுதல், கொண்டு இருத்தல், விற்றல் மற்றும் துணை வங்கிக் கம்பெனியை ஏற்படுத்துதல்,

20. வேறு எந்த விதத் தொழிலும் மத்திய அரசு ரிசர்வு வங்கியின் ஆலோசனையின் பேரில் மத்திய இயக்குநர் குழுவின் இசைவுடன் செய்யலாம்.

ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் (Subsidiaries of the State Bank of India)

அகில இந்திய கிராமியக் கடன் விசாரணைக் குழு 1954, அரசு சம்பந்தப்பட்ட பல வங்கிகளை, ஸ்டேட் வங்கியின் துணை

வங்கிகளாக அமைத்து நாடு முழுவதும் ஒருங்கிணைந்த ஸ்டேட் வங்கிகளை ஏற்படுத்த சிபாரிசு செய்தது. இச் சிபாரிசினை அரசு ஏற்று ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தியா (துணை வங்கிகள்) சட்டம் 1959, [State Bank of India (Subsidiary Banks) Act. 1959] ஏற்படுத்தப்பட்டது. எட்டு அரசு சம்பந்தப்பட்ட வங்கிகளை ஸ்டேட் வங்கியின் துணை வங்கியாக ஆக்கியது. அவையாவன:

| வங்கியின் பெயர் | வங்கி ஏற்பட்ட ஆண்டு | துணை வங்கியாக ஆக்கப் பட்ட தேதி | புதிய பெயர் |
|---|---|---|---|
| 1. ஸ்டேட் பாங்கு ஆஃப் ஹைதராபாத் (முன்பு ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு எனக் கூறப் பட்டது). | 1942 | 1-10-1959 | ஸ்டேட் பாங்கு ஆஃப் ஹைதராபாத் |
| 2. பாங்கு ஆஃப் ஜெய்ப்பூர் | 1943 | 1-1-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் ஜெய்ப்பூர் |
| 3. பாங்கு ஆஃப் பிகானீர் | 1944 | 1-1-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் பிகானீர் |
| 4. பாங்கு ஆஃப் இண்டோர் | 1920 | 1-1-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் இண்டோர் |
| 5. திருவாங்கூர் பாங்கு | 1946 | 1-1-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் திருவாங்கூர் |
| 6. பாங்கு ஆஃப் மைசூர் | 1913 | 1-3-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் கர்னாடகா |
| 7. பாங்கு ஆஃப் பாட்டியாலா | 1917 | 1-4-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் பாட்டியாலா |
| 8. ஸ்டேட் பாங்கு ஆஃப் சௌராட்டிரா | 1902 | 1-5-1960 | ஸ்டேட் பாங்கு ஆஃப் சௌராஷ்டிரா |

1963ஆம் ஆண்டு ஸ்டேட் பாங்கு ஆஃப் பிகானீர், ஸ்டேட் பாங்கு ஆஃப் ஜெய்ப்பூர் ஆகிய இரு வங்கிகளையும் இணைத்து ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தியா பிகானீரும், ஜெய்ப்பூரும் ஏற்படுத்தப்பட்டது.

ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தியா (துணை வங்கிகள்) சட்டம் 1959இன் படி, ஸ்டேட் வங்கி துணை வங்கியின் 55 சதவீதத்

திற்குக் குறையாத வெளியிட்டப் பங்குகளைக் கொள்ள வேண்டும். ஆனால், நடைமுறையில் ஸ்டேட் பாங்கு ஆஃப் ஹைதராபாத், பாடியாலா, சௌராஷ்டிரா ஆகிய துணை வங்கிகளின் 100 சதவீத பங்குகளையும் மற்றைய துணை வங்கிகளின் பங்குகளில் 58 முதல் 93 சதவீதத்தைப் பெற்று இருக்கின்றது.

ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் பற்றிய வளர்ச்சி அட்டவணை 22இல் கொடுக்கப்பட்டுள்ளது.

அட்டவணை - 22.

## 31-12-1973 அன்று துணை வங்கிகள் இருந்த நிலை

ரூ. கோடியில்

| துணை வங்கியின் பெயர் | செலுத்தப் பட்ட மூல தனமும் காப்பும் | வைப்புகள் | கடன் அளித்தது | கிளைகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| 1. ஸ்டேட் பாங்கு ஆஃப் பிகானீரும் ஜெய்ப்பூரும் | 1.20 | 84.16 | 60.28 | 293 |
| 2. ஸ்டேட் பாங்கு ஆஃப் ஹைதராபாத் | 1.14 | 80.13 | 58.00 | 253 |
| 3. ஸ்டேட் பாங்கு ஆஃப் இந்தோர் | 0.59 | 41.67 | 27.41 | 109 |
| 4. ஸ்டேட் பாங்கு ஆஃப் கர்னாடகா | 2.02 | 63.12 | 47.14 | 166 |
| 5. ஸ்டேட் பாங்கு ஆஃப் பாட்டியாலா | 0.72 | 70.46 | 42.07 | 138 |
| 6. ஸ்டேட் பாங்கு ஆஃப் சௌராஷ்டிரா | 1.79 | 60.85 | 42.63 | 126 |
| 7. ஸ்டேட் பாங்கு ஆஃப் திருவாங்கூர் | 1.56 | 64.49 | 41.42 | 218 |

* Banking in India, S. G. Panandikar - D. M. Mitharin (12th Edition) P. 380.

இத் துணை வங்கிகள் ஸ்டேட் வங்கியுடன் தொடர்புற்று வலுவான வங்கிகளாக உருவாகியுள்ளதுடன், ஸ்டேட் வங்கி அணியில் (group) அங்கம் வகிக்கும் வங்கி என்று பெருமை உடன் திகழ்கின்றது.

ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் ஸ்டேட் வங்கியைப் போல், கடன், தொழில் வளர்ச்சியில் நல்ல அக்கரை காட்டி வருகின்றது. அத்துணைத் துணை வங்கிகளின் கிளைகளும் 1960ஆம் ஆண்டு 381ஆக இருந்தது டிசம்பர் 1973ஆம் ஆண்டு 1635 ஆக உயர்ந்திருந்தது. இவைகளில் 600 கிளைகள் கிராமப் புறங்களிலும் 683 நகர்சார்புறங்களிலும் (Semi Urban-areas) அமைந்திருந்தது. இவ் வனைத்து வங்கிகளின் வைப்புகள் 1960லிருந்த ரூ. 104 கோடியிருருந்து 1973ஆம் ஆண்டு ரூ. 554 கோடியாக உயர்ந்திருந்தது. இதே காலத்தில் இவ் வங்கிகளின் கடனளிப்பு ரூ. 59 கோடியிலிருந்து ரூ. 420 கோடியாக உயர்ந்து இருந்தது. இதில் முந்துமைத் துறைக்கு மட்டும் அளித்தக் கடன் மொத்தக் கடனில் 27 சதவீதமாக இருந்தது.

### ஸ்டேட் வங்கியின் வளர்ச்சி

ஸ்டேட் வங்கி 1955ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட போது இது ஆரம்பிக்கப்பட்ட 5 ஆண்டுகளுக்குள் 400 கிளைகளைத் திறக்க வேண்டும் என்ற குறியீடு நிருணயிக்கப்பட்டது. குறிப்பிட்ட காலத்திற்குள் இதனை ஸ்டேட் வங்கி செய்து முடித்தது. இரண்டாவது கிளைப் பெருக்க குறியீடு 1961ஆம் ஆண்டு மத்திய இயக்குநர் குழுவின் துணைக் குழுவினுல் நிருணயிக்கப்பட்டது. இக் குறியீட்டின் படி 300 வங்கிக் கிளைகளை சூன் 1965-க்குள் கிராம, நகர்புறங்களில் தோற்றுவிக்க வேண்டும். இக் குறியளவையும் தக்க காலத்திற்குள் பூர்த்தி செய்து கிளைகளை ஸ்டேட் வங்கி திறந்தது. மூன்ருவது கிளை விவரிப்புத் திட்டம் ஜனவரித் திங்கள் 1964ஆம் ஆண்டு தொடங்கி 1968ஆம் ஆண்டின் முடிவில் முடிந்தது. 1973ஆம் ஆண்டு இறுதியில் 3015 கிளைகளை கொண்டிருந்தது. இம்பீரியல் வங்கி ஸ்டேட் பாங்காக 1955 சூலை 1ஆம் தேதி மாற்றப் பெற்ற போது இருந்த கிளைகள் 466, 1973ஆம் ஆண்டு 3015 கிளைகளைக் கொண்டிருந்தது. பெரிய அளவில் கிளைத் திறப்புகளை ஸ்டேட் வங்கி செய்துள்ளது என்பதினை எவரும் மறுக்க முடியாது. அதன் 3015 கிளைகளில், 1012 கிளைகள் கிராமப்புறங்களில் இருந்தன. இது ஸ்டேட் வங்கியின் மொத்தக் கிளையில் 34 சதவீதமாக இருந்தது. இவ் விடங்களில் மக்கள் தொகை 10,000-க்கு கீழாகவே இருந்தன. 1250 கிளைகள் அல்லது

ஸ்டேட் வங்கியின் மொத்தக் கிளைகளில் 41 சதவீதம், நகர்சார் புறத்தில் (Semi Urban-areas) அமைந்திருந்தன. இவ் விடங்களில் மக்கள் தொகை 10,000-க்கு மேலும் 1,00,000-க்கு கீழும் இருந்தன. கிளைப் பெருக்கம் பற்றிய அட்டவணை ஒன்று கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

ஸ்டேட் வங்கியும் – துணை வங்கிகளும் – கிளை வளர்ச்சி

| இடம் | 1969 | 1970 | 1971 | 1972 | 1973 |
|---|---|---|---|---|---|
| கிராமம் | 819<br>(33.3) | 1149<br>(39.1) | 1558<br>(44.3) | 1584<br>(40.0) | 1612<br>(35) |
| நகர்சார்புறம் | 1170<br>(47.5) | 1240<br>(42.3) | 1299<br>(36.9) | 1527<br>(38.6) | 1932<br>(41) |
| நகர் | 248<br>(10.1) | 295<br>(10.0) | 374<br>(10.6) | 503<br>(12.7) | 650<br>(14) |
| பெருநகரங்களும், கடற்கரைப் பட்டணங்களும் | 225<br>(9.1) | 251<br>(8.6) | 288<br>(8.2) | 344<br>(8.7) | 456<br>(10) |
| மொத்தம் | 2462<br>(100) | 2935<br>(100) | 3519<br>(100) | 3958<br>(100) | 4650<br>(100) |

(அடைப்புக்குள் இருப்பவை சதவீதத்தைக் குறிக்கின்றன)

அட்டவணையிலிருந்து 1969லிருந்து 1973 வரை ஸ்டேட் வங்கிக் குழு வங்கிகள் பெருக்கியுள்ள கிளைகளையும் அவைகளில் கிராம, நகர்சார்பு, நகர, பெருநகர கிளைகளின் எண்ணிக்கையின் உயர்வும், சதவீதமும் அறியலாம்.

வைப்புத் திரட்டு (Deposit mobilisation)

ஸ்டேட் வங்கியின் மொத்த வைப்புகள் ஜூலை 1ஆம் நாள் 1955இல் இருந்த (ஸ்டேட் வங்கி ஆரம்பித்தபோது) ரூ. 188 கோடியிலிருந்து 1973ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 2237 கோடியாக இருந்தது. இது, பின் பட்டியலில் கண்டுள்ள எல்லா வங்கிகளின் வைப்புகளில் 22·3 சதவீதமாக இருந்தது. இவ் வைப்புகளில் கணிசமான பகுதி கிராமப்புற, நகர்சார்ப்புற

கிளைகளினின்று திரட்டப்பட்டது. உதாரணமாக 1971ஆம் ஆண்டு நவம்பர் மாதக் கடைசியில் கிராமப்புற, நகர்சார்ப்புற ஸ்டேட் வங்கியின் கிளைகள், ஸ்டேட் வங்கியின் மொத்த வைப்புகளில் 40·8 சதவீதம் பெற்றிருந்தன. 1955 முதல் 1973 வரை வைப்பு உயர்வை நோக்கும்போது ஒரு உண்மை புலப் படுகின்றது. நடப்புக் கணக்குகள் வளர்ச்சி குறைந்து சேமிப்புக் கணக்கு மற்றும் தவணைக் கணக்கு எண்ணிக்கைகள் உயர்ந் துள்ளன. இதிலிருந்து தனிப்பட்டோர் சேமிப்பு உயர்ந்துள்ளது. இதற்கு ஸ்டேட் வங்கி பயன்பட்டுள்ளது என்பதினைத் தெரிந்துகொள்ளலாம்.

வைப்பு வளர்ச்சியைப் படிப்படியாக நோக்கினால் சூலை 1 1955லிருந்த ரூ. 188 கோடி வைப்பு 1956, 1957 ஆண்டுகள் இறுதியில் ரூ. 221, 344 கோடியாக உயர்ந்தது. 1958ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 578 கோடியாகவும் 1962, சூலை 31ஆம் நாள் ரூ. 679 கோடியாகவும், 1971ஆம் ஆண்டு ரூ. 1,502 கோடி ஆகவும் 1973 கடைசியில் ரூ. 2,237 கோடியாகவும் உயர்ந்து கொண்டே வந்துள்ளது. பல புதிய திட்டங்களை, ஜனதா, வைப்புத் திட்டம், முனைப்பு பரிசு வைப்பு அத்தாட்சிப் பத்தி ரங்கள் (Premium Prize Deposit Certificates), பரிசுக் காசோலைகள் (Gift Cheques), போன்ற பல சிறப்பு வைப்புத் திட்டங்கள் மூலம் வைப்புகளை ஈர்க்க வழி செய்துள்ளது.

**கடன்கள்**

ஸ்டேட் வங்கியின் மொத்தக் கடனளிப்பு 1955ஆம் ஆண்டு இருந்த ரூ. 99 கோடி நிலையிலிருந்து, 1973ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 1,582 கோடி நிலையில் உயர்ந்திருந்தது. இது மற்ற எல்லா வங்கிகளும் கொடுத்த கடனில் 23 சதவீதமாக (1973இல்) இருந்தது. அரசுத்துறை நிறுவனங்களுக்கு அதிகபட்சமாக கடனளிக்கும் பெரிய வங்கியாக ஸ்டேட் வங்கி அமைந் துள்ளது. மேலும், உணவுக் கொள்முதல், நோய்வாய்ப் பட்டுள்ள பஞ்சுத் தொழிற்சாலைகள், ஆகியவைகளுக்குப் பெரு மளவில் கடனளித்துள்ளது. பொதுத்துறை நிறுவனங்களைத் தவிர தனியார் துறையில் பெரும் தொழிற்சாலைகள் தங்கள் கடன் தேவைக்கு ஸ்டேட் வங்கியை பெரிதும் நம்பி உள்ளன. இந்தியாவின் தொழில் முன்னேற்றம் கருதி தொழிற்சாலைகளுக்கு அளிக்கும் கடனை பெரிதும் உயர்த்தி, வாணிகத்திற்கு அளிக்கும் கடனை ஓரளவு குறைத்துக் கொண்டுள்ளது. தொழில் கடனளிப்பு 1956லிருத்த 57 சதவீதத்திலிருந்து 1969ஆம் ஆண்டு 74·8 சதவீதமாக உயர்ந்து, வணிகக் கடனளிப்பு 1956லிருந்த

25·8 சதவீதத்திலிருந்து 1969ஆம் ஆண்டு 16.7 சதவீதமாகக் குறைந்திருந்தது.

கடனளிப்பு பற்றிய முன்னேற்றத்தைப் பார்த்தால் ஸ்டேட் வங்கியின் கடன் மற்றும் உண்டியல் தள்ளுபடி, உண்டியல் வாங்கியது உள்பட ஜூலை 1ஆம் நாள் 1955ஆம் ஆண்டு ரூ. 110 கோடியாக இருந்தது மார்ச்சு 1958இல் ரூ. 206 கோடியாகவும் மார்ச்சு 1962இல் ரூ. 267 கோடியாகவும், 1965ஆம் ஆண்டு கடைசியில் ரூ. 474 கோடியாகவும், 1971இல் ரூ.1,114 கோடியாக வும், 1973ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 1,582 கோடியாகவும் உயர்ந்தது.

### சிறுதொழில்கள் (Small Scale Industries)

ஸ்டேட் வங்கி நிறுவப்பட்டதிலிருந்தே சிறு தொழில் களுக்கு அதிகக் கடன் அளிக்கும் திட்டத்தை ஸ்டேட் வங்கி கொள்கை அளவில் ஏற்றிருந்தது. 1960ஆம் ஆண்டு முதல் பருவக் கடன் (Term loans) சிறு தொழில்களுக்கு, தேவையான நிலைச் சொத்துக்களை வாங்குவதற்கான கடனை அளிக்க ஆரம் பித்தது. ஒரு ஆய்வுமூலம், அரசுடன் இணைந்து ஸ்டேட் வங்கி சிறு தொழிலதிபர்களை நேரில் சந்தித்து அவர்கள் கடனை உணர்ந்து கடனளிக்கும் முறை ஒன்றை அமுலுக்கு கொண்டு வந்தது. இதன்மூலம் வங்கியை நாடிவந்த சிறு தொழில் அதிபர் களுக்கு கடன் வசதி பற்றி தெரிவிக்கவும், ஸ்டேட் வங்கியி னின்று கடன் பெறவும் இத் திட்டம் மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளது. தன் திட்டத்தின் கீழ் சிறு தொழிலுக்கான முழுக் கடனையும் அளிக்கும் முறையைக் கைக்கொண்டுள்ளது. கடனுக்கு ஈடுகொடுக்கப் போதிய சொத்துக்கள் இல்லாமையை குறையாகக் கருதாமல் கடன் வழங்கும் முறையைச் செயல் படுத்தியுள்ளது.

மிக அதிக சிறிய தொழில்களுக்கு கடன் வழங்க வாய்ப் புள்ள இடங்களில் இதற்கென சிறப்பு பயிற்சி பெற்ற அலுவ லர்கள் ஸ்டேட் வங்கி கிளைகளில் நியமிக்கப்படுகின்றனர்.

ஸ்டேட் வங்கி சிறு தொழில்களுக்கு அளித்தக் கடன் 1956 கடைசியிலிருந்த ரூ. 10 லட்சத்திலிருந்து 1973ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 251 கோடியாக உயர்ந்திருந்தது.

### கிராமியக் கடன்

ஸ்டேட் வங்கி நிறுவப்பட்டவுடன், இவ் வங்கி கிராமியக் கடனில் தன் பங்கு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதனை

ஆராய ஒரு குழுவை நியமித்தது. இக்குழு ஸ்டேட் வங்கி இத்துறையில் முக்கியமாக விற்பனை (Marketing), பக்குவப்படுத்தும் (Processing), தொழில் உற்பத்தி (Industrial Production) ஆகியவைகளில் ஈடுபட்டுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்கு கடன் அளிப்பதே இத்துறையில் இதன் பங்காக இருக்க முடியும் என்று பரிந்துரை செய்தது. இதனை ஏற்று இக்கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பெரிய அளவில் கடனுதவி செய்து வருகின்றது. மேலும், மத்திய கிடங்குக் கழகம் (Central Warehousing Corporation) பங்கு மூலதனத்தை வாங்கி மூலதனம் பெற உதவியுள்ளதோடு தன் அதிகாரி ஒருவரை அக் கழகத்தினின் இயக்குநர் குழுவில் நியமித்துள்ளது.

நேரடி விவசாயக் கடனை ஸ்டேட் வங்கி 1968ஆம் ஆண்டு வரை மேற்கொள்ளவில்லை. தோட்டப் பயிர் தொழிற்சாலைக்கு (Plantation) எப்போதும் போல் நேரடிக் கடனை அளித்து வந்தது. விவசாயத்திற்கு மறைமுகக் கடனை ஸ்டேட் வங்கி தொடர்ந்து அளித்து வந்துள்ளது. 1973ஆம் ஆண்டு இறுதியில் ஸ்டேட் வங்கியின் விவசாய மறைமுகக் கடன் ரூ. 46 கோடியாக இருந்தது. கூட்டுறவுக் கடன் வளர்ச்சி அடையாத குறிப்பிட்ட இடங்களில் கிராம தத்துத் திட்டம் (Village adoption Scheme), தீவிர விஸ்தரிப்புத் திட்டம் (Intensive area approach) போன்ற திட்டங்கள்மூலம் விவசாயிகளுக்கு நேரடிக் கடன் தேவை முழுவதையும் அளிக்கும் திட்டங்களை அமுல்படுத்தியுள்ளது.

ஸ்டேட் பாங்கு அணி (State Bank Group) வங்கிகள் அனைத்தும் அளித்த விவசாய நேரடி, மறைமுகக் கடன்கள் டிசம்பர் 1972இல் ரூ. 140 கோடியாக இருந்தது டிசம்பர் 1973இல் ரூ. 162 கோடியாக உயர்ந்திருந்தது. ஸ்டேட் பாங்கு அணி வங்கிகள் பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடனளிக்கும் ஒரு திட்டத்தின் கீழ் 1973ஆம் ஆண்டு முடிவில் 1,173 சங்கங்களுக்கு ரூ. 6·51 கோடி கடன் வழங்கி இருந்தது. இதன்மூலம் 91,600 விவசாயிகள் தங்கள் கடன் தேவையைக் குறித்த காலத்தில் கூட்டுறவுச் சங்கத்தினின்று பெற முடிந்தது.

ஸ்டேட் வங்கி கூட்டுறவுச் சங்கங்கள் பணத்தினை ஒரு இடத்தினின்று மற்ற இடத்திற்கு குறைந்த செலவில் அனுப்ப (remittance) வகை செய்கின்றது. கூட்டுறவு வங்கிகளின் சொந்த காசோலைகளை வதூல் செய்வதும், வாங்குவதும் குறைந்த விலையில் $\frac{1}{32}$% ஆகும். அதிக பட்சம் எக்காசோலைக்கும் 62 பைசாவுக்கு மேல் ஸ்டேட் வங்கி வாங்குவது இல்லை. மற்றைய

வணிக வங்கிகளுக்கு ஸ்டேட் பாங்கு இப் பணிக்கு $\frac{1}{8}$ லிருந்து $\frac{1}{6}$ % வரை விலை கேட்கின்றது. மாநில கூட்டுறவு உச்சி வங்கி (apex bank), மாவட்ட கூட்டுறவு வங்கிகள் ஆகியவைகளுக்கு அரசுப் பத்திரம் மற்றும் நிலவள வங்கியின் கடன் பத்திரத்தின் பேரில் ஸ்டேட் வங்கியின் கடன் வீதத்தைவிட $\frac{1}{2}$% குறைவாக தேவையான போதெல்லாம் கொடுக்கின்றது. கூட்டுறவு வங்கிகள் ஈடுபெற்ற சரக்கை, மறுஈடு வைத்து ஸ்டேட் வங்கி யிடமிருந்து ஸ்டேட் பாங்கு கடன் வட்டிவிதத்தைவிட $\frac{1}{4}$% அதிகத்திற்குக் கடனளிக்கின்றது. அரசு உத்திரவாதத்தின் மேல் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்கு உணவுப் பொருள் கொள்முதலுக்கும், உரம், விவசாயக் கருவிகள் விநியோகத் திற்கும் ஸ்டேட் வங்கி கடன் வீதத்தைவிட $\frac{1}{4}$% அதிகமாக கடனளிக்கின்றது.

மத்திய நிலவள வங்கி வெளியிடும் கடன் பத்திரத்தில் 10% வரை ஒவ்வொரு வெளியீட்டிலும் 1965–66 வரை ஸ்டேட் வங்கி வாங்கி வந்தது. இதன்பின் ஒப்புக்கொள்ளப்பட்ட ஓரளவு வரை வாங்குவது என இக்கொள்கையில் மாறுதல் செய்தது. ஜூன் 30, 1969 முடியும் ஆண்டில் ஸ்டேட் வங்கி ரூ. 24·83 கோடி கடன் பத்திரத்தில் முதலீடு செய்தது. ஸ்டேட் வங்கி கடன் வீதத்திலேயோ, கடன் பத்திர வட்டி வீதத்திலேயோ, இவை களில் எது குறைவோ அவ்வீதத்தில், அரசு உத்திரவாதத்தில் ஸ்டேட் வங்கி மத்திய நிலவள வங்கிகளுக்கு நீண்டகாலக் கடன் அளித்து வருகின்றது.

மத்திய நிலவள வங்கி, தன் கிளைகளுக்கோ, தன் கீழ் உள்ள நிலவள வங்கிகளுக்கோ வாரத்தில் ஒரு முறை ஸ்டேட் வங்கி மூலம் கட்டணம் ஏதும் இல்லாமல் பணம் அனுப்பலாம். இதே போல் கிளைகளோ, நிலவள வங்கிகளோ மத்திய நிலவள வங்கிக்கு வாரம் ஒருமுறை கட்டணம் இன்றி ஸ்டேட் வங்கி மூலம் அனுப்பலாம்.

கூட்டுறவு விற்பனை மற்றும் பதப்படுத்தும் சங்கங்களுக்கு, ஸ்டேட் வங்கி, சரக்கு அடைமானம்பேரில் அதன் மதிப்பில் 20லிருந்து 40% வரை, ஸ்டேட் வங்கியின் கடன் வீதத்திற்கு $\frac{1}{2}$% மேலாகவும், $7\frac{1}{2}$ சதவீதத்திற்குக் குறையாமலும் கடனளிக் கிறது. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்கு சுத்தக் கடன் (clean advance), அவைகளின் சொந்த நிதி (own funds) அளவு வரை உச்சி வங்கி, உச்சி விற்பனை வங்கி, மாவட்ட கூட்டுறவு வங்கி ஆகியவைகளின் உத்திரவாதத்தின்பேரில் அளிக்

கின்றது. மத்திய கூட்டுறவு வங்கிகள் மூலமாக ஸ்டேட் வங்கி, விற்பனைச் சங்கங்களுக்கு நடைமுறை மூலதனத்தையும் அளிக்கின்றது. 1969ஆம் ஆண்டுவரை ஸ்டேட் பாங்கு அணி வங்கிகள் கூட்டுறவு விற்பனை, பதப்படுத்தும் சங்கங்களுக்கு ரூ. 76·19 கோடி வரை கடனளித்துள்ளது. கூட்டுறவு சர்க்கரை ஆலைகளுக்கு ஸ்டேட் வங்கி 1969ஆம் ஆண்டுவரை ரூ. 15·31 கோடி கடன் அளித்தது.

கூட்டுறவுப் பண்டகசாலைகள் வளர்ச்சிக்கு என மத்திய அரசு ஒரு மத்திய திட்டத்தை (centrally sponsored scheme) அமுல்படுத்தியது. இத்திட்டத்தின்படி கூட்டுறவு பண்டக சாலைகள், கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கங்கள் (wholesale stores), கூட்டுறவுச் சங்கங்களின் உச்சி சங்கங்கள் ஆகியவைகளுக்கு நடைமுறை மூலதனத்தை (working capital) கொடுக்கும் திட்டமாகும். இத்திட்டத்தின்படி சுத்தக் கடன் அரசு உத்திரவாதத்தின்பேரில் சரக்கின் பேரில் அடைமானமாகவோ, ஈடாகவோ கடன் அளிக்கும். ஸ்டேட் வங்கி ஜூன் 1969ஆம் ஆண்டுவரை கூட்டுறவுப் பண்டகசாலைகளுக்கு ரூ. 10·22 கோடி கடன் அளித்துள்ளது.

### விவசாய வளர்ச்சிக் கிளைகள் (Agricultural Development branches)

தீவிர விவசாயக் கடனளிப்புத் திட்டத்தின்கீழ் சில தேர்ந்தெடுத்த இடங்களில் ஸ்டேட் வங்கி விவசாய வளர்ச்சிக் கிளைகளை ஏற்படுத்தியுள்ளது. இக்கிளைகள் பின்தங்கியுள்ள, வளர்ச்சியடையாத, சிறு விவசாயிகள் வளர்ச்சி முகமை (Small Farmers' Development Agency), நிறைவுத்தன்மை நோக்கி இருக்கும் விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளிகளுக்குமான முகமை (Marginal Farmers and Agricultural Labourers Agency), நடைமுறையிலுள்ள இடங்களிலும். தொழில் வளர்ச்சி முகமை (IDA) பணியாற்றும் இடங்களிலும், அரசு வேளாண்மை சிறப்பு திட்டங்கள் மேற்கொண்ட இடங்களிலும் நிறுவப்பட்டுள்ளன. டிசம்பர் 1973ஆம் ஆண்டு வரை 137, விவசாய வளர்ச்சிக் கிளைகள் ஸ்டேட் வங்கியினல் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இக்கிளைகள் 1.32 லட்சம் விவசாயிகளுக்கு இக்கிளைகள் மூலம் கடனளித்துள்ளது. அவர்களிடமிருந்து வரவேண்டிய கடன் நிலுவை பாக்கி 1973ஆம் ஆண்டு ரூ. 22 கோடியாக இருந்தது. இக் கிளைகள் பயிர்க்கடன், முதலீட்டுக் கடன் ஆகியவைகளை அளிப்பதுடன் பால்பண்ணை, கோழி வளர்ப்பு ஆகிய திட்டங்களுக்கும் கடன் அளிக்கின்றன.

### கிராம தத்து திட்டம் (Village adoption Scheme)

வேறு முகமைகள் எதுவும் கடனளிக்க முடியாத சில தேர்ந்தெடுக்கப்பட்ட கிராமங்களை இத் திட்டத்தின்கீழ் ஸ்டேட் வங்கி தத்து எடுத்துக்கொண்டு இக் கிராமங்களில் விவசாயக் கடன் முழுமையும், நேரடியாகத் தருவதை ஸ்டேட் வங்கி மேற்கொண்டுள்ளது. தன் நிறைவு பெறாத (Non-viable) சிறு விவசாயிகளுக்கு அணி உத்திரவாதம் (group-guarantee) கீழ் கடனளிக்கும் முறையை அனுசரிக்கின்றது. சிறு விவசாயிகளுக்குக் கோழி வளர்ப்பு, பால்பண்ணை வைத்தல் ஆகிய திட்டத்திற்கும் கிராம தத்து திட்டத்தில் ஸ்டேட் வங்கி கடனளிக்க வகை செய்துள்ளது.

### சிறு வியாபாரக் கடன் (Small business Finance)

1969-இல் ஸ்டேட் வங்கியினல் ஆரம்பிக்கப் பட்ட இத் திட்டத்தின்படி 'சிறிய மனிதர்களுக்கு' (Small-men) ஈடுபட்டுள்ள விநியோகம், போக்கு வரத்து, மற்றைய தொழில்களுக்கு அளிக்கும் பிரத்யேக கடன் வசதிப்படி அளித்த கடன் நிலுவை 1973-ஆம் ஆண்டு இறுதி ரூ. 32 கோடி ஆக இருந்தது.

### வேலை வாய்ப்பளிப்புக் கடன் (Employment Oriented Loans)

இவ்விதமானக் கடனைத் தோற்றுவித்த பெருமை ஸ்டேட் வங்கிக்கு உண்டு. 1971ஆம் ஆண்டு வேலை வாய்ப்பைப் பெருக்கக்கூடிய கடன்கள் அளிக்கும் திட்டம் மேற்கொள்ளப் பட்டது. 60 முன்மாதிரித் திட்டங்கள் (Pilot Projects) படித்து வேலையற்று இருக்கும் பட்டதாரிகளுக்கென கடன் வகை செய்தது. இது சுய வேலை வாய்ப்பு (Self-employment) முறையை ஊக்குவிக்க செய்த ஏற்பாடாகும். இத் திட்டத்தின் கீழ் தொழிலதிபர் திட்டம் (Entrepreneur Scheme), விவசாய பட்டதாரித் திட்டம் (Farm Graduate Scheme), மருத்துவர், பல் வைத்தியர், பொறியியல் பட்டதாரிகள், ஏனைய பட்டதாரிகள், தாங்கள் தொடங்கும் தொழிலுக்கான கடனை அளிக்கும் திட்டம் இது.

### முதன்மை வங்கித் திட்டம் (Lead Bank Scheme)

இத் திட்டத்தின் கீழ் ஸ்டேட் வங்கியும், இதன் அணி வங்கிகளும் 90 பிற்பட்ட, கடினமான மாவட்டங்களில் முதன் வங்கியாக இருந்து இத்திட்டத்தைச் செயல்பட இசைந்தது. இந்த 90 மாவட்டங்களிலும் இவ்வங்கிகள் பொருளாதார ஆய்வு

நடத்தி முடித்து, இதுவரை 79 அறிக்கைகளை வெளியிட்டுள்ளது. தாங்கள் முதன்மை வங்கிகளாகப் பணி புரியும் மாவட்டங்களில் 247 வளர்ச்சி மையங்களும் (Growter Centres), மற்ற வணிக வங்கிகள் முதன்மை வங்கியாக இருக்கும் பிற மாவட்டங்களில் 231 வளர்ச்சி மையங்களும் ஸ்டேட் வங்கிக்கும் இதன் அணிக்கும் ஒதுக்கீடு செய்யப்பட்டு இவ் விடங்களில் முறையே 174, 159 கிளைகளை முறையே ஏற்படுத்தியுள்ளன.

பன்னாட்டு வாணிப நிதி (International Trade Finance)

ஏற்றுமதிக் கடனில் தாராளப் போக்கை அமுல் படுத்தி ஏற்றுமதியாளர்களுக்கு ஊக்கம் அளித்து வருகின்றது. ஸ்டேட் வங்கியின் ஏற்றுமதிக் கடன் நிலுவை 1968ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 48 கோடியாக இருந்தது, 1973ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 150 கோடியாக உயர்ந்திருந்தது.

அரசின் சிறப்பு வியாபார ஒப்பந்தங்களையும் (Special Trade agreements) இருமுனை ஒப்பந்தங்களை (Bilateral Trade agreements) கடந்த 15 ஆண்டுகளாக ஸ்டேட் வங்கி பொறுப் பேற்று நிதி அளிப்பை கண்காணித்து வருகின்றது. இவ்வித இருமுனை ஒப்பந்தங்கள் சூடான், அரபுக் குடியரசு நாடு, வங்காளதேசம் மற்றும் சில கம்யூனிச நாடுகளுடன் செய்யப் பட்டுள்ளது.

ஸ்டேட் வங்கி நியூயார்க், ப்யூரெட் (Beirut), ஃபிரான்க் ஃபர்ட் (Frankfrut), (West Germany), மாலி (Male—Maldires), ஆகிய இடங்களில் தன் கிளைகளைத் திறந்துள்ளது.

பயிற்சி (Training)

தன் அலுவலர்களுக்குத் தக்க பயிற்சி அளித்து திறமை உள்ளவர்களாக ஆக்க 1961ஆம் ஆண்டே ஒரு பயிற்சிக் கல்லூரியை (State Bank Staff Training College) நிறுவியது. 24 பிரதேச பயிற்சி நிலையங்களையும் தோற்றுவித்து உள்ளது.

வியாபார வங்கியியல் (Merchant Banking)

ஸ்டேட்வங்கி 1972ஆம் ஆண்டு வியாபார வங்கிப் பிரிவு ஒன்றினை ஆரம்பித்தது. இப்பிரிவின் முக்கிய பணி கம்பெனிகள் தோற்றுவாயினை ஊக்குவிக்கும் பணிகளேயாகும். தோற்றுவாய் மற்றும் விரிவு படுத்தலுக்கான நிதியளித்தல், நிதிசம்பந்தமான அறிவுரை, தொழில்துறை சாத்தியக்கூறு (Technical feasibility)

ஆகியவை சம்பந்தமான அனைத்தும் இப்பிரிவு அளிப்பதுடன் ரூ. 7.5 கோடி மூலதனத்தை எட்டிப்பிடித்துள்ள சிறுதொழில்களை மத்திய தொழில்களாக மாற்றியமைக்க வேண்டிய நிதி வசதியையும் அளிக்கின்றது.

### ரிசர்வு வங்கியுடன் தொடர்பு

ஸ்டேட் வங்கியின் சொந்தக்காரர் ரிசர்வு வங்கி என்பது தெரிந்த உண்மையே. ஸ்டேட் வங்கியின் பங்குகளில் தனியார் பெற்றிருக்கும் சில பங்குகளைத் தவிர மீதி அத்துணை பங்குகளையும் ரிசர்வு வங்கி பெற்றுள்ளது. ரிசர்வு வங்கியின் கிளை இல்லாத இடங்கள் அனைத்தும் அதன் முகவராகப் பணியாற்றும் இவ்வங்கி, ரிசர்வு வங்கியுடன் நெருங்கிய, சுமுக உறவினை வலுவாக ஏற்படுத்தி வைத்துள்ளது பணச் சந்தையின் தனிச் சிறப்பாக அமைகின்றது.

ஸ்டேட் வங்கி முந்துமைத் துறைக்கு பெருமளவில் கடன் கொடுக்க முற்பட்டுள்ளதை கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையினின்று காணலாம்.

ஸ்டேட் வங்கி அணி முந்துமைத்துறைக் கடன்*

1973ஆம் ஆண்டு

| துறை | கடன் ரூ. கோடியில் | மொத்தத்தில் சதவீதம் |
|---|---|---|
| 1. விவசாயம் | 162 | 32 |
| 2. சிறுதொழில் | 319 | 46 |
| 3. சிறு வியாபாரம் | 41 | 6 |
| 4. ஏற்றுமதி | 176 | 25 |
| மொத்தம் | 698 | 100 |

அட்டவணையினின்று, ஸ்டேட் வங்கி அணி அளித்த மொத்த கடன்களில் சிறுதொழிலுக்கு 43 சதவீதமும், ஏற்றுமதித் துறைக்கு 25 சதவிகிதமும் அளித்துள்ளது.

***S.B.I. Annal Report, 1973.**

**ஸ்டேட் வங்கியின் புனரமைப்பு**

ஸ்டேட் வங்கியின் அமைப்பில் தற்போது பம்பாயில் ஒரு மத்திய அலுவலகமும், ஒன்பது அக தலைமையகங்கள் கல்கத்தா, பம்பாய், சென்னை, டெல்லி, கான்பூர், அஹமதாபாத் ஹைதிராபாத், பாட்னா, போபால் ஆகிய இடங்களிலும், பிராந்திய அலுவலகங்கள் மூன்று, பெங்களூரில் ஒன்று சென்னை அகத் தலைமையாகக் கட்டுப்பாட்டிலும், புவனேஷ்வர், ஷில்லாங் ஆகிய இரு இடங்களிலும் கல்கத்தா அகத் தலைமையகத்தின் கட்டுப்பாட்டிலும் அமைந்து செயலாற்று கிறது. 1955ஆம் ஆண்டு ஸ்டேட் வங்கி ஆரம்பிக்கப்பட்ட போது மூன்று வட்டங்களே (circles) பம்பாய், வங்காளம், சென்னை ஆகியன நாட்டிலுள்ள அத்துணை ஸ்டேட் வங்கியின் கிளைகளையும் நடத்திவந்தன.

ஸ்டேட் வங்கி ஏற்படுத்தும்போது அதனின்று சிலவற்றை பணச் சந்தை எதிர்நோக்கியிருந்தது. அவையாவன:

1. கிளைப் பெருக்கம்செய்து குறிப்பாக கிராம, நகர்புற இடங்களில் வங்கிப்பணி அளித்து வைப்புகளைப் பெரும்.

2. உண்டியல் கழிமானம் செய்து நாட்டு வங்கியர்களுடன் பெருந் தொடர்பு ஏற்படுத்தும்.

3. ரிசர்வு வங்கிக்கு முகவராக இருந்து ரிசர்வு வங்கி கிளைகள் இல்லாத இடங்களில் அரசு நிதி விவகாரங்களைக் கவனிக்கும்.

4. விவசாயக் கடனளிப்பை பெருக்கும்.

5. கூட்டுறவுத் துறைக்கு நிதி உதவியும், பண அனுப்பு உதவியும் செய்யும்.

6. சிறு தொழில், ஏற்றுமதி போன்ற முந்துமைத் துறை களுக்கு அதிகக் கடன்வசதி அளிக்கும்.

7. மற்றைய வணிக வங்கிகளுடன் ஒருங்கிணைந்து வணிக வங்கிகளிடையே ஒற்றுமை நிலைவிக்கும்.

8. வங்கிப் பழக்கத்தை, பெருக்கி வைப்பு வளர்ச்சிக்கு உதவுவது.

9. அரசின் திட்ட நோக்குகளுக்கான எல்லா உதவிகளையும் செய்தல்.

குறுகிய காலத்தில் ஸ்டேட் வங்கி தன் பணிகளை செவ்வனே செய்துள்ளது என்பது அதன் வளர்ச்சியினின்றும், சாதனைகளினின்றும் அறியலாம்.

## பாட நூல்கள்

1. கு. ஆளுடையப்பிள்ளை—இந்திய வங்கியல்.

2. Report of the Banking Commission, 1972.

3. S. B. I. Publications.

# 22. ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா

## (Reserve Bank of India)

ஒவ்வொரு நாட்டிலும் மைய வங்கி, பணச் சந்தையில் ஒரு முக்கிய அங்கமாகத் திகழ்கின்றது. இப்போது மைய வங்கி இல்லாத நாடே இல்லை என்றுச் சொல்லலாம். இங்கிலாந்தின் மைய வங்கியாகிய பாங்க் ஆஃப் இங்கிலாந்து மிகப் பழம் பெரும் மைய வங்கிகளில் ஒன்று. இதனை பழம்பெரும் மூதாட்டி (Old lady of the Thread needle Street) என்றும் செல்லமாக அழைப்பர். 1930ஆம் ஆண்டுக்குப்பின் பல நாடுகள் தங்கள் பொருளாதார நெருக்கடிகளுக்குக் காரணம் பணத்தினை சரியாக நிருவாகிக்காததே யாகும் என எண்ணி மைய வங்கி நிருவ வேண்டிய அவசியத்தை உணர்ந்தன. சிறப்பாக பணியாற்றிக் கொண்டிருந்த இங்கிலாந்தின் மைய வங்கியே போல் தங்கள் நாட்டிலும் ஒரு மைய வங்கியைத் தோற்றுவிக்க வேண்டும் என எண்ணின.

மைய வங்கி அமைப்பில் ஒரு பங்குதாரர் வங்கியாக அமையலாம் அல்லது முழுவதும் அரசுக்குச் சொந்தமான வங்கி யாகவோ அல்லது பெரும்பகுதிப் பங்குகளை அரசும் எஞ்சிய பங்கினை பொதுமக்களும் ஏற்றுக்கொண்டுள்ள வங்கியாகவும் அமையலாம். அரசினர் முதலீடோ, தலையீடோ இல்லாமல் தனியாகத் தனியாரால் நடத்தப்படும் மைய வங்கியாக பாங்க் ஆஃப் ஸ்விட்ஸர்லாந்து, பாங்க் ஆஃப் இத்தாலி ஆகியவை களும், முழுவதும் அரசுடமையாயுள்ள வங்கியாக பாங்க் ஆஃப் இங்கிலாந்து, பாங்க் ஆஃப் பிரான்சு, ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா ஆகியவைகளும், அரசு 50 சதவீதம் மேல் பங்குகளை ஏற்றுள்ள வங்கிகளாக பாங்க் ஆஃப் பாகிஸ்தான் பாங்க் ஆஃப் ஜப்பான், பாங்க் ஆஃப் மெக்சிகோ ஆகியவை' களும் அமைந்துள்ளன. பாங்க் ஆஃப் இங்கிலாந்து முதலில் ஆரம்பிக்கப்படும்போது ஒரு பங்குதாரர்கள் வங்கியாகவே இருந்தது. பின்பு அவ்வங்கிக்கும், அரசு கருவூலத்திற்கும் நிதிக் கொள்கை பற்றிய கருத்து வேற்றுமை பலமுறை எழவே அவ்வங்கி தேசியமயமாக்கப்பட்டது. பொதுவாக உலகில் இப்போதுள்ள மைய வங்கிகளில் பெரும்பாலானவை அரசினுல்

முழுவதும் சொந்தமாக்கப்பட்டதாகவோ அல்லது பெரும்பாலானப் பங்குகளைக் கொண்டுள்ளதாகவோ அமைக்கப்பட்டு உள்ளன.

### இந்திய ரிசர்வு வங்கி

வெகு ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் ஒரு மைய வங்கி அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்து நிலவிவந்தது. 1773ஆம் ஆண்டே வாரென் ஹேஸ்டிங்ஸ் 'ஜெனரல் பாங்க் இன் பெங்கால் அண்ட் பஹார்' (General Banking in Bengal and Bahar) என்ற பெயரில் ஒரு மைய வங்கி அமைக்கப் பரிந்துரை கூறினர். இவ்வங்கி 1773ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஆரம்பிக்கப்பட்டு 1775 பிப்ரவரியில் மூடப்பட்டுவிட்டது. இராபர்ட் ரிக்கர்ட்ஸ் (Robert Rickards) 1807-1808இல் 'ஜெனரல் பாங்கு' என்ற பெயரில் ஒரு மைய வங்கி ஆரம்பிக்க கிழக்கிந்தியக் கம்பெனியிடம் சிபாரிசு செய்தார். இது ஏற்கப்படவில்லை. 1913ஆம் ஆண்டு சேம்பர்லின் குழு (Chamberlin Commission) இந்தியாவிற்கு மைய வங்கி தேவை என வலியுறுத்திக் கூறியது. இதே காலத்தில் ஜே. எம். கீன்சு பெருமான் இந்தியாவுக்கு ஒரு மைய வங்கி பற்றி திட்டம் தயாரித்திருந்தார். 1920ஆம் ஆண்டு பிரஸ்ஸெல்லிலும் (Brussells) 1922ஆம் ஆண்டு ஜெனீவாவிலும் நடந்த நிதி சம்பந்தப்பட்ட மாநாடுகளிலும் மைய வங்கிகள் அவசியம் பற்றி தீர்மானங்கள் செய்யப்பட்டன. 1933ஆம் ஆண்டு நடைபெற்ற உலகப் பொருளாதார மாநாட்டில் எந்தெந்த நாடுகளில் மைய வங்கி ஏற்படுத்தப்படவில்லையோ அங்கெல்லாம் ஏற்படுத்த வேண்டும் என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது. 1921ஆம் ஆண்டு இம்பீரியல் வங்கி தோற்றுவித்தபோது இதையே மைய வங்கி ஆக்க வேண்டும் என்றும் கருத்து தெரிவிக்கப்பட்டது. ஆனல், இது ஏற்றுக்கொள்ளப்படவில்லை. 1926ஆம் ஆண்டு ஹில்டன் எங் குழு (Hilton Young Commission) கூட இம்பீரியல் வங்கியை மைய வங்கி ஆக்கும் எண்ணத்தை எதிர்த்தது. ஒரு பெரிய வணிக வங்கியாக விளங்கும் இம்பீரியல் வங்கி தன் வணிக வங்கித் தொழிலைவிடச் சொல்லுவது சரியல்ல என இக்குழு கருதியது. இந்திய மைய வங்கி விசாரணைக் குழு 1931 (Indian Central Banking Enquiry Committee, 1931) உடனடியாக மைய வங்கி இந்தியாவில் அமைக்கப்பட வேண்டும் எனக் கூறியது.

ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா, ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா சட்டம் 1934ன் படி நிறுவப்பட்டு 1935ஆம் ஆண்டி

லிருந்து பணி புரிய ஆரம்பித்தது. இது ஒரு பங்கு தாரர்கள் வங்கியாகவே தொடக்கப்பட்டது. இதன் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 5 கோடி, ரூ. 100 மதிப்புள்ள 5 லட்சம் பங்குகள். ரூ. 2, 20,000 மதிப்புள்ள பங்குகளை மத்திய அரசு இயக்குநர்கள் ஆவதற்கான தகுதிக்காக (Minimum Subscription) எடுத்துக் கொண்டது.

இவ் வங்கியின் மேற்பார்வை 16 இயக்குநர்களைக் கொண்ட ஒரு மத்தியக் குழுவிடம் (Central Board of Directors) ஒப்படைக்கப்பட்டது. இக்குழுவில் 1 ஆளுநரும், 2 துணை ஆளு நர்களும், 4 இயக்குநர்களும் பிராந்திய குழுவினுல் (Regional Boards) தேர்ந்தெடுக்கப்பட்ட 8 இயக்குநர்களும் ஒரு அரசாங்க அதிகாரியும் இருந்தனர்.

### ரிசர்வு வங்கி–தேசியமயமாக்கப்படல்

ரிசர்வு வங்கி (பொது உடமை மாற்று) சட்டம் 1948 கீழ் [Reserve Bank (Tranfer of Public ownership) Act of 1948] ரிசர்வு வங்கி தேசியமயமாக்கப்பட்டு 1949 ஜனவரி 1 ஆம் நாள் முதல் தேசியமயமாக்கப்பட்ட மைய வங்கியாக இயங்க ஆரம்பித்தது. அரசு ரிசர்வு வங்கி பங்கு தாரர்கள் பெற்றிருந்த ரூ. 100 மதிப்புள்ள ஒவ்வொரு பங்கிற்கும் ரூ. 118—அணு 10 வீதம் ஈடாகக் கொடுத்து (Compensation) எல்லாப் பங்குகளையும் அரசு ஏற்றது.

### நிருவாக அமைப்பு

நாட்டுடமையாக்கப்பட்ட பின்னர் ரிசர்வு வங்கியின் நிருவாகம் ஒரு மத்தியக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. அக் குழுவில்;

1. ஒரு ஆளுநரும் 4 துணை ஆளுநர்களும், பிரிவு 8 (1)(a)
2. ஒவ்வொரு பிரதேச அவைக்கும் ஒரு இயக்குநர் வீதம் 4 பிரதேச அவைகளுக்கு 4 இயக்குநர்களும் பிரிவு 8(1)(b),
3. அரசாங்கத்தால் பிரிவு 8(1)(c)ன் படி நியமிக்கப்பட்ட 10 இயக்குநர்களும் (4) பிரிவு 8(1)(d)ன் படி அரசாங் கத்தால் நியமிக்கப்பட்ட ஒரு அரசாங்க அதிகாரியும் உள்ளனர்.

ஆளுநரும், துணை ஆளுநர்களும் 5 ஆண்டுகளுக்கு அதிகப் படாமல், அரசாங்கத்தால் முடிவு செய்யப்பட்டபடி பதவி வகிப்பர். மீண்டும் பதவியில் தொடர்ந்து இருக்கவும் இவர்கள் தகுதியுள்ளவர்கள். பிரிவு 8(1)(b)-ன் படி நியமிக்கப்பட்ட இயக்குநர்கள் பிரதேச அவையின் ஆணைப்படி பதவிவகிப்பர். பிரிவு 8(1) (c)ன் படி நியமிக்கப்பட்ட இயக்குநர்கள் 4 ஆண்டுகள் வரை பதவி வகிக்கலாம்.

மேற்கண்ட எல்லா இயக்குநர்களுமே அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர்.

**வங்கியின் பல பிரிவுகள்**

கீழ்க்கண்ட பல பிரிவுகளை ரிசர்வு வங்கி கொண்டுள்ளது:

1. பணத்தாள் வெளியிடும் துறை (Issue Department),
2. வங்கியியல் துறை (Banking Department),
3. காரியதரிசித் துறை (Secretary's Department),
4. நிருவாகமும் ஆள் துறையும் (Department of Administration and Personnel),
5. கணக்குகள், செலவினங்கள் துறை (Department of Accounts and Expenditure),
6. கட்டடத்துறை (Premises Department),
7. ஆய்வுத்துறை (Inspection Department),
8. சட்டத்துறை (Legal Department),
9. அந்நியச் செலாவணிக் கட்டுப்பாட்டுத் துறை (Exchange Control Department),
10. தொழில் நிதித்துறை (Industrial Finance Department),
11. விவசாயக் கடன் துறை (Agricultural Credit Department),
12. வங்கியலில் ஈடுபடாத கம்பெனிகள் துறை (Department of non-Banking Companies),
13. பொருளியல் துறை (Economic Department),
14. புள்ளி இயல் துறை (Department of Statistics),

ரிசர்வு வங்கி மற்றைய எல்லா மைய வங்கிகளைப் போல் கீழ்க்கண்ட பணிகளைச் செய்கின்றன:

1. பணத்தை வெளியிடுதல்,

2. பணத்தினை, கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைக் கொண்டு கட்டுப்படுத்துதல்,

3. பணச் சந்தையினையும், வணிக வங்கிகளையும் பாது காவலர் போல்காத்தல்,

4. பணத்தின் உள்நாட்டு மதிப்பினைக் காத்தல்,

5. அந்நியச் செலாவணியைக் கட்டுப்படுத்தல்—ரூபாயின் வெளிநாட்டு மதிப்பினைக் காத்தல்,

6. அரசு வங்கியாயிருந்து பொதுக்கடன் நிருவாகம் செய்தல்.

பண வெளியீடு

ஆரம்ப காலங்களில் வரையறை செய்யப்பட்ட நம்பிக்கை திட்டம் (Fixed Fiduciary System) கடைபிடிக்காமல், வீதாசாரக் காப்பு திட்டத்தையே (Proporticnal Reserve System) பின்பற்றி வந்தது. சுமார் 20 ஆண்டுகளுக்குமேல், வீதாசாரக் காப்புத் திட்டத்தின்கீழ் குறைந்த அளவு 40 சதவீதம் தங்கம், தங்கப் பத்திரங்களை (பின்பு பிற நாட்டுப் பத்திரங்கள்) ஆகியவை கூடிய காப்புடன் பணவெளியீடு செய்து வந்தது.

1956இல் ரிசர்வு வங்கிச் சட்டம் திருத்தப்பட்டு 400 கோடி ரூபாய் வெளிநாட்டுப் பத்திரங்களும், ரூ. 115 கோடி தங்க நாணயங்கள், தங்கக் கட்டிகள் ஆகியவை கொண்ட குறைந்த அளவு காப்புத் திட்டத்தை (Minimum Reserve System) பண வெளியீட்டுக் காப்பாக வைத்திருந்தது. 1957ஆம் ஆண்டு ரிசர்வு வங்கிச் சட்டம் திருத்தி அமைக்கப்பட்டு பணம் வெளியிடும் துறையில் உள்ள தங்க நாணயங்கள், தங்கக் கட்டிகள், வெளிநாட்டுப் பத்திரங்கள் ஆகியவற்றின் மொத்த மதிப்பு எப்போதும் ரூ. 200 கோடிக்கு குறையக் கூடாது என்றும், இதில் குறைந்தது ரூ. 115 கோடி மதிப்பிற்குத் தங்க நாணயங்களும் தங்கக் கட்டிகளும் இருக்க வேண்டுமென செய்யப்பட்டது.

ரிசர்வு வங்கி ரூ. 2, 5, 10, 100, 1,000, 10,000 மதிப்புள்ள தாள்களை அச்சடித்து வெளியிடுகின்றது. ரூ. 1,000, 10,000 இனங்கள் 1946இல் திரும்பப் பெறப்பட்டு மீண்டும் 1954இல் வெளியிடப்பட்டது. 1 ரூ. தாள்களை மத்திய அரசு வெளியிடுகின்றது.

செலாவணி சம்பந்தப்பட்ட அலுவல்களைக் கவனிக்க பணத்தாள் வெளியிடும் துறையின் பத்து அலுவலகங்கள் பெங்களூர், பம்பாய், வைகுலா (பம்பாய்) கல்கத்தா, ஹைதராபாத், கான்பூர், சென்னை, நாக்பூர், புதுடில்லி, பாட்னு, கௌஹாத்தி (துணை அலுவலகம்) ஆகிய இடங்களில் உள்ளன.

### அரசாங்க வங்கியர்

1935 ஏப்ரல் மாதம் 5 ஆம் நாள் ரிசர்வு வங்கி மத்திய அரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி அரசாங்க வங்கியாகப் பணிபுரிய ஒப்புக்கொண்டு அரசாங்க வங்கிப் பணிகளைச் செய்து அதன் கணக்குகளை வைத்திருக்க இசைந்தது. 1937 ஏப்ரல் 1ஆம் நாள்முதல் ஒவ்வொரு மாகாண அரசுடனும் தனித்தனியே ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொண்டது. 1956 அக்டோபர் முதல் ஜம்மு-காஷ்மீர் தவிர மற்றைய எல்லா மாநில அரசுகளின் பொதுக் கடன்களையும் ரிசர்வு வங்கி நிருவாகம் செய்து வருகிறது.

அரசு பொதுக்கடன் நிருவாகத்தை ரிசர்வு வங்கி செய்கின்றது. புதுக் கடன் வெளியிடும் பொறுப்பு ரிசர்வு வங்கியைச் சார்ந்ததே. பணச் சந்தையை கவனித்து வெளியிட தக்க தருணம் கண்டு ரிசர்வு வங்கி அரசுக் கடன் பத்திரங்களை விற்கின்றது. அரசாங்கத்திற்குத் தேவையான குறுகியகாலக் கடனுக்காக கருவூலச் சீட்டுகளை விற்பதோடு, அரசாங்க அறிவுரையாளராகவும் இருக்கின்றது.

### ரிசர்வு வங்கியும் – கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களும்

#### மைய வங்கி வீதம் (Bank rate)

ரிசர்வு வங்கிச் சட்டம் பிரிவு 49இன் கீழ் மைய வங்கி வீதம் வரையறுக்கப்பட்டுள்ளது. "ரிசர்வு வங்கிச் சட்டத்தின் கீழ் வாங்குவதற்குத் தகுதி பெற்ற வணிகத் தாள்களையும் (Commercial Papers) மாற்று உண்டியல்களையும் எந்த வீதத்தில் ரிசர்வு வங்கி வாங்குவதற்கு அல்லது மறுதள்ளுபடி செய்வதற்குத் தயாராக இருக்கின்றதோ அவ்வீதமே மைய வங்கி வீதம்".

ரிசர்வு வங்கி ஆரம்பிக்கப்படும்போது மையவங்கி வீதம் 3 சதவீதமாக இருந்தது. 1935 நவம்பர் மாதம் இது 3 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. இது நாளிலிருந்து சுமார் 16 ஆண்டுள் 1951 அக்டோபர் வரை 3 சதவீதமாகவே இருந்தது. நவம்பர் 1951ஆம் ஆண்டு மைய வங்கி வீதம் 3 லிருந்து 3½ஆக உயர்த்தப்பட்டது. 1957 மே மாதம் இது 4 சதவீதமாக உயர்த்தப்பட்டது. 1957 முதல் 1963 வரை மைய வங்கி வீதத்தில் மாறுதல் ஏதும் இல்லை. 1963 ஜனவரி மாதம் மைய வங்கி வீதம் 4 லிருந்து 4½ஆக உயர்த்தப்பட்டது. பின்பு 1964 செப்டம்பர் 26ஆம் நாள் 4½ லிருந்து 5 சதவீதமாக உயர்த்தப்பட்டது. 1965 பிப்ரவரி மாதம் 5 சதவீதத்திலிருந்து மைய வங்கி வீதம் 6 சதவீதமாக உயர்த்தப்பட்டது. 1968 மார்ச்சில் 6 சதவீதத்திலிருந்து 5½ ஆக குறைக்கப்பட்டது (ரிசர்வு வங்கி ஆரம்பிக்கப்பட்டது முதல் மைய வங்கி வீதம் குறைக்கப்பட்டது இது இரண்டாவது தடவை ஆகும்). 1971 ஜனவரியில் 5 சதவீதத்திலிருந்து 6 சதவீதமும், 1973 மேயில் 6 சதவீதத்திலிருந்து 7 சதவீதமாகவும், 1974 ஜூலை மாதம் 7 லிருந்து 9 சதவீதமாகவும் உயர்த்தப்பட்டது. இதனின்று ரிசர்வு வங்கி, கடந்த சில ஆண்டுகளாக மைய வங்கி வீதத்தைக் கடனைக் கட்டுப்படுத்த அடிக்கடி பயன்படுத்தியுள்ளதை அறியலாம்.

**சட்டமுறை எளிவரல் தன்மை வீதம் (Statutory liquidity ratio)**

வங்கியியல் ஒழுங்கு முறைச் சட்டம், பிரிவு 24இன் கீழ் வங்கிகள் தங்கள் மொத்த கேட்பு, தவணைப் பொறுப்புகளில் 20 சதவீதத்தை ரொக்கம், தங்கம், வில்லங்கமற்ற அங்கீகரிக்கப்பட்ட பத்திரங்களில், எளிவரல் வாய்ந்த சொத்து வடிவில் வைத்து வந்தன. 1962ஆம் ஆண்டு இப் பிரிவு திருத்தப்பட்டு வங்கிகள் தங்களது கேட்பு, தவணை வைப்புகளில் 25 சதவீதம் குறையாமல் எளிவரல் சொத்தாக வைக்க வகை செய்யப்பட்டது. இதனைத் தவிர பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் தாங்கள் வைக்க வேண்டிய ரொக்க இருப்புகளையும் வைத்து இருக்க வேண்டும்.

எளிவரல் சொத்துத் தன்மை வீதம் படிப்படியாக உயர்த்தப்பட்டது.

| | | |
|---|---|---|
| பிப்ரவரி 2, 1970 | — | 25% லிருந்து 26% |
| ஏப்ரல் 24, 1970 | — | 26% லிருந்து 27% |
| ஆகஸ்டு 28, 1970 | — | 27% லிருந்து 28% |
| நவம்பர் 4, 1972 | — | 28% லிருந்து 29% |

நவம்பர் 17, 1972 — 29% லிருந்து 30%
டிசம்பர் 8, 1973 — 30% லிருந்து 32%
சூலை 29, 1974 — 32% லிருந்து 33%

மேற்கண்ட முறையினுல் வணிக வங்கிகள் மேலும் கடனை ஏற்படுத்துவது கட்டுப்படுத்தப்படுகின்றது. இது பற்றிய விவரங்கள் அட்டவணை 23இல் கொடுக்கப்பட்டுள்ளது.

அட்டவணை - 23.

## வணிக வங்கிகளிடம் கடன் அளிப்பதற்குள்ள வருவாய்கள்*

| ஆண்டு | சட்டமுறை சொத்து தன்மை வீதம் (Liquid assets) | சட்டமுறை ரொக்கக் காப்பு வீதம் (Cash reserve) | மொத்தம் தவணை, கேட்பு வைப்புகளில் கடனளிக்க முடியாதது | கடன் பெருக்கத்திற்கு கிடைக்கக் கூடிய இருப்பு |
|---|---|---|---|---|
| 1970 | | | | |
| சனவரி | 25 | 3 | 28 | 72 |
| பிப்ரவரி | 26 | 3 | 29 | 71 |
| ஏப்ரல் | 27 | 3 | 30 | 70 |
| 1972 | | | | |
| ஆகஸ்ட் | 29 | 3 | 32 | 68 |
| நவம்பர் | 30 | 3 | 33 | 67 |
| 1973 | | | | |
| சூன் | 30 | 5 | 35 | 65 |
| செப்டம்பர் | 30 | 6 | 36 | 64 |
| செப்டம்பர் | 30 | 7 | 37 | 63 |
| டிசம்பர் | 32 | 7 | 39 | 61 |

* ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா — ந. சட்டைநாதன் (த. பா. நி.) ப. 93.

## மாறுபட்ட வீத முறை (System of differential rates)

இத் திட்டம் 1960 அக்டோபரிலிருந்து 1964 செப்டம்பர் வரை அமுலிலிருந்தது. இத் திட்டத்தின் கீழ் வங்கிகள் தாங்கள் சட்டப்படி வைக்க வேண்டிய ரொக்கக் காப்பில் (Cash reserves) ஒரு குறிப்பிட்ட சதவீதம், அடிப்படை பங்கீடாக (Basic quota) வைக்கப்பட்டது. இது அளவு வரை மைய வங்கி வீதத்தில் கடன் பெறலாம். இதற்கு மேல் கடன் பெற மைய வங்கி வீதத்திற்கு மேல் அதிக வட்டி வீதத்தை ரிசர்வு வங்கி வசூலிக்கும்.

## நிகர எளிவரல் வீதம் (Net Liquidity ratio)

1964 செப்டம்பர் முதல் இது ரிசர்வு வங்கியால் அமுலுக்கு கொண்டு வரப்பட்டது. நிகர எளிவரல் வீதம் என்பது வங்கிகளிடம் உள்ள மொத்த ரொக்கம், ரிசர்வு வங்கி மற்ற பிற அறிவிக்கப்பட்டுள்ள வங்கிகளிடமும் வங்கி வைத்துள்ள ரொக்க இருப்பு, அரசாங்கப் பத்திரங்கள் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட பத்திரங்களில் செய்த முதலீடு ஆகியவை சேர்ந்த கூட்டுத் தொகையில் ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, தொழில் வளர்ச்சி வங்கி ஆகியவற்றிடமிருந்து பெற்ற கடனைக் கழித்தால் கிடைப்பதே நிகர எளிவரல் வீதம். இதனை வேறு விதமாகவும் குறிக்கலாம். நிகர எளிவரல் வீதம் = சட்ட முறை எளிவரல் தன்மை வீதம்—ரிசர்வு வங்கி, ஸ்டேட் வங்கி, தொழில் வளர்ச்சி வங்கி ஆகியவற்றிலிருந்து பெற்ற கடன் (Net Liquidity Ratio = Statutory Liquidity ratio—borrowings from R.B.I., S.B.I. & Development Banks).

ஆரம்பத்தில் நிகர எளிவரல் வீதம் 28% ஆக இருந்தது. இதிலிருந்து குறையும் ஒவ்வொரு சதவீதத்திற்கும் வங்கிகள் தாங்கள் ரிசர்வு வங்கியிடமிருந்து வாங்கிய முழுக் கடனுக்கு ½ சதவீதம் அதிக வட்டி செலுத்த வேண்டும். 1970இல் நிகர எளிவரல் 32 சதவீதமாகவும், இதனின்று நிகர எளிவரல் வீதம் 1 சதவீதம் குறைந்தால் ரிசர்வு பாங்கு செலுத்த வேண்டிய வட்டி 1 சதவீதம் அதிகமாக ஆக்கப்பட்டது. நிகர எளிவரல் வீதம் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தப்பட்டு செப்டம்பர் 1973இல் 40 சதவீதமாக உயர்ந்து உள்ளதை அட்டவணை 24 லிருந்து அறியலாம்.

அட்டவணை – 24.
நிகர எளிவரல் வீதம் பற்றிய விவரம்

| ஆண்டு | | நிகர எளிவரல் வீதம் |
|---|---|---|
| செப்டம்டர் | 1964 | 28% |
| பிப்ரவரி | 1965 | 30% |
| பிப்ரவரி | 1970 | 31% |
| ஏப்ரல் | 1970 | 32% |
| ஆகஸ்ட் | 1970 | 33% |
| சனவரி | 1971 | 34% |
| நவம்பர் | 1972 | 36% |
| மார்ச்சு | 1973 | 39% |
| சூன் | 1973 | 39% |
| செப்டம்பர் | 1973 | 40% |

சட்டமுறை ரொக்கக் காப்பு (Statutory Cash Reserve)

பின்பட்டியலிலுள்ள வங்கிகள் ரிசர்வு வங்கியிடம் சட்ட பூர்வமாக வைத்திருக்க வேண்டிய ரொக்கக் காப்பு அவ்வப் போது உயர்த்தியும் தாழ்த்தியும் மாற்றப்பட்டுள்ளது.

சூன் 23, 1973 — 3% லிருந்து 5%

செப்டம்பர் 8, 1973 — 5% லிருந்து 6%

செப்டம்பர் 22,1973 — 6% லிருந்து 7%

சூன் 29, 1974 — 7% லிருந்து 5%

1 சதவீதம் ரொக்கக் காப்பை உயர்த்தினல் சுமார் ரூ. 100 கோடியை ரிசர்வு வங்கி முடக்க முடிகின்றது.

இவ்விதம் பல உத்திகளைக் கையாண்டு இவைகளை மைய வங்கி வீதத்துடன் இணைத்து கடனைக் கட்டுப்படுத்த முயற்சிக் கிறது.

வெளிச்சந்தை நடவடிக்கை (Open Market Operations)

வெளிச் சந்தை நடவடிச்கை என்பது பொதுவாக மைய வங்கியினல் அந்நியச் செலாவணி, அரசுப் பத்திரங்கள், கம்பெனி பங்குகள் ஆகியவைகள் வாங்குவதையும், விற்பதையும் குறிக்கும். ஆனல், நடைமுறையில் அரசுப் பத்திரங்களை வாங்குவதையும் விற்பதுமே வெளிச்சந்தை நடவடிக்கை எனக் கூறப்படுகின்றது. நாட்டில் இருக்கும் பங்குகள் இதர ஆவணங்கள் ஆகியவைகளின் அளவையும், தரத்தையும் பொருத்தே வெளிச்சந்தை நடத்தையின் வெற்றி,

தோல்வி அமையும். பிரிவு 17 (8)இன் படி ரிசர்வு வங்கி மத்திய அரசு, மாநில அரசு மற்றும் தலத் தாபனங்கள் (Local Boards) பத்திரங்கள் (அரசு அனுமதித்தால்) ஆகியவைகள் வாங்குதல், விற்றலில் ரிசர்வு வங்கி ஈடுபடலாம். இந்தியாவில் பத்திரங்கள் சந்தை சிறியதானதே. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் வெளிச் சந்தை நடவடிக்கை பெரும்பாலும் கருவூலச் சீட்டுகளிலே நடத்தப்படும்போது இந்தியாவில் வெளிச்சந்தை நடவடிக்கை அரசு பத்திரங்களிலேயே பெரும்பாலும் அமைகின்றது. அரசுக்குத் தேவையான கடனைப் பெறவும், அரசு மற்றும் சிறந்த பத்திரங்கள், பங்குகளின் மதிப்பை நிலை நிறுத்தவே வெளிச் சந்தை நடத்தை ரிசர்வு வங்கியினுல் நடத்தப்படுகின்றது. 1948—49, 1950—51 ஆகிய இரு ஆண்டுகளில் ரிசர்வு வங்கியின் பத்திரக் கொள்முதல் மிக அதிகமாக முறையே ரூ. 91 கோடி ரூ. 56 கோடியாக இருந்தது. 1964—65 முதல் 1968—69 வரை ரிசர்வு வங்கியின் பத்திர விற்று முதல் மிக அதிகமாக ரூ. 320 கோடிக்கு இருந்தது.

### தேர்ந்தெடுக்கப்பட்ட கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் (Selective credit control measures)

பொதுக் கடனைக் கட்டுப் படுத்தும் ஆயுதங்களாகிய மைய வங்கி வீதம், வெளிச் சந்தை நடவடிக்கைகள், மாற்றி அமைக்கும் ரொக்கக் காப்பு முறை ஆகியவைகள் கடனைக் கட்டுப்படுத்தி பண அளவினை மொத்தமாகக் குறைக்குமே தவிர தேவையுள்ள துறைக்கு அதிகமாகக் கடனைக் அளிக்கவோ மற்றைய துறைக்கு அளிக்கும் கடனை அதிக மாகக் கட்டுப்படுத்தவோ முடியாது. எனவே, வேண்டிய துறை களுக்கு மட்டில் அதிகக் கடன் அளிக்கும் வண்ணம் தேர்ந் தெடுக்கப்பட்ட கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்கள் மைய வங்கிகளால் பெரிதும் பயன் படுத்தப் படுகின்றன. ரிசர்வு வங்கியும் சமீபகாலங்களாக இதனைப் பெரிதும் பயன் படுத்து கின்றது. அவ்வப்போது விவசாயப் பொருள்கள், பருத்தி, கச்சா சணல், வனஸ்பதி, பங்குகள் ஆகியவைகள் பேரில் வைத்திருக்க வேண்டிய இடைவெளி (Margin) மாற்றி அமைக்கப்பட்டு வணிக வங்கிகள் அளிக்கும் கடன் கட்டுப் படுத்தப்படுகின்றன. 1965 நவம்பரில் கடன் அங்கீகரிப்புத் திட்டத்தின் கீழ் (credit authorisation scheme) படி, பின் பட்டியலில் காணப்பட்டுள்ள வணிக வங்கிகள் எந்த ஒரு கடனளிக்கும் ரூ. 1 கோடியோ அதற்கு அதிகமாகவோ கொடுக்கக்கூடாது என்றும், கடனளவு ரூ.1 கோடியோ அதற்கு

மேலாகவோ இருந்தால் ரிசர்வு வங்கியின் ஆணை பெற வேண்டும் என கட்டளை பிறப்பித்தது. 1970-ஆம் ஆண்டுமுதல் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் ரிசர்வு வங்கியடமிருந்து கீழ்க்கண்டவைகளுக்கு முன் அனுமதி பெற வேண்டும்.

1. ஒரு இலட்ச ரூபாய்க்கு மேல் கம்பெனிகளின் பங்குகள் அல்லது கடன் பத்திரங்கள் வாங்குதல் அல்லது ஒப்புறுதி (Under writing) செய்தல்.

2. தற்போதுள்ள கடனாளிக்கு ரூ. 10 இலட்சத்திற்கு அதிகமாக கொடுத்துள்ள கடன் மீது வட்டியையோ வரம்பையோ குறைத்தல்.

3. கடன் கொடுத்தல், பிற வசதிகள் அளித்தல் அல்லது தற்போது இருக்கும் வசதியை அதிகமாக்குதல் ஆகியவற்றால் வங்கியால் ஒரு கடனாளிக்கு அளிக்கப்படும் கடன் வசதியின் மொத்த அளவை ரூ. 25 லட்சத்திற்கு மேலாக்குதல்.

மனந்தொடு வேண்டுகோள் (Moral suasion)

இம் முறையைத் திறம்பட ரிசர்வு வங்கி செய்து வந்துள்ளது.

1947 சனவரித் திங்கள் ரிசர்வு வங்கி வணிக வங்கிகளுக்கு அனுப்பிய சுற்றறிக்கையில் கீழ்க்கண்டவாறு கேட்டுக் கொண்டார்.

1. பங்குகள் பேரில் கொடுக்கும் கடனை மொத்தக் கடனில் ஒரு நியாயமான அளவுக்குக் கட்டுப் படுத்த வேண்டும்.

2. ஒவ்வொரு பங்குக்கும் கொடுக்க வேண்டிய உச்ச அளவுக் கடனை நிருணயிக்க வேண்டும்.

1957ஆம் ஆண்டு சூன் மாதம் விவசாயப் பொருள்களின் பேரில் கொடுக்கும் கடனைக் குறைக்குமாறும், ஆனால் அதே சமயம் தொழிலுக்குத் தேவைப்படும் நிதி வசதியை அளிக்குமாறும் ரிசர்வு வங்கியின் ஆளுநர் தம் சுற்றறிக்கையில் வங்கிகளைக் கேட்டுக் கொண்டார். இதைத் தொடர்ந்து 1957சூலையில் ஆளுநர் வங்கியர்களுடன் நடத்திய விவாதத்தின்போது, சூன் தொடக்கத்தில் வங்கிகள் கொடுத்திருந்த ரூ. 938 கோடி ரூபாய்

கடனை ரூ. 840 கோடியாக அக்டோபர் 15க்குள் குறைக்குமாறு ஆளுநர் கேட்டுக் கொண்டார். 1958 ஆகஸ்ட்டில் பங்குகள் பேரில் கடன் கொடுக்கையில் எச்சரிக்கையான கொள்கையைப் பின் பற்றுமாறு ரிசர்வு வங்கி சுற்றறிக்கை மூலம் கேட்டுக் கொண்டது. 1959 மே மாதம் உணவுத் தானியங்கள், சர்க்கரை, நிலக்கடலை ஆகியவற்றின் மேல் கடன் கொடுப்பதில் எச்சரிக்கையாக இருக்குமாறு வங்கிகளை தன் சுற்றறிக்கை மூலம் கேட்டுக் கொண்டது. 1970 பிப்ரவரியில் ரிசர்வு வங்கி ஆளுநர் கடனளிப்பதில் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கும் படியும், வழங்கியக் கடன் பயன்படுத்தப்படுவதை மிகக் கவனத்துடன் கண்காணிக்கும் படியும் வங்கிகளைக் கேட்டுக் கொண்டது. இதே ஆண்டு நவம்பர் மாதம் முந்துமைத் துறைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதிகக் கடனளிக்க வேண்டி ரிசர்வு வங்கி சுற்றறிக்கை விட்டது. 1971 பிப்ரவரியில் கடன் நிலைமையைப் பரிசீலித்தபின் வங்கிகளின் கடன் பெருக்கத்தில் ஏற்பட்ட சுருக்கத்தையும், ரிசர்வு வங்கி பாராட்டி எல்லா வங்கிகளையும் தொடர்ந்து இவ்வாறே செயல் படும்படி கேட்டுக் கொண்டது. 1972 ஜூன்மாதம் அரசாங்கப் பத்திரம், பிற அனுமதிக்கப்பட்ட பத்திரங்களில் அதிக முதலீடு செய்யுமாறு வங்கிகளைக் கேட்டுக் கொண்டார். 1973 ஜூன் மாதம் கடன் பெருக்கத்தைச் கட்டுப்படுத்துமாறு வணிக வங்கிகளை ரிசர்வு வங்கி கேட்டுக் கொண்டது.

### ரிசர்வு வங்கியும் விவசாயக் கடனும்

ரிசர்வு வங்கி ஏற்படுத்தப்படும் போதே, ரிசர்வு வங்கி பிரிவு 54ன் படி ரிசர்வு வங்கி ஒரு விவசாயக் கடன் துறையினை ஏற்படுத்த வேண்டும். இதன் பணி (1) திறமை மிக்க அலுவலர்களைக் கொண்டு கிராமக் கடன், இது பற்றிய மற்ற பிரச்சனைகளையும் ஆராய்ந்து மத்திய அரசு, மாநில அரசு, மாநில கூட்டுறவு வங்கிகள், மற்றைய வங்கிகள் ஆகியவையுடன் கலந்து ஆலோசனைக் கூறவேண்டும். (2) ரிசர்வு வங்கியின் விவசாயக் கடனளிப்பை மாநில கூட்டுறவு வங்கிகள், மற்றைய வங்கிகள் ஆகியவைகளுடன் ஒருங்கிணைப்பு ஏற்படுத்துவது.

ரிசர்வு வங்கிச் சட்டத்தின் பிரிவு 17 வாயிலாக மாநில கூட்டுறவு வங்கிகள், பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகளுக்கு பருவகால விவசாயக் கடன், விவசாய விளை பொருள் விற்பனைக் கடன் ஆகியவைகள் அளிக்க வகை செய்யப் பட்டுள்ளது.

1935ஆம் ஆண்டே ரிசர்வு வங்கியின் விவசாயக் கடன் துறை ஆரம்பிக்கப்பட்டாலும் 1954ஆம் ஆண்டு கிராமியக் கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளுக்குப் பின்பே தான் ரிசர்வு வங்கி விவசாயக் கடனை பெரிதளவில் கடனளிக்க முன் வந்தது. 1954ஆம் ஆண்டுக்கு முன் கிராமக்கடன் பற்றிய சில ஆய்வுகளையும், சில கூட்டுறவு மாநில வங்கிகளுடன் ஓரளவுத் தொடர்பு மேற் கொண்டதைத் தவிர பெருமளவில் விவசாயக் கடன் அளிக்க ரிசர்வு வங்கி முன் வரவில்லை. 1954ஆம் ஆண்டு குழுவின் முக்கியப் பரிந்துரைகள்:

(1) அரசு கூட்டுறவுக் கடன் சங்கங்களின் மூலதனத்தில் பங்கு ஏற்க வேண்டும்.

(2) கடனுக்கும், விளைபொருள் விற்பனைக்கும் இணைப்பு ஏற்படுத்த வேண்டும்.

(3) கூட்டுறவு இயக்கத்தில் பணிபுரிபவர்கள் போதிய பயிற்சி பெற்றவர்களாக இருக்க வேண்டும்.

இப் பரிந்துரைகளுக்கு ஏற்ப ரிசர்வு வங்கிச் சட்டம் திருத்தம் 1955இல் செய்யப்பட்டு பிரிவு 46A, 46B சேர்க்கப் பட்டு இரண்டு முக்கியமான நிதிகள் ஏற்படுத்தப் பட்டன. அவையாவன:

1. தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால நட வடிக்கை) நிதி [National Agricultural Credit (Lorg term operations) fund],

2. தேசிய வேளாண்மைக் கடன் (நிலைப் பேருக்க) நிதி [Naticnal Agricultural (Credit stabilisation) Fund],

மேலே கூறியவைகளில் முதல் நிதி கீழ்க்கண்டவாறு பயன்படுத்தப்படுகின்றது.

1. கூட்டுறவுக் கடன் நிறுவனங்களின் பங்கு மூலதனத்தை வாங்குவதற்காக மாநில அரசுகளுக்கு 20 ஆண்டு களுக்கு அதிகப்படாத கடன் அளித்தல்.

2. விவசாயம் அல்லது அதைச் சார்ந்த நோக்கங்களுக்கு மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு, ஐந்து ஆண்டிற்கு மேற்படாத மத்திய கால முன்பணம் அளித்தல்.

3. நிலவள வங்கிகளுக்கு 20 ஆண்டுகளுக்கு அதிகப் படாத கடனைக் கொடுத்தல்.

4. நிலவள வங்கிகள் கடன் பத்திரம் வாங்குதல்.

இந்நிதி ஆரம்பிக்கப்படும்போது ரூ. 10 கோடி ஒதுக்கப் பட்டது. இதைத் தொடர்ந்து 4 ஆண்டுகளுக்கு, ஆண்டொன் றுக்கு ரூ. 5 கோடி இந்நிதிக்கு ஒதுக்கப்பட்டது. பின்பு கூட் டுறவுக் கடன் குழுவின் (Committee on Cooperative Credit) பரிந்துரை பேரில் ரிசர்வு வங்கி இந்நிதிக்கு தன் செலுத்தல்களை உயர்த்தியது. சூன் 1969ஆம் ஆண்டு இந்நிதியில் ரூ. 155 கோடியும், இதிலிருந்து அளித்த கடன் நிலுவை ரூ. 58 கோடி யாகவும் இருந்தது.

### தேசிய வேளாண்மைக் கடன் (நிலைப் பேருக்க) நிதி

இந்நிதி ரிசர்வு வங்கிக்கு மாநிலக் கூட்டுறவு வங்கிகளிட மிருந்து வரவேண்டிய குறுகிய காலக் கடனை, (மாற்று உண்டி யல்களையும், புரோநோட்டுகளையும் வாங்கியதாலோ அல்லது மறுதள்ளுபடி செய்ததாலோ ஏற்பட்ட கடனை) கூட்டுறவு வங்கிகள் கொடுக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டால் அக்குறுகிய காலக் கடனை ஐந்து ஆண்டுகளுக்கு மேற்படாத மத்திய காலக் கடனாக மாற்ற இந்நிதி பயன்படுகின்றது.

இந்நிதி 1956இல் ரூ. 1 கோடி ரூபாயுடன் தொடங்கப் பட்டது. பின்பு ஆண்டொன்றுக்கு இந்நிதிக்கு ரூ. 1 கோடி ஒதுக்கப்பட்டது. பின்பு ரிசர்வு வங்கி இந்நிதிக்கு தன் செலுத் தல்களை அதிகரித்தது.

### கூட்டுறவுத்துறைக்கு குறுகிய காலக் கடன்

ரிசர்வு வங்கி பிரிவு 17 (2) (b)ன் படி பருவகால விவசாய நடவடிக்கை அல்லது விளைபொருள் விற்பனைக்காக ஏற்படுத் தப்பட்ட உண்டியலாக இருந்து, முதிர்வு 15 மாதங்களுக்கு மேல் இல்லாமல், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நல்ல கையெழுத்தினைப் பெற்றுள்ளதாக (இவற்றில் ஒன்று மாநில கூட்டுறவு வங்கியாகவோ, பின் பட்டியலில் கண்டுள்ள வங்கி யாகவோ இருக்க வேண்டும்) இருந்தால் இதனை வாங்கவோ, மறுதள்ளுபடியோ செய்யலாம்.

ரிசர்வு வங்கி பிரிவு 17 (4) (c)ன்படி, மேலே சொல்லியுள்ள, பிரிவு 17 (2) (b)ன்படி மறுதள்ளுபடி செய்யக்கூடிய உண்டியல்

களை அல்லது புரோநோட்டுகளை ஈடாக எடுத்து மாநில கூட்டுறவு வங்கிக்குக் கடன் வழங்கலாம்.

1953ஆம் ஆண்டு முதல் பருவகால விவசாயம் (Seasonal agricultural operations) என்பது கலப்பு விவசாயம் (Mixed farming) என்பதனையும் உள்ளடக்கும் என திருத்தப்பட்டது.

ரிசர்வு வங்கி பிரிவு 17 (4) (a)இன் கீழ் அரசுப் பத்திரங்கள், பொறுப்பாளர் பத்திரங்களின் மேல் கூட்டுறவு மாநில வங்கி களுக்கு பருவகால விவசாயக் கடனுக்காக கடன் வழங்கலாம்.

பிரிவு 17 (2) (b)ன்கீழ் மைய வங்கி வீதத்திற்கு 2% குறைத்து ரிசர்வு வங்கி கூட்டுறவு மாநில வங்கிக்கு அளிக்கின்றது.

ரிசர்வு வங்கி கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளித்த குறுகிய கால கடன் முதல் 5 ஆண்டுத் திட்டம் ஆரம்பிக்கும்போது ரூ. 7·62 கோடியாகவே இருந்தது. 1968-69இல் ரூ. 345·87 கோடி யாகவும், 1963-74இல் ரூ. 430·83 கோடியாகவும் உயர்ந்தது.

### விவசாயத்திற்கு மத்திய காலக் கடன்

ரிசர்வு வங்கிச் சட்டம் பிரிவு 17 (4AA), பிரிவு 46A (2) (b) ஆகியவைகள் ரிசர்வு வங்கி மாநில கூட்டுறவு வங்கிகளுக்கு மத்திய காலக்கடன் 15 மாதங்களுக்கு மேலும் 5ஆண்டுகளுக்கு மிகாமலும் கொடுக்க வகை செய்கின்றன. இக் கடன்கள் விவசாய நடவடிக்கைகளும், விவசாய நடவடிக்கை சம்பந்தப் பட்ட செலவுகளுக்கும் அளிக்கப்படலாம். இக் கடன்களைப் பொறுத்தவரை மாநில அரசு, கடன் மற்றும் கடனுக்கான வட்டி ஆகியவைகள் திருப்பித் தருவதற்கான உத்திரவாதத்தை அரசு அளிக்க வேண்டும். இதுபோன்ற கடன்களைத் தன் பொது நிதியிலிருந்து அளித்துவந்த ரிசர்வு வங்கி 1956ஆம் ஆண்டு முதல் தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால நடவடிக்கைகள்) நிதியினின்று அளித்து வருகின்றது. மத்திய காலக் கடன் என்னும் தொடருக்குள் கூட்டுறவு சர்க்கரை ஆலைகளில் பங்குகளை எடுத்துக்கொள்ள சிறிய, மத்தியதர விவசாயிகள் பெறும் கடனும், 1961ஆம் ஆண்டு முதல் கறவை மாடுகள் வாங்குவதற்கான கடனும், 1967ஆம் ஆண்டு முதல் கோழிப் பண்ணை வளர்ப்புக்கான கடனும் உட்படும் என திருத்தங்கள் செய்யப்பட்டன. மத்திய கால விவசாயக் கடன் 5 ஆண்டுகள் வரை அளிக்கப்பட்டாலும் நடை முறையில் மொத்த மத்திய காலக் கடனில் 25 சதவீதமே 5 ஆண்டுக்

கடனுகவும், எஞ்சியவை 3 ஆண்டுக் கடனுகவே அளிக்கப் பட்டு வருகின்றது.

ஒரு மத்திய கூட்டுறவு வங்கிக்கு அளிக்கப்படும் மத்திய காலக் கடன் அதன் சொந்த நிதியளவே அமையும். இக்கடன் மைய வங்கி வீதத்திற்கு 2 சதவீதம் குறைவான வட்டி வீதமாக இருந்துவந்தது. நவம்பர் 1960லிருந்து இது மைய வங்கி வீதத் திற்கு $1\frac{1}{2}$ சதவீதம் குறைவாக வசூலிக்கப்படுகின்றது. விவசாய மத்திய காலக் கடன் 1954–55இல் ரூ. 1·22 கோடியாகவே இருந்தது 1960–61இல் ரூ. 4·68 கோடியாகவும், 1968–69இல் ரூ. 19 கோடியாகவும் உயர்ந்தது.

### மத்திய கால மாற்றுக் கடன் (Medium term Conversion loan)

வெள்ளம், பஞ்சம் மற்றும் இயற்கை இன்னல்களால் கூட்டுறவு மாநில வங்கி குறுகிய காலக் கடனை ரிசர்வு வங்கிக்குத் திருப்பித்தர இயலாத ஆண்டுகளில் ரிசர்வு வங்கி தேசிய வேளாண்மைக் கடன் (நிலைப் பெருக்க) நிதியினின்று குறுகிய காலக் கடனை மத்திய காலக் கடனுக மாற்ற கடன் அளிக்கின்றது. இவ் வகையான கடன் ரூ. 4·82 கோடியாக 1960-61இல் இருந்த நிலையினின்று 1968–69இல் ரூ. 6·32 கோடி யாக இருந்தது. இக்கடனுக்கு வட்டி மைய வங்கி வீதத்தைவிட $1\frac{1}{2}$ சதவீதம் குறைவு.

### நீண்ட கால விவசாயக் கடன்

நிலவள வங்கிகள் வெளியிடும் நீண்ட காலக் கடன் பத்திரங்கள் வெளியீட்டில் கணிசமான பகுதியை ஆண்டு தோறும் வாங்கி நிலவள வங்கிகள் நீண்ட கால விவசாயக் கடன் அளிக்க ரிசர்வு வங்கி வகை செய்கின்றது. 1948ஆம் ஆண்டு முதல் ரிசர்வு வங்கி மத்திய நிலவள வங்கிகள் வெளி யிடும் கடன் பத்திரங்களில் 10 சதவீதம் அல்லது விற்பனை செய்ய இயலாத பத்திரங்களின் மதிப்பு ஆகிய இரண்டில் எது குறைவோ அத்துணை அளவும் பத்திரங்களைத் தான் வாங்குவது என்றக் கொள்கையை அமுல் செய்ய ஆரம்பித்தது. பின்பு தான் வாங்கும் அளவை 10 சதவீதத்திலிருந்து 20 சதவீத மாக ரிசர்வு வங்கி 1950ஆம் ஆண்டு உயர்த்தியது. மேலும், இக்கடன் பத்திரங்கள் மேல் பிரிவு 17 (4) (a)ன்படி ரிசர்வு வங்கி யிடமிருந்து கடன் வாங்க தகுதியானவை என்று ரிசர்வு வங்கி தெரிவித்தது. 1960ஆம் ஆண்டு சூன் 30ஆம் நாள்வரை ரிசர்வு வங்கி மத்திய நிலவள வங்கிகள் வாங்குவதில் செய்த முதலீடு ரூ. 28·52 கோடியாக இருந்தது.

1957ஆம் ஆண்டு முதல் மத்திய நிலவள வங்கிகள் வெளியிடும் கிராமியக் கடன் பத்திரங்கள் (Rural Debentures) வெளியீட்டில் பதினைந்தில் எட்டுப் பங்கினை ரிசர்வு வங்கி வாங்கி வருகின்றது. இக் கிராமியக் கடன் பத்திரங்கள் இரண்டு வகைப்படும்; ஒன்று 15 ஆண்டுகள் பத்திரமாகவும், மற்றொன்று 7 ஆண்டுகள் பத்திரமாகவும் வெளியிடப்படுகின்றன. முந்தைய வகைக் கடன் பத்திரம் முழுமையும் ரிசர்வு வங்கி எடுத்துக் கொள்வதோடு, தான் இப்பத்திரங்களுக்காகப் பெறும் வட்டியினையும் குறைவாக ஆக்கிக் கொண்டுள்ளது. ஜூன் 30, 1969 வரை இப் பத்திரங்களில் ரூ. 8.97 கோடிக்கு ரிசர்வு வங்கி வாங்கி உள்ளது.

### மாநில அரசுக்கு நீண்ட காலக் கடன்

தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால நடவடிக்கைகள்) நிதியினின்று ரிசர்வு வங்கி மாநில அரசுகளுக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனம் வாங்குவதற்கான கடனை அளித்து வருகின்றது. பொதுவாக இக் கடன் 12 ஆண்டுகளில் திருப்பப்பட வேண்டும். இதனை நீட்டிக்கவும் ரிசர்வு வங்கி செய்யலாம்.

### விவசாய மறுநிதிக் கழகம் (Agricultural Refinance Corporation)

இக் கழகம் 1963ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1ஆம் நாள் தொடங்கப்பட்டது. இக் கழகத்தின் முக்கியக் குறிக்கோள் தற்போதுள்ள நீண்ட கால விவசாயக் கடனளிக்கும் நிறுவனங்கள் தர இயலாத நீண்ட காலக் கடன்களை (கடன் தொகை அதிகமாக உள்ளதால் அல்லது தன் சட்டதிட்டங்கள் அனுமதிக்காததால்) கொடுக்க வகை செய்வதேயாகும்.

### வணிக வங்கிகள் மீது ரிசர்வு வங்கியின் கட்டுப்பாடு-வங்கிகளுக்கு உரிமம்

ஒவ்வொரு வணிக வங்கியும் ரிசர்வு வங்கியிடமிருந்து உரிமம் (Licence) பெற வேண்டும். உரிமம் வழங்க ரிசர்வு வங்கி நிபந்தனைகள் விதிக்கலாம். உரிமம் வழங்குமுன் ரிசர்வு வங்கி ஓர் ஆய்வு நடத்தி, வங்கிகள் அமைப்பில் குறைகள் கண்டால் அவை நீக்கப்பட்டாலன்றி உரிமம் வழங்க ரிசர்வு வங்கி மறுக்கும். வழங்கிய உரிமத்தை ரத்து செய்ய ரிசர்வு வங்கிக்கு உரிமை உண்டு. 1973 ஜூன் முடிய உரிமம் வழங்கப் பட்ட வங்கிகளின் மொத்த எண்ணிக்கை 48. உரிமம் ரத்து செய்யப்பட்ட வங்கிகளின் எண்ணிக்கை 45.

வங்கிக் கம்பெனிகள் புது இடங்களில் தொழில் தொடங்க அல்லது தான் தொழில் செய்யும் இடத்தை மாற்ற ரிசர்வு வங்கியின் முன் அனுமதி தேவை.

## முதல்

1962ஆம் ஆண்டுமுதல் வங்கித்தொழில் தொடங்கும் வங்கிக் கம்பெனியின் செலுத்திய மூலதனம் ரூபாய் ஐந்து லட்சத்திற்குக் குறையக் கூடாது. வங்கிகள் எந்த இடங்களில் அலுவலகங்கள் வைத்திருக்கின்றன என்பதைப் பொறுத்து இக் குறைந்த அளவு முதல் ரூ. 10 லட்சம் வரை உயருகிறது. வெளிநாட்டு வங்கியானல் அதன் செலுத்திய முதலும் காப்பும் ரூ. 15 லட்சத்திற்குக் குறையக் கூடாது. பம்பாய், கல்கத்தா அல்லது இவ்விரு நகரங்களிலும் வங்கித் தொழில் செய்தால் குறைந்தது ரூ. 20 லட்சம் மூலதனமும் காப்பும் பெற்றிருக்க வேண்டும்.

## காப்பு நிதி

இலாபத்தினின்று 20 சதவீதம் காப்பு நிதிக்குக் குறையாமல் காப்பு, மூலதனம் அளவிற்கு ஒதுக்க வேண்டும். இதன்பின் தான் இலாபத்திலிருந்து ஈவுத் தொகையைப் பங்குதாரர்களுக்கு அளிக்கலாம்.

## ஆய்வு (Inspection)

மத்திய அரசின் உத்திரவில் ரிசர்வு வங்கி எந்த ஒரு வங்கிக் கம்பெனியையும் அதன் புத்தகங்களையும் கணக்குகளையும் ஆய்வு செய்யலாம். அவ்வாறு ஆய்வு செய்தபின் தன் ஆய்வு அறிக்கையின் படியை அவ்வங்கிக் கம்பெனிக்கு ரிசர்வு வங்கி அனுப்ப வேண்டும். தானகவே ஆய்வு நடத்தினலும், மத்திய அரசின் கட்டளைப்படி நடத்தினலும் ரிசர்வு வங்கி தன் ஆய்வு அறிக்கையை மத்திய அரசுக்கு அனுப்பவேண்டும். அவ்வறிக்கைப்படி வங்கிக் கம்பெனி வைப்பாளர்கள் நலத்திற்குக் குந்தகம் ஏற்படும் வகையில் தொழில் நடத்துவதாகத் தெரிந்தால் ரிசர்வு வங்கி கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கலாம்:

1. புதிய வைப்புகள் வாங்கக் கூடாது என வங்கிக் கம்பெனியைத் தடை செய்யலாம்.

2. வங்கிக் கம்பெனியைக் கலைக்க வேண்டும் என ரிசர்வு வங்கியை பிரிவு 38-ன் கீழ் விண்ணப்பிக்குமாறு மத்திய அரசு கட்டளை இடலாம்.

ஆய்வால் எழும் பல்வேறு பிரச்சினைகள் குறித்து நிருவாகத்தினர் தங்களுடைய கருத்துகளைத் தெரிவிக்க வாய்ப்பளித்த பிறகே ரிசர்வு வங்கி அவ் வணிக வங்கி மீது நடவடிக்கை எடுக்கும்.

### வங்கிகள் இணைப்பு (Amalgamation)

1960ஆம் ஆண்டிலிருந்து எங்கெல்லாம் கட்டாய இணைப்பு அவசியமோ அங்கெல்லாம் கட்டாய இணைப்பும் (Compulsory Amalgamation), எங்கெல்லாம் தன் விருப்ப (Voluntary) அடிப்படையில் இணைப்பு முடியுமோ அங்கெல்லாம் தன் விருப்ப இணைப்பினை அனுமதிக்கவும் ரிசர்வு வங்கிக்கு உரிமை உண்டு.

ஒரு வங்கிக் கம்பெனி உறுப்பினர்கள் அல்லது கடனீந்தோர் சம்பந்தமின்றி எந்த வங்கிக் கம்பெனியுடனும் (ஸ்டேட் வங்கி, ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் உட்பட) கட்டாய இணைப்புச் செய்யப்படலாம். பலவீனமான, சரியான நிருவாகம் இல்லாத வங்கிகளைப் பொறுத்தவரை ரிசர்வு வங்கி மத்திய அரசுடன் கலந்தாலோசித்து இணைப்புக்கான நடவடிக்கையை மேற்கொள்ளலாம்.

### கடன் ஒத்தி வைப்பு (Moratorium on Payments)

ரிசர்வு வங்கியின் விண்ணப்பத்தின் பேரில் மத்திய அரசு கடன் ஒத்திவைப்பு ஆணை பிறப்பிக்க மத்திய அரசு அனுமதிக்கலாம். இந்த ஆணை எந்த வங்கி மேல் இடப்பட்டுள்ளதோ அந்த வங்கி தன் எந்தக் கடனீந்தோருக்கோ, வைப்புதாரருக்கோ பணம் திருப்பித் தரக்கூடாது. இந்த ஆணை ஆறு மாத காலத்திற்கு விதிக்கப்படும். இக் காலத்திற்குள் இந்த வங்கியின் நிருவாகத்தில் சீர்திருத்தமோ, இணைப்போ, கலைப்போ செய்ய ரிசர்வு வங்கி மேற்கொள்ளாலாம். 1960 செம்டம்பரிலிருந்து 1971 சூன் முடிய 49.95 கோடி ரூபாய் மொத்த வைப்புகளைப் பெற்ற 60 வங்கிகளுக்கு ஒத்திவைப்பு ஆணை ரிசர்வு வங்கியால் பிறப்பிக்கப்பட்டது.

மேலே கூறியவைகள் ரிசர்வு வங்கி கொண்டுள்ள முக்கிய உரிமையும் கட்டுப்பாடுகளுமே யாகும். இதனைத் தவிர மற்ற உரிமைகளும் ரிசர்வு வங்கிக்கு ரிசர்வு வங்கிச் சட்டம் மூலமும், வங்கிக் கம்பெனி ஒழுங்கு முறைச் சட்டமூலமும் கொடுக்கப் பட்டுள்ளன.

### ரிசர்வு வங்கியும் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடும்

ரிசர்வு வங்கியின் முக்கியப் பணிகளில் ஒன்று இந்திய ரூபாயின் வெளிநாட்டு மதிப்பினைச் சீராக வைத்திருத்தல்.

அந்நியச் செலாவணி ஒழுங்குபடுத்தும் சட்டம், 1947-ன் (Foreign Exchange Regulation Act of 1947) படி அந்நியச் செலாவணி வீதம் (Foreign exchange rate) ரிசர்வு வங்கி குறிப்பிட்டுள்ள வீதத்தைத் தவிர வேறாக இருக்கக் கூடாது. அந்நியச் செலாவணியைப் பொறுத்த வரை ரிசர்வு வங்கி பொதுமக்களுடன் நேரடியாக நடவடிக்கை செய்வதில்லை. அஃது அனுமதிக்கப்பட்ட (Authorised) வியாபாரிகளால்தான் செய்யப்படுகிறது. இதற்கான அனுமதியை ரிசர்வு வங்கியிடம் இருந்து பெறவேண்டும். பெரும்பாலான அனுமதிக்கப்பட்ட வியாபாரிகள் வணிக வங்கிகளே. பொதுமக்கள் இவர்களிடம் தான் தொடர்பு கொள்ள வேண்டும். ஆனால், அந்நியச் செலாவணியைப் பற்றிய முடிபு அதிகாரி (Final Authority) ரிசர்வு வங்கியே. அவ்வப்போது அந்நியச் செலாவணி வீதம், ஏற்றுமதி, இறக்குமதிக்கு அனுமதிக்கப்பட்டுள்ள பண அனுப்பு முறை ஆகியவைகளை ரிசர்வு வங்கி கட்டுப்படுத்துகின்றது.

ரிசர்வு வங்கி இந்திய அரசின் முகவராகப் பன்னாட்டுப் பண நிதியில் (International Monetary Fund) அங்கம் வகிக்கின்றது. நம் ரூபாயின் மதிப்பு, தங்கத்திற்குச் சமமாக எவ்வளவு என்று அப் பண நிதியிடம் வெளியிட்டுள்ளது. அவ்வப்போது கடன் வாங்குவது, கடன் திருப்புவது எல்லாமே ரிசர்வு வங்கியால் செய்யப்படுகின்றது.

ரிசர்வு வங்கியின் இருப்புநிலைக் குறிப்பு

பிப்ரவரி 22, 1974ஆம் ஆண்டு ரிசர்வு வங்கியின் இருப்பு நிலைக்குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

பண வெளியீட்டுத் துறை (Issue Department)

| பொறுப்பு | ரூ. (கோடியில்) | சொத்துகள் | ரூ. (கோடியில்) |
|---|---|---|---|
| வங்கியியல் துறையில் வைத்துள்ள பணத்தாள் | 21·19 | தங்க நாணயம், தங்கக் கட்டிகள் ... | 182·53 |
| புழக்கத்திலிருக்கும் பணத்தாள் ... | 5973·34 | அந்நிய நாட்டுப் பத்திரங்கள் ... | 101·74 |
| | | ரூபாய் நாணயம் ... | 9·94 |
| | | இந்திய அரசாங்க ரூபாய்பத்திரங்கள் ... | 5700·33 |
| | 5994·54 | | 5994·54 |

வங்கியியல் துறை

| பொறுப்புகள் | ரூ. (கோடியில்) | சொத்துகள் | ரூ. (கோடியில்) |
|---|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் | 5·00 | பணத்தாள்கள் நாணயங்கள் | 21·23 |
| காப்பு நிதி ... | 80·00 | உண்டியல் வாங்கியது கழிமானம் செய்தது | |
| தேசியவேளாண்மைக் கடன் (நீண்டகால நடவடிக்கைகள்) நிதி | 239·00 | (i) உள்நாடு | 200·86 |
| | | (ii) கருவூலச்சீட்டுகள் | 346·14 |
| தேசிய வேளாண்மைக் கடன் (நிலைபேருக்க) நிதி | 85·00 | வெளிநாட்டில் வைத்திருக்கும் இருப்புகள் | 330·16 |
| தேசியத் தொழில் (நீண்டகால நடவடிக்கைகள்) நிதி | 205·00 | மாநில அரசுகளுக்கு கடன்கள் | 167·27 |
| வைப்புகள்: | | கடன்கள்: | |
| மத்திய அரசு | 59·70 | 1. பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் | 310·25 |
| மாநில அரசுகள் | 10·77 | 2. மாநிலக் கூட்டுறவு வங்கிகள் | 354·73 |
| பின்பட்டியலில் கண்டுள்ள வங்கிகள் | 703·68 | 3. மற்றவைகள் | 194·66 |
| மாநிலக் கூட்டுறவு வங்கிகள் | 17·07 | முதலீடுகள் | 241·58 |
| மற்றைய வங்கிகள் | 0·69 | மற்றையச் சொத்துக்கள் | 78·73 |
| மற்றவைகள் | 117·77 | | |
| மற்றையப் பொறுப்புகள் | 721·95 | | |
| | 2245·63 | | 2245·63 |

மைய வங்கிகளின் இருப்புநிலைக்குறிப்பில் பண வெளியீட்டுத் துறையின் இருப்புநிலைக் குறிப்புத் தனியாகவும், வங்கியியல் துறை இருப்புநிலைக் குறிப்புத் தனியாகவும் இருப்

பதைக் காணலாம். பண வெளியீட்டுத் துறை நோட்டு வெளியிடத் தங்கம், வெளிநாட்டுப் பத்திரங்கள் ஆகியவை களைப் போதிய அளவு வைத்திருக்க அதன் பிரிவு தனிப்படுத் தப்பட்டுத் தனி இருப்புநிலைக் குறிப்புத் தயாரிக்கின்றது.

ரிசர்வு வங்கி மைய வங்கிகள் செய்ய வேண்டிய பல பணியினையும் செய்து வருவதினை மேலே கண்டுள்ள ரிசர்வு வங்கியின் பல பணிகளினின்று அறியலாம். எனினும், ரிசர்வு வங்கியின் பணி இன்னும் பல துறைகளில் விரிவாக்கப்படலாம் என்றும், இதற்காக ஒரு குழு தனியே அமைக்கப்பட்டு ஆராய வேண்டும் எனச் சில வங்கியியல் நிபுணர்களும் கருத்துத் தெரிவித்து உள்ளனர்.

## பாட நூல்கள்

1. சட்டைநாதன் — ரிசர்வு பாங்க் ஆஃப் இந்தியா.
2. R. B. I. FUNCTIONS AND WORKING — R. B. I. Publications.

# ஒப்பீட்டு வங்கியியல்

## (Comparative Banking System)

## 23. இலண்டன் பணச்சந்தை

## (London Money Market)

பல நாடுகளிலும் வணிக வங்கிகளும், மைய வங்கிகளும் சற்றேறத்தாழ ஒரே குறிக்கோளையும் பணிகளையும் மேற்கொண்டிருந்தாலும் தங்கள் தங்கள் நாட்டின் பணச்சந்தை, பணச்சந்தையின் மேம்பாடு அல்லது குறைபாடு, பணச் சந்தையின் அங்கங்கள் ஆகியவற்றிற்கு ஏற்பத் தங்கள் செயல் பாட்டில் சிறிது வேறுபட்டு இயங்குகின்றன. வணிக வங்கிகளின் சிறந்த செயல்பாட்டிற்கும், மைய வங்கியின் திறமையான பணிக்கும் பணச்சந்தையின் நிலைமை ஒரு முக்கிய காரணமாக அமைகின்றது. பொதுவாகப் பிற்பட்ட பொருளாதார நாடுகளில் பணச் சந்தையும் வளர்ச்சியடையாமல் உள்ளது. இதன் காரணமாக வணிக வங்கிகளின் பணியும், மைய வங்கியின் கட்டுப்பாடும் போதுமான அளவாக இந் நாடுகளில் இருப்பது இல்லை.

பொருளாதார முன்னேற்றம் பெற்றுள்ள இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளில் வணிக வங்கிகளும், மைய வங்கிகளும் சீரிய பணியினை ஆற்றுகின்றன. இந் நாடுகளில் வங்கித் துறை வளர்ச்சியடையப் பணச் சந்தை எவ்வாறு காரணமாக உள்ளது? சிறப்பு அம்சங்கள் யாவை என்பவற்றோடு, இந்தியப் பணச்சந்தை, இந்திய வங்கியியல் துறை ஆகியவைகளுடன் ஒப்பிட்டு நோக்குவதே இந்த அத்தியாயத்தின் குறிக்கோள். இதன்மூலம் இந்தியாவில் வங்கியியல் துறை அமைப்பில் எவ்வித மாற்றம் தேவைப்படுகின்றது என்பதை அறியலாம்.

உலகிலுள்ள பல பணச்சந்தைகளில் மிகவும் மேம்பாடு அடைந்த பணச்சந்தையாக இலண்டன் பணச்சந்தை

## இலண்டன் பணச் சந்தை அமைப்பு



கருதப்படுகின்றது. இப் பணச்சந்தையின் அங்கங்கள் கீழ்க் கண்டவைகள் ஆகும்:

1. பாங்கு ஆஃப் இங்கிலாந்து (மைய வங்கி)
2. வணிக வங்கிகள்
3. தள்ளுபடி அகங்கள் (Discount Houses)
4. ஏற்பகங்கள் (Acceptance Houses)
5. ஓடும் தரகர்கள் (Running Brokers)

மேலே கண்டவைகள் பணச்சந்தையின் குறுகிய காலச் சந்தையில் அமைந்துள்ளன.

நீண்ட கால அல்லது முதலீட்டுச் சந்தையை (Capital Market) இரண்டாகப் பிரிக்கலாம். அவையாவன:

1. புதிய மூலதனச் சந்தை (New Capital Market)
2. பழைய மூலதனச் சந்தை

புதிய மூலதனச் சந்தையின் பகுதிகள் :

1. வெளியீட்டகங்கள் (Issue Houses)
2. காப்புறுதியகங்கள் (Underwriters)
3. நம்பிக்கை மற்றும் நிதியகங்கள் (Trust and Finance Corporation)
4. பங்குச் சந்தை (Stock Exchange Market)

**பாங்க் ஆஃப் இங்கிலாந்து**

இஃது இங்கிலாந்தின் மைய வங்கி. 1694ஆம் ஆண்டு இது நிறுவப்பட்டது. உலகில் இன்றும் தலைசிறந்த மைய வங்கியாக இது கருதப்படுகின்றது. வெகு காலம் வரை பாங்கு ஆஃப் இங்கிலாந்து செய்யும் பணிகளே ஒரு மைய வங்கி செய்யும் பணியாகும் என்ற கருத்து நிலவி வந்தது. இன்றும் உலகிலுள்ள எல்லா மைய வங்கிகளும் இவ்வங்கி அவ்வப்போது செய்யும் பணிகளை உற்று நோக்கித் தங்கள் பணிகளையும் அவ்வாறே மாற்றி அமைத்துக் கொள்கின்றன. ஆரம்ப காலம் முதல் 1946ஆம் ஆண்டு வரை இவ்வங்கி ஒரு பங்குதாரர்கள் வங்கி யாகவே இருந்தது. ஆனால், 1946ஆம் ஆண்டு இது தேசியமய மாக்கப்பட்டு அரசுக்குச் சொந்தமான வங்கியாக மாற்றப் பட்டது. இதனைத் தொடர்ந்துதான் மற்றைய நாடுகளும்

தங்கள் மைய வங்கிகளைத் தேசியமயமாக்கின. இந்திய ரிசர்வு வங்கி 1948ஆம் ஆண்டு தேசியமயமாக்கப்பட்டதும் பாங்க் ஆஃப் இங்கிலாந்தின் உதாரணத்தைப் பின்பற்றிச் செய்யப் பட்டதேயாகும்.

பாங்க் ஆஃப் இங்கிலாந்தின் ஒரு முக்கிய அம்சம் அது பணச் சந்தையுடன் மிக நெருக்கமான தொடர்பு வைத்துள்ளதாகும். தள்ளுபடி அகங்கள் மற்றும் வணிக வங்கிகள் பாங்க் ஆஃப் இங்கிலாந்துடன் நல்ல தொடர்பு கொண்டுள்ளதால், அவ்வங்கி எடுத்துக்கொள்ளும் ஒவ்வொரு முயற்சிக்கும் போதிய ஒத்துழைப்புப் பணச்சந்தையில் கிடைக் கின்றது.

கடனைக் கட்டுப்படுத்தும் ஆயுதங்களைத் திறமையுடன் செயல்படுத்தி வருகின்றது. 1931ஆம் ஆண்டிற்குப் பிறகு வெகு காலம்வரை இவ்வங்கி மைய வங்கி வீதத்தைப் பயன் படுத்தவே இல்லை. 1951ஆம் ஆண்டு நவம்பர் மாதம் மைய வங்கி வீதத்தை 20 ஆண்டுகளுக்குப் பின் உயர்த்தியது. இதனைப் பின்பற்றியே இந்திய ரிசர்வு வங்கியும் மைய வங்கி வீதத்தை 3-லிருந்து $3\frac{1}{2}$-க்கு உயர்த்தி ஒரு புதிய உண்டியல் சந்தைக்கான திட்டத்தையும் வகுத்தது. இந்தியா மட்டு மல்லாமல் எல்லா நாடுகளிலும் மையவங்கிகள் மைய வங்கி வீதத்தினை உயர்த்தின. இதைப் பார்க்கும்போது இங்கிலாந்தின் மைய வங்கியின் பணக் கொள்கை எத்துணை தூரம் மற்ற நாடு களால் கூர்மையாக நோக்கப்படுகின்றது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். சில சமயங்களில் வணிக வங்கிகளுக்கு மட்டும் தேவையான பணத்தை வட்டி வீதம் உயர்வில்லாமல் அளிக்க வேண்டும். ஆனால், அதே நேரத்தில் மைய வங்கி வீதமும், சந்தையில் பொது வட்டி வீதமும் உயரவேண்டு மென்றால் பின் புற வழியாகத் (Back Door Mechanism) தன் தரகர்களை விட்டு வணிக வங்கிகள் கையிலிருக்கும் கருவூலச் சீட்டுகளை முதிர்வுக்குமுன் வாங்கிப் பணம் அளிக்கும் முறை யையும் திறம்பட பாங்க் ஆஃப் இங்கிலாந்து செய்து வரு கின்றது. மற்றைய மைய வங்கிகளைவிட வெளிச்சந்தை நடவடிக்கையைப் பெருமளவில் அரசுபத்திரங்கள், கருவூலச் சீட்டுகளில் செய்து வருகின்றது.

அந்நியச் செலாவணி கட்டுப்பாடு, பவுண்டு நாணயத்தின் வெளிமதிப்பினைக் காப்பாற்றுதல் ஆகிய பணிகளை மிகச் சிறப்பாகவே செய்து வந்துள்ளது. இங்கிலாந்தின் நிலை ஒரு சிறப்பான நிலை. மற்றைய நாடுகள் போல் தங்களுக்குத்

தேவையான அந்நியப் பணத்தினைத் தேடிக்கொள்வதைத் தவிரத் தன்னுடன் இணைந்து வெகுகாலமாகத் தங்கள் பணத்தினை இங்கிலாந்து பவுண்டு ஸ்டெர்லிங்குடன் இணைத்துக் கொண்டுள்ள ஸ்டெர்லிங் நாடுகள் (Sterling Area) என்று பல நாடுகள் உண்டு. 18ஆம் நூற்றாண்டு முதலே பல நாடுகள் ஸ்டெர்லிங் சம்பாதித்து இங்கிலாந்தில் ஒரு வணிக வங்கியில் வைத்திருப்பதைப் பெரிய சொத்தாக மதித்து வந்தன. இதற்குக் காரணங்கள்:

1. இங்கிலாந்து உலகப் பணச்சந்தையில் மிகப் பெரிய பணச்சந்தை.

2. இங்கிலாந்து உலகிலேயே (அப்போது) பெரிய வணிகத் தொழில் கூடமாக இருந்தது.

3. ஸ்டெர்லிங்கை உலகின் எந்த நாணயமாகவும் மாற்றலாம். ஸ்டெர்லிங் நிலையான மதிப்புடையதாக இருந்து வந்துள்ளது. (இதன் காரணமாகத்தான் நல்ல நடத்தை உள்ளவனை ஸ்டெர்லிங் நடத்தை — Sterling Character— உடையவன் என்று சொல்லுவார்கள்.) ஆனால், இரண்டாவது உலகப் போருக்குப் பின் பவுண்டின் மதிப்பு அதன் பொருளாதாரச் சீர்குலைவால் குறைந்துபோய் முன்போல் எளிதாக மாற்ற முடியாத ஒரு நாணயமாக மாறிவிட்டாலும், இன்றும் உலகில் இரு முக்கிய நாணயங்களாகப் (Key Currencies) பவுண்டும் டாலரும் அமைந்துள்ளன. எனவே, பாங்க் ஆஃப் இங்கிலாந்தின் கடினமான அந்நியச் செலாவணிக் கட்டுப்பாட்டினை வெகுகாலமாகத் திறம்பட மைய வங்கி செய்து வருகின்றது. அரசின் முகவர் என்னும் முறையில் அந்நியச் செலாவணி சமன்பாட்டுக் கணக்கை (Exchange Equalisation Account) பாங்க் ஆஃப் இங்கிலாந்து நிருவகித்து வருகின்றது.

### வணிக வங்கிகள்

கிளை வங்கி முறைக்குப் பெரிய எடுத்துக்காட்டாக விளங்குவது இங்கிலாந்து ஆகும். இங்கு ஐந்து பெரிய வணிக வங்கிகள் (Big Five Commercial Banks) தங்கள் கிளைகளை நாடு முழுவதும் கொண்டு வங்கித் தொழிலினைச் செய்து வருகின்றது. இது பற்றிய விவரம் கொண்டுள்ள அட்டவணை ஒன்று கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

இங்கிலாந்தின் 5 பெரிய வங்கிகள்—1953-ல்*

(பணத்தொகை மில்லியன் பவுண்டு ஸ்டெர்லிங்கில்)

| | கிளைகளின் எண்ணிக்கை | மூலதனம், காப்பு | வைப்புகள் |
|---|---|---|---|
| பார்க்லேஸ் (Barclays) | 2094 | 36 | 1389 |
| லாயிட்ஸ் (Lloyds) | 1710 | 32 | 1206 |
| மிட்லண்டு (Midland) | 2121 | 31 | 1444 |
| நேஷனல் ப்ரொவின்ஸியல் (National Provincial) | 1350 | 22 | 871 |
| வெஸ்ட்மினிஸ்டர் (Westminister) | 1104 | 20 | 854 |
| மொத்தம் | 8379 | 141 | 5764 |

இங்கிலாந்து வணிக வங்கிகள் தங்கள் பல கிளைகளின் மூலம் திறம்படப் பலதரப்பட்ட கடன்களேயும் சேவைகளேயும் செய்கின்றன. இவ்வங்கிகள் தங்கள் கையில் ரொக்கம், வைப்புகளின் பேரில் 10-லிருந்து 12 சதவீதத்திற்கு மேல் வைத்துக் கொள்வதில்லே.

## தள்ளுபடி அகங்கள் (Discount Houses)

இங்கிலாந்தில் 12 தள்ளுபடி அகங்கள் இருக்கின்றன. இவற்றில் பெரும்பாலும் கூட்டுப் பங்குக் கம்பெனிகள்; சில கூட்டு வணிகங்கள். இத் தள்ளுபடி அகங்கள் வலுவான நிதி நிலேமை உடைய பெரிய நிறுவனங்கள். இவற்றின் பணி உண்டியல்களேத் தள்ளுபடி செய்வதேயாகும். மிக அதிகமான உண்டியல்கள் இங்கிலாந்தில் புழக்கத்திலிருக்கின்றன. எனவே, நாள்தோறும் பல லட்சக்கணக்கான உண்டியல்களே கழிவு செய்ய இத்தள்ளுபடி அகங்களுக்குக் கொண்டுவருவர்.

*Banking Systems—Beckhart, p. 862.

இதனைத் தள்ளுபடி செய்ய ஏராளமான நிதி தினமும் தேவைப் படும். தங்கள் சொந்த நிதியினைக் கொண்டுமட்டும் தொழில் செய்ய முடியாது. எனவே, இத் தள்ளுபடி அகங்கள் பெரிய ஐந்து வங்கிகளிடமிருந்து ஏராளமான பணத்தினை அழைப்பு மற்றும் குறுந்தவணைக் கடனாக (Call and short notice) பெறு கின்றன. இக் கடனை எப்போது வேண்டுமென்றாலும், ஏன், சில மணி நேரங்களில்கூடத் திருப்பிப் பெற்றுக்கொள்ளலாம். எனவே, வணிக வங்கிகள் தங்கள் பயனற்ற ரொக்க இருப்பை (Idle Cash) இத் தள்ளுபடியகங்களுக்குப் பெரிதளவு கொடுக் கின்றன. வணிக வங்கிகளுக்கும் தள்ளுபடியகங்களுக்கும் இடையே இருக்கும் இந்த நெருங்கிய உறவு முறை இங்கிலாந்து பணச்சந்தையைப் பெரிதும் வளம் பெற்ற பணச்சந்தையாக ஆக்கியிருக்கின்றது. வணிக உண்டியல்கள் தவிரக் கருவூலச் சீட்டுகளிலும் பெரிதளவு முதலீட்டினை இத் தள்ளுபடி அகங்கள் செய்கின்றன. வணிக வங்கிகள்கூடத் தங்களுக்கு வேண்டிய கருவூலச் சீட்டுகளைக்கூடத் தள்ளுபடி அகங்களிட மிருந்தே பெறுகின்றன. தள்ளுபடியகங்கள் தாங்கள் தள்ளுபடி செய்த உண்டியல்களை முதிர்வுவரை வைத்திராமல், அதற்குச் சில நாட்களுக்கு முன்பே வணிக வங்கிகளுக்கு விற்றுவிடு கின்றன. இதனை விரும்பி வணிக வங்கிகள் பெருமளவில் 'சூடான ஆப்பம்' போல் வாங்கிக் கொள்வர். சில தினங்களில் இந்த உண்டியல்களும் கருவூலச் சீட்டும் முதிர்வு அடையப் போவதால் அவை மிக அதிகமான எளிவரல் தன்மை கொண் டுள்ள சொத்துகளாகும். திடீர் என ஒன்று அல்லது இரண்டு வணிக வங்கிகள் தள்ளுபடி அகங்களைக் கொடுத்த கடனைத் திருப்பச் சொன்னால் மற்றைய வங்கிகளிடமிருந்து கடன் பெற்று, கேட்கும் வணிக வங்கிகளுக்குக் கடனைத் திருப்பி நிலை மையைச் சமாளிக்கும். ஆனால், ஒரே நேரத்தில் எல்லா வணிக வங்கிகளும் கடனைத் திருப்பிப் பெற முனைந்தால், தள்ளுபடி அகங்கள் வேறு ஒன்றும் தெரியாத நிலையில் பாங்க் ஆஃப் இங்கிலாந்தை நோக்கிச் செல்ல வேண்டி இருக்கும்.

பாங்க் ஆஃப் இங்கிலாந்து பணப் புழக்கத்தைக் கட்டுப் படுத்தி வட்டி வீதத்தை உயர்த்த வேண்டும் என எண்ணினால் முதல் கட்டமாக வெளிச் சந்தை நடவடிக்கையில் பத்திரங்களை விற்க முனையும். இதனை வாங்கப் பலரும் விரும்புவர். அவர்கள் தங்கள் வணிக வங்கியினின்று பணத்தை எடுத்து பாங்க் ஆஃப் இங்கிலாந்திடம் வாங்கும் பத்திரங்களுக்குப் பணம் அளிக்க முயல்வர். இங்கிலாந்து வணிக வங்கிகள் குறைந்த ரொக்கக் காப்பே வைத்துத் தொழில் செய்கின்றன. பலரும் பணம்

எடுத்துச் செல்ல முயல்வதால் வணிக வங்கிகளின் கையி லிருக்கும் ரொக்கம் வேகமாகக் குறையும். இதனால் அச்சப் பட்டு வணிக வங்கிகள் எல்லாம் தள்ளுபடி அகங்களை கடனைத் திருப்பித்தர வேண்டி நிற்கும். எல்லா வணிக வங்கிகளும் பணத்தைக் கேட்பதால் தள்ளுபடி அகங்கள் லட்சக்கணக் கான உண்டியல்கள் கொண்ட மூட்டையுடன் பாங்க் ஆஃப் இங்கிலாந்தின் கதவைத் தட்டி பண உதவிக்காகக் காத்திருக் கும். தள்ளுபடி அகங்கள் தன்னை நாடிவந்துள்ளன என்றவுடன் பாங்க் ஆஃப் இங்கிலாந்து பணச்சந்தையில் தட்டுப்பாடு என்பதனை உணர்ந்துவிடும். இதுவே தக்க தருணம் என்று மைய வங்கி வீதத்தை உயர்த்துவதுடன் பல உத்திரவுகளையும் பிறப்பிக்கும். இது சமயம் "சந்தை (மைய) வங்கியிடம் உள்ளது" (Market is with the bank) என்பர். மைய வங்கி வீதம் உயர்த்தப்பட்டதால் தள்ளுபடி அகங்கள் அதிக வட்டி வீதத்தில் பணத்தினைப் பெறுவதால் இனித் தள்ளுபடி செய்யும் உண்டியல்களுக்கான தள்ளுபடி வீதத்தை உயர்த்தும். இதனால் பணச் சந்தையில் பொதுவாக வட்டி வீதம் உயரும். இவ்விதம் மைய வங்கி வீதத்திற்கும் சந்தையின் பொது வட்டி வீதத்திற்கும் ஒரு இணைப்பை ஏற்படுத்தும் வகையில் தள்ளுபடி அகங்கள் பயன்படுகின்றன. மற்றொரு முக்கிய குணதிசயம் என்னவென்றால், இங்கிலாந்தில் வணிக வங்கிகள் மைய வங்கியினை நேராகப் பணத்திற்கு அணுகுவதில்லை. அவைகள் தள்ளுபடி அகங்கள் வழியாகவே அணுகுகின்றன. எனவே, மைய வங்கிக்கும் வணிக வங்கிக்கும் நடுவே தள்ளுபடி அகம் பஞ்சு மெத்தை போல் (Cushion) அமைந் துள்ளது.

### ஏற்பகங்கள்

இவைகளும் தள்ளுபடி அகங்கள் போல் பெரிய கம்பெனிகளே. இவைகள் வியாபாரம் மற்றும் பல நிறுவனங் களுக்காக உண்டியல்களைச் சிறு தொகை பெற்று ஏற்றுக் கொள்கின்றன. ஏற்பகங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்டியல்கள் நல்ல முதல்தர உண்டியல்களாகக் கருதப்படு கின்றன. இவ்வித உண்டியல்களைத் தள்ளுபடியகங்கள் யாதொரு நட்டவச்சமும் இன்றித் தள்ளுபடி செய்யும். ஏனெ னில், தள்ளுபடி செய்யப்பட்ட உண்டியல் இந்த ஏற்பகங் களிடம்தான் முதிர்வின்போது கொடுத்துப் பணம் பெற வேண்டும். ஏற்பகங்களைப் பொறுத்தவரை அவை பல வியாபார, தொழில் நிறுவனங்கள், தனிப்பட்டோர் ஆகியவர்கள் பற்றிய நிதி நிலைமை, கடன் அளவு (Credit limit) ஆகியவை பற்றிய

விவரங்களைத் தயாரித்து வைத்திருக்கும். தகுதி உடையவர்கள் அனைவருக்கும் உண்டியல் ஏற்புப் பணியினைச் செய்து தரும்.

### ஓடும் தரகர்கள் (Running Brokers)

இவர்கள் தனிப்பட்ட நபர்கள். உண்டியல் கழிவுப் பாட்டைச் செய்வது இவர்கள் தொழில். இவர்கள் மிகச் சிலரே.

இங்கிலாந்து பணச்சந்தையில் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் 'பெரிய ஐந்து' வணிக வங்கிகளின் போக்கிலும் கடனளிப்பு முறைகளிலும் கடந்த 20 ஆண்டுகளாகப் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன. இதனைப் பின்பற்றியே வணிக வங்கிகள் பல நாடுகளிலும் தங்கள் பழம்பெரும் கொள்கைகளான 'எளிவரல் தன்மை', 'தூய வங்கியல்' ஆகியவைகளைப் பெரிதும் மாற்றிக்கொண்டுள்ளன. 1958ஆம் ஆண்டுக்குப் பின் தவணைக் கொள்முதல் (Hire Purchase) நிதி அளிப்பதில் இங்கிலாந்து வங்கிகள் பெரிய அக்கறை காட்டி உள்ளன. இத் துறையில் வணிக வங்கிகள் ஈடுபாடு காட்டி உள்ளதற்குச் சில காரணங்கள் உண்டு. இங்கிலாந்து மைய வங்கி 1953ஆம் ஆண்டுக்குப் பின் பெருமளவு கடன் கட்டுப் பாட்டை அமலுக்குக் கொண்டு வந்தது. இதனால் தவணைக் கொள்முதல் செய்யும் நிறுவனங்கள் வெகுவாகப் பாதிக்கப் பட்டு வணிக வங்கிகளிடமிருந்து கடனைப் பெற முடியவில்லை. மூலதனச் சந்தையில் (Capital Market) மேலும் பங்குகளை விற்கலாம் என்றாலோ, மூலதனக் கட்டுப்பாட்டுச்சட்டத்தின்கீழ் இத்தவணைக் கொள்முதல் நிறுவனங்களுக்குப் பங்கு வெளியிடும் விற்பனை மறுக்கப்பட்டது. எனவே, அந்த நிறுவனங்கள் தாங்கள் தொழில் செய்யத் தேவையான நடைமுறை மூலதனம் கிடைக்கப் பெருமளவில் பொது மக்களிடமிருந்து வைப்புப் பெற்று அதிக வட்டி கொடுக்க ஆரம்பித்தது. இதனால் வணிக வங்கிகளின் வைப்பு அதிகரிப்புத் தடையாயிற்று. எப்போது கஷ்டங்கள் வந்தாலும் அதினின்று தப்பிக்க வேறு வகையான புதிய தொழிலை ஏற்று நட்டத்தை ஈடுகட்ட முயல்வது, இங்கிலாந்து வணிக வங்கிகளின் பழக்கம். எனவே, வாடகைக் கொள்முதல் நிறுவனங்களின் பங்குகளைச் சந்தையில் பெருமளவு வாங்கி (முன்பே வெளியிட்ட பங்குகள்—புதிய வெளியீட்டுப் பங்குதான் மறுக்கப்பட்டது) அவைகளைக் கட்டுப் படுத்தி உள்ளன. இம் முறையில் வணிக வங்கிகள் தங்கள் இலாபத்தைக் கணிசமான முறையில் உயர்த்தியுள்ளன. சில வணிக வங்கிகள் தவணைக் கொள்முறை நிறுவனங்களைத் துணைக் கம்பெனியாகவும் தொடங்கின.

**தனியார் கடன் (Personal Loan)**

வணிக வங்கிகள் தனியார் தங்களுக்குத் தேவையான நுகர்ச்சிப் பொருள்களான கார், குளிர் சாதனப் பெட்டி போன்றவை வாங்க மாறுபட்ட வட்டி வீதத்தில் கடனளித்து (வட்டி, கடன் வாங்குவோர் வருமானத்தைப் பொறுத்து அமைப்பது) மாதந்தோறும் திரும்பப் பெற்றுக் கடனை 10 அல்லது 20 மாதங்களில் அடைக்க வழி வகுக்கும் முறையினையும் செயல்படுத்தியுள்ளது.

இதனைத் தொடர்ந்த வணிக வங்கிகள், மற்றையப் பின் தங்கிய பொருளாதார நாடுகளிலும் ஓரளவு தவணைக் கொள் முறை, தனியார் கடன் ஆகியவைகள் அளிக்க முன்வந்தன.

**இந்தியப் பணச்சந்தை – பிரிட்டிஷ் பணச்சந்தை – ஒப்பீடு**

1. இங்கிலாந்து பணச்சந்தை மிகவும் மேம்பாடடைந்த பணச்சந்தையாகக் காணப்படுகிறது. பல திறமையான துணைச் சந்தைகளைப் பெற்றிருக்கின்றது. இந்தியாவின் பணச்சந்தை இரண்டு கூறுகப் பிரிந்துள்ளது. பசார் சந்தை மைய வங்கிக்குக் கட்டுப்படாத ஒரு சந்தை யாகவே இன்னும் இருக்கின்றது.

2. தள்ளுபடி அகங்களும் ஏற்பகங்களும் இங்கிலாந்து பணச்சந்தையின் முக்கிய உட்பிரிவுகளாக உள்ளன. இந்தியாவில் இது போன்ற நிறுவனங்கள் இல்லை.

3. கருவூலச்சீட்டுச் சந்தையும் உண்டியல் சந்தையும் மிகவும் பெரிதாக அமைந்துள்ளன. இந்தியாவில் இது போன்ற சந்தையினை அமைக்கும் முயற்சி இன்னும் நடந்துகொண்டிருக்கிறது. ஓரளவுக்கு, பெயரளவி லேயே உண்டியல் சந்தை இந்தியாவில் இருக்கின்றது.

4. இங்கிலாந்தில் மைய வங்கி 300 ஆண்டுகளுக்கு மேல் பணி புரிந்து வருகின்றது. ஆனல், இந்தியாவில் ரிசர்வு வங்கி ஏற்படுத்தப்பட்டுச் சற்றேறக்குறைய 40 ஆண்டுகளே ஆகின்றன. இதனல் மைய வங்கியும் முழுவதும் வளர்ச்சி பெற்றுவிட்டது எனக் கூற முடியாது.

5. மைய வங்கி வட்டி வீதத்திற்கும், சந்தை வட்டி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு இங்கிலாந்தில் இருக்கின்றது. இந்தியாவில் மைய வங்கி வீதத்திற்கும் பசார் வட்டி வீதத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை.

6. பாங்க் ஆஃப் இங்கிலாந்து பெருமளவில் வெளிச் சந்தை நடவடிக்கை செய்து வருகின்றது. இந்த அளவிற்கு ரிசர்வு வங்கி செய்யவில்லை. ஓரளவு கருவூலச் சீட்டு வாங்குவது, விற்பது ஆகியவை களையே வெளிச் சந்தை நடவடிக்கையில் செய்து வருகின்றது.

**அமெரிக்கப் பணச் சந்தை (American Money Market)**

இங்கிலாந்தைப்போல் மேம்பாடடைந்த மற்றொரு பணச் சந்தை அமெரிக்கப் பணச் சந்தையாகும். அந் நாட்டின் மைய வங்கி ஃபெடரல் ரிசர்வு வங்கியாகும். மற்றெல்லா நாடுகளிலும் ஒரு மைய வங்கியே இருக்கும். ஆனால், அமெரிக்காவில் 12 ஃபெடரல் ரிசர்வு வங்கிகள் மைய வங்கிகளாகப் பணி புரிகின்றன. இம் மைய வங்கிகள் ஃபெடரல் ரிசர்வு சட்டம் 1913-ன்கீழ் ஆரம்பிக்கப்பட்டன. அமெரிக்கா 12 மாவட்டங்க ளாகப் பிரிக்கப்பட்டு (இது வருவாய்த்துறை மாவட்டம் அன்று) ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மைய வங்கி ஏற்படுத்தப்பட்டு உள்ளது. ஃபெடரல் ரிசர்வு வங்கியின் பங்கு மூலதனம் முழுவதும் அம் மாவட்டத்திலுள்ள அங்கத்தினர் வங்கிகளால் (Member Banks) எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. சட்ட பூர்வமாக மாவட்டத்தில் உள்ள வணிக வங்கிகள் ஃபெடரல் ரிசர்வு வங்கியுடன் இணைத்துக்கொள்ள வேண்டும். இவையே அங்கத்தினர் வங்கிகள் என அழைக்கப்படுகின்றன. ஒவ்வொரு ஃபெடரல் ரிசர்வு வங்கிக்கும் 9 பேர்கள் கொண்ட இயக்குநர் குழு ஒன்று உண்டு. இந்த இயக்குநர் குழு A,B,C என்ற மூன்று வகையாக ஒவ்வொரு பிரிவிலும் 3 இயக்குநர்களைக் கொண்டு உள்ளது. அங்கத்தினர் வங்கிகள் (A பிரிவு) தங்கள் சார்பாக மூன்று இயக்குநர்களையும், வியாபாரத்தில் மாவட்டத்தில் ஈடுபட்டுள்ளோர்கள் சார்பாக (B பிரிவு) மூன்று இயக்குநர் களையும் ஃபெடரல் ரிசர்வு அமைப்பின் (Federal Reserve System) சார்பில் மூன்று ஆளுநர்களையும் ஒவ்வொரு ஃபெடரல் ரிசர்வு வங்கியும் பெற்றுள்ளது. இவர்கள் 3 ஆண்டுகளுக்குப் பதவியில் இருப்பார்கள். இதன் முதன்மை நிர்வாக அதிகாரி (Chief Executive Officer) இயக்குநர்களின் பெருந்தலைவரே (Chairman).

அங்கத்தினர் வங்கிகள் தங்கள் சார்பாக 3 இயக்குநர்களைத் தேர்ந்து அனுப்புவதைத் தவிர ஃபெடரல் ரிசர்வு வங்கியை எந்தவிதத்திலும் கட்டுப்படுத்துவதில்லை. அத் துணை ஃபெடரல்

ரிசர்வு வங்கியின் கொள்கை பற்றிய முடிவுகளை, ஃபெடரல் ரிசர்வு அமைப்பின் ஆளுநர்களே முடிவுசெய்கின்றனர். ஃபெடரல் ரிசர்வு அமைப்பு என்பது 12 ஃபெடரல் ரிசர்வு வங்கி யையும் சேர்த்தே குறிப்பிடுகின்றது. எல்லா தேசிய வங்கிகளும் (National Banks) கண்டிப்பாக ஃபெடரல் ரிசர்வு அமைப்பின் அங்கத்தினராக இருக்கவேண்டும். மாநில வங்கிகளும் (State Banks), நம்பிக்கை நிதி அகங்களும் (Trusts) வேண்டுமென்றால் சில தேவைகளைப் பூர்த்தி செய்யுமேயானால் அங்கத்தினராக அனுமதிக்கப்படலாம். தேசியச் சட்டத்தின் கீழ்த் (National Law) தன்னைப் பதிவுசெய்து கொள்ளும் வங்கி தேசிய வங்கி என்றும், மாநிலச் சட்டத்தின் (State Laws) கீழ்ப் பதிவு செய்து கொள்ளும் வங்கிகள் மாநில வங்கிகள் என்றும் அழைக்கப்படு கின்றன. ஒவ்வொரு மாநிலத்திற்கும் வங்கிகள் சம்பந்தமான மாநிலச் சட்டம் இருக்கின்றது. ஃபெடரல் ரிசர்வு அமைப்பை 7 ஆளுநர்கள் நிருவகிக்கிறார்கள். இவர்கள் அமெரிக்கக் குடியரசுத் தலைவரால் 14 ஆண்டுகளுக்கு நியமிக்கப்படுகின் றனர். இரண்டு ஆண்டுக்காலத்தில் ஒருவருக்குமேல் இயக்குநர் ஓய்வு பெருத வகையில் பதவிக் காலத்தை நிருணயித்திருக்கி றார்கள். இதனால் நிருவாகம் தொடர்ந்து ஏற்பட இயல்கின்றது. எப்போதும் ஏழு ஆளுநர்களில் ஆறுபேர்கள் நிருவாக அனுபவம் உடையவராகவே இருப்பர். ஆளுநர் குழுவின் தலைவர், துணைத்தலைவர் இருவரையும் அமெரிக்கக் குடியரசுத் தலைவரே நியமிக்கின்றார். ஆளுநர்குழுவில் உள்ள அனைவ ருக்கும் ஊதியம் உண்டு. உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் போது நிதி, தொழில், விவசாயம், வாணிபம் ஆகிய பல்வேறு துறைகளிலும் சிறப்பாகப் பணியாற்றுபவர்களுக்குப் பிரதிநிதித் துவம் அளிக்கப்படுகின்றது.

**ஃபெடரல் வெளிச்சந்தை நடவடிக்கைக் குழு (Federal Open Market Committee)**

12 ஃபெடரல் ரிசர்வு வங்கிக்குமான வெளிச் சந்தை நடவடிக்கையை இக் குழுவே முடிவுசெய்கின்றது. இக் குழு அவ்வப்போது எல்லா ஃபெடரல் ரிசர்வு வங்கிகளையுமோ குறிப்பிட்ட சில ஃபெடரல் ரிசர்வு வங்கிகளை மட்டுமோ வெளிச்சந்தை நடவடிக்கையில் ஈடுபட ஆணை பிறப்பிக்கும்.

**மைய வங்கி வீதம்**

ஃபெடரல் ரிசர்வுக் குழு (Federal Reserve Board) மைய வங்கி வீதத்தினை முடிவு செய்கின்றது. ஒவ்வொரு ஃபெடரல்

ரிசர்வு வங்கிக்கும் ஒவ்வொரு மைய வங்கி வீதத்தினை நிருணயம் செய்ய இக் குழுவிற்கு உரிமை உண்டு.

### வணிக வங்கிகள்

தனி வங்கிகளுக்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டாக அமெரிக்க வணிக வங்கி அமைப்பு அமைந்துள்ளது. டிசம்பர் 30, 1951 ஆம் ஆண்டு 14,132 தனி வங்கிகளும் (Unit Banks) 5,264 கிளைகளும், ஆக மொத்தம் 19,396 வங்கி அலுவலகங்கள் இருந்தன. பெரும்பாலான தனி வங்கிகள் சிறிய அளவு உடைய வங்கிகளே. இவை தேசிய வங்கியாகவோ மாநில வங்கியாகவோ இருக்கலாம்.

கடன் பத்திரங்கள்மேல் வழங்கும் கடனே அதிகமாக அமைந்துள்ளது. வங்கிகள் அதிகப் பற்றை (Overdraft) அதிக அளவில் கொடுப்பதில்லை. அதிகப்பற்றுத் தவருன கடன் போக்கு என்று கருதப்படுகின்றது.

### கடன் கடிதம் (Letter of Credit)

தங்களுடைய வாடிக்கைக்காரர்களுக்கு அவர்கள் கடன் பெறு தகுதியைப் பொறுத்து ஒரு குறிப்பிட்ட அளவு முடிவு செய்யப்பட்ட கடன் கடிதம் (confirmed letter of credit) ஏற்படுத்தப்பட்டு அந்த அளவு வரை தாராளமாகக் கடனளிக்கும் போக்கு வணிக வங்கிகளிடம் ஏற்பட்டுள்ளது. கடனுக்கான வட்டி வீதம், கடன்பெறுவோரைப் பொறுத்தும், அவர்கள் பெற்றுக்கொள்ளும் கடன் அளவுக்கு ஏற்பவும் மாறுபட்ட வட்டிவீதம் அமைகின்றது.

### பருவக் கடன்கள் (Term Loans)

இது பெரிய அளவில் வணிக வங்கிகளால் அமெரிக்காவில் அளிக்கப்படுகின்றது. இக் கடனின் குணதிசயங்களாவன:

1. இது வியாபாரக் கடன்.
2. இக் கடன் முதிர்வு அடைவது ஓராண்டுக்குமேல்.
3. கடன்பெறுவோருக்குத் தேவையான உடனடி மூலதனத் தேவையைப் பூர்த்தி செய்யும் கடன்.
4. கொஞ்சம் கொஞ்சமாக, ஒவ்வொரு பருவமாகத் திருப்பித் தரவேண்டும்.

இயந்திர சாதனங்கள் வாங்குவதற்கும், கடன்பத்திரக் கடன் திருப்பவும் பருவக் கடன் வியாபார நிறுவனங்களுக்கு அளிக்கப்படுகின்றது. பொதுவாக ஈடு ஏதும் இல்லாமல் பருவக் கடன் அளிக்கப்படுகின்றது. பெருந்தொகையாகப் பருவக் கடன் தேவைப்பட்டால் சில அமெரிக்க வணிக வங்கிகள் ஒன்றுசேர்ந்து ஒரு சிண்டிகேட்டை அமைத்துக் கடனளிக்கும்.

### நுகர்வோர் கடன் (Consumer Loans)

தனி நபர்களின் நுகர்வோர் கடன் அளிப்பதில் வணிக வங்கிகள் பெரும் பங்கேற்றுள்ளன. தனி நபர்கள் தங்களுக்குத் தேவையான வீட்டு சாதனங்கள், கார், மற்றும் படிப்புக்கான செலவு ஆகியவைகளைத் தாராளமாகக் கொடுத்து, மாதந் தோறும் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பிப் பெறும் வழக்கம் வணிக வங்கிகளால் செயல்படுத்தப்பட்டுள்ளது.

### முதலீடுகள்

வணிக வங்கிகள் பெருமளவு அரசாங்கம் மற்றும் சிறந்த பத்திரங்களில் கிட்டத்தட்ட தங்கள் சொத்துகளில் 40 சதவீதம் வரை முதலீடு செய்கின்றன.

### அமெரிக்கப் பணச் சந்தையின் துணைச் சந்தைகள்

**1. வணிகத் தாள் சந்தை (Commercial Paper Market):** வணிக நிறுவனங்கள் தங்களுக்குத் தேவையான நடை முதலுக்காக வணிகத் தாள்களை வெளியிடுகின்றன. இவற்றின் மதிப்பு 5000 டாலர் முதல் 1 லட்சம் டாலர் வரை பல இனங்களில் வெளியிடும். தனியார்களும் மற்றைய நிறுவனங் களும் நிதியகங்களும் இவ் வணிகத் தாளினைப் பெருமளவில் வாங்குகின்றன. இவ் வணிகத் தாளுக்கு என்று தனியாகப் பிணை (Security) ஏதும் கிடையாது. வெளியிடும் வியாபார நிறுவனத்தின் நல்ல பெயரும், அதனுடைய பொதுச் சொத்து களுமே வணிகத்தாளினை வாங்குவோர்க்குப் பிணைப்பாக இருக்கும். வணிக வங்கிகளும் இந்த வணிகத் தாள்களை ஓரளவு வாங்கும். இவற்றின் ஈட்டின் பேரிலும் வணிக வங்கிகள் கடன் அளிக்கும். இவ் வணிகத்தாளின் மொத்த மதிப்பு 1920–ல் 1800 மில்லியன் டாலராக இருந்தது. 1933–ல் 60 மில்லியன் டாலராகக் குறைந்து, மீண்டும் 1944ஆம் ஆண்டு 700 மில்லியன் டாலராக உயர்ந்தது. 1954ஆம் ஆண்டு 5 வணிக நிறுவனங்கள் மட்டில் 1200 மில்லியன் டாலர் மதிப்புள்ள வணிகத் தாள்களை வெளியிட்டன.

**துணைக் கடன் சந்தை (Collateral Loan Market) :** தரகர்களுக்கும், பங்கு மார்க்கெட்டுக்கும், பத்திரங்கள் விற்பனை செய்வோர்க்கும் குறுகிய காலக் கடனை வணிக வங்கிகள் அளிக்கின்றன. இவற்றைச் சில தினங்களில் திரும்பப் பெறலாம்.

ஏற்பகங்கள் (Acceptance Houses): உண்டியல்களை ஏற்கும் ஏற்பகங்கள் பணச் சந்தையின் ஓர் அங்கமாக விளங்குகின்றன. வணிக வங்கிகளும் உண்டியல்களை ஏற்றுக் கொள்வதுண்டு. ஏற்பகங்கள் அமைத்து இங்கிலாந்துபோல் உண்டியல்களைப் பெருமளவில் தள்ளுபடி செய்து பணச் சந்தையினை மேம்பாடு செய்ய அமெரிக்காவும் முயன்றுள்ளது. எனினும், இத் தொழில் அமெரிக்காவில் பெரிதும் வளரவில்லை.

கருவூலச் சீட்டுச் சந்தை (Treasury Bill Market): இது பணச்சந்தையின் இளைய அங்கம். சமீப காலமாகவே பணச்சந்தையில் இத் துணைச் சந்தை பெருகி வருகின்றது. பொதுவாகக் கருவூலச்சீட்டுகள் 90 நாளில் முதிர்வு அடையக் கூடியவை. $ 1000-லிருந்து $ ஒரு மில்லியன்வரை பல இனங்களில் வெளியிடப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட விலைக்கே விற்கப்படுகின்றன. வணிக வங்கிகள் பெருமளவில் இதனை வாங்குகின்றன. வாரந்தோறும் கருவூலச் சீட்டு விற்பனைக்கு வருகின்றது. 1953ஆம் ஆண்டிலிருந்து வாரந் தோறும் கிட்டத்தட்ட $ 15,000 மில்லியன் கருவூலச் சீட்டுகள் விற்பனை ஆகின்றன.

அமெரிக்கப் பணச் சந்தையின் முக்கியத்துவத்திற்குச் சில காரணங்கள் உண்டு. அவை:

1. அமெரிக்கா அளிக்கும் பெருமளவு கடன் மற்றும் உதவிப் பணம் ஆகியவைகளால் வெளிநாடுகள் எல்லாம் டாலர் பணத்தினை அமெரிக்கப் பணச் சந்தையில் பயன்படுத்துகின்றன.

2. உலகத்திலுள்ள இரு முக்கியத் தாள் பணங்களில் (key currencies) டாலர் ஒன்றாக அமைந்துள்ளது.

3. பன்னாட்டு நிதி நிறுவனம் (I.M.F.), உலக பாங்கு ஆகியவைகளில் பெரும் பங்கினை அமெரிக்கா ஏற்பதால் டாலர் பணமும் அதன் பணச் சந்தையும் முக்கியத்துவம் அடைகின்றன.

சமீப காலங்களாக ஐரோப்பிய டாலர் சந்தை (Euro-dollar market) பெரு முக்கியத்துவம் பெற்று வருகின்றது. அமெரிக்க டாலர் ஐரோப்பிய நாடுகளில் வணிக வங்கிகளிடம் வைப்பாக வைக்கப்படுகின்றது. அதிக வட்டி தருவதால் அமெரிக்கர்கள்கூட அமெரிக்காவில் வைப்பதைத் தவிர்த்து ஐரோப்பிய நாடுகளில் வைப்பாக வைத்துள்ளனர். மேலும் பல நாடுகளும் இங்கு வைப்பு வைத்துள்ளன. டாலர் தேவை என்றால் அமெரிக்கப் பணச் சந்தைக்குச் செல்லாமல் ஐரோப்பிய டாலர் சந்தையில் கடன் கேட்டு வாங்கிக் கொள்ளலாம்.

### வைப்புக் காப்பு (Deposit Insurance)

ஃபெடரல் வைப்புக் காப்புக் கார்ப்பரேஷன் அமெரிக்காவில் 1934ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இதை ஆரம்பிக்கும்போது மூலதனத்திற்கு அரசு $ 150 மில்லியனும், ஃபெடரல் ரிசர்வு வங்கிகள் $ 139 மில்லியனும் அளித்தன. அரசுப் பங்கு 1947ஆம் ஆண்டுச் சட்டப்படி திருப்பப்பட்டு விட்டது. 1955ஆம் ஆண்டு, 14595 வங்கிகளில் 13750 வங்கிகள் வைப்புக் காப்புக் கார்ப்பரேஷனிடம் காப்புப் பணி பெற்றது. மொத்த வைப்புகளில் 96 சதவீதம் காப்புச் செய்யப்பட்டிருந்தது. வங்கிகள் காப்புக் கட்டணமாக வைப்பின் பேரில் 1 சதவீதத்தில் $\frac{1}{12}$ஐ வைப்புக் காப்புக் கார்ப்பரேஷனுக்குச் செலுத்தவேண்டும். இக் கார்ப்பரேஷன் ஒரு வைப்புதாரரின் வைப்பில் $ 10,000 வரை காப்பு அளிக்கின்றது.

### இந்தியப் பணச் சந்தை, அமெரிக்கப் பணச் சந்தை—ஒப்பீடு

1. இங்கிலாந்துப் பணச் சந்தையைப் போல அமெரிக்கப் பணச் சந்தையும் மேம்பாடடைந்த ஒன்றாக அமைந்துள்ளது. பல துணைச் சந்தைகளைக் கொண்டுள்ளது. இந்தியப் பணச் சந்தையில் வளர்ந்த துணைச் சந்தைகள் இல்லை.

2. வணிகத் தாள் சந்தை, கருவூலச் சந்தை ஆகியவை பெருமளவில் செயல்படுகின்றன. இந்தியாவில் ஓரளவு கருவூலச் சந்தைமட்டும் உள்ளது.

3. அமெரிக்க நாட்டு மைய வங்கி அமைப்பு முறை இந்திய ரிசர்வு வங்கியினின்று வேறுபட்டு இருக்கின்றது. ஃபெடரல் வெளிச்சந்தை நடவடிக்கைக்

குழு, வெளிச் சந்தை நடவடிக்கை ஈடுபாட்டில் திறமை வாய்ந்த குழுவாக அமைந்து ஒவ்வொரு ஃபெடரல் ரிசர்வு வங்கியையும் குறிப்பிட்ட காலத்தில் வெளிச் சந்தை நடவடிக்கை நடத்துமாறு பணிக்கிறது. இந்தியாவில் வெளிச்சந்தை நடவடிக்கை பெருமளவில் செய்யப்படவில்லை.

4. வணிக வங்கிகள் குறுந்தவணை மற்றும் அழைப்புக் கடனை அதிகமாகப் பங்குச் சந்தைக்கு அளிக்கின்றன. இந்தியாவில் வணிக வங்கிகள் இவ்விதக் கடனுக்கு அளிக்கும் தொகை மிகக் குறைவே.

5. அமெரிக்க வணிக வங்கிகள் பலவிதக் கடன்களை அளிக்கின்றன. இந்திய வங்கிகள் இவற்றைச் சமீப காலமாக ஓரளவு பின்பற்ற முயலுகின்றன.

## பாட நூல்கள்


1. மா. பா. குருசாமி—வங்கியியல்.
2. B. H. BECKHART—Banking System.
3. J. S. FFORDE—The Federal Reserve System.
4. R. S. SAYERS—American Banking.
5. R. S. SAYERS—Modern Banking.

# மேற்கோள் நூற்பட்டியல்


1. கு. ஆளுடையப் பிள்ளை—இந்திய வங்கியல் (த.பா.நி.).
2. ந. சட்டைநாதன்—ரிசர்வ் பாங்க் ஆஃப் இந்தியா (த.பா.நி.).
3. மா. பா. குருசாமி—வங்கியியல் (த.பா.நி.).
4. G. CROWTHER – An Outline of Money.
5. R. S. SAYERS—Modern Banking.
6. S. G PANANDIKAR—Banking in India.
7. S. K ASU—A Review of Current Banking Theory and Practice.
8. Report of the Banking Commission, 1972.
9. WALTER LEAF—Banking.
10. GEORGE W. SOUTHGATE—English Economic History.
11. I. T. A. VASWANI—Indian Banking System.
12. J. M. KEYNES—A Treatise on Money.
13. R. S. SAYERS—American Banking.
14. DE KOCK—Central Banking.
15. S. E. SEN—Central Banking in Undeveloped Money Markets.
16. H. V. R. IENGAR—Monetary Policy and Economic Growth.
17. C. D. DESHMUKH—Central Banking in India.
18. FERNANDES, MAY—The Arguments on Nationalisation of Banks in India.

# கலைச்சொற்கள்

## A

Acceptance Houses — ஏற்பகங்கள்
Agent — பதிலாள், முகவர்
Amalgamation — இணைப்பு
Anticipated income doctrine — எதிர்நோக்கு வருவாய்க் கோட்பாடு

## B

Bank — வங்கி
Bank, branch — கிளை வங்கி
Bank, chain — தொடர் வங்கி
Bank, correspondent — கடிதப் போக்குவரத்து வங்கி
Bank, Group — அணிவங்கி
Bank, Industrial — தொழில் வங்கி
Bank, Investment — முதலீட்டு வங்கி
Bank, Lead — முன்னோடி வங்கி
Bank, Mixed — கலப்பு வங்கி
Bank, Unit — தனி வங்கி
Bank Rate — மைய வங்கி வீதம்
Bank Failure — வங்கித் தோல்வி, வங்கிமுறிவு
Banking Service Commission — வங்கித் துறை வேலைக் குழு
Balance of Payment — அயல் நாட்டுச் செலுத்துநிலை
Bilateral Trade agreement — இருமுனை வாணிப ஒப்பந்தம்
Bill market — உண்டியல் சந்தை
Bill market Treasury — கருவூலச் சந்தை
Bill of lading — கப்பல் இரசீது
Board of director — இயக்குநர் குழு
Board, Local — அகக் குழு

## C

Cash Credit — ரொக்கப் பற்று
Cash reserve — ரொக்கக் காப்பு
Call — அழைப்பு
Call loan market — அழைப்புக் கடன் சந்தை
Call and short notice — அழைப்பு மற்றும் குறுந் தவணைக் கடன்
Capital — முதல், மூலதனம்
Capital, Authorised — அனுமதிக்கப்பட்ட மூலதனம்
Capital, Issued — வெளியிட்ட மூலதனம்
Capital, Subscribed — ஒப்பிய மூலதனம்,
Capital, Paid up — செலுத்திய மூலதனம்
Capital, Fixed — நிலை முதல்
Capital, Owned — சொந்த மூலதனம்
Capital, Working — நடைமுதல் மூலதனம்
Chairman — தலைவர், பெருந்தலைவர்
Cheque — காசோலை
Clearing House — தீர்வகம்
Clean advance — சுத்தக் கடன்
Collateral loan market — துணைக்கடன் சந்தை
Commercia lpaper — வணிகத் தாள்
Commercial invoice — வியாபார இடாப்பு
Crop l oan — பயிர்க் கடன்
Crossing — கீறல்
Crossing, General — பொதுக் கீறல்
Crossing, Special — சிறப்புக் கீறல்

## D

Debenture — கடன்பத்திரம்
Debenture, Ordinary — சாதாரணக் கடன்பத்திரம்
Debenture, Rural — கிராமியக் கடன்பத்திரம்
Debenture, Special Development — சிறப்பு வளர்ச்சிக் கடன் பத்திரம்

Delivery slip — அளிப்புக் குறிப்பு
Deposit Insurance — வைப்புக் காப்பு
Discount — தள்ளுபடி, கழிமானம்
Discount House — தள்ளுபடி அகம்
Disequilibrium — சமனற்ற நிலை
Dividend — இலாப ஈவு
Dividend Equilisation Fund — ஈவுச் சமன்பாட்டு நிதி
Documentary bill — கச்சாத்து உண்டியல்

E

Economic depression — பொருளாதார மந்தம்
Endorsement — மேலெழுத்து, புறக்குறியிடல்
Entry — பதிவு
Equity Share — சாதாரணப் பங்கு
Exchange Equilisation Account — அந்நியச் செலாவணிச் சமன்பாட்டுக் கணக்கு
Executor — உயில் நிறைவேற்றுபவர்

F

Fiscal Policy — அரசு வருவாய் கைக்கோள்
Fixed Fiduciary System — வரையறை செய்யப்பட்ட நம்பிக்கைத் திட்டம்
Foreign Exchange Bank — நாணய மாற்று வங்கி

G

Gilt-edged Securities — தங்கமுனைப் பத்திரங்கள்
Gold Standard — தங்க நிலை

H

Hire Purchase — வாடகைக் கொள்முதல்
Holder in due course — முறைப்படி பெறுநர்
Holding Company — பிடிப்புக் கம்பெனி

I

Indent — தேவைப் பட்டியல்
Indent, Confirmatory — முடிவான தேவைப் பட்டியல்

